டாக்டர் பாபாசாகேப்

# அம்பேத்கர்:

## பேச்சும் எழுத்தும்

நூல் தொகுப்பு:

## தொகுதி 30



டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்

தோற்றம்: ஏப்ரல் 14, 1891 பரிநிர்வாணம் : டிசம்பர் 6, 1956

பள்ளியில் எனது வகுப்பு மாணவர்களிடையே எனது தகுதி வரிசைப்படி நான் உட்காரக்கூடாது, ஒரு மூலையில் தனியாகத்தான் உட்கார வேண்டும். வகுப்பில் நான் உட்காருவதற்காக என்னிடம் தனியாக ஒரு சாக்குத் துணி இருக்கும். பள்ளியைச் சுத்தம் செய்யும் வேலைக்காரன் நான் உபயோகித்த சாக்குத் துணியைத் தொட மாட்டான். அந்தச் சாக்குத்துணியை மாலையில் வீட்டுக்கு கொண்டு சென்றுவிட்டு, மறுநாள் காலையில் திரும்பவும் பள்ளிக்குக் கொண்டு செல்ல வேண்டும். தீண்டத்தகாதவர்களின் குழந்தைகள் பள்ளியில் இருக்கும்போது தாகம் ஏற்பட்டால் தண்ணீர் குழாய்க்குச் சென்று குழாயைத் திறந்து தங்கள் தாகத்தைத் தணித்துக் கொள்ள முடியம். இதற்கு வேண்டியதெல்லாம் ஆசிரியருடைய அனுமதி மட்டுந்தான். ஆனால் என்னுடைய நிலைமை மாறானது. யாராவது தீண்டத்தக்க வர்கள் குழாயைத் திறக்காவிட்டால் நான் குழாயைத் தொடமுடியாது. எனது தாகத்தைத் தணித்துக் கொள்ள முடியாது. என்னைப் பொறுத்த மட்டில் ஆசிரியரின் அனுமதி மட்டும் போதாது. பள்ளிக்கூடப் பணி யாளும் இருக்க வேண்டும். ஏனென்றால் இந்த மாதிரி வேலைகளுக்கு அவனைத்தான் ஆசிரியர் பயன்படுத்தி வந்தார். பணியாள் எங்கே யாவது சென்றிருந்தால் எனக்குத் தண்ணீர் கிடைக்காது. நிலைமை யைச் சுருக்கமாக இப்படிக் கூற முடியும். பணியாள் இல்லை என்றால் தண்ணீரும் இல்லை. வீட்டில் என் சகோதரிகள்தான் துணிகளை துவைத்துச் சலவை செய்து வந்தனர். சதாராவில் சலவைத் தொழி லாளர்கள் இல்லை என்று சொல்ல முடியாது. சலவையாளர்களுக்குப் பணம் கொடுக்க சக்தியற்றவர்களும் அல்ல நாங்கள். ஆனால் நாங்கள் தீண்டத்தகாதவர்கள் என்பதால்தான் என் சகோதரிகள் துணிகளைச் சலவை செய்ய வேண்டிய நிலை இருந்தது. எந்த ஒரு சலவையாளரும் தீண்டத்தகாதவர்களின் துணியைச் சலவை செய்ய முன்வர மாட்டார்.

**— டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்**
**"விசாவுக்காகக் காத்திருத்தல்".**

This Volume XXX in Tamil forms the Second part of the English Edition Volume 13 Part II of **Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - Published by the Education Department, Government of Maharashtra,** 1992.

*முதற் பதிப்பு: மார்ச், 2002*
*விஷு ஆண்டு, பங்குனி*



விலை : ரூ. 40/-

நூலகப் பதிப்பு : ரூ. 115

*வெளியீட்டாளர்:*
*டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்*
*சமூக நீதி மற்றும் உரிமையளிப்பு அமைச்சகம்,*
*இந்திய அரசு,*
*15, ஜன்பத் சாலை,*
*புதுடில்லி.*

**விற்பனை நிலையம்:**
*நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்.,*
*41B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,*
*அம்பத்தூர், சென்னை - 98.*

*அச்சிட்டோர்:*
**பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்.,**
*142, ஜானி ஜான் கான் ரோடு,*
*ராயப்பேட்டை, சென்னை - 600 014.*
*தொலைபேசி: 8532441, 8532973*

# ஆலோசனைக்குழு

**மாண்புமிகு டாக்டர் சத்தியநாராயண ஜாட்டியா,**
*சமூக நீதி மற்றும் உரிமையளிப்புத்துறை அமைச்சர்,*
*இந்திய அரசு*

**டாக்டர் பிந்தேஸ்வர் பாதக்,** பிஎச்.டி., டி.லிட்.,
செயல் துணைத் தலைவர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புதுடில்லி.

**திரு. சத் பால்**
இயக்குநர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புதுடில்லி.

*நிர்வாக ஆசிரியர் (தமிழ்):*
*ரா. ரங்கசாமி (மாஜினி)*
சென்னை, தமிழ்நாடு.

ஆங்கில நூல் வெளியீடு:

*கல்வித்துறை,*
*மகாராஷ்டிர மாநில அரசு, 1992.*

ஆங்கில நூல் தொகுப்பாளர்:

*திரு. வஸந்த் மூன்*
*மும்பை*

தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்:

*ரா. ரங்கசாமி (மாஜினி)*

மொழிபெயர்ப்பாளர்கள்:

*திரு. வெ. பரஞ்சோதி*
*திரு. வி. இராதாகிருஷ்ணன்*
*திரு. கே. நீலகண்டன்*

ஒப்புநோக்கியோர்:

*திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)*

பிழைதிருத்த உதவி:

*திரு. வி. இராதாகிருஷ்ணன்*

# அணிந்துரை

நமது இந்திய நாட்டின் அரசியல் சாசனம் உலகின் தலை சிறந்த அரசியல் சாசனங்களில் ஒன்றாகத் திகழ்கிறது. இத்தகைய சிறப்புமிக்க அரசியல் சாசனத்தை உருவாக்கி, செழுமைப் படுத்தி, வடிவமைத்துத் தந்த பெருமை பிரதானமாக பாரத ரத்னா பாபா சாகேப் டாக்டர் அம்பேத்கரையும், அரசியல் சாசன வரைவுக் குழுவையும் சேரும். அரசியல் நிர்ணய சபையின் பரிசீலனைக்கு அவர் சமர்ப்பித்த இந்திய அரசியல் சாசனத்தின், இந்திய அரசமைப்பின் முன்வரைவு இந்தத் தொகுதியில் ஆய்வு செய்யப்படுகிறது.

மேலும், இந்த முன்வரைவு குறித்து அரசியல் நிர்ணய சபையில் நடைபெற்ற காரசாரமான, கருத்தாழமும் செறிவுமிக்க விவாதங்களும், அந்த முன்வரைவுக்குச் சமர்ப்பிக்கப்பட்ட திருத்தங்களும் இத்தொகுதியில் இடம்பெற்றுள்ளன. விவாதங் களின்போது எழுப்பப்பட்ட பல்வேறு பிரச்சினைகளுக்கும், ஐயங்களுக்கும், கேள்விகளுக்கும், சர்ச்சைகளுக்கும் டாக்டர் அம்பேத்கர் ஆணித்தரமாகவும், அழுத்தம் திருத்தமாகவும், அசைக்க மறுக்க முடியாத ஆதாரங்களுடனும் பதிலளித்து அனைவரது பாராட்டையும் பெற்றிருப்பதையும் காண்கிறோம்.

டாக்டர் அம்பேத்கர் நமது பாரதத் திருநாட்டின் ஈடு இணையற்ற சட்ட மேதைகளில் ஒருவர் என்பதை மெய்ப்பித்துக் காட்டியுள்ளார். டாக்டர் அம்பேத்கர் நூல்களின் தமிழாக்கம் வாசகர்கள் பல்வேறு பயனுள்ள விஷயங்களைப் பற்றித் தெரிந்து புரிந்து கொள்வதற்கும், எல்லோரும் எல்லாமும் பெற்று இன்புற்று வாழும் புதியதோர் சமுதாயம் உருவாகும் திசை வழியில் நாடு முன்னேறுவதற்கும் உதவும் என்றும் நம்புகிறோம்.

நல்வாழ்த்துக்கள்!

(ஒப்பம்) **டாக்டர் சத்திய நாராயண ஜாட்டியா**
சமூக நீதி மற்றும்
உரிமையளிப்புத் துறை அமைச்சர்,
இந்திய அரசு.

புதுடில்லி

# பதிப்புரை

மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கில மொழியில் வெளியிட்டு வரும் டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுதிகளை இந்தியிலும் தமிழ் உட்பட ஏனைய இந்திய மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடும் பணியை இந்திய அரசின் நல அமைச்சகத்தைச் சார்ந்த டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன் மேற்கொண்டு நிறைவேற்றி வருகின்றது. இந்தப் பணி மக்களிடையே மிகுந்த வரவேற்பைப் பெற்றிருப்பது மகிழ்ச்சி அளிப்ப தாகும்.

டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுப்பு வரிசை யில் 30-வது தொகுதியை நாட்டு மக்களுக்கு அளிப்பதில் பெருமகிழ்ச்சி கொள்கிறோம். உயர்ந்ததொரு இலட்சியத்தை நோக்கி நம் நாடு செல்லும் பயணத்தில் டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல்கள் வழிகாட்டியாகவும் உறுதுணையாகவும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

ஆங்கில நூல்களை தமிழ் உட்பட இந்திய மொழிகளில் அளிப்பதில் முனைந்து பணியாற்றும் நிர்வாக ஆசிரியர்கள், மொழிபெயர்ப்பாளர்கள், ஒப்புநோக்குவோர், அச்சகத்தார் ஆகிய அனைவரும் நமது பாராட்டுதலுக்கு உரியவர்கள். இந்த அரிய பணியில் ஒத்துழைப்பு நல்கும் அனைவர்க்கும் நன்றி யைத் தெரிவிக்கின்றோம்.

ஏனைய தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதியை யும் மக்கள் வரவேற்று ஆதரிப்பார்கள் என நம்புகின்றோம்.

**சத்பால்**

புதுடில்லி **இயக்குநர்**

டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்

# தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர் உரை

பாரத ரத்னா டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ஒரு சகலகலா வல்லவர்; பல அரிய திறமைகளின் பெட்டகமாகத் திகழ்ந்தவர்; சீரிய பண்புகளின் சுரங்கமாக விளங்கியவர்; நேரிய செயற்பாடு களின் கருவூலமாக மிளிர்ந்தவர். சுருங்கச் சொன்னால் அவரை ஒரு நடமாடும் பல்கலைக் கழகம் என்று கூறினால் அது மிகை யாகாது.

இவையெல்லாவற்றையும் விட முக்கியமாக டாக்டர் அம்பேத்கரை இந்திய அரசியல் சாசனத்தின், அரசமைப்புச் சட்டத்தின் பிதாமகர் எனக் கூறலாம். அவரது அற்புத சட்டப் புலமையை, உலகிலுள்ள பல்வேறு அரசியல் சாசனங்கள் குறித்து அவருக்கிருந்த ஆழ்ந்த, தேர்ந்த, தெளிந்த ஞானத்தை இது விகசிதமாகப் புலப்படுத்துகிறது. மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ள டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் பேச்சும் எழுத்தும் தொகுப்பு வரிசை 13 ஆவது தொகுதி தமிழில் 26, 27, 28, 29, 30 ஆவது தொகுதிகளாக வெளியிடப்படுகிறது. இவை அனைத்தும் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அரசியல் நிர்ணயசபையில் சமர்ப்பித்த அரசமைப்புச் சட்ட முன்வரைவு குறித்த விவாதங்களாகும். இந்த விவாதங் களுக்கு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அளித்த பதில்கள் படிப்போர் உள்ளத்தைப் பிணைத்து ஈர்ப்பதாக உள்ளன. எத்தகைய சிக்கலான விஷயமாக இருந்தாலும் புள்ளிவிவர ஆதாரங்களோடு, தகுந்த விவரங்களோடு, அலசி ஆராய்ந்து, அசைக்க மறுக்க முடியாதபடி அவர் பதிலளித்திருப்பதைக் காணலாம்.

இந்த ஐந்து தொகுதிகளும் பலரால் மொழிபெயர்க்கப் பட்டிருப்பதால் மொழி நடையும், சொல்லாக்கமும், பதப் பிரயோகங்களும் வேறுபட்டிருப்பது தவிர்க்க முடியாததாகி விட்டன. இதனை வாசகர்கள் பொறுத்தருள்வார்கள் என்று நம்புகிறோம்.

இதுவரை வெளிவந்துள்ள தொகுதிகளுக்குப் பேராதரவு அளித்து வந்துள்ளதைப் போன்றே இந்த ஐந்து தொகுதிகளும் வாசகர்களால் பெரிதும் வரவேற்கப்படும் என்று நம்புகிறோம்.

தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்

# பகுதி ஏழு

## விதி வாரியாக விவாதம்

## செப்டம்பர் 17, 1949 முதல்
## நவம்பர் 16, 1949 வரை

## பொருளடக்கம்

## பாகம் III

### பகுதி 8

# பிரிவு கவுன்சில் அதிகார வரம்பு ஒழிப்பு மசோதா

[1]**திரு.தலைவர்:** இன்று எடுத்துக்கொள்ள வேண்டிய முதல் மசோதா பற்றி இப்போது டாக்டர் அம்பேத்கர் பேசுவார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்** (பம்பாய்: பொது): ஐயா, நான் முன்மொழிகிறேன்:

> இந்திய மேல் முறையீடுகள் மனுக்கள் சம்பந்தமாக மன்னர் பிரான் கவுன்சிலுக்குள்ள அதிகார வரம்பை ஒழிப்பது சம்பந்தமாக 1949 செப்டம்பர் 14ல் கொண்டுவரப்பட்ட மசோதாவை இப்போது அவை பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டும்.

ஒன்று அல்லது இரண்டு வார்த்தைகள் மட்டும் சொல்லி, இந்த மசோதா ஏன் தேவைப்படுகிறது, அதன் நோக்கம் என்ன என்பதை சுருக்கமாக அவைக்குக் கூற விரும்புகிறேன். இரண்டு சூழ்நிலைகளினால் இந்த மசோதா தேவைப்படுகிறது. உத்தேச விதி 308 இன் துணைவிதி (3) ல் கூறப்பட்டுள்ள ஷரத்து ஒரு காரணமாகும். மாறும் இடைக்கால ஷரத்துக்கள் எனக் கருதப்படுபவை மத்தியில் விதி 30 காணப்படவுள்ளது. விதி 308 துணைவிதி (3) கூறுவதாவது:

> "இந்தியாவின் ஆட்சி எல்லைக்குள் உள்ள எந்த ஒரு நீதிமன்றத்தில் எத்தகைய தீர்ப்பாணை, உத்தரவு சம்பந்தமான மேல்முறையீடுகளையும், மனுக்களையும் ஏற்பதற்கும் முடிவு செய்வதற்கும் மன்னர் பிரான் கவுன்சிலுக்குள்ள அதிகாரவரம்பும், அதேபோல் மன்னர்பிரான் பெற்றுள்ள தனிச் சிறப்புரிமை காரணமாக குற்ற நடவடிக்கைகள் சம்பந்தமாக அவருக்குள்ள அதிகார வரம்பும் இந்த அரசியல் சாசனம் நடைமுறைக்கு வரும் நாளிலிருந்து முடிவுக்கு வரும்; அந்தக் குறிப்பிட்ட நாளில் மன்னர்பிரான் கவுன்சிலின் முன்னாலுள்ள எல்லா மேல்முறையீடுகளும் இதர நடவடிக்கைகளும் உச்சநீதிமன்றத்துக்கு மாற்றப்பட்டு முடிவு செய்யப்படும்.''

அதாவது, அரசியல் சாசனம் அமலுக்கு வரும் நாளிலிருந்து, பிரிவு கவுன்சிலின் அதிகாரம் முடிவுறும் என்பதே இதன் பொருள்.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 17, பக். 1589-90.

இந்த மசோதா கொண்டுவரப்பட வேண்டிய அவசியம் ஏற்பட்டதற்கான இரண்டாவது சூழ்நிலை. 1950 - ஜனவரி 26 - ஆம் நாள்வாக்கில் இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வர வேண்டு மெனத் திட்டமிடப்படிருப்பதாகும். இவ்விரு சூழ்நிலைகளின் விளைவாக, 1950 ஜனவரி 26- ஆம் தேதிக்குப் பிறகு மேல்முறையீடு அல்லது மனுக்களை ஏற்றுக்கொள்ள மன்னர்பிரான் கவுன்சிலுக்கு அதிகாரம் இருக்காது, இந்தத் தேதியில் அரசியல் சாசனம் அமலுக்கு வரும் என்ற யூகம்தான் இதற்குக் காரணம். 1950 ஜனவரி 26 - ஆம் நாள் தன் முன்னுள்ள மனுக்கள், மேல்முறையீடுகளை விசாரித்துத் தீர்ப்பளிக்கும் அதிகாரம்கூட பிரிவு கவுன்சிலுக்கு இருக்காது என்பது தான் முக்கியமான விஷயமாகும். 1950 ஜனவரி 26 ஆம் நாள் என்ன நிலவரமிருக்கும் என்று நோக்கினால் நிலைமை பின்வருமாறு இருக்கும்: தற்போது எழுபது உரிமையியல் மேல்முறையீடுகளும், பத்து குற்றவியல் மேல்முறையீடுகளும் பிரிவு கவுன்சிலில் நிலுவை யிலுள்ளன. பிரிவு கவுன்சிலின் அடுத்த அமர்வுக்காகத் தயாரிக்கப் பட்டுள்ள வழக்குகள் பட்டியலில் இருபது வழக்குகள் விசாரணைக் கும் தீர்ப்பளிக்கவும் உள்ளன. அரசியல் சாசனம் அமலுக்கு வருவ தற்கு முன்னால் இந்திய மேல்முறையீடுகளை முடிவு செய்ய பிரிவு கவுன்சில் நடத்தும் கடைசி அமர்வு அனேகமாக இதுவாகத்தான் இருக்கும் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

எங்களிடம் உள்ள தகவல்படி பிரிவு கவுன்சிலின் அடுத்த அமர்வில் விசாரணைக்கு வரும் வழக்குகளில் சுமார் இருபது மேல் முறையீடுகள் உள்ளன. அதாவது, 1950 ஜனவரி 26 - ஆம் நாள் அறுபது மேல்முறையீடுகள் தீர்ப்பளிக்கப்படாமல் நிலுவையில் இருக்கும்; இந்நிலைமையில் நாம் பரிசீலனை செய்யவேண்டிய கேள்வி இதுதான்: 1950 ஜனவரி 26 - ஆம் நாள் பிரிவு கவுன்சில் முன் நிலுவை யிலிருக்கக்கூடிய அறுபது மேல்முறையீடுகள் சம்பந்தமாக என்ன செய்வது?

சொல்லப்போனால், இந்த விஷயம் பற்றி நடவடிக்கை எடுக்க இரண்டு வழிகள்தான் உள்ளன. பிரிவு கவுன்சிலின் அதிகார வரம்பை நீடிக்கச்செய்து, தற்போது அதன்முன் நிலுவையிலுள்ள அனைத்து வழக்குகளையும் விசாரணை செய்து, தீர்ப்பளிப்பது ஒரு வழி. இந்த வழிதான் அயர்லாந்து நாட்டின் அரசியல் சாசனத்தின் விதி 37 மூலம் அனுசரிக்கப்பட்டுள்ளது. அரசியல்சாசனம் அமலுக்குவரும் நாளில்

நிலுவையிலிருக்கக்கூடிய வழக்குகள் மீது நடவடிக்கை எடுக்க பிரிவு கவுன்சிலுக்குள்ள அதிகார வரம்பை தங்கள் அரசியல் சாசனத்தி லுள்ள எதுவும் பாதிக்காது என்று அவ்விதியில் கூறப்பட்டிருந்தது. ஆனால் நான் ஏற்கனவே கூறியது போன்று, உத்தேச விதி 308 துணை விதி (3) ல் இத்தகைய அதிகாரம் எதையும் பிரிவு கவுன்சிலுக்கு விட்டுவிட நண்பர்கள் உத்தேசிக்கவில்லை. இந்நிலைமையில் 1960 ஜனவரி 26 ஆம் நாளன்று பிரிவு கவுன்சிலின் அதிகாரத்தை முடிவு செய்திட உத்தேசித்துள்ளோம். எனவே, பிரிவு கவுன்சிலின் அதிகாரத்தை முடிவுக்குக் கொண்டுவருவதும், அவர்களின் அதிகா ரத்தை சமஷ்டி நீதிமன்றத்துக்கு மாற்றுவதும், முன்னர் நான் குறிப் பிட்ட இருபது வழக்குகள் தவிர, அக்டோபர் 10 ஆம் நாள் நிலுவை யிலுள்ள அனைத்து வழக்குகளையும் சமஷ்டி நீதிமன்றத்தின் அதிகார வரம்புக்கு மாற்றுவதும்தான் நம்முன்னுள்ள ஒரே வழி யாகும். இதைத்தான் இந்த மசோதா செய்கிறது.

ஐயா, மசோதாவின் சில குறிப்பிட்ட ஷரத்துக்கள் விஷயத் துக்கு வருவோம். இந்தியாவின் ஆட்சிப் பகுதிக்குட்பட்ட மன்றங் களின் மீது பிரிவு கவுன்சிலுக்குள்ள அதிகாரத்தை துணைவிதி 2 ஒழித்துக்கட்டுகிறது. அதேபோல், பிரிவு கவுன்சிலுக்கு சமஷ்டி நீதிமன்றத்தின் மீதுள்ள அதிகார வரம்பை துணைவிதி 3 ரத்து செய்கிறது; துணைவிதி 5 துணைவிதிகள் 2 மற்றும் 3க்கு மாறுபட்ட தாக உள்ளது. ஏனென்றால், அது சமஷ்டி நீதிமன்றத்தின் மீது பிரிவு கவுன்சிலுக்கு அதிகாரம் வழங்குகிறது. பிரிவு கவுன்சிலின் முன் நிலுவையிலுள்ள வழக்குகள் பற்றி துணைவிதி 4 குறிப்பிடுகிறது. சமஷ்டி நீதிமன்றத்தின் மீது வழக்குகள் பற்றி துணைவிதி 5 பிரிவு கவுன்சிலுக்கு அதிகாரம் வழங்கினாலும் துணைவிதி 4 ஒரு பாதுகாப்புத் துணைவிதியாகும்; பிரிவு கவுன்சிலின் முன் நிலுவையிலுள்ள சில மேல்முறையீடுகள், மனுக்கள்மீது அதற்குள்ள அதிகாரத்தை அது பாதுகாக்கிறது. இவற்றை நான்கு தலைப்பின்கீழ் பிரிக்கலாம்: 1. தீர்ப்பு வழங்கப்பட்ட மேல்முறையீடுகள் மற்றும் மனுக்கள்; ஆனால் அக் டோபர் 10 - ஆம் நாளுக்கு முன்னர் இது சம்பந்தமாக ஆணை பிறப் பிக்கப்படாதவை; 2. அக்டோபர் 12 ஆம் நாள் தொடங்கும் இலையுதிர் கால அமர்வுக்காக தயாரிக்கப்பட்ட வழக்கு அட்டவணையில் பதிவு செய்யப்பட்ட மேல்முறையீடுகள்; 3. ஏற்கனவே கொடுக்கப்பட்ட மனுக்களும் அக்டோபர் 10 ஆம் நாளுக்கு முன்னர் சமர்ப்பிக்கப்படக் கூடிய மனுக்களும். 4. விசாரணை முடிந்து தீர்ப்பு கூறுவது பிரிவு கவுன்சிலால் தள்ளிவைக்கப்பட்டுள்ள மேல்முறையீடுகளும் மனுக்

களும். துணை விதி 4ன் கீழ் வராத வழக்குகள் பிரிவு கவுன்சிலின் முன் நிலுவையிலிருந்தாலும் அவை தாமாகவே சமஷ்டி நீதிமன்றத்துக்கு மாற்றப்படக் கூடியவை. துணைவிதிகள் 7-ம் 8 ம் வெறும் பொருள் கொள்வதற்கு உதவுபவை.

பிரிவு கவுன்சிலின் அதிகார வரம்பைக் குறைக்கும் அதேசமயம் 1935 ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தின் சில பிரிவுகளை நீக்குவதும், திருத்துவதும் விரும்பத்தக்கது என்று தெரியவந்தது; நல்ல பலனளிக்கக்கூடியவை எனவும் கருதப்பட்டது; சமஷ்டி நீதிமன்றத்தின் அதிகார வரம்புகள், அதிகாரங்கள் சம்பந்தமாக இந்திய அரசாங்க சட்டத்தில் காணப்படும் முரண்பாடு சிலவற்றை நீக்கிவிடவும் அவை தேவைப்பட்டன. ஏற்கனவே நான் கூறியது போன்று, பிரிவு கவுன்சில், சமஷ்டி நீதிமன்றத்தின் மேல்முறையீடுகள், இந்தியாவுக்கு வெளியே யுள்ள ஒரு நீதிமன்றத்திலிருந்து வரும் முறையீடுகள் ஆகியவை பற்றிக் கூறும் இந்திய அரசாங்கச் சட்டத்தின் 208, 218 வது பிரிவுகளை துணைவிதி 3 ரத்து செய்கிறது; இவ்விரு மாற்றங்களும் பயனளிக்கக் கூடியவையாகும்.

சமஷ்டி நீதிமன்றத்தின் மேல்முறையீட்டு அதிகாரம் சம்பந்தப்பட்ட பிரிவு 205, மற்றும் தீர்ப்பு வடிவம் மற்றும் தீர்ப்பாணைகள் சம்பந்தப்பட்ட பிரிவு 209, இதர நீதிமன்றங்கள்மீது சமஷ்டி நீதிமன்றத்திற்குள்ள அதிகாரவரம்பு சம்பந்தப்பட்ட பிரிவு 210, இந்தியாவுக்கு வெளியேயுள்ள நீதிமன்றங்கள் மீது சமஷ்டி நீதிமன்றத்திற்குள்ள அதிகாரவரம்பு சம்பந்தப்பட்ட பிரிவு 214 ஆகியவற்றைத் திருத்தம் செய்ய உத்தேசிக்கப்பட்டுள்ளது.

எனவே, இத்தகைய பயனுள்ள திருத்தங்கள் மற்றும், இதர தேவையான திருத்தங்கள் மூலம் சமஷ்டி நீதிமன்றத்தின் அதிகாரம் முழுமையானதாகவும், சுதந்திரமானதாகவும் அமைந்திட உத்தேசிக்கப்பட்டுள்ளது. இந்த நடவடிக்கைகள் தற்காலிகமானது என்பதில் ஐயமில்லை. ஏனெனில், அரசியல் சாசனம் அமலுக்கு வரும் 1950 ஜனவரி 26 ஆம் நாள் வரைதான் இந்த அதிகாரங்கள் செல்லுபடியாகும். 1950 ஜனவரி 26 ஆம் நாளில் அரசியல் சாசனத்தில் கூறப்பட்டுள்ளபடிதான் சமஷ்டி நீதிமன்றத்தின் அதிகாரங்கள் அமையும், நான் பின்வருமாறு பிரேரணை செய்கிறேன்:

★ ★ ★

### துணைவிதி 2

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** நண்பர் துணை விதி 3ஐப் படித்தால், அதில் இதைப் பார்க்க முடியும். துணைவிதி 3 இன் 2-ல் சமஷ்டி நீதிமன்றம் பற்றிக் கூறப்பட்டுள்ளது. எனவே தான், 'சமஷ்டி நீதிமன்றம் தவிர'' என்ற வார்த்தைகள் துணைவிதி 2ல் உள்ளன.

**பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா:** இப்பட்டியலில் இது துணை விதி 2ல் காணப்படுகிறது. என்னுடைய திருத்தம் இதற்கு மட்டும்தான் பொருந்தும்.

**திரு. தலைவர்:** நீங்கள் தற்போது விட்டுவிடலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இத்திருத்தத்தை நான் ஏற்கவில்லை. இது முற்றிலும் தேவையற்றது.

**திரு. தாஸ் (ஒரிசா: பொது):** பின்கண்டதை முன்மொழிகிறேன்:

> ''துணைவிதி 2ன்படி விதி (1) ல் 'அல்லது வேறு வகையில்' என்ற வார்த்தைகள் நீக்கப்பட வேண்டும்.''

திரு. தலைவர் அவர்களே, இது என்னை மிகவும் அவமானப் படுத்துவதாக உள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** தலைவர் அவர் களே, சட்டம் அளிக்கும் தனிச்சிறப்பு உரிமையின் மூலமாகவும் பிரிவு கவுன்சில் தனது வரம்பை பெறமுடியும் என்ற காரணத்தால், இத்திருத்தம் தேவையென்று நான் கருதவில்லை. எனவே, 'அல்லது வேறுவகையில்' என்ற வார்த்தைகள் முற்றிலும் தேவைப்படுகின் றன. தனிச்சிறப்பு உரிமை மூலம் கிடைக்கும் அதிகார வரம்பை மட்டுமல்ல, வேறுவகையில் கிடைப்பதையும் முழுமையாக ஒழிக்க நூல்கள் விரும்புகிறோம்.

**திரு. தலைவர்:** திருத்தத்தை வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 17, பக். 1597.
2. அதே நூல், பக். 1597.

*(திருத்தங்கள் அனைத்தும் நிராகரிக்கப்பட்டன. மசோதாவுடன் துணை விதி 2 சேர்க்கப்பட்டது.)*

★ ★ ★

### துணைவிதி 3

[1]**திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி** (சென்னை:பொது): சமஷ்டி நீதிமன்றத்திலிருந்து பிரிவு கவுன்சில் முன் எவ்வித மேல்முறையீடு களும் நிலுவையில் இல்லை என்று நான் விளக்கினால், என்னுடைய நண்பரின் பேச்சுகுறையும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அமைச்சர்:** மேல்முறையீடு எதுவும் நிலுவையிலில்லை.

**பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா:** டாக்டர் அம்பேத்கரும், டாக்டர் பக்ஷிதேக்சந்தும் மேல்முறையீடு எதுவும் நிலுவையில் இல்லை என்று கூறியதைக் கேட்டேன். ஆனால் இதர வழக்கு நட வடிக்கைகள் இருக்கலாமல்லவா? இதர நடவடிக்கைகள் எதுவும் இருப்பின், அவற்றில் சம்பந்தப்பட்டவர்கள் பிரிவு கவுன்சில் அதிகார வரம்பை நாம் ஒழித்துவிடும் காரணத்திற்காக நிவாரணம் பெறும் உரிமையை இழந்துவிடக்கூடாது.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** என்னுடைய நண்பர் பண்டிட் தாகூர்தாஸ் பார்கவாவின் திருத்தத்தை ஏற்றுக் கொள்ளுவது அவசியமென்று நான் கருதவில்லை. என்னுடைய நண்பர் திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி கூறியதுபோல் சமஷ்டி நீதிமன் றத்திலிருந்து மேல்முறையீடு எதுவும் பிரிவு கவுன்சில் முன் இல்லை; அதனால் என்னுடைய நண்பர் பண்டிட் தாகூர்தாஸ் சொல்லுவது போல் எவ்வித பாதுகாப்பும் முற்றிலும் தேவையற்றதாகும். அத்துடன் வழக்குகள் நிலுவையில் இல்லாததால் எவருக்கும் பாதகம் ஏற்படப் போவதில்லை.

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 17, பக். 1598.
2. அதே நூல், பக். 1599.

நண்பர் நசிருத்தீன் அகமது முன்மொழிந்த திருத்தத்தைப் பொறுத்தவரை குறிப்பிடப்பட்ட நாளுக்கு முன்னர் பிரிவு கவுன் சிலில் தாக்கல் செய்யப்பட்ட குற்ற வழக்கு எதுவும் அனுமதிக்கப் படுவதற்காக விசாரிக்கப்படலாம் என்றும், இறுதித் தீர்வுக்கு அதை சமஷ்டி நீதிமன்றத்திற்கு அனுப்பிட வேண்டுமென்றும் நிர்ணயம் செய்துள்ள கோட்பாட்டிலிருந்து நாம் ஏன் விலகிச் செல்ல வேண்டு மென்பது எனக்குப் புரியவில்லை. அக்கோட்பாட்டிலிருந்து மாறுபட வேண்டுமென்று அவர் விரும்புகிறார். அதற்காக அவர் கூறும் கார ணங்களுக்குப்போதிய ஆதாரம் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. எனவே அவருடைய திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை.

***(பண்டிட் தாகூர்தாஸ் பார்கவாவின் திருத்தம் நிராகரிக்கப்பட்டது. நசிருத்தீன் தமது திருத்தத்தை விலக்கிக்கொண்டார். துணைவிதி 3 மசோதாவில் இணைக்கப்பட்டது.)***

★ ★ ★

**துணைவிதி 4**

★ ★ ★

[1]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:*** பின்கண்டதை முன்மொழிகிறேன்:

> "துணைவிதி 4 ன் (அ) க்குப் பதிலாக பின்வரும் உபவிதிகள் சேர்க்கப்பட வேண்டும்:
>
> (ஆ) நீதிமன்றக்குழு வாதி, பிரதிவாதிகளை விசாரித்தபின்னர், தீர்ப்பு முடிவை அல்லது ஆணையை நிறுத்திவைத்திருக்கும் எந்த இந்திய மேல் முறையீடும் அல்லது மனுவும்,
>
> (இ) 1949 ஆம் ஆண்டு இலையுதிர்கால அமர்வுகளுக்கான நீதிமன்றக் குழு அலுவல் பட்டியலில் குறிப்பிடப்பட்ட நாளுக்கு முன்னர் பதிவு செய்யப்பட்ட எந்த இந்திய மேல்முறையீடும்; மற்றும் நீதிமன்ற குழுவின் அதிகாரத்தினால் அல்லது அதிகாரத்தின் கீழ் அந்த நாளுக்குப் பின்னர் அதிலிருந்து நீக்கப்படவேண்டுமென்று ஆணையிடப்படாத; அல்லது;
>
> உபவிதி (இ) உபவிதி(ஈ) என்று மாற்றி எழுதப்பட வேண்டும்".

அனேகமாக உபவிதி (இ)க்கு ஓரளவு விளக்கம் தேவைப் படலாம். இலையுதிர்கால அமர்வு அலுவல் பட்டியலில் குறிப்பிடப்

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 17, பக். 1599-1600.

பட்டுள்ள வழக்குகள் அல்லது விவகாரங்கள் பற்றி முடிவெடுப்பதை பிரிவு கவுன்சிலுக்கு விட்டுவிடலாம் என்று பிரதான துணைவிதி யில் நாங்கள் கூறியிருந்தாலும், அவற்றில் தீர்ப்பளிக்கப்படாமல் எத்தனை நிலுவையிலிருக்குமென்பது பற்றி உறுதியாக எதுவும் தெரியவில்லை. இலையுதிர்கால அமர்வுக்கான அலுவல் பட்டியலில் ஒரு வழக்கு அல்லது ஒரு விவகாரம் பதிவு செய்யப்பட்டு இருந் தாலும், சில வழக்குகளைத் தங்களால் விசாரிக்கமுடியாது என்று முதலிலேயே கூறிவிடுவதற்கு பிரிவு கவுன்சிலுக்கு அனுமதி வழங்க உத்தேசித் துள்ளோம். அதனால் அத்தகைய சந்தர்ப்பத்தில், தங்களால் விசாரிக்க இயலாது என்று பிரிவு கவுன்சில் அறிவிக்கும் வழக்கு களும் சமஷ்டி நீதிமன்றத்திற்குத் தானாகவே மாற்றப்பட்டுவிடும். அத்தகைய ஓர் அவசர நிலைக்கு மாற்றப்பட்டுவிடும். அத்தகைய ஓர் அவசர நிலைக்கு வகை செய்யும் முறையில்தான் உபவிதி (இ)யை ஒரு திருத்தம் என்ற வடிவில் சேர்க்கின்றேன்.

**பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா:** பின்கண்டதை நான் முன் மொழிகிறேன்:

"துணை விதி (4)ன் 'உபவிதி (இ) நீக்கப்பட வேண்டும்.''

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, பண்டிட் தாகூர்தாஸ் பார்கவாவின் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை.

***(பண்டிட் பார்கவாவின் திருத்தம் நிராகரிக்கப்பட்டது. டாக்டர் அம்பேத் கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. மசோதாவுடன் துணைவிதி 4 சேர்க்கப் பட்டது.)***

★ ★ ★

**துணைவிதி 5**

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டா பி.ஆர்.அம்பேத்கர்:** பின்கண்டதை நான் முன்மொழிகிறேன்:

''துணைவிதி 5 ன் உபவிதி (3) ல் அடைப்புக்குறிகள், எழுத்துக்கள் (ஆ) அல்லது (இ) என்னும் சொல்லுக்குப் பதிலாக அடைப்புக்குறிகள், எழுத் துக்கள் மற்றும் (ஆ) (இ) அல்லது (ஈ) என்பவை சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்.'' இதுமுற்றிலும் பின்விளைவு தன்மை கொண்டதாகும்.

***(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. துணைவிதி 5 மசோதாவுடன் சேர்க்கப்பட்டது.)***

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 17, பக். 1601.

### துணைவிதி 7

★ ★ ★

[1]**நசிருத்தீன் அகமது:** பின்கண்டதை முன்மொழிய அனுமதி கோருகிறேன்:

> *''துணைவிதி 7ல் 'விளைவு' என்ற வார்த்தைக்குப் பின்னர் வரும் காற்புள்ளி நீக்கப்பட வேண்டும்.''...*

**திரு. தலைவர்:** 'காற்புள்ளி' பற்றிய இந்த விஷயத்தை வாக்கெடுப்பிற்கு விடுவது தேவையென்று நான் கருதவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதுபற்றி பரிசீலிக்கப்படும். இதன்மீது வாக்கெடுப்பு தேவையில்லை.

*(துணைவிதி மசோதாவுடன் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)*

### துணைவிதி 8

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** இத்திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை.

*(திரு. பி. தாஸின் திருத்தம் நிராகரிக்கப்பட்டது. துணைவிதி மசோதாவுடன் சேர்த்துக்கொள்ளப்பட்டது.)*

### துணைவிதி 9

[3]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** சற்று வேறுவகைப்பட்ட வடிவம்கொண்ட திருத்தத்தை முன்மொழிய உங்களுடைய அனுமதி கோருகிறேன். ஏனெனில், இப்போது அவை முன்வைக்கப்பட்டுள்ள திருத்தம் குழப்பத்தை ஏற்படுத்துகிறது.

நீங்கள் அனுமதித்தால், இவை அனைத்தையும் ஒருங்கிணைந்த வடிவத்தில் நான் முன்வைப்பேன். குறிப்பிடத்தக்க மாற்றம் எதுவு

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், தொகுதி IX, 1949 செப். 17, பக். 1602.
2. மேற்படி அதே நூல், பக். 1604.
3. அதே நூல், பக். 1604-05.

மில்லை; இதுவெறும் வடிவம் சம்பந்தப்பட்ட விஷயம்தான். துணை விதி 9ல் நாங்கள் என்ன கூறியுள்ளோம் என்பது அவைக்குப் புரியு மென்று நினைக்கிறேன்.

**திரு. தலைவர்:** ஆம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பின்கண்டதை நான் முன்மொழிகிறேன்:

துணைவிதி 9க்குப் பதிலாகப் பின்கண்ட துணைவிதி சேர்க்கப் பட வேண்டும்:

1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்திருத்தங்கள்

"9 (1) 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் பிரிவு 205 ல் (இது பின்னால் மேற்கண்ட சட்டம் எனக் குறிப் பிடப்பட்டுள்ளது.) துணைபிரிவு (2)க்குப் பதிலாக பின்வரும் துணைப்பிரிவு சேர்க்கப்பட வேண்டும், அதாவது:

'2. அத்தகைய சான்றிதழ் கொடுக்கப்பட்டிருக்கும்போது மேற் சொன்ன எந்த வழக்கும் தவறாகத் தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது என்ற அடிப்படையிலும் எந்தத் தரப்பும் எந்த வழக்கிலும் மற்றும் உச்சநீதிமன்ற அனுமதியுடன் வேறு இதர அடிப்படையிலும் சமஷ்டி நீதிமன்றத்திற்கு மேல்முறையீடு செய்யலாம்."

2. மேற்சொன்ன சட்டத்தின் பிரிவு 209ல் துணைபிரிவுகள் (1) மற்றும் (2) க்குப்பதிலாக பின்வரும் துணைப் பிரிவுகள் சேர்க்கப்பட வேண்டும்; அதாவது:

'1. சமஷ்டி நீதிமன்றத்தில் முடிவுறாதுள்ள எந்த நடவடிக்கை அல்லது வழக்கில் முழுமையான நியாயம் வழங்குவதற்கும், வழக்குச் செலவுத்தொகைகளைக் கொடுக்கவேண்டுமென்னும் ஆணைஉட்பட தனக்குள்ள மேல்முறையீடு அதிகாரத்தைப் பிரயோகித்து தேவையான தீர்ப்பு அல்லது ஆணையை அது பிறப்பிக்கலாம்; மற்றும் அவ்வாறு அளிக்கப்பட்ட ஆணை இந்திய ஆட்சிப்பகுதி முழுவதிலும் அமலாக்கத் தக்கதாகும்".

விடப்பட்டுவிட்ட ஒன்று அல்லது இரண்டு வார்த்தைகளை இடையில் சேர்த்திட விரும்புகிறேன்:

1908 ஆம் ஆண்டு V சட்டம்

'1908 ஆம் ஆண்டு உரிமை வழக்கு விசாரணை முறைச்சட்டத் தொகுப்பில் வகைசெய்யப்பட்டுள்ள முறையில் அல்லது டொமி னியன் சட்டமன்ற சட்டத்தினால் அல்லது அச்சட்டமன்றத்தின்கீழ் நிர்ணயிக்கப்பட்டுள்ள அத்தகைய இதர முறையில் அல்லது சமஷ்டி நீதிமன்றத்தின் விதிகள் கூறும்வகையில் அத்தகைய எந்த சட்டத்தின் ஷரத்துகளுக்கு உட்பட்டு"

'(3) மேற்சொன்ன சட்டத்தின் பிரிவு 210 உபபிரிவு

(3) ன் துணைவிதி (அ) வில் உள்ள சொல், அடைப்புக்குறிகள் மற்றும் எண் இலக்கத்திற்குப் பதிலாக'' உபபிரிவு (2)'', சொல், அடைப்புக் குறிகள், எண் இலக்கம் 'உபபிரிவு (1)'' ஆகியவை பயன் படுத்தப்பட வேண்டும்.''

'4. மேற்சொன்ன சட்டம் பிரிவு 214 ல் உபபிரிவு (1) க்குப் பின்னர், பின்வருபவை இடையில் சேர்க்கப்படவேண்டும்; அதாவது:-

ஆரம்பத்திலேயே சில வார்த்தைகளைச் சேர்க்க விரும்புகிறேன்.

1908 ஆம் ஆண்டு V சட்டம்

'(1அ) 1908 ஆம் ஆண்டு உரிமைவழக்கு விசாரணைமுறைச் சட்டத் தொகுப்பின் ஷரத்துக்கள், அல்லது டொமினியன் சட்டமன்றம் நிறைவேற்றிய எந்தச் சட்டத்திற்கும் உட்பட்டு, சமஷ்டி நீதிமன்றம் கூட அவ்வப்போது, கவர்னர் ஜெனரலின் ஒப்புதலுடன், தனக்குள்ள மேல்முறையீட்டு அதிகாரத்தைப் பயன்படுத்தி நீதிமன்றம் வழங்கிய தீர்ப்பு அல்லது உத்திரவை நிறைவேற்றும் முறை சம்பந்தப்பட்ட விதிகளை அது உருவாக்கலாம்.''

சமஷ்டி நீதிமன்றத்தை ஒரு சுதந்திரமான, முழுமையான நீதிமன்றமாக மாற்றுவதுதான் துணை விதி 1-ன் நோக்கமாகும். சமஷ்டி நீதிமன்றம் தன்னுடைய தீர்ப்பாணைகளை வரைவதைத் தடை செய்யும் சில வரையறைகள் தற்போதுள்ள 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தில் இருந்தன. விசாரணை நீதிமன்றத்திற்கு விவகாரங்களை அது அனுப்ப வேண்டியதிருந்தது. பிரிவுக் கவுன்சிலின் இடத்துக்கு சமஷ்டி நீதிமன்றம் வரவிருப்பதால் இத்தகைய வரையறைகளை அகற்றுவது அவசியமாகிறது.

★ ★ ★

**மாண்புமிகு டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர்:** அந்தத் திருத்தம் மசோதாவின் நோக்கெல்லைக்கு அப்பாற்பட்டதாக உள்ளது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்த மசோதா அதிகார வரம்பை மாற்றுவதைப் பற்றி மட்டுமே கூறுகிறது.

**பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா:** அதிகார வரம்பினை மாற்றும் பிரச்சினையல்ல இது. துணைவிதி 5 ல் கண்டுள்ளதைத்தான் நான் கூறுகிறேன். எத்தகைய அதிகார வரம்பு அளிக்கப்பட வேண்டுமென்று

1. அ.பே.வி. தொகுதி, 1949 செப்டெம்பர் 17, பக்கங்கள் 1605 - 1606.

தான் விளக்குகிறேன். மாட்சிமை தங்கிய அரசரின் தனிச் சிறப்பு உரிமை என்னவென்று ஆராய்வதில் இறங்காமல் கோட்பாட்டளவில் இருக்கும் இந்த அதிகாரங்களுக்கு ஸ்தூலமான வடிவம் தரவே நான் முயல்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** தற்போதைய மசோதாவின்படி சமஷ்டி நீதிமன்றத்திற்கு அளிக்கப்படும் அதிகார வரம்பை எந்த முறையில் அது பயன்படுத்த வேண்டுமென்ற வழி காட்டுதல் எதையும் வழங்குவது இம்மசோதாவின் நோக்கமல்ல.

★ ★ ★

**துணைவிதி 11**

★ ★ ★

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது முற்றிலும் தேவையற்றது; இதனை நான் ஏற்றுக்கொள்ளவில்லை.

*(நசிருத்தீன் அகமத்தின் திருத்தம் நிராகரிக்கப்பட்டது.)*

★ ★ ★

**துணைவிதி 1**

★ ★ ★

[1]**திரு. துணைத் தலைவர்:** இதுபற்றி எதுவும் கூற விரும்பு கிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பிரிவு கவுன்சிலின் அதிகார வரம்பு ஒழிப்பு வலியுறுத்தப்படுகிறது; 'அதிகார வரம்பு ஒழிப்பு'' என்னும் வார்த்தைகள் அடைப்புக்குறிகளில் அடைக்கப் பட்டால், இத்தகைய வலியுறுத்தலின் நோக்கம் நிறைவேறாது.

**திரு. தலைவர்:** ஏழாவது திருத்தம் பற்றி எதுவும் கூற விரும்பு கிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்திய ஒன்றி யத்தில் இணையும் இந்திய சமஸ்தானங்கள் பிரிவு கவுன்சிலின்

1. அ.பே.வி. தொகுதி, 1949 செப்டெம்பர் 17, பக்கம் 1612.
2. மேற்படி அதே நூல், பக். 1613.

அதிகார வரம்புக்கு எப்போதும் உட்பட்டவைகளாக இருந்ததில்லை. ஆனால், மிகவும் முன்னெச்சரிக்கை நடவடிக்கையாக உபவிதி(2) ல் ''இந்தியாவின் ஆட்சிப் பகுதிக்குள்'' என்ற வார்த்தைகள் பயன்படுத் தப்பட்டுள்ளதைக் காணலாம். எனவே, இணையும் சமஸ்தானங்கள் பற்றி எதுவும் கூறத் தேவையில்லை.

**திரு.தலைவர்:** திருத்தங்களை இப்போது வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

***(எல்லாத் திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன. மசோதாவில் துணைவிதி 1 இணைக்கப்பட்டது.)***

★ ★ ★

**டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** பின்கண்டதை முன்மொழி கிறேன்:

''திருத்தப்பட்டுள்ளவாறு இந்த மசோதா நிறைவேற்றப்பட வேண்டும்.''

***(பிரேரணை ஏற்றுக்கொள்ளப்பட்டது.)***

★ ★ ★

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பின்கண்டதை முன்மொழிகிறேன்:

''விதி 303 துணைவிதி (1) ன் உபவிதி(1) க்குப் பின்னர், பின்வரும் உபவிதிகள் சேர்க்கப்பட வேண்டும்; அதாவது:

(II) எந்தமாநிலத்திற்கும் இந்த அரசியல்சாசன நோக்கங்களுக்காக ஓர் உயர் நீதிமன்றம் என்று கருதப்படும் எந்த நீதிமன்றமும் உயர்நீதிமன்றம் என்று பொருள்படும்; மற்றும் (அதில்) உள்ளடங்கியவை -

(i) அரசியல் சாசனத்தின் கீழ் இந்திய ஆட்சிப்பகுதிக்குள் நிறுவப்பட் டுள்ள அல்லது திருத்தி அமைக்கப்பட்டுள்ள ஓர் உச்சநீதிமன்றமான எந்த நீதிமன்றமும் மற்றும்

(ii) இந்த அரசியல் சாசனத்தின் அனைத்து அல்லது ஏதாவதொரு நோக் கத்திற்காக இந்தியாவின் ஆட்சிப்பகுதிக்குள் சட்டத்தின் மூலம் உயர்நீதிமன்றம் என்று நாடாளுமன்றம் அறிவிக்கும் வேறு எந்த நீதிமன்றமும்.

(III) 'இந்திய சமஸ்தானங்கள்'' என்பது -

(i) இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முந்திய காலம் சம்பந்தப்பட்ட வகையில் இந்திய டொமினியன் அரசாங்கம் ஒரு மாநிலம் என்று அங்கீகரித்த எந்தப் பிராந்தியமும், மற்றும்

(ii) இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வந்த பிந்திய காலம் சம்பந்தப் பட்ட வகையில், இந்திய ஆட்சிப் பகுதியில் இல்லாதிருந்து குடியரசுத் தலைவரால் ஒரு மாநிலம் என்று அங்கீகரிக்கும் அத்தகைய பிராந்தியம்.

**திரு.தலைவர்:** இதற்குத் திருத்தம் எதுவுமில்லை. இதன்மீது பேசுவதற்கு யாரும் விரும்பாததால், இதை வாக்கெடுப்பிற்கு விடு கிறேன்.

*(பிரேரணை ஏற்றுக்கொள்ளப்பட்டது.)*

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பின்கண்டதை முன்மொழிகிறேன்:

''விதி 303 துணைவிதி (1) ன் உபவிதி (இ) க்குப் பின்னர், பின்வரும்.உப விதி சேர்க்கப்பட வேண்டும்: அதாவது

(என்.என்.) முதலாவது அட்டவணையில் பாகம்III இல் இப்போதைக்கு குறிப்பிடப்பட்டுள்ள ஒரு சமஸ்தானத்தின் 'அரசர்' என்பவர் குடியரசுத் தலைவரால் சமஸ்தானத்தின் அரசர் என்று அப்போதைக்கு அங்கீகரிக்கப் பட்ட நபர் என்று பொருளாகும்; சமஸ்தானத்தின் அரசரின் அதிகாரங்களைப் பிரயோகித்துக் கொண்டிருப்பவர் எனக் குடியரசுத் தலைவரால் இப்போதைக்கு அங்கீகரிக்கப்பட்ட எந்த நபரும் இதில் அடங்குவர்; ஓர் இந்திய சமஸ் தானத்தைப் பொறுத்தவரையில் பிரதம, தலைமை அல்லது வேறுநபர் இந்திய டொமினியன் அரசாங்கத்தால் அல்லது குடியரசுத்தலைவரால் சமஸ்தானத் தின் அரசர் என்று அங்கீகரிக்கப்பட்டவர் என்று பொருளாகும்.''

★ ★ ★

**திரு. தலைவர்:** இதற்குத் திருத்தம் ஏதும் இல்லை. வாக்கெடுப் பிற்கு விடுகிறேன்.

*(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)*

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பின்கண்டதை முன்மொழிகிறேன்:

"IV ஆவது பட்டியல் (எட்டாவது வாரம் 147 ஆவது திருத்தம் சம்பந்தப் பட்ட திருத்தம் சம்பந்தமாக விதி 303 துணை விதி (1)ன் உபவிதி (4)க்குப் பதிலாகப் பின்கண்ட விதியைச்சேர்க்க வேண்டும்:

''இந்த அரசியல் சாசனத்தின் நோக்கங்களுக்காக இச்சட்டத்தின் விதி 300 ன் கீழ் ஷெட்யூல்டு வகுப்பினர் என்று கருதப்படுகின்ற அத்தகைய சாதிகள், இனங்கள் அல்லது பழங்குடி மக்கள் அல்லது அத்தகைய சாதிகள்,

1. அ.பே.வி. தொகுதி, 1949 செப்டெம்பர் 17, பக்கங்கள் 1633.

இனங்கள் அல்லது பழங்குடி மக்களுக்குள் உள்ள உட்பிரிவுகள் அல்லது உட்பிரிவுகளின் அங்கங்கள் ஷெட்யூல்டு வகுப்பினர் என்று அழைக்கப் படுவார்கள்.''

'குறிப்பிடப்பட்ட'' என்ற வார்த்தை 'கருதப்படுகின்ற'' என்று மாற்றப்பட்டிருப்பது மட்டும்தான் இதிலுள்ள மாற்றமாகும்.

தலைவர் அவர்களே, பின்கண்டதை நான் முன்மொழிகிறேன்.

''பட்டியல் IVன் (எட்டாவது வாரம்) விதி 303 துணைவிதி (I) ன் உபவிதி (X) க்குப் பதிலாக பின்வரும் உபவிதி சேர்க்கப் பட வேண்டும்:

(X) 'பழங்குடிகள் அல்லது பழங்குடி இனங்கள் அல்லது அத்தகைய பழங்குடிகளுக்குள் அல்லது பழங்குடி இனங்களுக்குள் உள்ள உட்பிரிவு கள் அல்லது உட்குழுக்கள் என்று இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் விதி 300 ஆ-ன் கீழ் அரசியல் சாசனத்தின் நோக்கங்களுக்காக ''பழங்குடி மக்கள்'' என்று கருதப்படுபவர்கள் இனி ''ஷெட்யூல்டு பழங்குடி மக்கள்'' என்று பொருள்படுவர்.

அவை முன்வைக்கப்பட்ட மற்ற திருத்தத்தையும்கூட நான் சேர்த்துக் கொள்கிறேன். இதே சமயம் இதர இரண்டு திருத்தங்களையும் எடுத்துக் கொள்வோமா?

**திரு.தலைவர்:** சரி, அவ்வாறே செய்யலாம்.

## புதிய விதி 300 அ மற்றும் 300 ஆ

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** பின்கண்டதை முன்மொழிகிறேன்:

''விதி 300க்குப் பின்னர், பின்வரும் விதிகள் சேர்க்கப்பட வேண்டும்:

ஷெட்யூல்டு சாதிகள்

300 அ. (1) சாதிகள், இனங்கள் அல்லது பழங்குடிகள் ஆகியவை களுக்குள்ளுள்ள உட்பிரிவுகள் அல்லது குழுக்கள் ஆகியோரை இந்த அரசியல் சாசனத்தின் நோக்கங்களுக்காக, அந்த மாநிலம் சம்பந்தப்பட்ட ஷெட்யூல்டுசாதிகள் என்று மாநில ஆளுநர் அல்லது ஆட்சியாளரைக் கலந்தாலோசித்த பின்னர் குடியரசுத் தலைவர் பொது அறிவிக்கை மூலம் குறித்துரைக்கலாம்.

(2) இந்த விதியின் துணைவிதி(1)ன் கீழ் குடியரசுத்தலைவர் வெளியிட்ட அறிவிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ள ஷெட்யூல்டு சாதியினர் பட்டியலிலிருந்து எந்த சாதி, இனம் அல்லது ஷெட்யூல்டு பழங்குடியினர் ஆகியவைகளின் உட்பிரிவுகள் அல்லது குழுக்கள் ஆகியவற்றை சட்டம் மூலமாக நாடாளுமன்றம் சேர்க்கலாம் அல்லது நீக்கலாம்; சொல்லப்பட்ட துணைவிதியின்கீழ் மேற்கூறியவாறு வெளியிடப்பட்ட அறிவிக்கை, பின்னர் வெளியிடப்படும் அறிவிக்கையால் மாறுபட்டதாகாது.''

பழங்குடி சாதிகள்

*300. ஆ. (1) ஒரு மாநிலத்தின் ஆளுநர் அல்லது ஆட்சியாளரை கலந்தாலோசித்த பின்னர், பொதுஅறிவிக்கை மூலம் குடியரசுத் தலைவர் குறிப்பிடும் பழங்குடியினர் அல்லது பழங்குடிசாதிகள் அல்லது பழங்குடி மக்களுக்குள் அல்லது பழங்குடி சாதிகளுக்குள் உள்ள உட்பிரிவுகள் அல்லது குழுக்கள் இந்த அரசியல் சாசனத்தின் நோக்கங்களுக்காக அந்த மாநிலம் சம்பந்தப்பட்ட ஷெட்யூல்டு பழங்குடி மக்கள் என்று கருதப்படுவர்.*

*(2) இந்த விதியின் துணைவிதி (1) ன் கீழ் குடியரசுத்தலைவர் வெளியிட்ட ஒரு அறிவிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ள பட்டியல் பழங்குடியினர் பட்டியலிலிருந்து எந்தப் பழங்குடி அல்லது பழங்குடி சாதி அல்லது பழங்குடிகளுக்குள் அல்லது பழங்குடிசாதிகளுக்குள் உள்ள பிரிவுகள் அல்லது குழுக்கள் ஆகியவற்றை சட்டம்மூலமாக நாடாளுமன்றம் சேர்க்கலாம் அல்லது நீக்கலாம்; ஆனால், செய்யப்பட்ட துணைவிதியின்கீழ் மேற்கூறியவாறு வெளியிடப்பட்ட அறிவிக்கை, பின்னர் வெளியிடப்படும் அறிவிக்கையில் மாறுபட்டதாகாது.''*

நான் ஏற்கனவே கூறியது போன்று, அரசியல் சாசனத்தில் நீண்ட ஷெட்யூல்டு வகுப்பினர், ஷெட்யூல்டு பழங்குடியினர் பட்டியல்கள் பெரிதும் நிரம்புவதை நீக்குவதுதான் இவ்விரண்டு விதிகளின் நோக்கமாகும். அரசியல் சாசனத்தில் விளக்கப்பட்டுள்ள உரிமைகளைப்பெறும் நோக்கத்திற்காக, குடியரசுத் தலைவர் ஒரு மாநிலத்தின் ஆளுநர் அல்லது ஆட்சியாளருடன் கலந்து பேசிய பின்னர் அரசியல் சாசனத்தில் விவரிக்கப்பட்டுள்ள உரிமைகளைப் பெறுவதற்காக ஷெட்யூல்டு வகுப்பினர், ஷெட்யூல்டு பழங்குடியினர்களைக் குறிப்பிட்டுக் காட்டும் ஒரு பொதுவான அறிவிக்கையை அரசிதழில் வெளியிடும் அதிகாரம் குடியரசுத் தலைவருக்கு இருக்க வேண்டும் என்று யோசனை தெரிவிக்கப்பட்டுள்ளது. இது சம்பந்தமாக விதிக்கப்பட்டுள்ள ஒரே கட்டுப்பாடு இதுதான்: ஓர் அறிவிக்கை குடியரசுத் தலைவரால் வெளியிடப்பட்டால் - ஒவ்வொரு மாநில அரசாங்கத்துடன் ஆலோசனை செய்தும், அவற்றின் அறிவுரையின் பேரிலும் அவர் நிச்சயமாக வெளியிடுவார் - அதற்குப் பின்னர், பட்டியலில் குறிக்கப்பட்டுள்ள எதையும் நீக்க வேண்டுமானால் அல்லது ஏதாவது கூடுதலாகச் சேர்க்கப்பட வேண்டுமானால் அதை நாடாளுமன்றம்தான் செய்ய வேண்டும்; குடியரசுத் தலைவரால் அல்ல. குடியரசுத் தலைவரால் அவ்வாறு வெளியிடப்படும் அட்டவணையில் எத்தகைய அரசியல் அம்சங்களும் நோக்கங்களும் குறுக்கிடுவதை நீக்குவதுதான் இதன் நோக்கமாகும்.

★ ★ ★

[1]திரு.தலைவர்: வேறு யாரும் பேச விரும்புகிறீர்களா? டாக்டர் அம்பேத்கர், நீங்கள் எதுவும் கூற விரும்புகிறீர்களா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: பண்டிட் தாகூர் தாஸ் பார்கவாவின் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை.

திரு.தலைவர்: அப்படியானால், திருத்தங்களை வாக்கெடுப் பிற்கு விடுகிறேன்.

*(டாக்டர் அம்பேத்கரின் மேற்கண்ட இரண்டு திருத்தங்களும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. பண்டிட் பார்கவாவின் பின்கண்ட திருத்தம் நிராகரிக்கப் பட்டது.)*

★ ★ ★

''பட்டியல் Vன் (எட்டாவது வாரம்) திருத்தம் எண் 201 துணைவிதி 2ல் முன்மொழியப்பட்டுள்ள புதியவிதி 300-அ-வின் 2ல் பின்வருபவை இறுதி யில் சேர்க்கப்பட வேண்டும்:

''அரசியல் சாசனம் அமலுக்கு வந்ததிலிருந்து பத்தாண்டு காலத்திற்கு.''

★ ★ ★

[1]திரு. தலைவர்: இப்போது டாக்டர் அம்பேத்கர் ஏற்கனவே ஏற்றுக்கொண்டுள்ள திரு.கிருஷ்ணமாச்சாரியின் திருத்தம் - 218-அ மீது வாக்கெடுப்பு நடைபெறும்.

''பட்டியல் V (எட்டாவது வாரம்) புதியவிதி 300-ஆ-வுக்கு முன் மொழியப்பட்டுள்ள திருத்தம் எண் 201 (அ) துணைவிதி(1)ல், இரண்டு இடங்களில் வரும் 'சமூகங்கள்' என்னும் வார்த்தைக்குப் பதிலாக, 'பழங்குடி சமூகங்கள்' என்ற வார்த்தைகளைப் பயன்படுத்த வேண்டும்;

(ஆ) துணைவிதி (2) ல் இரண்டு இடங்களில் வரும் சமூகம் எனும் வார்த்தைக்குப் பதிலாக, 'பழங்குடி சமூகம்' என்ற வார்த்தைகளைப் பயன்படுத்த வேண்டும்.''

திரு. தலைவர்: டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த விதி 300 ஆவை வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

(விதி 300 ஆ ஏற்றுக்கொள்ளப்பட்டு அரசியல் சாசனத்துடன் இணைக்கப் பட்டது.)

(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

---

1. அ.பே.வி., தொகுதி 9, 1949, செப்டெம்பர் 17, பக்கம் 1639.

## எட்டாவது அட்டவணை

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பின்கண்டதை நான் முன்மொழிகிறேன்:

"எட்டாவது அட்டவணை நீக்கப்பட வேண்டும்."

**திரு. தலைவர்:** எட்டாவது அட்டவணைக்குச் சில திருத்தங்கள் உள்ளன. அவை இப்போது எழவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஆம், இப்போது அவை எழவில்லை.

(அரசியல் சாசனத்திலிருந்து எட்டாவது அட்டவணை நீக்கப் பட்டது.)

## விதி 303 (தொடர்ச்சி)

*   *   *

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** பின்கண்டதை நான் முன்மொழிகிறேன்:

"விதி-302 துணைவிதி (2) ல் பின்வரும் வார்த்தைகள் இறுதியில் சேர்க்கப்பட வேண்டும்:

"இந்திய டொமினியன் சட்டமன்றத்தின் ஒரு சட்டத்தை விளக்குவதற்கு இது பொருந்துவதால்", இதில் குறிப்பிடப்படுவது பொது துணைவிதிகள் சட்டமாகும்.

**திரு. ஜஸ்பட் ராய்கபூர்:** இதைச் சேர்ப்பதற்கு உண்மையிலேயே தேவை எதுவும் இருக்கிறதா என்பது எனக்கு வியப்பாக இருக்கிறது. அப்படித் தேவை எதுவும் இருந்தால்,[1] "இந்திய டொமினியன் சட்டமன்றத்தின் ஒரு சட்டத்தை விளக்குவதற்கு இது பொருந்துவதால்" என்று வைத்துக்கொள்ளுவது எவ்வகையில் சரியாகும். ஏனெனில், அரசியல் சாசனம் அமலுக்கு வந்த பின்னர் இந்திய டொமினியன் சட்டமன்றம் நிறைவேற்றிய சட்டம் எதுவும் இருக்காது. அப்போது இந்திய டொமினியனும் இருக்காது; இந்திய டொமினியன் ஆட்சிப் பகுதிக்குள் உள்ள எல்லாச் சட்டங்களும் இந்திய ஒன்றியத்தின் சட்டங்களாகத் தானாகவே மாறிவிடும்.

---

1. அ.பே.வி., தொகுதி 9, 1949 செப்டெம்பர் 17, பக்கம் 1640.
2. மேற்படி அதே நூல், பக். 1641.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இப்போது விஷயம் என்னவென்றால் சட்டங்கள், ஒழுங்குமுறைகள் மற்றும் அவசரச் சட்டங்கள் ஆகியவற்றிற்கு பொது துணைவிதிகள் சட்டம் பொருந்தும். எனவே, இச்சட்டங்களில் எந்தவகையான சட்டத்திற்கு இது பொருந்தும் என்று கூறுவது அவசியமாகும்''. அதனால்தான் இத் திருத்தம் கொண்டுவர உத்தேசிக்கப்பட்டுள்ளது.

*     *     *

**திரு. ஐஷ்பட் ராய் கபூர்:** நான் பணிவுடன் கூறிக்கொள்ள விரும்புவது என்னவெனில், அரசியல் சாசனம் அமலுக்கு வந்த பின்னர் 'இந்திய டொமினியன் சட்டம்' என்று சொல்லக்கூடிய சட்டம் எதுவும் இருக்காது. எனவே ''தற்போதுள்ள எந்தச் சட்டத்தையும் விளக்குவதற்கு இது பொருந்துவதால்'' என்று நாம் கூறினோமென்றால் நம்முடைய நோக்கம் முற்றிலும் நிறைவேறும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பொது துணைவிதிகள் சட்டத்தை நீங்கள் கவனமாகப் படிக்கவில்லை என்றே எனக்குத் தோன்றுகிறது.

**திரு. ஐஷ்பட் ராய் கபூர்:** சில ஷரத்துக்களை கவனத்துடன் ஆய்ந்திடாமல் அவற்றைச் சேர்த்துக் கொள்ளுவது பயன்தராது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எது தேவை, எது தேவையில்லை என்பதை முடிவு செய்ய அரசியல் சாசன வரைவாளர்களிடம் விட்டுவிடுவது சிறந்ததாகும்.

**திரு. ஐஷ்பட் ராய் கபூர்:** தேவையான எத்தகைய திருத்தங்களையும் செய்ய வரைவுக்குழுவிடம் விட்டுவிடலாம் என்பதை நான் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால், ஒரு தவற்றைத் தவறு என்று கூறுவதில் தீங்கு எதுவும் இல்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது ஒரு தவறு என்று கூறுவதை ஏற்றுக்கொள்ள நான் மறுக்கிறேன்.

**திரு. ஐஷ்பட் ராய் கபூர்:** அவரை வழிக்குக் கொண்டு வருவது அவ்வளவு எளிதல்ல என்பது எனக்குத் தெரியும்.

*     *     *

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன். பொது துணைவிதிகள் சட்டத்தை இப்போது பார்த்த பிறகு, நான் முன்மொழிந்துள்ள திருத்தம் மிகவும் தேவையான ஒரு திருத்தம் என்று நம்புகிறேன்.

**திரு. தலைவர்:** நம்முன் உள்ள விஷயம் இதுதான்:

*''விதி 303 துணைவிதி (2) ல் பின்வரும் வார்த்தைகள் இறுதியில் சேர்க்கப்பட வேண்டும்:*

*''டொமினியன் சட்டமன்றத்தின் சட்டம் ஒன்றை விளக்குவதற்கு இது பொருந்துவதால்''*

*(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)*

**திரு. தலைவர்:** இப்போது துணைவிதி (3)க்கு வருவோம். திருத்தம் எண் 156ஐ நாம் பரிசீலனை செய்ய வேண்டியுள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பின்கண்டதை நான் முன்மொழிகிறேன்:

(i) *'விதி 303 துணைவிதி 3ல் 'பகுதி' என்னும் சொல்லுக்கும் இலக்கத்துக்குப் பின்னர் சொற்கள் மற்றும் எண் இலக்கங்கள் 'அல்லது பகுதி III' சேர்க்கப்பட வேண்டும்.*

(ii) *'நேர்வுக்கேற்ப, ஆளுநர் பிறப்பித்த ஓர் அவசரச் சட்டத்திற்கு' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக, 'நேர்வுக்கேற்ப ஓர் ஆளுநர் அல்லது அரசர் பிறப்பித்த ஓர் அவரச்சட்டத்திற்கு' என்ற வார்த்தைகளைப் பயன் படுத்த வேண்டும்.'*

இது முற்றிலும் பின்விளைவு அம்சம் கொண்டதுதான்.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

***(திருத்தப்பட்டபடி விதி 303 அரசியல் சாசனத்துடன் இணைக்கப் பட்டது.)***

★ ★ ★

## விதி 304

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பின்கண்டதை நான் முன்மொழிகிறேன்:

1. அ.பே.வி. தொகுதி 9, 1949 செப்டெம்பர் 17, பக்கம் 1641-42.
2. மேற்படி அதே நூல், பக். 1643.

'விதி 304 க்குப் பதிலாக பின்வருபவை சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:

'304. அரசியல் சாசனத்தை திருத்தும் நோக்கத்திற்காக நாடாளு மன்றத்தின் இரு அவைகளிலும் ஒரு திருத்தத்தைக் கொண்டுவரலாம்; ஒவ்வொரு அவையிலும் அவையின் மொத்த உறுப்பினர்களில் பெரும் பான்மை மூலமும் அவைக்கு வந்து இருந்து வாக்களித்தவர்களில், மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்கள் பெரும்பான்மை மூலமும் நிறை வேற்றி, அதை குடியரசுத் தலைவரின் ஒப்புதலுக்கு அனுப்ப வேண்டும்; மசோதாவுக்கு அத்தகைய ஒப்புதல் கிடைத்ததன்பேரில், மசோதாவில் கண்டுள்ள நிபந்தனைகளுக்கேற்ப அரசியல் சாசனம் திருத்தப்பட வேண்டும்.

அத்தகைய திருத்தம் பின்வருபவற்றில் எவ்வித மாற்றம் செய்ய முயன்றால் -

(அ) ஏழாவது அட்டவணையின் ஏதேனும் பட்டியல்களில், அல்லது

(ஆ) நாடாளுமன்றத்தில் மாநிலங்களுக்குள்ள பிரதிநிதித்துவத்தில்; அல்லது

(இ) பகுதி V - ன் அத்தியாயம் IV பகுதி VI-ன் அத்தியாயம் VII மற்றும் இந்த அரசியல்சாசனத்தின் விதி 213அ,

முதலாவது அட்டவணை பகுதிகள் I மற்றும் IIIல் அப்போதைக்குக் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்களில் பாதிக்குக் குறையாதவைகளின் சட்டமன்றங்களால் அத்திருத்தம் உறுதிசெய்யப்படவேண்டும்.''

அடுத்துள்ள திருத்தம் எண் 207யையும் நான் முன்மொழிய வேண்டும். பின்கண்டதை முன்மொழிகிறேன்:

'பட்டியல் IIIல் (ஆங்கில வாரம்) கண்ட திருத்தம் எண் 118 ல் உத்தே சிக்கப்பட்டுள்ள விதி 304க்கான வரம்ப ரைக்குப் பதிலாகப் பின்வரும் வரம்புரை சேர்க்கப்பட வேண்டும்:

'அத்தகைய திருத்தம் (பின்)கண்டவற்றில் எவ்வித மாற்றமும் செய்ய முயற்சிக்கும் பட்சத்தில் -

(அ) இந்த அரசியல் சாசனத்தின் விதி 43, விதி 44, விதி 60, விதி 142 அல்லது விதி 213, அல்லது

(ஆ) இந்த அரசியல் சாசனத்தின் பகுதி Vன் அத்தியாயம் VI-ன் அத்தி யாயம் VII, அல்லது பகுதி IXன் அத்தியாயம் I, அல்லது பகுதி VI

(இ) ஏழாவது அட்டவணையின் எந்தப் பட்டியலிலும், அல்லது பகுதி VI-ன் அத்தியாயம் VII-மற்றும் நாடாளுமன்றத்தில் மாநிலங்களின் பிரதிநிதித்துவம், அல்லது இந்த விதியின் ஷரத்துக்கள்.

(ஈ) முதலாவது அட்டவணையின் பகுதிகள் I மற்றும் IIIல் அப்போ தைக்குக் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்களில் சரிபாதிக்குக் குறையாத மாநிலங்களின் சட்டமன்றங்கள் தீர்மானங்கள் மூலம் அத்திருத்தம் ஏற்கப் பட வேண்டும். குடியரசுத்தலைவரின் ஏற்பு இசைவுக்கு திருத்தஷரத்துகள் அடங்கிய சட்ட முன்வடிவு சமர்ப்பிக்கப்படுவதற்கு முன்னர்.

(உ) இந்த விதியின் ஷரத்துகள்.

கணிசமான அளவிற்கு இந்த விதி குறித்து விவாதம் இருக்கு மென்று எதிர்பார்ப்பதால், இத்தருணத்தில் இதுபற்றி எதுவும் பேச விரும்பவில்லை. இத்திருத்தத்திற்கெதிராக எழுப்பப்படக்கூடிய வினாக்களுக்குப் பதிலளிக்கும் வகையில் இறுதியில் என்னுடைய கருத்துக்களை எடுத்துரைக்கலாம் என்று இப்போது நிறுத்திக் கொள் கிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** தேவையற்ற விவாதத்தைத் தவிர்ப் பதற்கு முதலிலேயே வாதங்களை முன்வைப்பது சாலச்சிறந்ததாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** என்னுடைய நண்பர் அதிக நேரம் எடுத்துக்கொள்ளமாட்டேன் என்று உறுதியளித்தால், நான் அவ்வாறு செய்கிறேன். ஆனால் நண்பர் கூழுக்கும் ஆசைப்படு பவர் மீசைக்கும் ஆசைப்படுபவர் என்பது எனக்குத் தெரியும்.

**திரு. நசிருத்தீன் அகமது:** ஐயா, உறுப்பினர்களின் வாதங் களுக்காகக் காத்திருப்பதாகக் கூறி, டாக்டர் அம்பேத்கர் இப்போது விவாதம் எதுவும் செய்யாமல் பதிலளிக்குமாறு பேசுவார். ஆனால் வாதங்களையும் கேட்டுவிட்டு, இறுதியில் திருத்தங்களை எதிர்க் கிறேன். வாதங்களை நிராகரிக்கிறேன்!'' என்று பூதாப்படியாகக் கூறி விடுவார்.

**திரு. தலைவர்:** திருத்தம் எண். 119யைப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்வோம்.

**திரு. டி.டி.கிருஷ்ணமாச்சாரி:** டாக்டர் அம்பேத்கரின் திருத் தத்தில் இத்திருத்தம் இணைக்கப்பட்டுள்ளதால், திருத்தம் எண் 119 யை நான் பிரேரணை செய்யவில்லை.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர்களே, இங்கு பல்வேறு திருத்தங்கள் முன்மொழியப்பட்டுள் ளன; அவைகள் மீது பல உரைகள் நிகழ்த்தப்பட்டுள்ளன. இந் நிலைமையில் ஒவ்வொரு திருத்தத்தையும், ஒவ்வொரு உறுப்பினரது பேச்சையும் உன்னிப்பாக கவனிப்பது என்னால் இயலாததாகும். ஒரு சாதாரண பெரும்பான்மை மூலம் அல்லது விதி 304ல் கூறப்பட் டிருப்பதைக் காட்டிலும் எளிதான ஒருமுறை மூலம் நமது அரசியல்

1. அ.பே.வி. தொகுதி 9, 1949 செப்டெம்பர் 17, பக்கம் 1659-63.

சாசனம் வருங்காலத்தில் நாடாளுமன்றத்தால் திருத்தப்படும் வகையில் அமைந்திருக்க வேண்டுமென்று பல உறுப்பினர்கள் தெரிவித்த ஆலோசனையை அனுசரித்து, ஒரு பொதுவான மாற்று முறையினை மேற்கொள்ள முயற்சிக்கிறேன்.

ஐயா, விதி 304ல் அடங்கியுள்ள ஷரத்துக்கள் பற்றி விளக்குவதற்கு முன்னர், அரசியல் சாசனத்தைத் திருத்தும் விஷயத்தில் இதர நாடுகளின் அரசியல் சாசனங்களில் எத்தகைய ஷரத்துக்கள் உள்ளன என்பது பற்றி இச்சபையின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். கனடா நாட்டின் அரசியல் சாசனத்தைத் திருத்துவது பற்றி, எவ்வித வழிவகையும் கூறப்படவில்லை என்பதை முதலில் நான் தெரிவித்துக் கொள்கிறேன். கனடா இன்று ஒரு டொமினியன் என்ற போதிலும் இறையாண்மைக்குரிய அனைத்து அம்சங்களையும் பெற்றுள்ள முழு அரசுரிமை படைத்த நாடு மட்டுமல்ல, அரசியலமைப்புச் சட்டத்தைத் திருத்தும் அதிகாரமும் அந்நாட்டிற்கு உண்டு; இருப்பினும், இன்றும்கூட அரசியல் சாசனத்தைத் திருத்த ஒரு துணைவிதியைக் கூடச் சேர்க்க நாடாளுமன்றத்திற்கு அனுமதி வழங்குவது உசிதமானதென கனடா நாட்டினர் கருதவில்லை. இத்தனைக்கும் கனடாவின் அரசியல் சாசனம் 1867 ஆம் ஆண்டுவாக்கிலேயே உருவாக்கப்பட்டு விட்டது என்பதை நினைவில் கொள்ள வேண்டும்;

கனடாவின் அரசியல் சாசனத்தின் பல்வேறு துணைவிதிகள் பற்றியும், அச்சட்டத்தின் ஷரத்துக்கள் குறித்து பிரிவு கவுன்சில் அளித்த விளக்கங்கள் பற்றியும் அந்நாட்டில் பெருமளவில் அதிருப்தி நிலவுகிறது என்பதில் கனடா நாட்டின் அரசியல் சாசனம் பற்றிய பல நூல்களைப் படித்தவர்களுக்கு எத்தகைய ஐயமுமில்லை. இருப்பினும், தங்களுக்குள்ள அதிகாரத்தைப் பயன்படுத்தி, அரசியல் சாசனத்தைத் திருத்த ஒரு துணைவிதியைக்கூடப் புகுத்துவது சரியென கனடா நாட்டு மக்கள் கருதவில்லை.

அயர்லாந்து நாட்டு அரசியல் சாசனத்துக்கு இப்போது வருவோம். அயர்லாந்து நாட்டு அரசியல் சாசனத்தின் எப்பகுதியையும் சாதாரண பெரும்பான்மை மூலம் இரண்டு அவைகளும் திருத்துவதற்கும் அல்லது நீக்கம் செய்வதற்கும் அந்நாட்டு அரசியல் சாசனத்தில் ஒரு ஷரத்து இருக்கிறது; ஆனால் அரசியல் சாசனத்தைத் திருத்த, நீக்க அல்லது மாற்றிட அந்நாட்டு சட்டமன்றங்கள் மேற்கொள்ளும் முடிவு, பொது வாக்கெடுப்பிற்கு விடப்பட்டு, பெரும்பான்மை மக்களால் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்ற நிபந்தனைக்குட்பட்டதாகும் அந்த ஷரத்து.

இதை அடுத்து, சுவிட்சர்லாந்து நாட்டின் அரசியல் சாசனத்தைப் பார்ப்போம். அந்த அரசியல் சானசத்தில்கூட நாடாளுமன்றம் அதனை திருத்தும் ஒரு மசோதாவை நிறைவேற்றலாம் என்ற ஷரத்து இருக்கிறது. ஆனால் இரண்டு நிபந்தனைகளை நிறைவேற்றினாலன்றி, அத்திருத்தத்தை நடைமுறைப்படுத்தும் அதிகாரம் கிடையாது; முதலாவதாக பெரும்பான்மையான மாநிலங்கள் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்; இரண்டாவதாக பொதுமக்கள் வாக்கெடுப்பும் உள்ளது; அந்த வாக்கெடுப்பில் பெரும்பான்மையான மக்களும் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும். சுவிட்சர்லாந்து நாட்டில் அரசியல் சாசனத்தைத் திருத்துவதைப் பொறுத்தவரையில் சட்டமன்றம் ஒரு மசோதாவை நிறைவேற்றுவது மட்டும் போதாது.

ஆஸ்திரேலிய நாட்டின் அரசியல் சாசனத்தை இப்போது எடுத்துக் கொள்கிறேன். அந்நாட்டு அரசியல் சாசனத்தில் இது சம்பந்தமாக உள்ள வழிமுறை இதுதான்: முதலில் ஆஸ்திரேலிய நாடாளுமன்றத்தில் திருத்தம் அறுதிப் பெரும்பான்மை மூலம் நிறைவேற்றப்படவேண்டும். அவ்வாறு நிறைவேற்றப்பட்டபின்னர், ஆஸ்திரேலிய நாட்டு நாடாளுமன்றத்தின் கீழ்ச்சபைக்கு பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் வாக்குரிமை பெற்றவர்களின் ஒப்புதலுக்காகத் திருத்தம் சமர்ப்பிக்கப்பட வேண்டும். அத்துடன் நில்லாது, மீண்டும் பொது மக்களின் கருத்துக்கணிப்புக்கு அல்லது வாக்காளர்களின் அபிப்பிராயத்துக்கு சமர்ப்பிக்கப்படவேண்டும். மேலும் ஒரு நிபந்தனையும் உண்டு. அதாவது, அத்திருத்தம் பெரும்பான்மையான மாநிலங்களாலும், பெரும்பான்மையான வாக்காளர்களாலும் ஏற்றுக் கொள்ளப் பட வேண்டும்.

ஒன்றிய அரசியல் சாசனத்தில், இரு சபைகளிலும் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையுடன் ஒரு திருத்தம் ஏற்றுக்கொள்ளப் படவேண்டுமென்று வகை செய்யப்பட்டுள்ளது. மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையுடன் இவ்விரு சபைகள் எடுத்த முடிவை, மூன்றில் இருபங்கு பெரும்பான்மை மாநிலங்களும் திருத்தத்திற்குச் சாதகமாக ஒப்பு உறுதி அளிக்க வேண்டும். நான் குறிப்பிட்டுள்ள எந்த நாட்டிலும் அரசியல் சாசனம் சாதாரணமான பெரும்பான்மை மூலம் திருத்தப்படுவதற்கு வழிவகை செய்யப்படவில்லை என்பதைக் குறிப்பிட்டுக் காட்டத்தான் இத்தகைய விவரங்களைக் கூறுகிறேன்.

இப்போது நம்முடைய அரசியல் சாசனத்திலுள்ள ஷரத்துப் பற்றிப் பார்க்கலாம். நம்முடைய அரசியல் சாசனத்தைத் திருத்துவது பற்றி நாம் என்ன செய்ய உத்தேசித்துள்ளோம்? அரசியல் சாசனத்தின்

பல்வேறு விதிகளை மூன்று வகையாகப் பிரிக்க உத்தேசித்துள்ளோம். முதலாவது வகையில் நாடாளுமன்றத்தின் சாதாரண பெரும்பான்மை மூலம் திருத்தப்படக்கூடிய சில விதிகளைச் சேர்த்துள்ளோம். துர திருஷ்டவசமாக விதி 304ல் இந்த உண்மையைக் குறிப்பிடாத காரணத் தால், இவ்விஷயம் கவனத்திற்கு வரவில்லை; ஆனால் இதர விதி களில் இது காணப்படுகிறது; சிலவற்றை நான் இங்கு குறிப்பிடு கிறேன். உதாரணத்திற்கு மாநிலங்கள் பற்றி கூறும் விதிகள் 2, 3 யை எடுத்துக்கொள்ளுங்கள். புதிய மாநிலம் உருவாவது பொறுத்தவரை அல்லது தற்போதுள்ள மாநிலங்களைச் சீரமைப்பது பொறுத்த வரை, இவ்விஷயத்தை சாதாரண பெரும்பான்மைமூலம் நாடாளு மன்றம் முடிவு செய்துவிடலாம். அவ்வாறே, உதாரணமாக, மாகா ணங்களில் மேல்சபை பற்றிக் கூறும் விதி 148 - அ வை எடுத்துக் கொள்ளுங்கள். சாதாரண பெரும்பான்மை மூலம் மேல்சபையை ஒழித்துவிடவோ அல்லது இப்போது மேல்சபைகள் இல்லாத மாகா ணங்களில் மேல்சபைகளை அமைக்கவோ முழுமையான அதிகாரம் நாடாளுமன்றத்திற்குக் கொடுக்கப்பட்டுள்ளது. பகுதி IIல் குறிப் பிடப்பட்டுள்ள மாநிலங்கள் பற்றி கூறும் விதி 213 யை எடுத்துக் கொள்வோம். மாநிலங்களை உருவாக்குவதைப் பொறுத்தவரை, பகுதி IIல் குறிப்பிடப்பட்ட மாநிலங்களை உருவாக்குவதையும், அவற்றை மாற்றுவதையும் நாடாளுமன்றத்தின் சாதாரண பெரும்பான்மை முடிவுசெய்வதற்கு அரசியல் சாசனம் வகை செய்துள்ளது.

அட்டவணை V மற்றும் VIயைப் பார்ப்போம். நாடாளு மன்றம் சாதாரண பெரும்பான்மை மூலம் அவற்றைத் திருத்தவகை உண்டு. மானியம், நிதிஷரத்துக்கள் பற்றிக்கூறும் விதி 255 யைப் போல் மிகப் பலவான விதிகளை எடுத்துக்காட்டாக நான் கூற முடியும். விதி 255ன் ஷரத்துக்கள் நாடாளுமன்றம் நிறைவேற்றும் சட்டங்களுக்குட்பட்டவை. இது சம்பந்தமான வழிவகை, ஏற்பாடு இதுதான்; 'நாடாளுமன்றம் வேறுவகையில் ஏற்பாடு செய்யும் வரை யில்.' எனவே, பல விஷயங்களில் அரசியல் சாசனத்தின் வரைவை முழுமையாக பரிசோதித்திட எனக்கு போதுமான அவகாசம் இல்லை; ஆகவே என்னுடைய கருத்தினை மட்டும்தான் எடுத்துக்காட்டி விளக்குகிறேன். சாதாரணப் பெரும்பான்மைமூலம் திருத்தப்படத்தக்க முறையில் நாங்கள் அரசியல் சாசனத்தில் வழிவகை செய்துள்ளோம். சாதாரண பெரும்பான்மை மூலம் அரசியல் சானத்தைத் திருத்துகின்ற அல்லது மாற்றுகின்ற விரிந்த அளவிலான அதிகாரம் நாடாளுமன்றத் திற்கு வேண்டுமென்று பிடிவாதமாக உள்ள என்னுடைய நண்பர்கள்,

ஒரு தெளிவான விஷயத்தை ஆலோசனையாக எனக்குக்கூறி, இவ்விதமானவகையில் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டிய குறிப்பிட்ட சில விதிகளைச் சுட்டிக்காட்டியிருப்பார்களேயானால், அதனை பரிசீலனை செய்ய வரைவுக்குழுவுக்கு வசதியாக இருந்திருக்கும். அவ்வாறு செய்யாது, அரசியல் சாசனம் முழுவதும் நாடாளுமன்றத்தின் பெரும்பான்மை மூலம் திருத்தப்படுவதற்கு உட்பட்டதாக இருக்க வேண்டுமென்று கூறுவது வரம்பு கடந்ததாகும்; அரசியல் சாசனத்தைத் தயாரிக்கும் பொறுப்பிலுள்ளவர்களால் ஏற்றுக்கொள்ள முடியாத மிகையான வாதமாகும் என்பது என்னுடைய கருத்து.

எனவே, முதலாவதாக, சாதாரண பெரும்பான்மை மூலம் நாடாளுமன்றம் திருத்தம் செய்யக்கூடிய எந்த விதியும் அரசியல் சாசனத்தில் இல்லை என்று சொல்வது முற்றிலும் தவறான கருத்து என்பதை வலியுறுத்திக் கூறவிரும்புகிறேன். நான் ஏற்கனவே கூறியது போல், சாதாரண பெரும்பான்மைமூலம் நாடாளுமன்றம் திருத்தம் செய்யக்கூடிய பல்வேறு விதிகள் நம்முடைய அரசியல் சாசனத்தில் உள்ளன.

இப்போது நாம் செய்யவேண்டியது என்ன? அரசியல் சாசனத்தை மூன்று வகைகளாகப் பிரிக்கிறோம். சாதாரண பெரும்ன்மை மூலம் நாடாளுமன்றம் திருத்தம் செய்யும் விதிகள் முதலாவது வகையில் அடங்கும், மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மை மூலம் திருத்தப்படும் விதிகள் இரண்டாவது வகையில் அடங்கும். எதிர்காலத்தில் பகுதி IIIல் அல்லது விதி 304ல் குறிப்பிடப்படாத எந்த ஒரு குறிப்பிட்ட விதியையும் நாடாளுமன்றம் திருத்தம் செய்ய விரும்பினால், அதற்கு செய்யவேண்டியதெல்லாம் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மை பெறவேண்டியதுதான். இதன்மூலம், திருத்தம் செய்து கொள்ளலாம்.

**திரு. அவைத் தலைவர்:** அவையிலுள்ள உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கினர், அப்படித்தானே?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம்; மூன்றாவது வகையில் சில விதிகளைச் சேர்த்துள்ளோம் என்பது உண்மையே. இதில், திருத்தம் செய்வதற்காக மேற்கொள்ளப்படும் முறை சற்று வித்தியாசமானது அல்லது இரட்டிப்பானது. திருத்தம் செய்ய மூன்றில் இரண்டுபங்கு பெரும்பான்மையுடன், மாநிலங்களால் பின் ஏற்கப்

படுவதற்கு வழிவகை செய்யப்பட வேண்டும். சில விதிகளைப் பொறுத்தவரை இத்தகைய நடைமுறையைப் பின்பற்ற வேண்டு மென்று நாங்கள் விரும்புவது ஏன் என்பதை விளக்குகிறேன். விலக்குவிதியின் கீழ் சேர்க்கப்பட்டுள்ள விதிகளை இவ்விஷயத்தில் ஆர்வமுள்ள இச்சபை உறுப்பினர்கள் ஆய்ந்து பார்த்தால், அவை மத்திய அரசை மட்டுமல்ல, மத்திய அரசாங்கத்திற்கும் மாகாணங் களுக்குமிடையேயுள்ள உறவுகளையும் குறிப்பிடுகின்றன என்பதை அவர்கள் காணமுடியும். மாகாணங்களின் சுயாட்சியில் தலையீடு இருக்கும் நிலையில், அரசியல் சாசனத்தின் கூட்டாட்சிக் கட்டமைப்பு அடிப்படையில் மாற்றப்படாமலிருக்க வேண்டுமென்று விரும்பு கிறோம்; உண்மையிலேயே அவ்வாறு இருப்பதையும்கவனித்துள் ளோம். மாகாணங்களுக்கு நமது சட்டங்கள் மூலம் சில குறிப்பிட்ட உரிமைகளை நாம் அளித்துள்ளோம்; சில குறிப்பிட்ட உரிமைகளை மத்திய அரசாங்கத்திற்கு ஒதுக்கியுள்ளோம்; சட்டமியற்றும் அதிகா ரத்தை வழங்கியுள்ளோம்; ஆட்சி அதிகாரத்தை வழங்கியுள்ளோம்; மற்றும் நிருவாக அதிகாரத்தையும் வழங்கியுள்ளோம். இன்னும் சொல்லப்போனால் நிருவாகம், சட்டமியற்றுதல், நிதி மற்றும் மாகாணங்களின் நிர்வாக அதிகாரங்கள் போன்ற இதர அதிகாரங்கள் சம்பந்தப்பட்ட விதிகள்கூட மாகாணங்கள் அல்லது மாநிலங்கள் எத்தகைய உரிமையும் கொண்டாட அனுமதிக்காது நாடாளுமன்றத் தின் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மை மூலம் மாற்றப்படு வதற்கு உட்படுத்தப்படவேண்டுமென்று கூறுவது அரசியல் சாச னத்தின் அடிப்படைகளையே முற்றிலும் செயலற்றதாக்கிவிடும் என்பது என்னுடைய முடிவாகும். விலக்குக்கூறில் சேர்க்கப்பட்டுள்ள விதிகளை என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர்கள் பார்க்க நேர்ந்தால், ஒருசிலவற்றைத்தான் நாங்கள் தேர்ந்தெடுத்துள்ளோம் என்பதை அவர்கள் அறிந்துகொள்ள முடியும். குடியரசுத் தலைவர் தேர்ந் தெடுப்பது பற்றி விதி 43 கூறுகிறது; அவர் எவ்வாறு தேர்ந்தெடுக்கப் படவேண்டும் என்பது பற்றி விதி 44 கூறுகிறது. மத்திய அரசாங்க விவகாரங்கள் பொறுப்பில் குடியரசுத் தலைவர் இருந்தாலும், அவர் ஒன்றியத்தின் தலைவராகவும் உள்ளார்; அவ்வகையில் அவருடைய தேர்தலில் மத்திய அரசாங்கத்தைப் போலவே மாநிலங்களுக்கும் அக்கறை உள்ளது. இது வரைவுக்குழுவின் கருத்தாகும். அதனால், மாகாணங்களின் ஒப்புதல் தேவைப்படுகின்ற விதிவகைகளில் இது சேர்க்கப்படுவதற்குத் தகுந்த விஷயம் என்று நாங்கள் நினைத்தோம்.

விதி 60 மற்றும் விதி 142 யைப் பார்ப்போம். ஒன்றியத்தின் ஆட்சி அதிகார வரம்பு பற்றி விதி 60 கூறுகிறது. அதேபோல் மாநிலங்

களின் ஆட்சி அதிகார வரம்பு பற்றி விதி 142 கூறுகிறது. ஆட்சி அதிகாரம் சட்டமியற்றும் அதிகாரத்துடன் ஒருங்கிணைந்து இருக்க வேண்டும் என்ற கருத்தினை நமது அரசியல் சாசனத்தில் வரையறுத் துள்ளோம். உதாரணத்திற்கு கூறவேண்டுமானால், விதி 60ல் கண்டுள்ள ஷரத்துக்களுக்கு அல்லது வரம்புக்கு அப்பால் ஆட்சி அதிகாரத்தை விஸ்தரிக்கும்பொருட்டு விதி 60ல் மாற்றம் ஒன்று செய்ய நாடாளு மன்றத்திற்கு அதிகாரம் இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம். அத்தகைய அதிகரம் விதி 142ல் விளக்கப்பட்டுள்ள மாநிலங்களின் ஆட்சி அதிகாரத்தை நிச்சயமாக கட்டுப்படுத்தும் அல்லது அழித்து விடும். எனவே, இதுவும் ஓர் அடிப்படை உரிமை சார்ந்த விஷயம், இதற்கும் மாநிலங்களின் ஒப்புதல் கட்டாயம் தேவை என்று கருதினோம்.

அத்தியாயம் IV, பகுதி V உச்சநீதிமன்றம் பற்றிக் கூறுகின்றன. மத்திய அரசாங்கமும், மாகாணங்களும் அல்லது பிராந்தியங்களும் மற்றும் இந்நாட்டின் ஒவ்வொரு குடிமகனும் உச்சநீதிமன்றத்தில் அக்கறை கொண்டுள்ளனர் என்பதில் சந்தேகம் எதுவும் இருக்க முடியாது. எனவே, மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையைக் கொண்டு முடிவு செய்துவிடுவதற்கு விடப்படும் ஒரு விஷயமல்ல இது என்பது தெளிவு. பகுதி VIன் அத்தியாயம் VIIல் குறிப்பிடப்பட் டுள்ள உயர்நீதிமன்றங்கள் பற்றியும் இவ்வாறுதான் கூறமுடியும்.

மூன்றாவது வகையில் சேர்க்கப்பட்டுள்ள பகுதி IX-ன் அத்தி யாயம் I சட்டமியற்றும் அதிகாரம் வழங்குவது பற்றிக் கூறுகிறது; மற்றும் (அ) ஏழாவது அட்டவணைப் பட்டியல்களைப் பற்றி கூறுகிறது. மாகாணங்களுக்கு இவ்விஷயத்தில் அடிப்படையான அக்கறை உள்ளது என்பதை யாரும் மறுக்க முடியாது; அவற்றின் இசைவின்றி அவை மாற்றப்படக் கூடாது. இது போன்றதே விதி 67ல் கூறப்பட்டுள்ள மாநிலங்கள் அவையில் மாநிலங்களுக்குள்ள பிரதி நிதித்துவ விஷயமும்.

அரசியல் சாசனம், சட்டக் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டதாகவும், அதன் ஒவ்வொரு விதியும் சாதாரண பெரும்பான்மை மூலம் திருத்தப் படுவதற்குரியதாகவும் இருக்க வேண்டுமென்று நினைப்பவர்களின் கண்ணோட்டத்தில் தவிர, வரைவுக்குழு கைக்கொண்ட கொள்கைகள் கேள்விக்குரியனவல்ல என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்

உணரமுடியும். நான் முன்னர் கூறியதுபோன்று, இத்தகைய நிலையை ஏற்றுக்கொள்ள நான் தயாராக இல்லை. அரசியல் சாசனம் ஆதாரபூர்வ ஆவணமாகும். ஆட்சித்துறை, நீதித்துறை, சட்டமன்றம் ஆகிய அரசாங்கத்தின் மூன்று அங்கங்களின் அந்தஸ்து மற்றும் அதிகாரங்கள் பற்றி இந்த ஆவணம் விளக்குகிறது. குடிமக்களின் அடிப்படை உரிமைகள் பற்றி விளக்கும் நமது அத்தியாயத்தில் நாம் நிர்ணயித்துள்ளது போல், ஆட்சித்துறை, சட்டமன்றம் ஆகியவற்றின் அதிகாரங்கள் பற்றியும் இது விளக்குகிறது. அரசாங்கத்தின் அங்கங்களை உருவாக்குவது மட்டும் அரசியல் சாசனத்தின் நோக்கமல்ல; அவற்றின் அதிகாரங்களை வரையறை செய்வதும் நோக்கமாகும்; ஏனெனில் அங்கங்களின் அதிகாரங்கள் மீது வரையறைகள் விதிக்கப்படாமலிருந்தால், முழு அளவுக்குக் கொடுங்கோன்மையும், அடக்குமுறையும்தான் நிலவும். எத்தகைய சட்டத்தையும் இயற்ற சட்டமன்றத்திற்கு உரிமை இருக்கலாம்; ஒரு முடிவை எடுக்க ஆட்சித்துறைக்கு அதிகாரம் இருக்கலாம்; சட்டத்திற்கு எவ்வித விளக்கமும் அளிக்க உச்சநீதிமன்றத்திற்கு சுதந்திரம் இருக்கலாம். இவ்வாறு இருப்பது முற்றிலும் குழப்பத்தில் முடியும். ஒரு சாதாரண பெரும்பான்மை மூலம் அரசியல் சாசனம் திருத்தப்படும் வகையில் இருக்க வேண்டுமென்று கூறுவதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. இத்தகைய கண்ணோட்டத்தைப்பற்றி நான் சிந்தித்துப் பார்த்தபோது, என்னால் மூன்று காரணங்களைத்தான் எண்ணிப் பார்க்க முடிந்தது. அரசியலமைப்புச் சட்ட வரைவுக்குழு வரைவு நோக்கில் பார்க்கும்போது ஒரு மோசமான வரைவைத் தயாரித்துள்ளது என்பது ஒன்றாகும். விஷயம் அப்படியானால்....*

**திரு. மகாவீர் தியாகி:** விஷயம் அப்படியல்ல.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவ்வாறு இல்லாது இருக்கலாம். ஆனால், விஷயம் அப்படி என்றால் அரசியல் நிர்ணய சபை மற்றொரு வரைவுக்குழுவை நியமிக்கவோ அல்லது ஒரு நாடாளுமன்ற வரைவுநிபுணரை அழைத்து, இந்த அரசியல் சாசன வரைவினை அவரிடம் கொடுத்து, இதிலுள்ள குறைகளைக் கண்டறியுமாறு அவரைக் கேட்பதாகவோ இருந்தால் அதற்கு வரைவுக் குழுவின் தலைவர் என்றமுறையில் நானும், வரைவுக்குழுவின் என்னுடைய இதர சகாக்களும் ஆட்சேபனை எழுப்ப மாட்டோம்.

* புள்ளிகள் குறுக்கீட்டைக் குறிப்பிடுகின்றன.

அது ஒரு நேர்மையான நடைமுறையாகும். எனக்கு எவ்விதமான ஆட்சேபனையுமில்லை. அந்த அடிப்படையில் இந்த வாதம் அமைந்திருக்கவில்லை என்றால், இந்த அரசியல் சாசனம் வேறு ஏதோ தவறான கோட்பாடுகளின் அடிப்படையில் அமைந்திருக்கிறது என்று இதற்குக் காரணம் கூறப்படக்கூடும்.

இவ்விஷயம் சம்பந்தப்பட்டவரை, நவீன அரசியல் சாசனம் எதுவும் இரண்டு அடித்தளங்களைத்தான் ஆதாரமாகக் கொண் டிருக்க முடியும் என்று எனக்குத் தோன்றுகிறது: நாடாளுமன்ற முறை ஜனநாயக அமைப்பு என்பது ஓர் அடித்தளம், மற்றொரு அடித் தளம் கொடுங்கோல் அல்லது சர்வாதிகார அரசாங்க அமைப்பாகும். நமது அரசியல் சாசனம் ஒரு சர்வாதிகாரத் தளமாக அமையக்கூடாது; மாறாக நமது அரசியல் சாசனம் நாடாளுமன்ற ஜனநாயகம் எனும் பட்டை தீட்டிய வைரமாக, மக்களுக்குப் பொறுப்புள்ளதாக, நீதித் துறைக்குப் பதிலளிப்பதாக இருக்கவேண்டுமென்று நாம் கருதினால், நமது இந்த அரசியல் சாசனத்தில் பொதிந்து கிடக்கும் தத்துவங்கள் அனைத்தும் வேறு எந்த நாட்டின் நாடாளுமன்ற அரசியல் சாசனத் திலுமுள்ள தத்துவங்கள் போன்று நலம் பயப்பவைகளாகவே - அவைகளைக் காட்டிலும் சிறந்தவை என்று கூற முடியாவிட்டாலும் - உள்ளன என்று கூறுவதில் எனக்கு எவ்விதத் தயக்கமும் கிடையாது.

இங்கு பேசிய ஒவ்வொரு உறுப்பினரின் பேச்சையும் நான் கேட்க இயலாத நிலையில் மற்றொரு வாதமும் இங்கு முன்வைக்கப் படக்கூடும். அந்த வாதம் வருமாறு: இந்த அவை ஒரு பிரதிநிதித் துவம் வாய்ந்த அவையல்ல; ஏனென்றால், வயதுவந்தோர் வாக் குரிமை அடிப்படையில் அது தேர்ந்தெடுக்கப்படவில்லை; பெரும் பகுதியான மக்களின் பிரதிநிதித்துவக்குரல் இந்த அரசியல் சாசனத் தில் ஒலிக்கவில்லை. அதனால், இந்த அரசியல் சாசனத்தை உரு வாக்குகின்றபோது, விதி 304 கூறுகின்றது போல் இந்த சாசனம்தான் இறுதியானது என்று கூறுவதற்கு இந்த அரசமைப்புப் பேரவைக்கு எவ்வித உரிமையும் இல்லை. இந்த அவையின் உறுப்பினர்கள் வயதுவந்தோர் வாக்குரிமை அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட வில்லை என்ற அர்த்தத்தில் இச்சபை ஒரு பிரதிநிதித்துவ சபையாக இல்லை என்பது உண்மையாக இருக்கலாம். அந்த வாதத்தை நான் ஏற்றுக்கொள்கிறேன்; ஆனால் இச்சபை வயது வந்தோர் வாக்குரிமை அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்குமேயானால், அதிகமான

ஞானமும், அரசியல் அறிவும் இது பெற்றிருக்கும் என்று அதீதமான அனுமானத்தை நான் முற்றிலும் எதிர்க்கிறேன்.

**திரு. நசிருத்தீன் அகமது:** அது இன்னும் மோசமானதாக இருந்திருக்கும்!

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது இன்னும் மோசமானதாக இருந்திருக்கும் என்று என்னுடைய நண்பர் நசிருத்தீன் அகமது கூறுகிறார். அவர் கூறுவதில் எனக்கு உடன்பாடு உண்டு. அதிகாரமும், அறிவும் ஒன்று சேர்ந்து இருப்பதில்லை. பல சந்தர்ப் பங்களில் இவை இரண்டும் ஒன்று சேர்ந்து இல்லாததைக் காண் கிறோம்.

வருங்கால நாடாளுமன்றம் பெறக்கூடிய அறிவாற்றல், ஆக்கப்பூர்வ கல்வித்திறன் ஆகியவற்றைக்காட்டிலும் இப்போது அமைந்துள்ளபடி, இச்சபைக்கு அதிக அளவில் அறிவாற்றலும் ஆக்கபூர்வ கல்வித்திறனும் உள்ளன என்பதை நான் வெளிப்படை யாகவே சொல்லுகிறேன்.

எனவே, இப்போதைய சூழ்நிலையில் எண்ணிப் பார்க்கும் போது வரைவுக்குழு தயாரித்துள்ள விதி மிகச்சிறப்பானது என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. தலைவர்:** திருத்தங்களை வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

***( திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன. முன்னர் கூறியபடி டாக்டர் அம்பேத் கரின் திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. திருத்தப்பட்டவாறு விதி 304 அரசியல்சாசனத்தில் இணைக்கப்பட்டது.)***

* * *

[1]**திரு. பிரஜேஷ்வர் பிரசாத்:** இப்போது நேரம் ஏழு மணி.

**சேத் கோவிந்த தாஸ்:** இன்னும் பேசி முடிவு செய்ய விஷ யங்கள் நிறைய இருப்பதால், நாம் அவற்றைப் பேசி முடித்துவிடக்

1. அ.பே.வி. தொகுதி 9, 1949 செப்டெம்பர் 17, பக்கம் 1665.

கூடும் என்று நினைக்கவில்லை. எனவே, இன்றிரவு 9 மணிக்கு மீண்டும் கூடி இரவு பண்ணிரண்டு மணிவரை நீடிக்கலாம்; அல்லது நாளை காலை சபை கூடலாம்.

**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:** இன்னும் மூன்று விதிகள் தான் உள்ளன.

**திரு. டி.டி.கிருஷ்ணமாச்சாரி:** நம் முன்னுள்ள மூன்று விதிகளில், இரண்டு விதிகள் சம்பிராதயப்படி உள்ளவைதான்.

**திரு. தலைவர்:** இப்போது சபை கலைந்து, மீண்டும் கூடுவது வசதியாக இருக்காது என்று நினைக்கிறேன். எனவே, நடவடிக்கை முடியும்வரை சபை நீடிக்கலாம் அல்லது நாளை காலையில் நாம் கூடலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நம்மிடம் இப்போது இரண்டு அல்லது மூன்று விதிகள்தான் உள்ளன. அவை நிச்சயமாக வாதத்திற்குரியவையல்ல. அவற்றை முடிவு செய்ய அரைமணி நேரம் கூட ஆகாது.

**சேத் கோவிந்ததாஸ்:** இவ்விதிகளை ஒருமணிநேரத்திற்குள் முடித்துவிடலாம் என்று நான் நம்பவில்லை. நாட்டின் பெயர் சம்பந்தப்பட்ட விதி பற்றி முடிவு செய்ய வேண்டும். இவைகள் அனைத்தையும் இன்று நாம் முடித்துவிட முடியும் என்று நான் நினைக்கவில்லை.

**திரு. தலைவர்:** பெரும்பான்மையான உறுப்பினர்கள் சபை தொடர்ந்து நடைபெறுவதை விரும்புகிறார்கள் என்று தெரிகிறது. நான் கூறுவது சரிதானே?

**மதிப்பிற்குரிய அநேக உறுப்பினர்கள்:** ஆம், ஐயா.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இவற்றை முடித்து விடுவோம்.

**திரு. நசிருத்தீன் அகமது:** முடிக்க முடியாது. விதி l இருக்கிறது. டாக்டர் அம்பேத்கர் இனிப்புகள் வழங்க ஏற்பாடு செய்தாலன்றி, 'நாமகரணச்' சடங்கு இன்று நடைபெற முடியாது.

## விதி 99

**திரு. தலைவர்:** விதிகள் 99, 184யை இப்போது எடுத்துக் கொள்வோம்.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பின்கண்டதை நான் முன்மொழிகிறேன்:

மாநிலங்களின் சட்டப்பேரவைகளில் பயன்படுத்தப்பட வேண்டிய மொழி

''விதி 99 க்குப் பதிலாகப் பின்வரும் விதி பயன்படுத்தப்பட வேண்டும்:

'99. (1) இந்த அரசியல் சாசனத்தின் பகுதி XIVAல் கூறப்பட்டுள்ளது எதுவாக இருப்பினும், விதி 301Fன் ஷரத்துகளுக்குட்பட்டு நாடாளுமன்ற நடவடிக்கைகள் நாடாளுமன்றத்தில் இந்தி அல்லது ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்படும்.

ஆயினும் மாநிலங்கள் அவையின் தலைவர் அல்லது மக்கள் அவைத் தலைவர் அல்லது அவ்வாறு அப்பதவியில் தற்காலிகமாகச் செயல்படும் உறுப்பினர் ஒருவர், நேர்வுக்கேற்ப, மேற்சொன்ன மொழிகளில் ஏதாவது ஒன்றில் தன்னுடைய கருத்தை போதுமானவரையில் தெரிவித்துக் கொள்ள இயலாத ஒரு உறுப்பினரை தாய்மொழியில் அவையில் பேச அனுமதிக்கலாம்.

(2) நாடாளுமன்றம் ஒரு சட்டத்தினால் இதை மாற்றாத வரையில், இந்த அரசியல்சட்டம் அமலுக்கு வந்த காலத்திலிருந்து பதினைந்து ஆண்டுகள் முடிவுற்ற பின்னர் இந்த விதியிலிருந்து ''அல்லது ஆங்கிலத்தில்'' என்ற சொற்கள் அகற்றப்பட்டிருந்தால் எப்படியோ அப்படியே இந்த விதி பொருள்படும்.

மற்றொரு பிரேரணையையும் முன்வைக்கிறேன். இது முந்தியதை ஒத்த பிரேரணையே.

**திரு. அவைத் தலைவர்:** இரண்டு பிரேரணைகள் சம்பந்தமாகவும் வாதம் ஒரே மாதிரியாக இருக்கும் என்று நான் கருதுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அவை சாராம்சத்தில் ஒன்று போன்றதே.

**திரு. அவைத் தலைவர்:** நான் அவற்றைத் தனித்தனியாக வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

---

★ அ.பே.வி. தொகுதி 9, 1949, செப்டெம்பர் 17, பக்கம் 1666.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நாம் ஒரே விவாதத்தை வைத்துக் கொள்ளலாம். விவாதத்தைப் பொறுத்தமட்டிலும் ஏறத்தாழ வாதம் ஒரேமாதிரியாகத்தான் இருக்கும். ஐயா, நான் பிரேரணை செய்கிறேன்:

'184வது விதிக்குப் பதிலாக பின்வரும் விதி சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:

'184 (1) இந்த அரசியல்சட்டத்தின் பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ள எதையும் பொருட்படுத்தாமல், அதேபொழுதில், 301 எஃப் விதியில் கூறப்பட்டுள்ளவற்றுக்கு உட்பட்டு, ஒரு மாநில சட்டப்பேரவையில் நடவடிக்கைகள் ஆட்சி மொழியில் அல்லது மாநில மொழிகளில் அல்லது இந்தியில் அல்லது ஆங்கிலத்தில் நடத்தப்பட வேண்டும்.

சட்டப்பேரவையின் சபாநாயகர் அல்லது மேலவையின் (கவுன்சில்) தலைவர், அல்லது தற்காலிகமாக அவ்வாறு செயல்படுபவர், எந்த உறுப்பினரையாவது மேலே கூறப்பட்ட எந்த மொழியிலும் அவரால் போதுமான அளவு தன் கருத்தை வெளிப்படுத்த இயலாவிட்டால், அந்த உறுப்பினரை அவருடைய தாய்மொழியில் அவையில் பேசுவதற்கு அனுமதிக்கலாம்.

2. மாநிலத்தின் சட்டப்பேரவை, வேறுவிதமாக வகைசெய்யாதபட்சத்தில், இந்த விதி, இந்த அரசியல்சட்டம் அமலுக்கு வந்ததிலிருந்த, பதினைந்து ஆண்டுகள் முடிந்ததற்குப் பின்னர், 'அல்லது ஆங்கிலத்தில்' என்ற சொற்கள் ' அதிலிருந்து நீக்கப்பட்டதாகக் கருதப்படும்.''

ஐயா, இது குறித்து வேறு விளக்கங்கள் தேவையில்லை என்று நினைக்கிறேன். இந்த விதிகள் மிகவும் தெளிவாக இருக்கின்றன.

★ ★ ★

[1]**திரு. நசிருத்தீன் அகமது:** பிராந்திய மொழிகளும் வளர்ச்சியடைவதற்கு நீங்கள் அனுமதிக்காவிட்டால், அரசு அலுவல் மொழியின் வளர்ச்சிக்கு அவற்றின் பங்குப்பணி மிகவும் சொற்பமாகவே இருக்கும்.

**திரு. அவைத் தலைவர்:** தற்போது பிரேரணை செய்துள்ள திருத்தத்தில் அது கொடுக்கப்படவில்லையா?

**திரு. நசிருத்தீன் அகமது:** அதை கவனத்தில் எடுத்துக் கொள்ளும்படி நான் நகல் தயாரிக்கும் குழுவைக் கேட்டுக்கொள்

1. அ.பே.வி. தொகுதி 9, 1949, செப்டெம்பர் 17, பக்கம் 1667.

கிறேன். இது ஓர் ஆலோசனை மட்டுமே. எப்படியாவது அது பொருந்தும்படிச் செய்யவேண்டும். இது என்னுடைய ஆர்வ விருப்பத்தின் படியான எண்ணம் மட்டுமே என்பதை நான் அறிவேன், ஏனெனில் இது ஏற்றுக்கொள்ளப்படப் போவதில்லை.

*பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா:* மொழிப் பிரச்சினை மீது விவாதத்தை நீங்கள் அனுமதிக்கப் போகிறீர்களா? மொழிப் பிரச்சினை முழுவதும் சபையின் முன்னே வருகிறது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* இல்லை, இல்லை. இந்தப் பிரச்சினை முழுமையும் விவாதிக்கப்பட்டு முடிவு செய்யப் பட்டுவிட்டது.

*(மேலே குறிப்பிடப்பட்ட டாக்டர் அம்பேத்கரின் திருத்தங்கள் ஏற்றுக் கொள்ளப்பட்டன. திருத்தப்பட்ட விதிகள் 99ம் 184ம் அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டன.)*

★ ★ ★

## விதி 1

[1]*திரு. அவைத் தலைவர்:* மேலும் ஒரு விதி இருக்கிறது. அது விதி 1.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஐயா, எண் 130 ஆம் திருத்தத்தை நான் பிரேரணை செய்ய முன்வருகிறேன். அதில் என்னுடைய 197 ஆம் எண் திருத்தத்தையும் இணைத்துக் கொள் கிறேன். இது (2) வது உபவிதியில் சொற்ப சொல் மாற்றத்தைச் செய்கிறது.

ஐயா, நான் கீழ்வருமாறு பிரேரணை செய்கிறேன்:

'விதி 1 ன் (1), (2) துணைவிதிகளுக்கு பதிலாக, பின்வரும் துணை விதிகள் சேர்த்துக் கொள்ளப்படவேண்டும்:

'1. பாரதம் எனப்படும் இந்தியா, மாநிலங்களின் ஓர் ஒன்றியமாக இருக்கும்.

2. அதனுடைய மாநிலங்களும் பிரதேசங்களும் தற்போதைக்கு முதலாவது அட்டவணையின் I,II மற்றும் IIIம் பிரிவுகளில் வரையறுதுக் கூறப் பட்டுள்ள மாநிலங்கள் மற்றும் அவற்றின் பிரதேசங்களாக இருக்கும்.''

★ ★ ★

1. அ.பே.வி. தொகுதி 9, செப்டெம்பர் 17, 1949, பக்.1669.

[1]**திரு. அவைத் தலைவர்:** நான் ஒத்திவைப்பதெனில், அடுத்த அமர்வு வரை அது நீடிக்கும். அடுத்த அமர்வுவரை ஒத்திவைப்பது பொருத்தமாக இருக்கும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இதைக் குறுகிய காலத்தில் முடித்துவிடலாம்.

**திரு. அவைத் தலைவர்:** நாம் என்ன செய்ய முடியும்? இடையூறு செய்வது ஒவ்வொரு உறுப்பினரின் விருப்பத்தைப் பொறுத்தது. தற்போது எண்பத்தாறு உறுப்பினர்கள் சபையில் உள்ளனர். நம்முடைய விதிகளின்படி மொத்த உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பகுதியினர் அவசியம் (கோரம்) இருக்கவேண்டும், அதாவது 97 பேர். எனவே இப்பொழுது 'கோரம்' இல்லை. நான் சபையை ஒத்திவைக்க வேண்டியுள்ளது. வேறு வழியில்லை.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** இந்த விதியை அடுத்த அமர்வில் எடுத்துக்கொள்ளலாம்.

**மதிப்பிற்குரிய மற்றொரு உறுப்பினர்:** நாம் நாளைய தினம் மீண்டும் கூடலாம்.

**மதிப்பிற்குரிய வேறொரு உறுப்பினர்:** நாளைய தினமும் கூட 'கோரம்' இருக்கும் என்பதற்கு உத்தரவாதமில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சில உறுப்பினர்கள் தற்போது வெளியில் இருக்கக்கூடும், அவர்களை நாம் உள்ளே வரச் செய்யலாம். மணி அடிக்கப்படலாம்.

★ ★ ★

[2]**திரு. எச்.வி.காமத்:** சிலர் அதை ( பாரத் என்ற பெயரை) துஷ்யந்தனுக்கும் சகுந்தலைக்கும் பிறந்த மகனுடைய பெயராகக் கருதுகின்றனர். 'சர்வதமணா' என்றும் அவர் அழைக்கப்பட்டார். அதாவது அனைத்தையும் வென்றவர் என்று இதற்குப் பொருள்.

---

1. அ.பே.வி. தொகுதி 9, செப்டெம்பர் 17, 1949, பக். 1670.
2. மேற்படி அதே நூல், பக். 1764.

இந்தப் பண்டைய தேசத்தில் அவர் தமது மேலாண்மையையும் ராஜ்யத்தையும் நிறுவினார். அவருடைய பெயரையொட்டி, இந்த தேசம் பாரதம் என்று அழைக்கப்பட்டது. மற்றொரு பிரிவு ஆராய்ச்சி அறிஞர்கள் பாரதம் என்ற பெயர் வேதகாலம் சம்பந்தப்பட்டது என்று கருதுகிறார்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்** (பம்பாய்.பொது): இவற்றையெல்லாம் பற்றி இங்கு ஆராய வேண்டியது அவசியமா? இதனுடைய பயன் என்ன என்று எனக்குப் புரியவில்லை. வேறு எங்காவது இது ஆர்வமூமட்டுவதாக இருக்கக்கூடும். என்னுடைய நண்பர் 'பாரத்'' என்ற சொல்லை ஏற்றுக்கொள்கிறார். இதில் ஒரே ஒரு விஷயம் என்னவெனில், அவருக்கு ஒரு மாற்று நிலையும் இருக்கிறது. இதுபற்றி விவாதிப்பதில் எந்தப் பயனும் இல்லை என்று வருத்தத்துடன் கூறிக் கொள்கிறேன். ஏனெனில் இந்த சபையின் முன் சொற்ப அவகாசமே உள்ளது.

**திரு. எச்.வி. காமத்:** சபையின் அலுவலை முறைப்படுத்துவது டாக்டர் அம்பேத்கரின் பணி அல்ல என்று கருதுகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** நீங்கள் என்ன திருத்தத்தைப் பிரேரணை செய்கிறீர்கள்?

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** நீங்கள் ஒரு திருத்தத்தைப் பிரேரணை செய்யலாம். இரண்டையும் பிரேரணை செய்வதற்கு நான் தங்களை அனுமதித்திருந்தேன்; ஆனால் அந்த இரண்டு திருத்தங்களும் ஒன்றுக் கொன்று முரணாக இருப்பதைக் காண்கிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** அவை முரண்பாடாக இருக்கின்றனவா ஐயா? அவை முரண்பாடாக இருக்கின்றன என்று நீங்கள் கூறினால், மேற்கொண்டு நான் எதுவும் கூறுவதற்கில்லை.

**திரு. அவைத் தலைவர்:** ஆம், ஒரு திருத்தம் ஏற்றுக்கொள்ளப் படுவதெனில், மற்றொன்றுக்கு இடமில்லை.

---

1. அ.பே.வி. தொகுதி 9, செப்டெம்பர் 18, 1949, பக். 1675.

**திரு. எச்.வி. காமத்:** ஒன்று ஏற்றுக்கொள்ளப்படவில்லை என்றால், மற்றையது ஏற்றுக்கொள்ளப்படக்கூடும் என்பதே என்னுடைய நோக்கமாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதற்காக இவ்வளவு சொற்போர் எதற்கு?

**திரு. சங்கர் ராவ் தேவ்** (பம்பாய்: பொது): அவைத் தலைவருடன் வாதப்பிரதிவாதம் கூடாது.

**திரு. எச். வி. காமத்:** எனக்கு விதிமுறைகள் தெரியும்; திரு. சங்கர்ராவ் அவர்களே.

**திரு. அவைத் தலைவர்:** சரி, நீங்கள் ஒரு திருத்தத்தைப் பிரேரணை செய்யுங்கள்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மாகாணங்கள் மற்றும் மாநிலங்கள் புனரமைப்பு சம்பந்தமான 3 வது விதியிலுள்ள துணைவிதியை மாற்றுவதற்கு விரும்புகிறோம். I மற்றும் IIIம் பகுதிகளில் கூறப்படும் மாநிலங்கள் ஒரே மட்டத்திற்குக் கொண்டுவரப்படும். இந்த விதிக்கு ஒரு திருத்தம் இருக்கிறது; இதன்மூலம் வேறுபாடு அகற்றப்படவிருக்கிறது. பின்னர், அது மறைந்துவிடும்.

**திரு. பி.எம். குப்தே:** அது சரிதான், ஆனால் நான் ஏற்கனவே கூறியது போன்று, மைய அரசை வலுவுடையதாக்குவதை நான் எதிர்க்கவில்லை. அதேசமயத்தில், மாநிலங்களுக்கு ஒரு புகழார்ந்த பெயரை நாம் கொடுத்துள்ளோம். நாம் மாநிலங்களின் அதிகாரங்களை எடுத்துக்கொண்டு அவற்றை மத்திய அரசின் அதிகாரப் பட்டியலில் அல்லது ஒருங்கியல் பட்டியலில் சேர்த்து வருகிறோம்; இருந்தபோதிலும் அவற்றுக்கு நாம் மாநிலங்கள் என்ற பெயரைக் கொடுத்துள்ளோம்....

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இந்தப் பிரச்சினை கடந்த அமர்வில் மிகவும் விரிவாக விவாதிக்கப்பட்டுள்ளது. அவையின் முன்னால் இந்த விதி விவாதத்திற்கு வந்தபோது,

---

1. அ.பே.வி., தொகுதி 9, செப்டெம்பர் 18, 1949, பக். 1685.
2. மேற்படி அதே நூல், பக். 1686.

நடைமுறையில் ஒரு நீண்ட விவாதத்தின் முடிவில் கடைசியாகத் தள்ளிவைக்கப்பட்டது, ஏனெனில் அந்த சமயத்தில், 'இந்தியா'' என்ற சொல்லுக்குப் பின்னால், 'பாரத்'' என்ற சொல் உபயோகப்படுத்தப் பட வேண்டுமா, அல்லது வேறு ஒரு சொல் உப்யோகப்படுத்தப்பட வேண்டுமா என்பது குறித்து ஒரு முடிவுக்கு வரமுடியவில்லை. ஆனால் ''ஒன்றியம்'' என்ற சொல் உள்ளிட்ட அந்த விதி முழுவதும் - எனக்கு சரியாக நினைவிருக்கிறதெனில் - மிகவும் விரிவாக விவா திக்கப்பட்டது. ''இந்தியா'' என்ற சொல்லுக்குப் பின்னர் 'பாரத்' என்ற சொல் வரவேண்டுமா என்பது பற்றி மட்டுமே இப்பொழுது நாம் விவாதித்துக்கொண்டிருக்கிறோம். அந்த விதியின் சாராம்ச மான எஞ்சிய பாகம் ஏற்கனவே விரிவாக விவாதிக்கப்பட்டுவிட்டது.

**திரு. பி.எம். குப்தே:** நாம் ஏற்கனவே செய்ததிலிருந்து பின்வாங்க வேண்டும் என்று நான் கூறவில்லை. இவை அனைத்தினுடைய விளைவுகளையும் முடிவையுமே நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

[1]**திரு. கமலபதி திரிபாதி:** இந்த சொல்லை (பாரத்) நாம் உச்சரிக்கும்போது சங்கராச்சாரியாரின் நினைவு நமக்கு வருகிறது. அவர் உலகத்திற்கு ஒரு புதிய பார்வையைக் கொடுத்தார். இந்த சொல்லை நாம் உச்சரிக்கும்போது, பகவான் ராமரின் வலிமைமிக்க கரங்கள் நம் நினைவுக்கு வருகின்றன. அந்தக் கரங்களால் அவர் வில்லில் நாண் ஏற்றி சுண்டிவிடும்போது ஏற்படும் தெறிப்பொலி இமயமலையிலும் இந்த நாட்டைச் சுற்றியுள்ள கடல்களிலும், விண் ணிலும் எதிரொலித்தது. இந்த சொல்லை நாம் உச்சரிக்கும்போது, பகவான் கிருஷ்ணனின் சக்கராயுதம் நம் நினைவுக்கு வருகிறது. அது சத்திரியர்களின் பயங்கர ஏகாதிபத்தியத்தை இந்தியாவிலிருந்து அழித் தொழித்து, இந்நாட்டை அழுத்திக் கொண்டிருந்த சுமையை அகற் றியது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இவையெல்லாம் அவசியம்தானா, ஐயா?

**திரு. கமலபதி திரிபாதி:** இது சம்பந்தமான (பொருத்தமான) விஷயங்களை நீங்கள் கேட்க வேண்டுமென்றுதான் நான் இவற்றை சொல்லுகிறேன், ஐயா.

---

1. அ.பே.வி. தொகுதி 9, செப்டெம்பர்18, 1949, பக். 1689.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** செய்து முடிக்க வேண்டிய வேலை நிறைய இருக்கிறது.

**திரு. கமலபதி திரிபாதி:** நாம் இச்சொல்லை உச்சரிக்கும் போது பாபுவின்(மகாத்மாவின்) நினைவு நமக்கு வருகிறது. அவர் மனித சமுதாயத்திற்கு ஒரு புதிய செய்தியை அளித்தார்.

இந்தச் சொல் இப்பொழுது பயன்படுத்தப்படுவதைக் கண்டு நாம் மகிழ்ச்சி அடைகிறோம். இதற்காக டாக்டர் அம்பேத்கரை நாம் பாராட்டுகிறோம். திரு.காமத் பிரேரணை செய்த திருத்தத்தை அவர் ஏற்றுக்கொண்டிருந்தால் மிகவும் பொருத்தமாக இருந்திருக்கும். 'ஆங்கில மொழியில் 'இந்தியா' என்று அறியப்பட்டுள்ள பாரத் முதலியன.

## விதி 306

[1]**திரு. அவைத் தலைவர்:** இடைக்காலத் தன்மையுள்ள வகையுரைகள் அல்லது ஷரத்துகள் சம்பந்தமான உபவிதிகளைப் பரிசீலனை செய்ய இப்பொழுது நாம் தொடங்குவோம். விதி 306.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:(பம்பாய்: பொது):** ஐயா, இப்பொழுது நான் பின்வரும் திருத்தத்தைப் பிரேரணை செய்கிறேன்:

> ''306 வது விதியின் (அ), (ஆ) மற்றும் (இ) துணைவிதிகளுக்கு பதிலாக, பின்வரும் துணைவிதிகள் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:
>
> '(அ) ஒரு மாநிலத்தினுள் தொழிலும் வாணிகமும், மற்றும் பருத்தி, கம்பளி ஆடைகள், கச்சாப்பருத்தி ( விதை நீக்கப்பட்ட பஞ்சு மற்றும் விதை நீக்கப்படாத பருத்தி அல்லது கபாஸ் உள்ளிட்டு) பருத்திக்கொட்டை, காகிதம் (பத்திரிகைக் காகிதம் உள்ளிட்டு), உணவுப்பண்டங்கள் (சமையல் எண்ணெய் விதைகள் மற்றும் எண்ணெய் உள்ளிட்டு) நிலக்கரி (கோக் மற்றும் நிலக்கரியின் உப பொருள்கள்) இரும்பு, உருக்கு மற்றும் மைக்கா ஆகியவற்றின் உற்பத்தி, சப்ளை மற்றும் வினியோகம்;
>
> (ஆ) (அ) பிரிவில் குறிப்பிட்ட எந்த விஷயங்கள் சம்பந்தப்பட்ட சட்டங்களுக்கு எதிரான குற்றங்கள், அந்த விஷயங்களில் எது சம்பந்தமாகவுமான எல்லா நீதிமன்றங்களின் - உச்சநீதிமன்றத்தைத்

1. அ.பே.வி. தொகுதி 10, அக்டோபர் 7, 1949, பக். 3-4.

தவிர - அதிகார வரம்பு, மற்றும் அதிகாரங்கள், அந்த விஷயங்கள் எவை சம்பந்தமாகவுமான கட்டணங்கள், ஆனால் எந்த நீதிமன் றத்திலும் பெறப்பட்ட கட்டணங்கள் இதில் சேராது.''

306வது அசல் விதியில் திருத்தம் செய்ய முனையும் மாற்றங் கள் இவையே. உபவிதி (அ) விலிருந்து பெட்ரோலியம் மற்றும் பெட்ரோலியம் பொருள்களை, இயந்திர ரீதியில் செலுத்தப்படும் வாகனங்களையும் நீக்குவதற்கு இப்போது பிரேரேபிக்கப்படுகிறது. உபவிதி (அ)விலிருந்து பெட்ரோலியம் மற்றும் பெட்ரோலியப் பொருட்களை நீக்குவதற்கு இப்பொழுது பிரேரேபிக்கப்படுவதற்குக் காரணம், அந்த இனம் தற்பொழுது அவற்றின் மீதான கட்டுப்பாடு நீக்கப்பட்டுள்ளது. அவை ஒருங்கியல் பட்டியலில் வைக்கப்பட்டுள் ளன. மத்திய அரசு இதுகுறித்து சட்டமியற்றவிரும்பினால், அது அவ்வாறு செய்யமுடியும். அசல் விதி உபவிதி(ஆ) புலம்பெயர்ந்து வந்துள்ள நபர்களின் நிவாரணம் மற்றும் மறுவாழ்வு சம்பந்தப் பட்டது. அதுவும் இனி ஒருபோதும் தேவையில்லை, ஏனெனில், அதுவும் ஒருங்கியல் பட்டியலில் வைக்கப்பட்டுள்ளது. உபவிதி (இ) யைப் பொறுத்தமட்டிலும் விசாரணைகளும் புள்ளிவிவரங்களும்கூட ஒருங்கிய பட்டியலில் வைக்கப்பட்டுள்ளன. எனவே, இதுவும் விடப் பட்டுள்ளது. இது இயல்பாக ஏற்படவேண்டிய ஒன்றுதான். அசல் விதி 306ல் இந்தத் திருத்தம் செய்யமுனையும் மாற்றங்கள் இவை மட்டுமே.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கரை நான் கேட்க லாமா? புண்ணாக்குவகைகளும் அதுபோன்ற இதர பொருட்களும் உள்ளிட்ட கால்நடைத் தீவனம் போதிய கட்டுப்பாடு தேவை என்று ஒரு காலத்தில் கருதப்பட்ட பொருட்களில் ஒன்றாகும் என்று நினைக் கிறேன். இந்திய அரசாங்கச் சட்டம் திருத்தப்படுவதற்கு முயற்சி செய்யப்பட்டது; ஆனால் அந்த சமயத்தில் அது திருத்தப்பட முடிய வில்லை, ஏனெனில் பெருமளவு இடர்ப்பாடு உணரப்பட்டது. அதை நீங்கள் கவனத்தில் எடுத்துக் கொண்டீர்களா என்பது எனக்குத் தெரியாது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தொழில்துறை மற்றும் சப்ளை இலாகாவுடன் கலந்தாலோசித்து, இந்த விதி திருத்தி எழுதப்பட்டது. இந்த விஷயங்கள் ஐந்தாண்டுகளுக்கு மத்திய அரசின் கட்டுப்பாட்டிலிருக்க வேண்டும் என்று அவர்கள் நினைத்தால்

அவற்றை இதில் சேர்த்துள்ளோம். உபவிதி (அ) வில் சேர்க்கப்பட்டுள்ள இனங்களுடன் வேறு ஏதாவது சேர்க்கப்பட வேண்டுமென்று அவை நினைத்தால், எனக்கு நிச்சயமாக ஆட்சேபனை எதுவும் கிடையாது.

**திரு. அவைத் தலைவர்:** நான் என்னுடைய அனுபவத்திலிருந்து பேசுகிறேன். அது இப்பொழுது காலாவதியாகிவிட்டது போல் தெரிகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அந்த இனத்தை இங்கு சேர்த்துக்கொள்வது விரும்பத்தக்கதாக இருக்கும் என்று நினைக்கிறேன்.

**டாக்டர்.பி.எஸ்.தேஷ்முக் (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்: பொது):** விவசாய இலாக்காவுடன் கலந்தாலோசித்து அது செய்யப்படக்கூடும்.

**திரு. அவைத் தலைவர்:** அதைத்தான் நானும் கூறுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதை நாம் சேர்த்துக் கொள்ளலாம் என்று கருதுகிறேன். அதை சேர்த்து விடுகிறேன். கால்நடைத் தீவனம் உள்ளிட்ட உணவுப்பண்டங்களை அதில் சேர்த்துவிடுகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** பிண்ணாக்கும் அது போன்ற பிற செறிவான பொருட்களும் உள்ளிட்ட கால்நடைத் தீவனம்.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** வேறு யாராவது பேசுவதற்கு விரும்புகிறீர்களா? டாக்டர் அம்பேத்கர்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் இவ்வளவுதான் சொல்ல விரும்புகிறேன். திரு.பிரஜேஸ்வர் பிரசாத் பிரேரணை செய்த திருத்தத்தை என்னால் ஏற்றுக்கொள்ளவியலாது.

---

1. அ.பே.வி. தொகுதி 10, 1949, அக்டோபர் 7, பக். 6.

நீங்களும் என்னுடைய நண்பர் டாக்டர் குன்ஸ்ருவும் பிரேரணை செய்த மற்றறையத் திருத்தத்தைப் பொறுத்தமட்டிலும், அதுபற்றி நான் திறந்த மனதுடன் இருக்கிறேன் என்று கூற விரும்புகிறேன். தொழில்துறை மற்றும் சப்ளை அமைச்சகத்துடன் கலந்தாலோசித்த பின், தேவையான திருத்தங்களை அறிமுகம் செய்து வைப்பதற்கு தயாராக இருக்கிறேன். எனவே, என்னுடைய திருத்தம் இப்பொழுது விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்படலாம்.

**திரு. அவைத் தலைவர்:** விவசாய அமைச்சகத்தையும்கூட நீங்கள் கலந்தாலோசிக்கலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், ஐயா. சம்பந்தப்பட்ட அமைச்சகங்களை நான் கலந்தாலோசிக்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் கூறியதற்கு உட்பட்டு, இந்த விதியை நான் வாக்கெடுப்புக்கு விடுகிறேன். திருத்தங்களை முதலில் எடுத்துக்கொள்கிறேன். டாக்டர் தேஷ்முக்கினுடைய 2ம் எண் திருத்தம் ஏறத்தாழ சொற்கள் சம்பந்தமானதே. அதையும் 3வது எண் திருத்தத்தையும் வரைவுக்குழுவுக்கு விட்டு விடலாம். 4ம் எண் திருத்தம் பற்றி என்ன?

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** நான் அதை முன்மொழியவில்லை.

★ ★ ★

***(டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. திருத்தப்பட்டபடி விதி 306 அரசியல் சாசனத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டது).***

★ ★ ★

## விதி 309

[1]**திரு. அவைத் தலைவர்:** இப்பொழுது நாம் 309 வது விதியை விவாதத்திற்கு எடுத்துக்கொள்கிறோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு.பிரஜேஷ்வர் பிரசாத் ஒரு திருத்தம் கொண்டு வருகிறார். 307அ என்ற ஒரு புதிய விதியை சேர்க்கிறார்.

---

1. அ.பே.வி. தொகுதி 10, 1949, அக்டோபர் 7, பக். 7.

**திரு. அவைத் தலைவர்:** ஆனால், இதை நாம் இப்பொழுது விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதை நிறுத்தி வைக்கலாம்.

★ ★ ★

*(309வது விதி ஏற்றுக்கொள்ளப்பட்டு, அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)*

## விதிகள் 310 அ, மற்றும் 310 ஆ

[1]**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** அடுத்த விதி, அதாவது 310வது விதி 308வது விதியுடன் தொடர்புடையதாகும். இவ்விரண்டையும் ஒன்றாகப் பரிசீலனை செய்யலாம்.

**திரு. அவைத் தலைவர்:** 310வது விதியைப் பரிசீலனை செய்வது ஒத்திவைக்கப்படுகிறது. அதற்கடுத்த விதிகளாகிய 310-அ-வும், 310-ஆவும் பரிசீலனை செய்வதற்கு அவை எடுத்துக் கொள்ளலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, உங்களுடைய அனுமதியுடன் 12வது திருத்தத்தை, ஓரளவு மாற்றப்பட்ட வடிவத்தில் முன்மொழிகிறேன். அதாவது:

'310 வது விதிக்குப் பின்னர், பின்வரும் புதிய விதிகள் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்.

இந்தியாவின்கணக்காய்வர் மற்றும் தலைமைத் தணிக்கையர் பற்றிய ஷரத்து க்கள்.

'310 அ. இந்த அரசியல் சாசனம் அமலுக்குவரும் தேதிக்கு முன்னதாக - அவர் வேறுவிதமாக தேர்ந்தெடுக்கப்படாத வரையில் - அந்தத் தேதியில் அவர் இந்தியாவின் கணக்காய்வர் மற்றும் தலைமைத் தணிக்கையர் ஆகிறார். அதைத் தொடர்ந்து, இந்தியாவின் கணக்காய்வர் மற்றும், தலைமை தணிக்கையர் சம்பந்தமான, இந்த அரசியல் சாசனத்தின் 124வது விதியின் (2) வது துணை விதியின்கீழ் வகை செய்யப்பட்டுள்ளபடி, சம்பளங்கள், அலவன்சுகள், விடுமுறை மற்றும் ஓய்வூதியம் சம்பந்தமான உரிமைகளுக்குத் தகுதி உடையவராகிறார்; மற்றும், அவர் பதவிக் காலம் தொடங்குவதற்கு முன்னால் உடனே பொருந்தக் கூடிய துணை விதிகளினால் (2) நிர்ணயம் செய்யப்பட்டுள்ளபடி, பதவிக்காலம் காலாவதியாகும் காலம் வரையிலும் தொடர்ந்து பதவி வகிப்பவருக்கு உரிமை பெற்றவராகிறார்.

1. அ.பே.வி. தொகுதி 10, 1949, அக்டோபர் 7, பக். 8.

அரசுப்பணி தேர்வாணையம் சம்பந்தப் பட்டஷரத்துகள்

310 அ. 1. இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வரும் தேதிக்கு முன்னால், அப்பொழுது பதவி வகிக்கும் இந்திய டொமினியனுக் கான அரசுப்பணி தேர்வாணைய உறுப்பினர்கள், அவர்கள் வேறு விதமாக விரும்பியிருந்தாலன்றி, அந்தத் தேதியிலிருந்து ஒன்றி யத்துக்கான அரசுப்பணி தேர்வாணைய உறுப்பினர்களாக இருப் பார்கள். மற்றும் இந்த அரசியல் சாசனத்தின் 285வது விதியின் (1), (2) துணைவிதிகளில் கூறியுள்ள எதைப்பற்றியும் பொருட்படுத் தாமல் - ஆனால் (2) வது துணைவிதியின் உபவிதிக்கு உட்பட்டு - அவர்களுடைய பதவிக்காலம் முடிகின்றவரையில் விதிமுறை களினால் நிர்ணயிக்கப்பட்டுள்ளபடி தொடர்ந்து பதவி வகிப்பார் கள். இந்த விதிமுறைகள் அத்தகைய உறுப்பினர்களுக்கு அரசியல் சாசனம் தொடங்குவதற்கு முன்னாலிருந்து பொருந்தும்.

(2) ஒரு மாகாணத்தின், அல்லது மாகாணங்களின் ஒரு குழுவின் தேவைகளுக்கு சேவைபுரியும் அரசுப்பணியாளர் தேர்வாணைய உறுப் பினர்கள், இந்த அரசியல்சாசனம் அமலுக்கு வரும் தேதிக்கு முன்னதாக, அதுவரையில் பதவியில் இருக்கும் உறுப்பினர்கள், அவர்கள் வேறு விதமாக விரும்பியிருந்தால் அன்றி, அந்தத் தேதியில், அதற்கு இணை யான மாநிலத்தின் அரசுப்பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர் களாவார்கள், அல்லது இணையான மாநிலங்களின் தேவைகளுக்கு சேவை புரியும் அரசுப்பணியாளர் தேர்வாணைய உறுப்பினர்களாவார்கள். மற்றும் இந்த அரசியல் சாசனத்தின் 285வது விதியின் (1), (2) துணைவிதிகளில் கூறப்பட்டுள்ளதைப் பொருட்படுத்தாது, அதேசமயத்தில் 2வது துணை விதியின் உபவிதிக்குட்பட்டு, விதிமுறைகளினால்நிர்ணயித்துள்ளபடி, அவர்களின் பதவிக்காலம் முடிகின்றவரையிலும் தொடர்ந்து பதயிலிருப் பார்கள். அத்தகைய உறுப்பினர்களுக்கு, பதவிக்காலம் தொடங்குவதற்கு முன்னால் அப்பொழுதிருந்து அவை பொருந்தும்.''

ஐயா, இந்த விதிகள் அரசியல் சாசனத்தினால் முறைப்படுத்தப் பட்டுள்ளன. அரசுப் பணியாளர் தேர்வாணைய உறுப்பினர்கள் மற்றும் தலைமைத் தணிக்கையர் போன்ற பதவிகளில் இருப்பவர்கள் நீடித்து இருப்பதற்கு மட்டுமே வகை செய்கின்றன. இந்த விதிகளில் கோட்பாடு சம்பந்தப்பட்ட விஷயம் எதுவும் கிடையாது.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** டாக்டர் தேஷ்முக் கின் திருத்தத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. அது அவசியமற்றது.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் தேஷ்முக்கின் திருத்தத்தை முதலில் நான் வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

1. அ.பே.வி. தொகுதி 10, 1949, அக்டோபர் 7, பக். 9.

திருத்தம் வருமாறு:

"310 ஆ. என்கிற, உத்தேசிக்கப்பட்டுள்ள புதிய விதியில், பட்டியல் I (முதல்வாரம்)ன் 12ம் எண் திருத்தத்தில், "இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வந்த" எனற சொற்களுக்குப் பின்னால், 'அவை எங்கெங்கு வருகின்றனவோ, "அவர்களுடைய சேவைகள் எந்தக்காரணத்திற்காகவாவது, ரத்து செய்யப்படாமலிருந்தால்'' என்ற சொற்களை சேர்க்கவும்."

இந்தத் திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தில் அடங்கியுள்ள விதிகளை, ஒவ்வொன்றாக இப்பொழுது நான் வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

***(டாக்டர் அம்பேத்கரின் எல்லாத் திருத்தங்களும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. 310 அ மற்றும் 310 ஆ விதிகள் அரசியல் சாசனத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டன.)***

## விதி 311 - அ.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, பின்வருமாறு முன்மொழிகிறேன்:

'311 வது விதிக்குப் பின்னர், பின்வரும் புதியவிதி சேர்க்கப்பட வேண்டும்.

*தற்காலிகக் குடியரசுத் தலைவர் பற்றிய துணை விதிகள்*

'311 அ. (1) இந்திய டொமினியனின் அரசியல் நிர்ணயசபையில் தேர்ந்தெடுக்கப்படுபவர் இந்தியாவின் தற்காலிகக் குடியரசுத் தலைவராக இருப்பார்; இந்த தற்காலிகக் குடியரசுத் தலைவர் அரசியல் சாசனத்தின் 5ம் பகுதியின் முதலாவது அத்தியாயத்தில் அடங்கியுள்ள துணைவிதிகளின்படி ஒரு குடியரசுத் தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்டு, இந்தப் பதவியை ஏற்றுக்கொள்ளுகின்ற வரையில் அவர் இந்தப் பதவியில் இருப்பார்.

(2) தற்காலிகக் குடியரசுத்தலைவர் பதவி, அவருடைய மரணத்தினாலோ, ராஜினாமாவினாலே, அல்லது நீக்கப்பட்டதாலோ, அல்லது வேறுவிதமாகவோ காலியானால் இந்த அரசியல் சாசனத்தின் 311வது விதியின் கீழ் செயல்படும் தற்காலிக நாடாளுமன்றத்தினால், தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு நபரால் நிரப்பப்பட வேண்டும். ஒரு நபர் அவ்வாறு தேர்ந்தெடுக்கப்படுகின்றவரையில், இந்தியாவின் தலைமை நீதிபதி தற்காலிக குடியரசுத்தலைவராக செயல்படுவார்.''

---

1. அ.பே.வி., தொகுதி 10, 1949, அக்டோபர் 7, பக். 9.

**திரு. அவைத் தலைவர்:** இதற்கு இரண்டு திருத்தங்கள் உள்ளன. ஒன்று, 'குடியரசுத் தலைவர்' என்ற சொல்லுக்கு முன்னால் உள்ள 'தற்காலிக' என்ற சொல்லை நீக்குவதற்கானது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, பின்வருமாறு முன்மொழிகிறேன்:

> ''பிரேரணை செய்யப்பட்டுள்ள 311- அ விதியின் (1) வது துணைவிதியின் 2வது பட்டியலின் (முதல் வாரம்) 28வது எண் திருத்தத்தில், ''குடியரசுத் தலைவர்'' என்ற சொல்லுக்கு முன்னால் ''தற்காலிக'' என்ற சொல் நீக்கப்படுகிறது.
>
> ''முன்மொழியப்பட்டுள்ள 311 அ விதியின் (2) வது விதியில் , IIவது பட்டியலில் (முதல் வாரம்) 28வது திருத்தத்தில், முதலாவதாக, 'தற்காலிகக் குடியரசுத்தலைவர்' என்ற சொற்கள் வரும் இடங்களில், அவற்றுக்கு பதிலாக, 'இந்திய டொமினியனின் அரசியல் நிர்ணய சபையினால் குடியரசுத் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளவர்' என்ற சொற்களை இணைத்துக் கொள்ள வேண்டும்.
>
> ''முன்மொழியப்பட்டுள்ள 311 அ விதியின் (2) வது துணைவிதியில் IIவது பட்டியலின் (முதல்வாரம்) 28வது திருத்தத்தில், இரண்டாவதாக, 'தற்காலிகக் குடியரசுத் தலைவர்' என்ற சொற்கள் வரும் இடங்களில் அவற்றுக்கு பதிலாக, 'குடியரசுத்தலைவர்' என்ற சொல் சேர்த்துக் கொள்ளப் பட வேண்டும்.

**டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:** என்னுடைய திருத்தத்தின் அடிப்படையாக உள்ள கோட்பாடு ஏற்றுக்கொள்ளப்பட்டு விட்டால் என்னுடைய திருத்தத்தை முன்மொழிவதற்கு எந்தக் காரணமும் இல்லை என்று நினைக்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** அந்த விதியும், திருத்தங்களும் இப்பொழுது விவாதத்திற்கு விடப்படுகின்றன.

★ ★ ★

[1]**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:** தலைவர் அவர்களே, இந்த யோசனையின் நியாயபூர்வமான தன்மையை டாக்டர் அம்பேத்கர் உணர்ந்து, குடியரசுத் தலைவர் விஷயத்தில் செய்தது போன்றே, ''நாடாளுமன்றம்'' என்ற சொல்லுக்கு முன்னால், ''தற்காலிக'' என்ற சொல்லை நீக்கிவிடுவார் என்று நம்புகிறேன்.

1. அ.பே.வி., தொகுதி 10, 1949, அக்டோபர் 7, பக். 10-11.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ''தற்காலிக நாடாளுமன்றம்'' என்ற சொற்களை அப்படியே வைத்துக் கொள்வதற்கு எத்தகைய பெரிய ஆட்சேபனையும் இராது என்று நான் நினைக்கிறேன். அதில் எந்த மாற்றமும் செய்வதற்கு நான் முனையவில்லை. அது ''தற்காலிக நாடாளுமன்றம்'' என்று அழைக்கப்படமாட்டாது. ஆனால் இந்த விதியின் வாசகத்தின் (மொழியின்) நோக்கத்திற்காக, அதைத் தற்காலிக நாடாளுமன்றம் என்று கூறுவது அவசியம் என்று நினைக்கிறேன்.

**திரு. ஆர்.கே.சித்வா:** ஆனால் ''தற்காலிக'' என்ற சொல்லை நீக்குவதற்கு டாக்டர் அம்பேத்கர் ஒத்துக்கொண்டுவிட்டார் என்று நான் நினைத்தேன்.

**திரு. அவைத் தலைவர்:** அப்படி அல்ல. ''நாடாளுமன்றம்'' என்ற சொல்லுக்கு முன்னால்தான் ''தற்காலிக'' என்ற சொல்லை நீக்கவேண்டும் என்று திரு. சிபன்லால் சாக்சேனா விரும்பினார்.

**டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:** அப்படியென்றால், ''தற்காலிக'' என்ற சொல்லை, இரு இடங்களிலும் நீக்குவதற்கான என்னுடைய திருத்தத்தை நான் முன்மொழிய விரும்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** உங்களுடைய திருத்தம் நாடாளுமன்றம் சம்பந்தமாகக் கூடவா?

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** ஆம், ஐயா.

**திரு. அவைத் தலைவர்:** திரு. சிபன்லால் சாக்சேனா இதை முன்மொழிந்துள்ளார். அது வாக்கெடுப்புக்கு விடப்படும். பல்வேறு திருத்தங்களை இப்பொழுது வாக்கெடுப்புக்கு விடுகிறேன். திருத்தம் வருமாறு:

> ''பிரேரணை செய்யப்பட்டுள்ள 311-அ விதியின் (1) வது துணைவிதியில், IIவது பட்டியலின் (முதலாவது வாரம்) 28வது திருத்தத்தில் தற்காலிக என்ற சொல் நீக்கப்படவேண்டும்.''

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம் (சென்னை: பொது):** ''தற்காலிக'' என்ற சொல் நாடாளுமன்றம் என்ற சொல்லுக்கு முன்பும் நீக்கப்படும் என்பது இதன் பொருளாகுமா?

**திரு. அவைத் தலைவர்:** இல்லை, அது பின்னால் வருகிறது. அந்தத் திருத்தம் வருமாறு:

> ''பிரேரணை செய்யப்பட்டுள்ள 311-அ விதியின் (2) வது துணைவிதியில், IIவது பட்டியலின் (முதல் வாரம்) 28வது திருத்தத்தில், முதலாவதாக, ''தற்காலிகக் குடியரசுத் தலைவர்'' என்ற சொற்கள் எங்கு வருகின்றனவோ, அங்கு அவற்றுக்கு பதிலாக, ''இந்திய டொமினியன் அரசியல் நிர்ணய சபையினால் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்'' என்ற சொற்கள் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்.''

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**திரு. அவைத் தலைவர்:** அடுத்த திருத்தம் என்னவெனில்:

> ''பிரேரணை செய்யப்பட்டுள்ள 311-அ விதியின் (2) வது துணைவிதியில் IIவது பட்டியலின்(முதல் வாரம்) 28வது திருத்தத்தில் இரண்டாவதாக, 'தற்காலிக' என்ற சொற்கள் வரும் இடங்களில், அவற்றை நீக்கிவிட்டு, 'குடியரசுத் தலைவர்' என்ற சொல் இணைக்கப்பட வேண்டும்.''

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் தேஷ்முக் முன்மொழிய முயன்ற திருத்தத்தை இப்பொழுது நான் எடுத்துக்கொள்கிறேன். உண்மையில் இத்திருத்தம் திரு. சிபன்லால் சாக்சேனாவினால் முன்மொழியப்பட்டது.

அந்தத் திருத்தம் என்னவெனில்:

> ''பிரேரணை செய்யப்பட்டுள்ள 311-அ என்ற புதிய விதியின் (2) வது துணைவிதியில் 'நாடாளுமன்றம்' என்ற சொல்லுக்கு முன்னால் வரும் 'தற்காலிக' என்ற சொல் நீக்கப்பட வேண்டும்.''

இத்திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

(311-அ விதி, திருத்தப்பட்ட வடிவத்தில், அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)

## விதி 311-ஆ

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

*"311-அ என்ற விதிக்குப் பிறகு பின்வரும் புதியவிதி சேர்க்கப்பட வேண்டும்:*

*தற்காலிக குடியரசுத் தலைவரின் அமைச்சரவை*

*"311-ஆ தற்காலிகக் குடியரசுத்தலைவர் சார்பில் நியமிக்கப் படும் நபர்கள், இந்த அரசியல் சாசனத்தின்கீழ் தற்காலிக குடியரசுத் தலைவரது அமைச்சரவையின் உறுப்பினர்களாவார்கள். நியமனங் கள் செய்யப்படுகின்ற வரையில், அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் அதுவரையில் இந்திய டொமினியனுக்கு அமைச்சர்கள் என்ற பதவியை வகிக்கும் எல்லா நபர்களும், அர சியல் சாசனத்தின்கீழ் தற்காலிகக் குடியரசுத் தலைவரின் அமைச் சரவை உறுப்பினர்களாவார்கள், தொடர்ந்து அப்பதவியை வகிப் பார்கள்."*

**டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:** ஐயா, என்னுடைய இந்தத் திருத் தத்தை முன்மொழிவதற்கு எனக்கு வாய்ப்புக் கொடுத்ததற்காக, உங்க ளுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். என் திருத்தம் வருமாறு:

"பிரேரணை செய்யப்பட்டுள்ள 311-ஆ என்ற புதிய விதியில், மேலே குறிப்பிடப்பட்ட 13வது திருத்தத்தில், 'தற்காலிக' என்ற சொல் எங்கெங்கு வருகிறதோ, அங்கெல்லாம் அது நீக்கப்பட வேண்டும்."

இந்தத் திருத்தத்தின் பின் உள்ள நியாயத்தை மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் ஏற்றுக்கொண்டிருப்பதால், நான் மேற் கொண்டு இந்த அவையின் நேரத்தை எடுத்துக்கொள்ள விரும்ப வில்லை. இது ஏறத்தாழ ஒரு பின்விளைவு திருத்தமேயாகும்.

(15வது எண் திருத்தம் முன்மொழியப்படவில்லை.)

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர், திருத்தத்தை ஏற்றுக்கொள்கிறார் என்று நான் எடுத்துக்கொள்கிறேன்.)

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், ஐயா, நான் நான் ஏற்றுக்கொள்கிறேன்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைவர் அவர் களே, இந்த 311-ஆ விதி, ஒரு சம்பிரதாயமான விதியேயாகும். இது,

1. அ.நி.வி., தொகுதி 10, 1949, அக்டோபர் 7, பக். 12.

அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், அதுவரையில் இருந்து வரக்கூடிய அமைச்சரவையை நடத்திச் செல்வதற்கு குடியரசுத் தலைவருக்கு அனுமதி அளிக்கும் விதியேயாகும். இது அரசுப் பணி யாளர் தேர்வாணைய உறுப்பினர்கள், மற்றும் தலைமைத் தணிக் கையர் தொடர்பான, நாம் ஏற்கனவே நிறைவேற்றிவிட்ட மற்றைய விதிக்கு ஒத்ததேயாகும். எனவே, இதன்விளைவாக, அந்த விதிகளுக் கும் இந்த விதிக்கும் இடையில் நடைமுறையில் அடிப்படையான வேறுபாடு எதுவும் இல்லை. 311- ஆ விதியின் துணைவிதிகளைப் பற்றிக் கருத்துத் தெரிவித்தவர்கள் நாடாளுமன்றத்தின் நம்பிக்கை யைப் பெறாத எந்த அமைச்சரவையும் 1950 ஜனவரி 26ம் நாளன்று நியமிக்கப்படவோ, அல்லது செயல்படவோ கூடாது என்று கருது கிறார்களென்றால் அந்தக் கருத்தை ஏற்றுக்கொள்வதற்கு நான் தயாராயிருக்கிறேன். ஆனால், நாடாளுமன்றமோ அல்லது அமைச் சரவையோ நம்பிக்கை வாக்கைப் பெறுவதை இந்த விதி எவ்வாறு அசாத்தியமாக்குகிறது என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிய வில்லை. தற்போதுள்ள அமைச்சரவை அதனின்று எதிர்பார்க்கப் படும் செயல்பாடுகளை நிறைவேற்றுவதற்கு போதிய தகுதிவாய்ந்தது என்று நாடாளுமன்றத்தின் உறுப்பினர்கள் கருதாவிட்டால் ஜனவரி 26க்கு முன்னால், அந்த அமைச்சரவைக்கு எதிராக நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிறைவேற்றுவதற்கும், அதன் மூலம் அந்த அமைச் சரவையை அகற்றவும் இந்த சபைக்கு உரிமை உண்டு. அதுபோன்றே, அமைச்சரவையின் உறுப்பினர்களின் பெயர்களைத் தற்காலிகக் குடியரசுத் தலைவரிடம் சமர்ப்பிப்பதற்கு முன்னால், சபையிட மிருந்து தன் மீதும்தான் அமைச்சரவை மீதும் ஆதரவு தெரிவிக்கும் நம்பிக்கை வாக்கைப் பெறுவதற்கும் பிரதம மந்திரிக்கு உரிமை யுண்டு. 1950 ஜனவரி 26ம் தேதிக்கு முன்னால், பிரதம மந்திரியோ அல்லது சபையோ நம்பிக்கையின்மை அல்லது நம்பிக்கை சோதனை யைக் கடைப்பிடிப்பதற்கு விரும்பா விட்டால் - அந்தத் தேதிதான் அரசியல் சாசனம் செயல்படத் தொடங்கும் தேதி என்று கருதும் நிலையில் இந்த 311-ஆ விதி, ஜனவரி 26க்குப் பிறகு, நம்பிக்கையில் லாத் தீர்மானத்தை முன்மொழி வதற்கும், அந்த அமைச்சரவையை நீக்குவதற்கும் இந்த சபைக்கு உள்ள அதிகாரத்தை அகற்றிவிடுவ தில்லை. அதுபோன்றே, அமைச்சரவை நியமிக்கப்பட்டதற்குப் பின்னர் தன் மீதும் நம்பிக்கை வாக்குப் பெறுவதற்கு முன்வருவ தற்கும் இந்த விதி பிரதம மந்திரியைத் தடுப்பதில்லை.

எனவே, 311 - ஆ விதியின் துணைவிதிகளின் மீது கருத்துத் தெரிவித்தவர்கள், தற்போதுள்ள அமைச்சரவை, புதிய அரசியல்

சாசனத்தின்கீழ், தங்களை நீடித்திருக்கச் செய்து கொள்வதற்கு ஒரு திருட்டுத்தனமான முயற்சி என்ற எண்ணத்தை ஒருவேளை கொண்டிருப்பார்களேயானால், அது தப்பெண்ணத்தின் காரணமாக ஏற்பட்டதாகும் என்று எனக்குத் தோன்றுகிறது. தற்போதும், ஜனவரி 26ம் தேதிக்குப் பிறகும், சபை விரும்பினால், அத்தகைய நடவடிக்கை எடுத்துக்கொள்வதற்கும், அமைச்சரவையை அவர்கள் விரும்பாவிட்டால், அதை நீக்குவதற்கும் கதவுகள் முற்றிலும் திறந்துள்ளன. எனவே, இந்த விதி, நான் ஏற்கனவே கூறியதுபோன்று, தற்போதுள்ள அமைச்சரவை, புதிய அரசியல் சாசனத்தின் கீழும் தொடர்ந்து பணியாற்றுவதை அனுமதிக்கும் ஒரு சம்பிரதாயமான விதியேயாகும்.

**திரு. எச்.வி. காமத்:** மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர், நான் எழுப்பிய வினாக்களுக்கு பதிலளிக்கவில்லை. நான் குறிப்பிட்ட, பதவிப் பிரமாணம் பற்றி என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது எடுத்துக் கொள்ளப்படும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ''நியமிப்பது'' என்றால், பதவிப் பிராமணம் எடுத்துக்கொள்வது என்றுதான் பொருள். அவ்வாறில்லாவிட்டால் நியமிக்கப்பட மாட்டார்கள்.

**திரு. எச்.வி. காமத்:** அதே நாளிலேயா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஆம், நிச்சயமாக, அதே நாளிலேயே ''நியமனம்'' என்பதில் பதவிப் பிரமாணமும் அடங்கும்.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் தேஷ்முக்கின் திருத்தத்தை நான் வாக்கெடுப்புக்கு விடுகிறேன். அதை, முன்மொழிந்தவர் ஏற்றுக் கொண்டுள்ளார் என்று நினைக்கிறேன்.

*(திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. 311-வது விதி, திருத்தப்பட்ட வடிவத்தில் அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது)*

## விதி 312

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

1. அ.பே.வி., தொகுதி 10, 1949, அக்டோபர் 7, பக். 15.

பின்வரும் விதியை சேர்த்துக்கொள்ள வேண்டும்:

ஒவ்வொரு மாநிலத்திலும் தற்காலிக சட்டப் பேரவைகள் பற்றிய துணை விதிகள்.

'312(1) முதலாவது அட்டவணையின் ஒரு பகுதியில் குறிப்பிட்டுள்ள அவையோ, அல்லது ஒவ்வொரு மாநிலத்தின் சட்டமன்றத்தின் அவைகளோ, தற்போதைக்கு, இந்த அரசியல் சாசனத்தின் விதிகளின் கீழ், சட்டப்படி அமைக்கப்பட்டு, கூட்டப்படுகின்ற வரையில் சம்பந்தப்பட்ட மாகாணத்தின் சட்டசபை அல்லது சட்ட அவைகள், அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்பு வரையிலும் செயல்பட்டுக் கொண்டுவந்தவை, இந்த அரசியல் சாசனத்தின் விதிகளால் ஒவ்வொரு மாநிலத்தின் சட்டசபை அல்லது சட்டசபைகளுக்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களையும் செயல்படுத்தும் கடமைகளை நிறைவேற்றும்.

(2) இந்த விதியின் (1) வது துணைவிதியில் என்ன கூறப்பட்டிருந்தபோதிலும், ஒரு மாகாணத்தின் சட்டமன்றத்தைப் புணரமைப்பதற்கு, இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், ஒரு பொதுத் தேர்தல் உத்தரவிடப்பட்டிருந்தால், இந்த அரசியல் சாசனம் செயல்படத் தொடங்கவில்லை என்று கருதி, அது அவ்வாறு அமலுக்கு வந்ததற்குப் பின்னர் அந்தத்தேர்தல் பூர்த்தி செய்யப்படலாம்; அவ்வாறு புனரமைக்கப் பட்ட சட்டமன்றம், அந்த ஷரத்தின் நோக்கத்தின்படி, அந்த மாகாணத்தின்சட்டப்பேரவையாகக்கருதப்படவேண்டும்.

(3) இந்த அரசியல் சாசனம் அமலுக்குவருவதற்கு முன்னால், அதுவரையிலும் ஒரு மாகாணத்தின் சட்டப்பேரவையின் சபாநாயகர் அல்லது மேலவையின் தலைவர் பதவிவகிக்கும் எந்த நபரும், அது அமலுக்கு வந்ததற்குப்பின்னும், சம்பந்தப்பட்ட மாநிலத்தின் சட்டப்பேரவையின் சபாநாயகர் அல்லது மேலவையின் தலைவராக அப்போதைக்கு இருந்து வருவார். முதலாவது அட்டவணையின் I பாகத்தில் இது விளக்கப்பட்டுள்ளது. அத்தகைய சட்டப்பேரவை அல்லது மேலவை இந்த விதியின் (1) வது துணைவிதியின்படி செயல்படுகின்ற வரையில் இது நீடிக்கும்.

ஆனால், இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், ஒரு மாகாணத்தின் சட்டப்பேரவையைப் புனரமைப்பதற்கு அவ்வாறு புனரமைக்கப்பட்ட சட்டப்பேரவையின் முதற் கூட்டம், அரசியல் சாசனம் அமலுக்கு வந்ததற்குப் பின் நடைபெற்றால், இந்த விதியின் ஷரத்துகள் பொருந்திவராது; புனரமைக்கப்பட்ட சட்டப்பேரவை அப்பொழுது, பேரவையின் ஓர் உறுப்பினரை, சபாநாயகராகத் தேர்ந்தெடுக்க வேண்டும்.''

இந்தத் துணைவிதிகள் மிகவும் தெளிவாக உள்ளன; மேற்கொண்டு இதற்கு எந்தவிளக்கமும் தேவையில்லை என்று நான் நினைக்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** இதற்கு ஏதாவது திருத்தங்கள் உள்ளனவா? ஏதும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.

★ ★ ★

[1]**திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்:** இடைக்காலக் கூட்டம் எவ்வளவு காலம் நீடித்திருக்கும் என்பதை இது பொறுத் துள்ளது. இது குறுகிய கால அளவுடையதாக இருக்குமேயானால், அவையைக் கலைப்பதற்கு எத்தகைய அவசியமும் இல்லை. ஆனால், அவ்வாறு இல்லாவிட்டால் என்னசெய்வது? அவை தற்பொழுது உறுப்பினராக உள்ள ஒவ்வொருவரும் தொடர்ந்து நீடிப்பதற்கு ஆவலாக இருப்பார்கள் என்பதை நாம் அறிவோம். அவை உறுப்பின ராவதற்கு வாய்ப்புக் கிடைக்காத ஒவ்வொருவரும் அவையைக் கலைப்பதற்கு விரும்பக்கூடும். எந்த ஒரு குறிப்பிட்ட உறுப்பினர் மீதும் நான் எந்தப்பழியும் கூறவில்லை. நான் குறிப்பிட்ட சூழ்நிலை களில், தேவைப்பட்டால், சட்டப்பேரவையை மாற்றுவதற்கும் ஏதாவது வகை இருக்க வேண்டும் என்று மட்டுமே கூறுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நீங்கள் கூறியதற்குப் பின்னர், இந்த விஷயத்தை மேற்கொண்டு நீடித்துக் கொண்டுபோவதற்கு அவசியமில்லை என்று நினைக்கிறேன். திருத் தப்பட்ட விதியின் தகுதிகளைப் பொறுத்தமட்டிலும், பதில் கூறு வதைத் தேவைப்படுத்தும் எதுவும் கூறப்படவில்லை என்று நினைக் கிறேன்.

**திரு. எச்.வி.காமத்:** சபாநாயகர் சம்பந்தமான துணைவிதி விஷயம் என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** மூலவரைவில் அதுபற்றி இருக்கிறது.

**திரு. அவைத் தலைவர்:** 312 ஆவது விதியை இப்பொழுது வாக்கெடுப்புக்கு விடுகிறேன். அந்த விதி என்னவெனில்,

> ''பிரேரணை செய்யப்பட்டுள்ள 312 ஆவது விதி அரசியல் சாசனத்தின் ஒரு பகுதியாகிறது.''

பிரேரணை நிறைவேற்றப்பட்டது.

312வது விதி, அரசியல் சாசனத்தில் சேர்த்துக்கொள்ளப் பட்டது.

---

1. அ.பே.வி. தொகுதி 10, அக்டோபர் 7, 1949, பக். 23.

## விதிகள் 312 அ விலிருந்து 312 - இ, 312 ஜி மற்றும் 312 - எச்

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

''மேலே கூறப்பட்ட 16வது எண் திருத்தத்தில் பிரேரணை செய்யப்பட்டுள்ள 312 இ என்ற புதிய விதிக்கு பதிலாக கீழ்வருவன சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:

''312 இ. இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வந்ததிலிருந்து மூன்றாண்டு காலகட்டத்தின்போது, இந்த அரசியல் சாசனத்தின் எந்த ஷரத்தின்படியாவது நடத்தப்பட்ட தேர்தல்களின் பொருட்டு, இந்தியாவின் அல்லது அதனுடைய எந்தப்பகுதியின் மக்கட் தொகை, இந்த அரசியல் சாசனத்தில் கூறப்பட்டுள்ள எதையும் பொருட்படுத்தாது, குடியரசுத் தலைவரின் உத்தரவின் அடிப்படையில் நிர்ணயிக்கப்படும்.''

*டொமினியன் சட்டமன்றத்திலும் மாகாணங்கள் மற்றும் இந்திய சமஸ்தானங்களின் சட்டப்பேரவைகளிலும் நிலுவையிலுள்ள மசோதாக்கள் பற்றிய துணைவிதி*

''312 ஜி. இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், அந்தத் தருணத்தில், இந்திய டொமினியன் சட்டமன்றத்தில், அல்லது மாகாணத்தின் அல்லது இந்திய சமஸ்தானத்தின் சட்டப் பேரவையில் நிலுவையிலுள்ள ஒரு மசோதா, இந்த அரசியல் சாசனத்தின்கீழ் நாடாளுமன்றமோ அல்லது சம்பந்தப்பட்ட மாநிலத்தின்சட்டப்பேரவையோ இயற்றியுள்ள விதிகளில் சேர்க்கப்பட்டுள்ள, இதற்கு மாறான எந்த ஷரத்துக்கும் உட்பட்டு, இந்த மசோதா சம்பந்தமாக டொமினியன் சட்டமன்றத்தில் அல்லது மாகாண அல்லது இந்திய சமஸ்தானத்தின் சட்டப்பேரவையில் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டதாகக் கருதி, நாடாளுமன்றத்தில், அல்லது சம்பந்தப்பட்ட மாநிலத்தின் சட்டப்பேரவையில் தொடர்ந்து எடுத்துக்கொள்ளப்படும்.

*அரசியல்சட்டம் அமலுக்கு வருவதற்கும் 1950 மார்ச் 31க்கும் இடையில் செய்யப்படும் வரவு செலவுகள்*

312-எச். இந்தியாவின் அல்லது எந்த ஒரு மாநிலத்தின் ஒருங்கிணைப்பு நிதியம் மற்றும் அத்தகைய நிதியத்திலிருந்து எடுக்கப்படும் பணம் சம்பந்தமாக இந்த அரசியல் சாசனத்தில் உள்ள ஷரத்துகள், இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கும், 1950 மார்ச் முப்பத்தொன்றாம் தேதிக்கும் இடையில் இரு நாட்களும் உள்ளிட்டு - இந்திய அரசினால் அல்லது எந்த ஒரு மாநிலத்தின் அரசினால் பெறப்பட்ட அல்லது வசூலிக்கப்பட்ட நிதிகள், அல்லது செய்யப்பட்ட செலவுகள் உரிய முறையில் அதிகாரமளிக்கப்பட்டவையாகக் கருதப்படும். அதேபொழுதில், 1935ம் வருட இந்திய அரசு சட்டத்தின் ஷரத்துகளுக்கு ஏற்ப, அதிகாரமளிக்கப்பட்ட செலவினத்தின் பட்டியலில் அது குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும். அந்த செலவினங்களுக்கு இந்திய டொமினியனின் கவர்னர் - ஜெனரலால் அல்லது சம்பந்தபட்ட மாகாணத்தின் ஆளுநரால் அல்லது சமஸ் தானத்தின் ராஜப்பிரமுகரால், அரசியல் சட்டம்

---

1. அ.பே.வி. தொகுதி 10, அக்டோபர் 7, 1949, பக். 23-24.

அமலுக்கு வருவது வரைக்கும் சம்பந்தப்பட்ட இந்திய மாநிலத்தின் வருவாயிலிருந்து செலவு செய்யப்படுவதற்கு அங்கீகாரமளிப்பது சம்பந்தப்பட்ட விதிகளுக்கு ஏற்புடையதாக இருக்க வேண்டும்.''

இந்த விதிகளுக்கு விளக்கமளிக்கும் வகையில் ஏதும் சொல்ல வேண்டிய அவசியமில்லை என்று நினைக்கிறேன்.

312 - ஏ மற்றும் 312 - பி விதிகளில் 'தற்காலிக' என்ற சொல்லை நீக்குவதற்கு பிரேரணை செய்யும் அறிவிப்புத்தாளில் எண்.18, 19 ஆகிய இரண்டு திருத்தங்கள் உள்ளன. நாம் ஏற்கனவே இயற்றியுள்ளதற்கு இசைவான முறையில் இந்தத் திருத்தங்களை ஏற்றுக் கொள்வதென்று முன்மொழிகிறேன்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்:** தலைவர் அவர்களே, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

''பிரேரணை செய்யப்பட்டுள்ள 312 ஆ என்ற புதிய விதியில், மேலே குறிப்பிடப்பட்ட 16வது எண். திருத்தத்தில் 'தற்காலிக' என்ற சொல், அது வருகிற இடங்களிலெல்லாம் நீக்கப்பட வேண்டும்.''

''பிரேரணை செய்யப்பட்டுள்ள 312 - அ என்ற புதிய விதியில், மேலே குறிப்பிடப்பட்ட 16ம் எண் திருத்தத்தில், 'தற்காலிக' என்ற சொல் வரும் இடத்தில் அது நீக்கப்பட வேண்டும்.''

இந்தத் திருத்தங்களை டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக்கொள்வது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். இவற்றை நான் முன்மொழிவதற்குக் காரணமென்னவெனில், குடியரசுத் தலைவரையோ அல்லது ஆளுநரையோ 'தற்காலிகமானவர்கள்' என்ற வர்ணிப்பது அவர்களின் மதிப்பை இழிவுபடுத்துவதாகும். எனவே, இந்தத் திருத்தங்களை ஏற்றுக்கொள்ளும்படி சபையைக் கேட்டுக்கொள்கிறேன்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தத் திருத்தத்தை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது. என்னுடைய நண்பர்கள் திரு.காமத்தும் பேராசிரியர் சாக்சேனாவும் இந்த 312 - இ விதியில், இல்லாததை எல்லாம் இருப்பதாகக் காண்கிறார்கள். உண்மையில் இந்தவிதி ஒருமிகவும் வரையறைக்குட்பட்ட முக்கியத்துவம் உடையதேயாகும். இந்த விதியில் விளக்கப்பட்டுள்ள பிரச்சினை, எந்தக் குறிப்பிட்ட பிரதேசத்தின் மக்கட்தொகையையும் நிர்ணயம் செய்

1. அ.பே.வி., தொகுதி 10, 1949, அக்டோபர் 7, பக். 26-27.

வதேயாகும். நாம் ஏற்கனவே நிறைவேற்றிவிட்ட இந்த விதியின்படி, தேர்தல் காரியங்களுக்காக, மக்கட் தொகையை, கடைசி மக்கட் தொகைக் கணக்கெடுப்பினால் (சென்ஸஸ்) நிர்ணயிக்கப்பட்டுள்ள படி எடுத்துக்கொள்வதேயாகும் என்பதை என்னுடைய நண்பர்கள் மிகவும் நன்றாக அறிவார்கள். இந்தியா பிரிவினை செய்யப்பட்டதைக் கவனத்தில் எடுத்துக்கொண்டு பார்க்கும்போது, 1941ம் வருடத்திய சென்ஸஸ் புள்ளிவிவரங்களை சரியானவை என்று எடுத்துக்கொள்ள முடியாது என்பதும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. எனவே அதன்விளைவாகத் தொகுதிகளை வரையறை செய்வதும், இடங்களை நிர்ணயம் செய்வதும் குலைந்துபோன மாகாணங்களை அடிப்படையாகக் கொண்டு செய்ய முடியாது. அத்தகைய மாகாணங்களின் மக்கட் தொகைப் புள்ளிவிபரங்கள் பெருமளவு மாற்றமடைந்துள்ளன. எனவே, மக்கட்தொகை எவ்வளவாக இருக்கிறது, சென்ஸஸ் புள்ளிவிவரங்களில் இருப்பதை அப்படியே எடுத்துக்கொள்வதா அல்லது புதிய கணக்கெடுப்பு நடத்துவதா என்பதையும், அல்லது நான் ஏற்கனவே கூறியதுபோன்று வாக்காளர் எண்ணிக்கை அடிப்படையிலேயே மக்கட்தொகையை நிர்ணயிப்பதா என்பதையெல்லாம் அதிகாரம் படைத்த ஒருவரால் நிர்ணயிக்க வேண்டியது அவசியமாகும். இந்த விஷயங்களெல்லாம் குடியரசுத் தலைவரிடம் விட்டுவிடவேண்டும். இதுபோன்ற ஒருவிஷயத்தில் நாடாளுமன்றத்தின் அங்கீகாரம் எவ்வாறிருக்கும் என்பதை என்னால் பார்க்க முடியவில்லை. இது எவ்வாறிருக்கும் என்பதை என்னால் பார்க்க முடியவில்லை. இது விசேஷ சூழ்நிலைமைகளினால் அவசியப்பட்டுள்ள நிர்வாக விஷயமேயாகும். தேர்தல்கள் விரைவுபடுத்தப்பட வேண்டும் என்று நாம் மெய்யாகவே விரும்பினால், இந்த விஷயத்தை குடியரசுத்தலைவரிடம் விட்டுவிடுவதே சாலச்சிறந்ததாகும் என்று கருதுகிறேன். எனவே, என்னுடைய நண்பர் திரு.காமத்தால் முன்மொழியப்பட்டுள்ள திருத்தத்தை ஏற்றுக்கொள்ள முடியாதவனாக இருக்கிறேன்.

**திரு. வி. காமத்:** என்னுடைய திருத்தத்தில் அடங்கியுள்ள கோட்பாட்டுக்கு டாக்டர் அம்பேத்கருக்கு ஏதாவது ஆட்சேபனை இருக்கிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. இந்த விதியின் முக்கியத்துவம் மிகவும் வரையறைக்குட்பட்டதே. இது மக்கட் தொகையை நிர்ணயம் செய்வதேயன்றி,

தொகுதிகளை வரையறை செய்வதல்ல. தொகுதிகளை வரையறை செய்வது அரசியல் சாசனத்தின் ஷரத்துகளுக்கு ஏற்ப செய்யப்படும்.

***(விதிகள் 312 - அ முதல் 312 இ வரையிலும் மற்றும் 312 - ஜி, 312 - எச் ஆகியவையும் டாக்டர் அம்பேத்கரால் பிரேரணை செய்யப்பட்டு, டாக்டர் பி.எஸ். தேஷ்முக்கின் திருத்தத்தினால் திருத்தப்பட்ட வடிவத்தில் ஏற்றுக்கொள்ளப் பட்டு, அரசியல் சாசனத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டன.)***

## விதி 313

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன் மொழிகிறேன்:

இடர்ப்பாடு களை அகற்று வதற்கான ஜனாதிபதியின் அதிகாரம்.

*"313 வது விதிக்குப் பதிலாகப் பின்வருவதை சேர்த்துக்கொள்ள வேண்டும்."*

*313 (1) குறிப்பாக, 1935ம் வருட இந்திய அரசு சட்டத்தின் ஷரத்துக்களிலிருந்து, அரசியல் சாசனத்தின் ஷரத்துகளுக்கு மாறிச் செல்வது சம்பந்தமாக, எந்த இடர்ப்பாடுகளையும் அகற்றும் நோக் கத்துடன், இந்த அரசியல் சாசனம், குறிப்பிட்ட காலம் வரையில் தேவைக்கேற்ப, மாற்றங்கள், சேர்ப்புகள் அல்லது நீக்கம் ஆகியவற் றுக்கு உட்பட்டு அமலில் இருக்கும் என்று உத்தரவிடலாம்.*

*ஆனால், இந்த அரசியல் சாசனத்தின் 5வது பாகத்தின் இரண்டாவது அத்தியாயத்தின் கீழ் உரியமுறையில் அமைக்கப்பட்ட நாடாளுமன்றத் தின் முதல் கூட்டத்திற்குப் பின்னர், ஜனாதிபதி அத்தகைய உத்தரவு எதை யும் வெளியிட முடியாது.*

*2. இந்த விதியின் (1) வது துணைவிதியின் கீழ் வெளியிடப்படும் ஒவ்வொரு உத்தரவும் நாடாளுமன்றத்தின் ஒவ்வொரு சபையின் முன்னும் சமர்ப்பிக்கப்பட வேண்டும்.*

இது இந்திய அரசு சட்டத்தில் அடங்கியிருந்த ஷரத்தின் மறுபதிப்பேயாகும். இடைக்கால கட்டத்திற்கு இது அவசியமாகும்.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, 313 வது விதியில் அடங்கியுள்ள துணைவிதிகளின் அவசியம் குறித்து பெரு மளவு தவறான கருத்து (வீணான அச்சம்) இருப்பது போல் தோன்று கிறது. தமது திருத்தத்தை முன்மொழிந்த எனது நண்பர் டாக்டர்

---

1. அ.பே.வி., தொகுதி 10, 1949, அக்டோபர் 7, பக்.27-28.
2. மேற்படி அதே நூல், பக். 30-31.

தேஷ்முக், 313 வது விதியில் அடங்கியுள்ள துணைவிதிகளைப் பற்றி திருப்திகரமான விளக்கத்தை நான் அளித்தால், தம்முடைய திருத் தத்தைத் தாம் வலியுறுத்தப் போவதில்லை என்று மிகவும் அன்புடன் கூறினார். 313வது விதி சம்பந்தமாக, சில உண்மைகள் (விவரங்கள்) ஒத்துக்கொள்ளப்படும், எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்படும் என்று நான் எதிர்பார்க்கும் முதலாவது உண்மை இதுதான். இடைக்காலக் கட்டத்தின்போது சில சிரமங்கள் நிச்சயமாக ஏற்படும். இதை வரைவுக்குழுவோ, அல்லது இந்த அவையின் எந்த உறுப்பினரோ, இப்பொழுதே முன்னறியவோ, அதற்காக ஏதாவது வகை செய்யவோ சாத்தியமல்ல. எனவே, இத்தகைய முன்னறிய முடியாத சிரமங் களுக்கு தீர்வு காண்பதற்கு எங்கேயாவது ஓரளவு அதிகாரம் இருக்க வேண்டும்.

எனவே, அந்தக் குறிப்பிட்ட ஆணையத்திடம் எந்த அளவுக்கு, மற்றும் எந்தக் காலகட்டம் வரையிலும் இந்த அதிகாரங்களை விட்டுவைக்கவேண்டும் என்பதுதான் கேள்வி. என்னுடைய நண்பர் டாக்டர் தேஷ்முக், இந்திய அரசாங்கச் சட்டத்தின் 310 வது விதியின் படி, இந்த அதிகாரம் ஆறு மாதங்களுக்கு நீடித்திருக்கும் என்று கூறினார். அவர் தவறாகக் கூறுகிறார் என்று நினைக்கிறேன். மூன்றாவது (III) பாகம் செயல்படத் தொடங்கிய பின்னர் இந்த அதிகாரம் ஆறு மாதங்களுக்கு நீடித்திருக்கும். நம்முடையது மிகவும் வரையறைக்குட்பட்ட ஷரத்தாகும். 313 வது விதியினால், அரசியல் சட்ட ஷரத்துகளின்படி இடர்ப்பாடுகளுக்குத் தீர்வு காண்பதற்கு வழங்கப்பட்டுள்ள அதிகாரம், புதிய ஷரத்துகளின்கீழ் புதிய நாடாளு மன்றம் தோன்றும் அதேநாளில் தானாகவே முடிவுக்கு வந்துவிடும். எனவே, இந்த விதியின் கீழ், 313வது விதியினால் அளிக்கப்பட் டுள்ள அதிகாரங்களை, திருத்தங்களை செய்வதற்கு அதிகாரம் படைத்த முறையான ஆணையம் ஏற்பட்டபின் மேற்கொண்டு ஒரு நாள் கூடக் கூடுதலாக குடியரசுத் தலைவர் செலுத்துவதற்கு அனு மதிக்க நாங்கள் முனையவில்லை. இந்த 313வது விதியின் ஓர் இயல்பாகும் அது.

இடர்ப்பாடுகள் ஏற்படக்கூடும், அவற்றுக்குத் தீர்வு காண வேண்டும், இதற்கான அதிகாரம் ஒருவருக்கு வழங்கப்பட்டிருக்க வேண்டும் என்ற உண்மையை ஒத்துக்கொள்ளும் அதேசமயத்தில், பரிசீலனைக்கு மெய்யாகவே ஏற்படுகின்ற பிரச்சினை இதுதான்: இந்த அதிகாரம் குடியரசுத் தலைவரின் வசமிருக்க வேண்டுமா, அல்லது

தற்காலிக நாடாளுமன்றத்தின் வசமிருக்க வேண்டுமா என்பதே யாகும். வேறு மாற்று எதுவும் இதற்கு இருக்கமுடியாது. 313 வது விதியில் அடங்கியுள்ள ஷரத்துக்களை ஏற்றுக்கொள்வது விரும்பத் தக்கது என்றும், அதிகாரம் குடியரசுத் தலைவர் வசம் இருக்க வேண்டும் என்றும் நகல் தயாரிப்புக் கமிட்டி கருதியதற்குக் காரணம் இடைக்கால நாடாளுமன்றத்தின் காலம் மிகவும் குறுகியதாக இருப் பதால், நாடாளுமன்றம் சட்டமியற்றுவது தேவைப்படும் ஏராள மான இதர விஷயங்களில் அது மும்முரமாக ஈடுபட்டிருக்கக்கூடும் என்பதும், இடைக்கால கட்டத்தில், உடனடியாகத் தீர்வு காணப்பட வேண்டிய விஷயத்தில் கவனம் செலுத்துவதற்கு நாடாளுமன்றத் திற்கு சாத்தியமாயிருக்காது என்பதும்தான்.

ஏற்படும் சாத்தியமுள்ள இடர்ப்பாடுகளின் ஒன்றிரண்டு உதா ரணங்களைக் கூற விரும்புகிறேன். நமது அரசியல்சட்டத்தின் மூலம், மாநிலங்கள் மற்றும் மைய அரசின் வரிவிதிப்பு அதிகாரங்களில் கணிசமான மாற்றங்களை நாம் செய்துள்ளோம். அடுத்த ஜனவரி 26ல், அரசியல் சாசனம் அமலுக்கு வரும்போது, தற்போது அமலில் இருந்துவரும் இந்திய அரசாங்க சட்டத்தின்கீழ் இந்திய மாகாணங் கள் அனுபவித்துவரும் வரிவிதிப்பு அதிகாரங்கள் தானாகவே முடிவுக்கு வந்துவிடும். அது ஒரு நெருக்கடியை ஏற்படுத்திவிடும், எனவே இந்த விஷயம் முறைப்படுத்தப்பட வேண்டும். தற்காலிக நாடாளுமன்றத்தினால் அதை முறைப்படுத்த வேண்டுமெனில், அதற்கு நீண்டகாலம் பிடிக்கும், அதுவரையில் நெருக்கடி நீடிக்கும். எனவே, ஒரு மசோதாவை மூன்று முறை வாசிப்பது, தெரிவுக் குழு வுக்கு அனுப்புவது, பிரேரணையைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்வது, சுற்றுக்கு விடுவது முதலிய மாமூலான நாடாளுமன்ற நடைமுறையைக் கடைப்பிடிப்பதற்குப் பதிலாக, அரசியல் சாச னத்தை இடர்ப்பாடுகளிலிருந்து காப்பாற்றும் நோக்கத்துடன் இந்த அதிகாரத்தை குடியரசுத் தலைவரிடம் ஒப்படைப்பது விரும்பத் தக்கது என்று கருதுகிறேன். அப்பொழுது அவர் விரைவாகச் செயல் படுவார். எனவே, நான் கூறியது போன்று தகுதியின் அடிப்படையில் இந்த ஷரத்து அவசியமானது. இதை 310வது பிரிவில் அடங்கியுள்ள ஷரத்துகளுடன் ஒப்பிடும்போது, நம்முடைய இந்த ஷரத்து மிகவும் வரையறைக்குட்பட்ட பிரேரணையேயாகும். எனவே இந்த சூழ்நிலை களை கவனத்தில் கொண்டு பார்க்கும்போது, 313 ஆவது விதியை ஏற்றுக்கொள்வதற்கு இந்த அவைக்கு எத்தகைய கடுமையான அல்லது அடிப்படையான ஆட்சேபம் இருக்க முடியாது என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னுடைய நண்பர் திரு.காமத் எழுப்பியுள்ள விஷயத்தைப் பொறுத்தமட்டிலும், வரைவுக்குழு, மூலசட்டத் தொகுப்புக்கும், ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள சட்டத் தொகுப்புக்கும் இடையில் வேறுபாடு பார்க்காமல் 1935ம் வருட இந்திய அரசு சட்டத்தைப் பற்றிக் குறிப்பிட்டதில் பிழை ஏதும் இல்லை என்பதை அவர் உணர்வார் என்று நினைக்கிறேன். ஏனெனில், ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள சட்டத் தொகுப்பே, அதனுடைய சுருக்கமான தலைப்பு ''1935ம் வருட இந்திய அரசாங்கச் சட்டம்'' என்றிருக்க வேண்டும் என்று கூறுவதை அவர் காண்பார். இந்த விதியை வியாக்கியானப்படுத்தும் போது அந்தப் பொருளில்தான் அது புரிந்து கொள்ளப்படும் என்பதில் எனக்கு எவ்வித ஐயமும் இல்லை.

**டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:** நான் ஒரு கேள்வியைக் கேட்கலாமா? குடியரசுத் தலைவரால் இயற்றப்பட்ட ஆணையை அங்கீகரிக்கும்படி நாடாளுமன்றம் கேட்டுக்கொள்ளப்பட்டால், அதனால் என்ன தீங்கு ஏற்படும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆனால் ''அங்கீகாரம்'' என்றால் என்ன? அது குடியரசுத்தலைவர் மேற்கொண்ட நடவடிக்கையை ரத்து செய்யக்கூடும்; இந்த ஷரத்தின் நோக்கமே ஒரு பயனுறுதியான பரிகாரத்தை வழங்குவதேயாகும். அந்த வகையில் அது விரைவாக அமலுக்கு வரமுடியாது. ஆனால் விஷயம் உடனே அமலுக்கு வரவேண்டும் என்பதையே நாம் விரும்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தங்களை இப்பொழுது வாக்கெடுப்புக்கு விடுகிறேன். டாக்டர் அம்பேத்கரால் முன்மொழியப்பட்ட திருத்தம் எண்.37. அது என்னவெனில்,

> ''பிரேரணை செய்யப்பட்டுள்ள 313 வது விதியின் (2) வது ஷரத்தில், பட்டியல் 1 ன் (முதல்வாரம்) 23வது எண் திருத்தத்தில், 'ஒவ்வொரு அவையும்' என்ற சொற்கள் நீக்கப்பட வேண்டும்.''

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

**டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:** ஐயா, என்னுடைய திருத்தங்கள் எண். 30, 31 மற்றும் 32 ஐ வாபஸ் பெறுவதற்கு அனுமதி கோருகிறேன். எண் 33 திருத்தத்தை வலியுறுத்துகிறேன்.

பேரவையின் அனுமதியுடன் எண் 30. 31 மற்றும் 32 வது திருத்தங்கள் வாபஸ்பெறப்பட்டன.

திருத்தப்பட்ட வடிவத்தில் 313வது விதி, அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டது.

## விதி 307

[1]**திரு. விஸ்வநாததாஸ்:** இது சம்பந்தமாக என்னுடைய முறையீடு என்னவெனில், சட்ட இலக்காகவோ, அரசியல் நிர்ணய சபை அலுவலகமோ இது சம்பந்தமாக ஓர் அங்குலம்கூட நகர வில்லை என்பதுதான். ஏற்றுக்கொள்ளப்பட்டவைகளை அவர்கள் தயாராக வைத்திருந்து, செயல்பாட்டிலுள்ள சட்டங்களை ஆய்வு செய்திருக்க வேண்டும்.

**திரு. அவைத் தலைவர்:** அரசியல் சாசனம் எவ்வாறு இருக்கப் போகிறது என்பதைத் தெரிந்து கொள்ளாமலேயே!

**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் (பம்பாய்: பொது):** என்னுடைய நண்பர் முற்றிலும் தவறாகப் புரிந்துகொண்டு இருக்கிறார். என்ன செய்யப்பட்டு வருகிறது என்பதை அவர் அறியவில்லை.

***(திருத்தப்பட்ட வடிவத்தில் 307 வது விதி அரசியல் சாசனத்தில் இணைத்துக் கொள்ளப்பட்டது.)***

## 308 வது விதி

[2]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் அவர்களே, இப்பொழுது நாம் 308 வது விதியை எடுத்துக் கொள்கிறோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

> ''308 வது விதியின் (3)வது துணைவிதிக்கு பதிலாகப் பின்வரும் ஷரத்தை சேர்த்துக் கொள்ள வேண்டும்:

---

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 10, 1949, பக். 65.
2. மேற்படி அதே நூல், பக்கம் 72-73.

*''(3) இந்தியாவின் பிரதேசத்தினுள் எந்த நீதிமன்றத்தினுடைய எந்த ஒரு தீர்ப்பு, தீர்ப்பாணை, அல்லது உத்தரவு சம்பந்தப்பட்ட மேல் முறையீடுகள், மற்றும் விண்ணப்பங்களைப் பைசல் செய்வதற்கு மேன்மை தங்கிய மன்னரின் கவுன்சில் தனது அதிகாரத்தை செயல்படுத்துவதை - அத்தகைய அதிகாரச்செயல்பாடு கூட்டத்தினால் அங்கீகரிக்கப்பட்டிருக்கும் பட்சத்திலும், மேலும், அத்தகைய எந்த மேல்முறையீடு அல்லது விண்ணப்பத்தின் மீதும் மேன்மைதங்கிய மன்னர் கவுன்சிலின் எந்த உத்தரவும், இந்த அரசியல் சட்டம் அமலுக்கு வந்ததற்குப் பின்னர், இந்த அரசியல் சட்டத்தின் எந்த விதியினாலும் செல்லாததாக்கமுடியாது. அவை எல்லா வகையிலும், உச்சநீதிமன்றத்தினால் இந்த அரசியல் சட்டத்தினால் அத்தகைய நீதிமன்றத்திற்கு வழங்கப்பட்டிருக்கும் அதிகாரத்தின் செயல்பாட்டில் வழங்கப்பட்ட உத்தரவு அல்லது தீர்ப்பாணையைப் போன்று பயனுடைத்தாகும்.''*

மேலும்:

*''308 வது விதியின்(3) வது துணைவிதிக்குப் பின்னர் பின்வரும் புதிய துணைவிதி சேர்த்துக் கொள்ளப்படவேண்டும்:*

*''(3அ) இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வந்த நாளிலும், அந்தத் தேதியிலிருந்தும், ஒரு மாநிலத்தில், தற்போதைக்கு - முதலாவது 'அட்டவணையின் IIIவது பாகத்தில் குறிப்பிட்டுள்ளபடி - பிரிவு கவுன்சிலைப் போன்று செயல்படும் ஆணையத்தின்படி அதிகாரம் அந்த மாநிலத்தினுள் எந்த ஒரு நீதிமன்றத்தின் எந்தத் தீர்ப்பு, தீர்ப்பாணை அல்லது உத்தரவு சம்பந்தமாக மேல்முறையீடுகளையும் விண்ணப்பங்களையும் அனுமதிப்பதற்கும் பைசல் செய்வதற்கும் உள்ள அதிகாரவரம்பு ரத்தாகும்; மேற்படி தேதியில் மேற்படி ஆணையத்தின் முன்நிலுவையிலுள்ள அனைத்து மேல்முறையீடுகளும், பிற நீதிமன்ற நடவடிக்கைகளும் உச்சநீதிமன்றத்திற்கு மாற்றப்படும், அது அவற்றைப் பைசல் செய்யும்.''*

ஐயா, முதலாவது திருத்தத்தின் நோக்கம், அரசியல் நிர்ணய சபை மிகவும் சமீபத்தில் நிறைவேற்றிய சட்டத்தின் 4வது பிரிவின் கீழ் - அதன்கீழ் நிலுவையிலுள்ள சில மேல்முறையீடுகளை - அவை ஜனவரி 26ம் தேதிக்குள் சில மேல்முறையீடுகளை - அவை ஜனவரி 26ம் தேதிக்குள் இறுதியாகப் பைசல் செய்யப்படாவிட்டால் - இந்த அரசியல்சட்டம் அந்தத் தேதியில் அமலுக்கு வருகிறது என்று கருதி - பைசல் செய்வதற்கு பிரிவுகவுன்சிலின் அதிகாரத்தை அப்படியே நீடிக்கச்செய்வதேயாகும். ''மேல்முறையீட்டைப் பைசல் செய்வதற்கு'' என்பவை முக்கியமான சொற்களாகும். ஒரு மேல்முறையீட்டை அனுமதிப்பதற்கு எந்த அதிகாரமும் கிடையாது. இதர முக்கியமான சொற்கள் ''சட்டத்தினால் அங்கீகாரமளிக்கப்பட்டுள்ள அத்தகைய அதிகாரம்'', அதாவது, நிறைவேற்றப்பட்டுள்ள சமீபத்திய சட்டத்தை இது குறிப்பிடுகிறது. பிரிவுக் கவுன்சிலுக்கு வேறு எந்த அதிகார உரிமையும் கிடையாது; அரசியல் சட்டம் அமலுக்கு வரும் தேதியில்,

குறிப்பிட்ட சட்டத்தின்கீழ் பைசலுக்காக அவர்களிடம் விடப்பட்டிருந்த எல்லா கலந்தாலோசனையின்பேரில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், ஒரு வழக்கில், பாதி விசாரணை முடிந்திருக்கக் கூடும், அல்லது விசாரணை முடிந்துவிட்டது என்ற பொருளில் ஒரு வழக்கு பைசல் செய்யப்பட்டிருக்கக்கூடும், ஆனால் தீர்ப்பாணை வாங்கப்படாமலிருக்கலாம், அந்த அளவில் அது அவர்களுக்கு முன் நிலுவையில் இருக்கக்கூடும். அந்த நிலையில், பாதி விசாரிக்கப்பட்டு, பைசல் செய்யப்படாமலுள்ள வழக்குகளை உச்சநீதிமன்றத்திற்கு மாற்றுவதற்கு வகைசெய்வதற்கு மாறாக - அவ்வாறு செய்தால் கட்சிக்காரர்களுக்கு மிகுந்த சிரமம் ஏற்படும் என்பதனால் - அரசியல் சட்டம் அமலுக்கு வரும் தேதியில் பிரிவு கவுன்சிலின் அதிகாரம் முடிவுறும் என்கிற நமது பொதுவிதிக்கு ஒரு விலக்கு அளிப்பது விரும்பத்தக்கதாகும். 6வது எண் திருத்தத்தின் முக்கிய ஏழாவது எண் திருத்தத்தைப் பொறுத்தமட்டிலும், இந்திய மாநிலங்கள் சிலவற்றில், தமது உயர்நீதிமன்றங்களின் தீர்ப்புகளை மேற்பார்வையிடும் பிரிவு கவுன்சில்கள் உள்ளன என்பது நன்கு அறியப்பட்ட விஷயமாகும். இதற்குக் காரணம் என்னவெனில், அவை பிரிவு கவுன்சிலின், அதாவது இங்கிலாந்திலுள்ள மேன்மைதங்கிய மன்னரின் பிரிவு கவுன்சிலின் அதிகார வரம்பை அங்கீகரிக்கவில்லை. எனவே, அவை தமது சொந்தப் பிரிவுகவுன்சிலை நிறுவிக்கொண்டன. தற்பொழுது மாநிலங்களின் உச்சநீதிமன்றத்திற்கும் உயர்நீதிமன்றத்திற்கும் நேரடியான உறவு இருக்க வேண்டும் என்று அரசியல் சட்டத்தில் (பாகம் IIIலும், பாகம் Iலும் ) இருப்பதை முன்னிட்டு, பாகம் IIIல், ஒரு இந்திய மாநிலத்தில் பிரிவு கவுன்சில் என்ற இடைத்தட்டு அமைப்புச் சட்டத்தின்படி முடிவுக்குக் கொண்டுவரப்பட வேண்டும் என்று உணரப்படுகிறது. அப்பொழுதுதான் ஜனவரி 26ல், எந்த மாநிலத்திலும் பாகம் IIIல், ஒரு மாநிலத்தில் உள்ள உயர்நீதிமன்றத்திலிருந்தான எந்த மேல்முறையீடுகளும், தானாகவே உச்சநீதிமன்றத்தினால் பைசல் செய்யப்படுவதற்கு வரும்.

இந்தப் பிரிவு கவுன்சில்கள் வெவ்வேறு மாநிலங்களில் வெவ்வேறு பெயர்களில் அழைக்கப்படுகின்றன என்று எனக்குச் சொல்லப்படுகிறது. அப்படியெனில், இந்த அமைப்புகளின் வெவ்வேறு பெயர்களையும் மாறுபாடுகளையும் சரி செய்வதற்காக, நம்முடைய 306 வது விதியில் பிரிவு கவுன்சிலைப் பற்றி விளக்கம் கூறுவதன் மூலம் அந்த இடர்ப்பாட்டைப் போக்குவதற்கு நகல் தயாரிப்புக் கமிட்டி முயற்சி செய்கிறது.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் அவர்களே, நீங்கள் ஏதாவது கூறுவதற்கு விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, முன்மொழியப்பட்டுள்ள திருத்தங்களுக்கு ஆதரவாகக் கூறப்பட்டுள்ள எதுவும் எந்த சாராம்சமான விஷயத்தையும் எழுப்பவில்லை என்று கருதுகிறேன். இது, பெரும்பாலும் மனவெழுச்சி சம்பந்தப்பட்ட ஒரு விஷயமேயாகும். சௌகரியத்தின் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும் போது, இந்தத் துணைவிதியை அப்படியே வைத்துக் கொள்வது மிகவும் நல்லது என்று கருதுகிறேன். இதனால், எந்தவிதத்திலும் அவமானப்பட்டு விட்டதாக உணரக்கூடாது. ஏனெனில் பிரிவு கவுன்சில் துணைவிதி (3)ல் குறிப்பிடப்பட்டுள்ள வரம்புக்குட்பட்டு தொடர்ந்து அதிகார வரம்பைச் செயல்படுத்தினாலும்கூட, அந்த அதிகார வரம்பானது பிரிவு கவுன்சிலின் உள்ளார்ந்த அதிகார வரம் பல்ல, இந்தப் பேரவையானது அவர்களுக்கு வழங்கியுள்ள அதிகார வரம்பேயாகும் என்பதை மறக்கக்கூடாது, திருத்தங்களை முன் மொழிந்த எனது நண்பர்கள் இந்த உண்மையை மறந்துவிட்டார்கள் என்று தோன்றுகிறது. உண்மையில் பிரிவு கவுன்சிலானது, ஒரு குறிப்பிட்ட அளவு அவசியமான, முக்கியமான பணியாற்றுவதற்கு இந்தப் பேரவையின் முகவராகத்தான் செயல்படும், எனவே, நாம் சிறுமைப்படுத்துவதாக உணர்வதற்கோ, அல்லது நமது சுதந்திரத்தை மெய்யாகவே விட்டுக் கொடுப்பதாக நினைப்பதற்கோ எவ்வித முகாந்திரமும் இல்லை.

எனது நண்பர் பேராசிரியர் சாக்சேனா எழுப்பிய பிரச்சினையைப் பொறுத்தமட்டிலும் அதில் அவர் 308 வது விதிக்கான அடிக் குறிப்பைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தார்; மேம்பட்ட முறையில் சிந்தித்ததின்பேரில், இடர்ப்பாடுகளைப் பற்றிய துணைவிதியை நீக்குவதானது, இந்த நோக்கத்திற்கு முறையாகப் பயன்படுத்தப் படாமல் போகலாம் என்று வரைவுக்குழு கண்டறிந்துள்ளது என்று தாராளமாக ஒத்துக்கொள்கிறேன். எல்லா ஐயப்பாட்டையும் போக்கு வதற்காக, அரசியல் சாசனத்திலேயே அதிகார வரம்பை வழங்கு வதற்கு இதுபோன்ற ஒரு தனி உபவிதியை வைத்துக்கொள்வது நல்லது என்று நாங்கள் கருதினோம்.

**திரு. தலைவர்:** இப்பொழுது திருத்தங்களை வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

---

1. அ.பே.வி., தொகுதி 10, 1949, அக்டோபர் 10, பக். 77.

***(ஏற்கனவே குறிப்பிட்டது போன்று, டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த இரண்டு திருத்தங்களும் ஏற்றுக்கொள்ளப்பட்டன; இதர திருத்தங்கள் நிராகரிக்கப் பட்டன. திருத்தப்பட்ட விதத்தில் 308 வது விதி, அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)***

## *310 வது விதி*

[1]***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *ஐயா, நான் பின்கண்டவாறு முன்மொழிகிறேன்:*

*''310 வது விதிக்கு பதிலாக, பின்வருவதை சேர்த்துக்கொள்ள வேண்டும்:*

*310. (1) இந்த அரசியல் சாசனத்தின் 193வது விதியின் (2) வது துணை விதியில் கூறப்பட்டுள்ள எதையும் பொருட்படுத்தாது இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் அதுவரையிலும் எந்த மாகா ணத்திலும் பதவியிலிருக்கும் ஓர் உயர்நீதிமன்றத்தின் நீதிபதிகள், அவர் கள் வேறுவிதமாக முடிவு செய்யாத வரையிலும், இந்தத் தேதியில், சம்பந்தப் பட்ட மாநிலத்தின் உயர்நீதிமன்றத்தின் நீதிபதிகளாவர். அதிலிருந்து, இந்த அரசியல் சாசனத்தின் 197வது விதியில் கீழ் அத்தகைய உயர்நீதி மன்றத்தின் நீதிபதிகள் சம்பந்தமான சம்பளங்கள், அலவன்சுகள் ஆகிய வற்றுக்கும் மற்றும் விடுமுறை, ஓய்வூதியங்கள் ஆகிய உரிமைகளுக் கும் உரியவர்களாகிறார்கள்.*

*(2) எந்த இந்திய மாநிலத்திலும், தற்போதைக்கு முதலாவது, அட்ட வணையின் மூன்றாவது பாகத்தில் குறிப்பிட்டுள்ள அட்டவணையின் மூன்றாவது பாகத்தில் குறிப்பிட்டுள்ளபடியான எந்த மாநிலத்திலும், இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வரும் தேதிவரையிலும் பதவியிலிருந்த ஓர் உயர்நீதிமன்றத்தின் நீதிபதிகள், அவர்கள் வேறுவிதமாக முடிவு செய்திருந்தாலன்றி, அந்தத்தேதியில், குறிப்பிட்ட மாநிலத்தின் உயர் நீதிமன்றத்தின் நீதிபதிகளாவர்; அரசியல் சாசனத்தின் 193 வது விதியின் (1) மற்றும் (2) வது துணைவிதிகளில் அடங்கியுள்ள எதுவும் இதை பாதிக்காது. அவர்கள், குடியரசுத்தலைவர் தனது உத்தரவின் மூலம் நிர்ணயிக்கும் காலகட்டம் முடியும்வரையிலும் தொடர்ந்து பதவி வகிப் பார்கள்.*

*(3) இந்த விதியில், 'நீதிபதி' என்னும் சொல்லினுள், ஒரு தற்காலிக நீதிபதி அல்லது கூடுதல் நீதிபதி வரமாட்டார்கள்.''*

*இந்த விதியானது, நாம் ''மீண்டும் மேற்கொண்டுள்ள விதி'' என்று வழக்கமாகக் கூறுவதேயாகும். ஏற்கனவே பதவியிலிருப்பவர் களைப் புதிய உயர்நீதிமன்றங்களில் அவர்கள் நியமிக்கப்படுவதற்கு ஒப்புக்கொண்டால், புதிய பதவிகளுக்கு அப்படியே மீண்டும் நிய மிக்கப்படுவதாகும்.*

---

*1. அ.பே.வி., தொகுதி 10, 1949, அக்டோபர் 10, பக். 77.*

[1]**திரு. நசிருத்தீன் அகமது:** ஐயா, நான் பின்கண்ட திருத்தத்தை முன்மொழிகிறேன்:

> "பிரேரணை செய்யப்பட்டுள்ள 310வது விதியின் (1) வது துணைவிதியில், பட்டியல் Iஇன் (இரண்டாவது வாரம்) 8 வது எண் திருத்தத்தில், 'அத்தகைய உயர்நீதிமன்றத்தின் நீதிபதிகள் சம்பந்தமாக, இந்த அரசியல் சாசனத்தின் 197வது விதியின்கீழ் வகை செய்யப்பட்டுள்ளபடி' என்ற சொற்களுக்கு பதிலாக, 'அவ்வாறு அமலுக்கு வரும்வரையிலும் அவர்கள் பெறத்தகுதியுள்ளபடி' என்ற சொற்களை சேர்த்துக்கொள்ளவும்."

இந்த விதியின் துணைவிதி(1) அமலுக்கு வரும் தேதியில் (தற்காலிகமாக 1950 ஜனவரி 26ல்) உயர்நீதிமன்றத்தின் நீதிபதிகள், அதே உயர்நீதிமன்றத்தின் நீதிபதிகளாக நீடிப்பதற்கு வகை செய்கிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தத் திருத்தம் IIவது அட்டவணையை எதிர்நோக்குகிறது என்ற உண்மையை உங்களுடைய கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். இந்த விஷயம் IIவது அட்டவணையின் கீழ் கொண்டுவரப்படவேண்டும்; அட்டவணை II அவையின் முன் விவாதத்திற்கு வரும் நேரம்தான் இதற்குப் பொருத்தமான சமயமாகும்.

***(திரு. அகமதின் திருத்தம் நிராகரிக்கப்பட்டது. ஏற்கனவே கூறப்பட்டபடி 310வது விதி அரசியல் சாசனத்தில் இணைத்துக் கொள்ளப்பட்டது.)***

## 311 வது விதி

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

*ஒன்றியத்தின் தற்காலிகஜனாதிபதிகள், சபாநாயகர், துணை சபாநாயகர் பற்றிய விதிகள்*

> "311வது விதிக்குப் பதிலாக பின்வரும் விதி சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:
>
> "311 (1) இந்த அரசியல் சாசனத்தின் விதிகளின்கீழ், நாடாளுமன்றத்தின் இரு அவைகளும் உரியமுறையில் அமைக்கப்பட்டு, முதலாவது அமர்விற்குக்கூடுவதற்கு அழைக்கப்படுகின்ற வரையில், இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் வரையிலும் இந்திய டொமினியனின் அரசியல் நிர்ணய சபையாகச் செயல்பட்டு வந்த அமைப்பு நாடாளுமன்றத்தின் மீது இந்த அரசியல் சாசனத்தின் விதிகளால் வழங்கப்பட்ட எல்லா அதிகாரங்களையும் செலுத்தும், எல்லாக் கடமைகளையும் நிறைவேற்றும்.
>
> விளக்கம்: இந்தத் துணைவிதியின் நோக்கத்திற்காக, இந்திய டொமினியனின் அரசியல் நிர்ணயசபையில் பின்வருபவர்களும் அடங்குவர்:

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 10, 1949, பக். 79-80.

(i) இந்த விதியின் (2) வது துணைவிதியின் கீழ் வகை செய்யப் பட்டுள்ள பிரதிநிதித்துவத்திற்காக எந்த மாநிலம் அல்லது பிராந்தி யத்தை பிரதிநிதித்துவப்படுத்துவதற்காகத் தேர்வு செய்யப்படும் உறுப் பினர்கள், மற்றும்,

(ii) மேற்படி அவையில் எப்போதாவது ஏற்படும் காலியிடங்களை நிரப்புவதற்காக தேர்வு செய்யப்படும் உறுப்பினர்கள்.

(2) குடியரசுத்தலைவர் விதிகளின்படி, பின்வருபவர்களை அவையில் சேர்த்துக் கொள்வதற்கு வழிவகை செய்யலாம்:

(அ) இந்த விதியின் (1) வது துணைவிதியின் கீழ் செயல்படும் தற்காலிக நாடாளுமன்றத்தில், இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவ தற்கு முன்பு வரையிலும் இந்திய டொமினியனின் அரசியல் நிர்ணய சபையில் பிரதிநிதித்துவம் பெறாத எந்த மாநிலம் அல்லது பிரதேசத் திற்குப் பிரதிநிதித்துவம்,

(ஆ) தற்காலிக நாடாளுமன்றத்தில் அத்தகைய மாநிலங்கள் அல்லது பிற பிரதேசங்களின் பிரதிநிதிகள் தேர்வு செய்யப்படும் முறை, மற்றும்

(இ) அத்தகைய பிரதிநிதிகள் கொண்டிருக்க வேண்டிய தகுதிகள்.

(3) இந்திய டொமினியனின் அரசியல் நிர்ணய சபையின் ஓர் உறுப்பினர், 1949, அக்டோபர் ஆறாம் நாளன்று, ஓர் ஆளுநரின் மாகாணம், அல்லது ஓர் இந்திய மாநிலத்தின் சட்டப்பேரவையின் உறுப்பினராகவும் இருந்தால், அப்பொழுது, இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வந்த தேதியிலிருந்து, மேற்படி சட்டப் பேரவையில் அந்த நபரின் இடம், அதற்கு முன்னதாகவே அவர் உறுப்பினராக இல்லாமல் போயிருந்தாலன்றி, காலியாகிவிடும், அத்தகைய காலி இடம் ஒவ்வொன்றும், ஒரு தற்காலிகக் காலியிடமாகக் கருதப்படும்.

(4) இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், அந்த சமயத்தில், 1935ம் வருட அரசு சட்டத்தின் கீழ் டொமினியன் சட்டப் பேரவையாக செயல்பட்டுவந்த அரசியல் நிர்ணய சபையின் சபாநாயக ராக அல்லது துணை சபாநாயகராகப் பதவிவகித்திருந்த எந்த நபரும், இந்த விதியின் (1) வது துணைவிதியின் கீழ் செயல்பட்டுவந்த தற்காலிக நாடாளுமன்றத்தின் சபாநாயகராக அல்லது துணை சபாநாயகராகத் தொடர்ந்து இருப்பார்கள்.''

ஐயா, நான் மேலும் பின்கண்டவாறு முன்மொழிகிறேன்:

''பட்டியல் 1 ன் (இரண்டாவது வாரம்) 9வது எண் திருத்தத்தில் பிரேரணை செய்யப்பட்டுள்ள 311வது விதியின் (3)வது துணைவிதிக்கு பதிலாக, பின்வருவதை சேர்த்துக்கொள்ள வேண்டும்:

'(3) இந்திய டொமினியனின் அரசியல் நிர்ணயசபையின் ஓர் உறுப் பினர் 1949, அக்டோபர் ஆறாம்நாள், அல்லது அதற்குப் பின்னர், இந்த அரசியல்சாசனம் அமலுக்கு வருவதற்குமுன்னர், ஓர் ஆளுநரின் மாகா ணத்தின், அல்லது தற்காலத்திற்கு முதலாவது அட்டவணையின் IIIம் பாகத்தில் குறிப்பிட்டுள்ள எந்த மாநிலத்திற்கும் இணையான ஓர்

இந்திய மாநிலத்தின் சட்டப்பேரவையின் உறுப்பினரால், அல்லது அத்தகைய எந்த ஒரு மாநிலத்தின் அமைச்சராக இருந்தால், பின்னர், இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வந்த தேதியிலிருந்து, அரசியல் நிர்ணயசபையில் அத்தகைய உறுப்பினரின் இடம் முன்னதாகவே அவர் அந்தப் பேரவையின் உறுப்பினராக இல்லாமல் போயிருந்தாலன்றி, காலியாகும்; அத்தகைய ஒவ்வொரு காலியிடமும் ஒரு தற்காலிக காலியிடமாகக்கருதப்படும்.''

''பட்டியல் Iன் (இரண்டாவது வாரம்) 9வது எண் திருத்தத்தில், பிரேரணை செய்யப்பட்டுள்ள 311வது விதியின் (3) வது துணை விதிக்குப் பின்னர், பின்வரும் புதிய துணை விதி சேர்த்துக்கொள்ளப்பட வேண்டும்:

''(3 அ) இந்த விதியின் (3) வது துணைவிதியில் குறிப்பிட்டுள்ளபடி, இந்திய டொமினியன் அரசியல் நிர்ணயசபையில் ஏற்படும் அத்தகைய எந்தக் காலியிடமும் அந்தத் துணைவிதியின்கீழ் ஏற்படாமலிருப்பதைப் பொருட்படுத்தாது, இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், அத்தகைய காலியிடத்தை நிரப்புவதற்கு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படலாம்; ஆனால் அரசியல்சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், காலியிடத்தை நிரப்புவதற்குத் தேர்வு செய்யப்படும் எந்த நபரும், அந்தக் காலியிடம் ஏற்படுவதற்கு முன்னால் மேற்கூறிய சட்டப்பேரவையில் தனது இடத்தைப் பெறுவதற்கு உரிமை இல்லை.''

இந்தத் துணைவிதியின் நோக்கம், ஒரு தற்காலிக நாடாளு மன்றத்தை அமைக்கும்போது, இரட்டை உறுப்பினர் தகுதி என்று அழைக்கப்படுவதை ரத்து செய்வதே ஆகும்.

பிற ஷரத்துகள் துணையாகச் செயல்படுபவையே.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் அவர்களே, நீங்கள் ஏதாவது சொல்வதற்கு விரும்புகிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது): ஐயா, நான் தொடங்குவதற்கு முன்னால், 195வது எண் திருத்தத்தின் (3) வது துணைவிதியில், ''அதற்குப் பின்னர்'' மற்றும் ''எப்போதாவது முன்னால்...'' என்ற சொற்களுக்கு இடையில் வரும் ''ஆகிறார்'' என்ற சொல்லை நீக்குவதற்கு உங்களுடைய அனுமதியைக் கோருகிறேன். அந்த சொல் அவசியமற்றது.

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர்10, 1949, பக். 98-100.

*இனி, பல்வேறு திருத்தங்கள் சம்பந்தமாக, ஓரளவு பரிசீலனை செய்வதைத் தேவைப்படுத்துவது மூன்று திருத்தங்கள் மட்டுமே என்று எனக்குத் தோன்றுகிறது. முதலாவது, என்னுடைய நண்பர் திரு.காமத்தினுடைய திருத்தமாகும். இந்த விதியின் (4) வது துணை விதியில் நாடாளுமன்றத்தின் துணை சபாநாயகர் தொடர்ந்து பதவி வகிப்பது சம்பந்தமான விதிகளுக்கும் மாகாணங்களில், சபாநாயகர் தொடர்ந்து பதவி வகிப்பது சம்பந்தமாக அத்தகைய வழிவகை எதுவும் செய்யப்படாததற்கும் இடையில் ஓரளவு முரண்பாடு இருக்கிறது என்று அவர் கூறினார். இந்த இரண்டு துணைவிதிகளுக்கும் இடையில் உள்ள இந்தவேறுபாட்டை நானும் வரைவுக்குழுவும் உணர்ந்துள்ளோம்; இந்த முரண்பாட்டை நீக்குவதற்கு, ஒரு திருத்தத்தைப் பின்னர் கொண்டுவருவதற்கு நாங்கள் எண்ணியிருந்தோம். எனவே, இந்த வேறுபாடு நீடிப்பதற்கு வரைவுக்குழு அனுமதிக்காது; ஒரு திருத்தத்தின் மூலம் இது சரிசெய்யப்படும் என்று திரு.காமத் நிம்மதியுடனிருக்கலாம்.*

*ஓரளவு சாரமுள்ள மற்றொரு விஷயம். தற்காலிக நாடாளு மன்றத்தில், ஷெட்யூல்டு வகுப்பினரின் பிரதிநிதித்துவம் சம்பந்தமாக எனது நண்பர் திரு. முனுசாமி பிள்ளை எழுப்பியுள்ளதாகும். நிலைமை இதுதான். தற்பொழுது இந்த அவையில் 310 உறுப்பினர்கள் இருக்கின்றனர்; தற்காலிக நாடாளுமன்றமும் தொடர்ந்து 310 உறுப்பினர்களைக் கொண்டிருக்கும். மக்கட் தொகையின் அடிப்படையில், வருங்கால நாடாளுமன்றத்தில் ஷெட்யூல்டு வகுப்பினரின் பிரதிநிதித்துவம் சம்பந்தமாகக் கடைப்பிடிக்கப்படும் கோட்பாட்டின்படி 310ல் அவர்களுக்கு 45 இடங்கள் கிடைக்க வேண்டும். உண்மையில் இன்று அவர்களுக்கு 28 இடங்கள்தான் உள்ளன. தற்போது அவர்களுக்கு உள்ள 28 இடங்கள் குறையக்கூடாது என்று இந்த விதி திட்டவட்டமாக வகை செய்துள்ளது. ஆனால் மக்கட்தொகையின் அடிப்படையில் அவர்களுக்கு உரிமையுள்ள இந்த 45க்கும், தற்போது அவர்களுக்குள்ள 28க்கும் இடையிலுள்ள வேறுபாட்டை சரிசெய்வது சம்பந்தமாக, இந்தக் குறைபாட்டைப் போக்குவதற்கு, 312 எஃப் என்ற புதிய விதியின் கீழ் எந்த அளவு சாத்தியமோ அதைச் செய்வதற்கு விதிமுறைகளைத் திருத்துவதற்கு குடியரசுத் தலைவருக்குப் போதிய அளவு அதிகாரத்தை நாம் வழங்கியுள்ளோம் என்று நினைக்கிறேன்.*

*திரு. படாஸ்கரின் திருத்தத்திற்கு இப்பொழுது வருகிறேன். நான் அவரைப் புரிந்துகொண்ட வரையிலும், நகல் விதிக்கும், அவர் யோசனை கூறியுள்ள திருத்தத்திற்கும் இடையில், கோட்பாட்டளவில் மெய்யாகவே வேறுபாடு எதுவும் இல்லை. நான் முன்மொழிந்த*

311வது விதியும், படாஸ்கர் முன்மொழிந்துள்ள திருத்தமும் இரட்டை உறுப்பினர் தகுதியை நீக்குவதற்கு வகை செய்யவேண்டும் என்பதை ஏற்றுக்கொள்கின்றன. அதை எவ்வாறு செய்வது என்பது மட்டுமே தற்போதுள்ள பிரச்சினையாகும். இந்த விதியில் அடங்கியுள்ள துணை விதிகளின்படி, அரசியல் சாசனம் அமலுக்கு வரும் தேதியிலிருந்துதான் காலியிடம் ஏற்பட வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. அந்தத் தேதி வரையிலும், அதாவது 1950 ஜனவரி 25 வரையில் - அரசியல் சாசனம் ஜனவரி 26ல் அமலுக்கு வருகிறது என்ற அனுமானத்தின்பேரில் - அந்த நபர் ஓர் உறுப்பினராகத் தொடர்ந்து அவையில் இருப்பார், அவ்வாறே செயல்படுவார். ஆனால் அவ்வாறு காலியாகும் இடங் களை நிரப்பு வதற்கான தேர்தல், இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்பாக எப்பொழுது வேண்டுமானாலும் நடைபெற லாம்; அப்பொழுதுதான் அரசியல் நிர்ணயசபை, தற்காலிக நாடாளு மன்றமாகக் கூடும்போது, அதனுடைய உறுப்பினர் எண்ணிக்கை யில் திடீரென்று எத்தகைய குறைவும் இல்லாமலிருக்கும். அரசியல் சாசனம் அமலுக்கு வந்ததிலிருந்தே காலியிடம் ஏற்பட வேண்டும் என்றும், உறுப்பினர் பதவி நீக்கம் அதற்கு ஒரு மாதத்திற்குப் பிறகு ஏற்பட வேண்டுமென்றும் என்னுடைய நண்பர் திரு. படாஸ்கர் விரும்புகிறார். அது ஒன்று மட்டுமே வித்தியாசம். காலியிடம் ஏற் படுவதற்கு எந்தத் தேதியை நாம் கடைப் பிடிக்க வேண்டும், உறுப் பினர் பதவி நீக்கத்திற்கு எந்தத் தேதியைக் கடைப்பிடிக்கப்பட வேண்டும் என்பது சம்பந்தப்பட்ட ஒரு விஷ யமேயாகும் இது என்று எனக்குத் தோன்றுகிறது. ஓர் உறுப்பினர், உறுப்பினராக நீடிப் பதற்குள்ள உரிமையை நிர்ணயம் செய்வது சம்பந்தமான தேதியை 1949 அக்டோபர் 6 என்று நாங்கள் ஏற்றுக்கொண்டதற்கான காரணம் என்னவெனில் அந்தத் தேதியில்தான் அரசியல் நிர்ணயசபையின் இந்த அமர்வை நாங்கள் தொடங்கினோம். அக்டோபர் 6 சம்பந்த மாக ஏதாவது விசேஷம் இருக்கிறதா என்பது பற்றி நான் வறட்டுத் தனமாக இருப்பதற்கு விரும்பவில்லை. அதுபோன்றே, தனது திருத் தத்தின் மூலம் படாஸ்கர் முன்மொழிந்த துணைவிதியில் ஏதோ தனி அம்சம் இருக்கிறதென்று அவர் கூறமாட்டார் என்று கருதுகிறேன். நான் ஏற்கனவே கூறியது போன்று, கோட்பாட்டுரீதியாக எந்த வேறுபாடும் இல்லை. இரட்டை உறுப்பினர் தகுதி தவிர்க்கப்பட வேண்டும் என்பதை நாம் எல்லோரும் ஏற்றுக்கொள்கிறோம். எனவே, நான் முன்மொழிந்த திருத்தம் ஏற்றுக்கொள்ளப்படலாம் என்று கருதுகிறேன்.

**திரு. எச்.வி. படாஸ்கர்:** என்னுடைய திருத்தம் குறித்து மாண்பு மிகு உறுப்பினர் தமது உசிதம்போல் முடிவெடுக்க உரிமை கொடுக் கிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அது. பெருமளவு சிக்கலை ஏற்படுத்தும் என்று நினைக்கிறேன். என் உசிதம்போல் முடிவெடுக்கும் உரிமை கொடுக்கப்பட்டால், அது சிக்கலை ஏற் படுத்தும், ஏனெனில், நாம் நீக்குவதற்கு விரும்பும் அதே தீமை திரும்ப ஏற்படக்கூடும். அந்தத் தீமை திரும்ப ஏற்படாமலிருப்பதற்கு நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். எனவே, 311வது விதியில் அடங்கி யுள்ள துணை விதிகளை இந்த அவை ஏற்றுக்கொள்ள வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

**திரு. ராம் சஹால்** (மத்திய பாரத்): திரு.சீத்தாராம் ஜாஜு முன்மொழிந்த திருத்தம் பற்றி என்ன சொல்லுகிறீர்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அவர் எழுப்பியுள்ள விஷயத்தை நாங்கள் முன்பே எதிர்பார்த்தோம். 195 வது திருத்தத் தின் வாயிலாக, நாங்கள் அதை மாற்றம் செய்துள்ளோம். அதில் இந்திய மாநிலங்களுக்கு நான் வழிவகை செய்துள்ளேன். ஊதியம் கிட்டும் பதவியில் உள்ள நபர்களுக்குத்தான் நான் வழிவகை செய்யவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** இப்பொழுது திருத்தங்களை ஒவ் வொன்றாக வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

***(திரு.காமத்தின் 6 திருத்தங்கள், திரு.தியாகியின் 2, திரு.முனுசாமி பிள்ளையின் 4, திரு.சாக்சேனாவின் ஒன்று, மற்றும் மற்றவர்களின் 4 திருத் தங்கள் ஆகியவை அவையால் நிராகரிக்கப்பட்டன. 311 வது விதி, டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தினால் திருத்தப்பட்ட வடிவத்தில், அரசியல் சாசனத் தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)***

## விதி 312-எஃப்

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, நான் கீழ்வருவதை முன்மொழிகிறேன்:

*தற்காலிக நாடாளுமன்றத்திலும் மாநிலங்களின் தற்காலிக சட்டப் பேரவைகளிலும் ஏற்படும் தற்காலிகக் காலியிடங்களை நிரப்புவது சம்பந்தமான துணை விதிகள்.*

*"312- இ விதிக்குப் பின்னர், பின்வரும் புதிய விதி சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:*

*'312 எஃப் (1) இந்த அரசியல் சாசனத்தின் 311 வது விதி யின் (1) வது துணைவிதியின் கீழ் செயல்படும் தற்காலிக நாடாளுமன்றத்தின் உறுப்பினர் இடங்களில் தற்காலிக மாகக் காலியாகின்றவை (அந்த விதியின் 3 மற்றும் (3அ) துணைவிதிகளில் குறிப்பிடப்பட்ட காலிஇடங்கள் உள்ளிட்டு)*

1. அ.பே.வி., தொகுதி 10, 1949, அக்டோபர் 11, பக்கம் 103-104.

நிரப்பப்பட வேண்டும். அத்தகைய காலியிடங்களை நிரப்புவது சம்பந்தப் பட்ட எல்லா விஷயங்களும், (அத்தகையக் காலியிடங்களை நிரப்பு வதற்கான தேர்தல்கள் சம்பந்தப்பட்ட, அல்லது அவற்றிலிருந்து எழும் சந்தேகங்கள் மற்றும் தகராறுகள் பற்றிய முடிவுகள் உள்ளிட்டு) முறைப்படுத்தப்பட வேண்டும்.

(அ) இது சம்பந்தமாக குடியரசுத் தலைவரால் உருவாக்கப்படும் விதிமுறைகளுக்கு ஏற்ப, மற்றும்

(ஆ) விதிமுறைகள் அவ்வாறு இயற்றப்படும்வரையில், இந்திய டொமினியனின் அரசியல் நிர்ணயசபையில் தற்காலிகக் காலியிடங்களை நிரப்புவது சம்பந்தமான விதிமுறைகளுக்கு ஏற்பவும், மற்றும் அத்தகையக் காலி இடங்களை நிரப்பும் சமயத்தில் அமலில் உள்ள அது தொடர்பான விஷயங்களும் அல்லது இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு சற்றுமுன்பாக இருந்த விஷயங்கள் சம்பந்தமாகவும், அரசியல் சாசனம் அவ்வாறு அமலுக்கு வருவதற்கு முன்னால் அரசியல் நிர்ணயசபையின் தலைவராலும் அதன்பின்னர் ஒன்றியத்தின் குடியரசுத் தலைவராலும் செய்யப்படும் விதிவிலக்குகள் மற்றும் மாற்றங்களுக்கு உட்பட்டதாகும்.

இந்த விதியில் கூறப்பட்டுள்ளபடி, எந்த ஓர் இடமும் காலியாவதற்கு முன்னர், அந்த சமயத்தில் ஷெட்யூல்டுவகுப்பினர், அல்லது முஸ்லீம் அல்லது சீக்கிய சமூகத்தைச் சேர்ந்த ஒருவரால் கொண்டிருந்தால், அப் போதைக்கு, முதலாவது அட்டவணையின் பாகம் 1ல் குறிப்பிட்டுள்ள ஒரு மாநிலத்தைப் பிரதிநிதித்துவப் படுத்துவபவராகவும் அவர் இருந் தால், அந்த இடத்தை நிரப்பும் நபர், அரசியல் நிர்ணய சபையின் தலைவரோ, அல்லது ஒன்றியத்தின் குடியரசுத் தலைவரோ வேறுவிதமாக அந்த இடத்தை வழங்குவதற்கு முடிவுசெய்தாலன்றி, அந்த இடத்தை நிரப்புபவர் அதே சமூகத்தைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும்.

மேலும், அப்போதைக்கு முதலாவது அட்டவணையில் பாகம் Iல் கூறியுள்ளபடி, ஒரு மாநிலத்தைப் பிரதிநிதித்துவப்படுத்தும் ஓர் உறுப் பினரின் இடம் காலியானதை நிரப்புவதற்கான தேர்தலில், அந்த மாநிலச் சட்டப்பேரவையில் ஒவ்வொரு உறுப்பினருக்கும் அத்தேர்தலில் பங்கு கொள்ளவும், வாக்களிக்கவும் உரிமை உண்டு.''

ஒரு வேறு மாதிரியான விளக்கத்தைக் கொடுப்பதற்காக, நான் என்னுடைய 205ம் எண் திருத்தத்தை முன்மொழிகிறேன்.

''பிரேரணை செய்யப்பட்டுள்ள 312 எஃப் என்கிற புதிய விதியின் (1) வது துணைவிதியின் விளக்கத்திற்குப் பதிலாக (III) வது பட்டியலின் (இரண்டாவது வாரம்) 164 ம் எண் திருத்தத்தில் பின்வரும் விளக்கம் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டும்:

அந்த விளக்கம் வருமாறு: இந்தத் துணைவிதியின் நோக்கத்திற்காக (அ) இந்திய அரசு (ஷெட்யூல்டு வகுப்பினர்) உத்தரவு, 1936 ல் குறிப்பிட் டுள்ளபடி, அத்தகைய அனைத்து சாதிகள், இனங்கள் அல்லது பழங்குடி கள் அல்லது சாதிகளின் பகுதிகள் அல்லது சாதிகளுக்குள்ளேயான குழுக்கள், இனங்கள் அல்லது பழங்குடிகள் ஆகியோர் எந்த மாகாணம் சம்பந்த

மாகவும ஷெட்யூல்டுவகுப்பினர் ஆவர்; விதி 300 - அவின் துணைவிதி (1) ன் கீழ், அதற்கு இணையான மாநிலம் சம்பந்தமாக ஷெட்யூல்டு வகுப்பினரை வரையறுத்துக்கூறும் குடியரசுத் தலைவரின் உத்தரவு வெளியிடப்படும் வரையில் ஷெட்யூல்டு வகுப்பினராகக் கருதப்படுவார்கள்;

(ஆ) எந்த ஒரு மாகாணத்தில் அல்லது மாநிலத்தில் அனைத்து ஷெட்யூல்டு வகுப்பினரும் ஒரே ஒரு சமூகமாகக் கருதப்படுவார்கள்.''

இனி நான் உப-விதி (2) யை எடுத்துக்கொள்கிறேன்:

(2) இந்த அரசியல்சாசனத்தின் விதி 312 அல்லது விதி 312 - இ.யின் கீழ் செயல்படும் ஒரு மாநிலத்தின் தற்காலிக சட்டப் பேரவையின் உறுப்பினர்களின் இடங்களில் ஏற்படும் தற்காலிகக் காலியிடங்கள் நிரப்பப்பட வேண்டும்; அத்தகையக் காலியிடங்களை நிரப்புவதுடன் சம்பந்தப்பட்ட எல்லாவிஷயங்களும் (அத்தகையக் காலியிடங்களை நிரப்புவதற்கான தேர்தல்கள் தொடர்பாக எழும் சந்தேகங்கள், தகராறுகள் பற்றிய முடிவுகள் உள்ளிட்டு) அத்தகைய காலியிடங்களை நிரப்புவது சம்பந்தமான விதிமுறைகளுக்கு ஏற்ப முறைப்படுத்தப்பட வேண்டும். இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதுவரையிலும் அமலிலிருந்த விஷயங்களை குடியரசுத் தலைவர் தமது உத்தரவின்மூலம் தெரியப்படுத்தும் விதிவிலக்கு மற்றும் மாற்றங்களை பொறுத்து முறைப்படுத்தவேண்டும்.

இதற்கு வேறு விளக்கம் தேவையில்லை என்று கருதுகிறேன். துணைவிதிகள் மிகவும் தெளிவாக இருக்கின்றன. விவாதத்தின்போது எந்த விஷயமாவது எழுப்பப்பட்டால், என்னால் முடிந்த விளக்கத்தைக் கொடுப்பதற்குத் தயாராயிருக்கிறேன்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இந்த விவாதத்தின்போது எழுப்பப்பட்ட இரண்டொரு விஷயங்களைப் பற்றிக் கூறவிரும்புகிறேன். திரு.சாக்சேனாவும், பண்டிட் தாகூர்தாஸ் பார்கவாவும் எழுப்பிய முதலாவது விஷயம் இந்த இடைக்கால கட்டத்தில் முஸ்லீம்களுக்கும் சீக்கியர்களுக்கும் பிரதிநிதித்துவத்தை நீடிப்பது சம்பந்தமானதாகும். இந்த அரசியல் நிர்ணய சபையின் விவாதங்களின்போது, ஒத்துக்கொள்ளப்பட்ட ஏற்பாடுகளின்படி தனிப் பிரதிநிதித்துவத்திற்கான தமது உரிமையை முஸ்லீம்களுக்கும் சீக்கியர்களுக்கும் விட்டுக்கொடுத்துவிட்டார்கள் என்ற அடிப்படையில், அவர்களுக்குப் பிரதிநிதித்துவம் நீடித்துக் கொண்டு போவதை திரு. சாக்சேனாவும் பண்டிட் பார்கவாவும் ஆட்சேபிக்கிறார்கள். இது சம்பந்தமாக என்னுடைய கருத்து இதுதான்: என்ன ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தபோதிலும், அந்த ஏற்பாடுகள் எல்லாம், இந்த

1. அ.பே.வி., தொகுதி 10, 1949, அக்டோபர் 11, பக்கம் 112-113.

அரசியல் சாசனத்தின் கீழ் செயல்படப்போகும் நாடாளுமன்றத்தின் நிரந்தரக் கட்டமைப்பு சம்பந்தமாகச் செய்யப்பட்டவையேயாகும். எனவே, அரசியல் நிர்ணய சபையின் கட்டமைப்பை மாற்றுவது சரியல்ல, நியாயமானதுமல்ல என்று கருதுகிறேன். இந்த சபையை நாம் நீடித்து, ஒரு தற்காலிக நாடாளுமன்றமாக அமைத்துக் கொள்கிறோம்.

திருமதி பூர்ணிமா பானர்ஜியின் திருத்தத்தைப் பொறுத்தமட்டிலும், இந்த அரசியல் நிர்ணயசபையில் பெண்களை நீடித்து வைத்துக் கொள்வதற்கு ஒரு குறிப்பான வழிவகைசெய்வது அவசியமில்லை என்று நினைக்கிறேன். விதிமுறைகளை உருவாக்கும் தனது அதிகாரங்களைப் பயன்படுத்துவதில் குடியரசுத்தலைவர் இந்த உண்மையை மனதிற்கொண்டு, அரசியல்நிர்ணய சபையின், அல்லது பல்வேறு கட்சிகளின் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையிலான பெண் உறுப்பினர்களை, தற்காலிக நாடாளுமன்றத்தின் உறுப்பினர்களாக உள்ளே கொண்டுவரச் செய்வார் என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை.

திரு.முனுசாமி பிள்ளையின் திருத்தத்தைப் பொறுத்தமட்டிலும், அவர் கொண்டுவர விரும்பும் புதிய விஷயம், ஷெட்யூல்டு பழங்குடியினருக்கு வகை செய்வதேயாகும். உண்மையில் ஷெட்யூல்டு பழங்குடியினருக்கு வழிவகை செய்வதில் எத்தகைய ஆட்சேபனையும் கிடையாது. ஆனால் விஷயம் என்னவெனில், தற்பொழுது ஷெட்யூல்டு பழங்குடியினரின் மக்கட் தொகை கணக்கிடப்படவில்லை. ஏனெனில் ஷெட்யூல்டு பழங்குடியினர் என்பவர்கள் 1935ம் வருட இந்திய அரசு சட்டத்தின்கீழ் அங்கீகரிக்கப்படவில்லை. இந்திய அரசு சட்டத்தின் கீழ் பிரதிநிதித்துவத்திற்காக உட்படுத்தப்பட்ட பழங்குடியினர் பின்தங்கிய பழங்குடியினர் என்றுதான் அழைக்கப்பட்டிருக்கின்றனர். எனவே, எனது நண்பர் திரு. முனுசாமி பிள்ளை, இந்த் விஷயத்தை வரைவுக்குழுவுக்கு விட்டுவிடுவாரேயானால் அவருடைய திருத்தத்தை நடைமுறைப்படுத்துவதற்கு நாங்கள் பொருந்தமான ஏற்பாடு செய்யக்கூடும்.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தத்தை இப்பொழுது நான் வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

***(3 திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன. டாக்டர் அம்பேத்கரின் திருத்தத்தால் திருத்தப்பட்ட விதத்தில் 312 எஃப் விதி, இந்திய அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)***

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** இனி அட்டவணை IVஐ நாம் எடுத்துக் கொள்வோம்.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** ஐயா, அட்டவணை IV நீக்கப் பட வேண்டும் என்று நான் முன்மொழிகிறேன்.

**சில மதிப்புமிகு உறுப்பினர்கள்:** அதை எவ்வாறு நீக்க முடியும்?

**திரு. அவைத் தலைவர்:** வரைவுக் குழுவைப் பொறுத்தமட்டிலும், சில குறிப்பிட்ட விதிகளை நீக்குவதற்கு அவர்கள் முயன்று வருகின்றனர். இப்பொழுது இந்த IVவது அட்டவணைக்குத் திருத் தங்கள் வந்துள்ளன. இந்த அட்டவணை ஏன் நீக்கப்படுகிறது என்பது குறித்து டாக்டர் அம்பேத்கர் விளக்குவது நல்லது என்று கருது கிறேன். ஏனெனில் உறுப்பினர்கள் திருத்தங்களுக்கு முன்னறிவிப்புக் கொடுத்துள்ளனர். அவர் விளக்குவது நிலைமையைத் தெளிவு படுத்தும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு.கிருஷ்ண மாச்சாரி விளக்குவார்:

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, செயல் முறைக் கட்டளைகளைப் பொறுத்தமட்டிலும், இரண்டு விஷயங் களை மனதில் பதியவைத்துக் கொள்ளவேண்டும். காலனிகளின் அரசுக்கு பிரிட்டிஷ் அரசியல் சாசனத்தில் ஆரம்பத்தில் வரையறுக் கப்பட்டிருந்த கட்டளைப் பதிவேட்டின் செயல்முறைக் கட்டளை களின் நோக்கம் தங்களுக்கு அளிக்கப்பட்டிருந்த விருப்புரிமை அதிகாரங்களை அவர்கள் எவ்வாறு செலுத்தவேண்டும் என்பதற்கு நாடுகளின் தலைவர்களுக்கு சில வழிகாட்டுதல்களை அளிப்பதே யாகும். இப்பொழுது, இந்த கட்டளைகள், எந்தக் குறிப்பிட்ட ஆளுநர் அல்லது வைசிராயிக்கு வழங்கப்பட்டுள்ளதோ, அதுவரை அவை பயனுள்ளதாயிருந்தன. இவை (பிரிட்டனிலுள்ள) இந்தியா மந்திரியின் அதிகாரத்திற்கு உட்பட்டவையாகும். மிகுந்த முக்கியத் துவம் வாய்ந்த எந்த ஒரு குறிப்பிட்ட விஷயத்திலாவது, உதாரணமாக

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 11, 1949, பக். 114.
2. மேற்படி அதே நூல், பக். 115-116.

ஆளுநர், அவருக்கு அளிக்கப்பெற்ற கட்டளைப் பதிவேட்டை செயல்முறைக் கட்டளைகளை நிறைவேற்றுவதற்குத் தொடர்ந்து மறுத்துவந்தால், அவரை நீக்கிவிட்டு, மற்றொருவரை நியமித்து, அதன்மூலம், அந்தச் செயல்முறைக் கட்டளைகளை பயனுள்ள முறையில் நிறைவேற்றச் செய்வதற்கு இந்தியா மந்திரிக்கு உரிமை உண்டு. நம்முடைய அரசியல் சாசனத்தைப் பொறுத்தமட்டிலும், ஆளுநரால் செயல்முறைக்கட்டளைகள் விசுவாசமாக நிறைவேற்றப் படுவதைக் கண்காணிப்பவர் யாரும் உருவாக்கப்படவில்லை.

இரண்டாவதாக, இந்த அரசியல் சாசனத்தின் கீழ் தம் உசிதம் போல் நடந்து கொள்வதற்கு ஆளுநருக்கு நாம் வழங்கப்போகும் உரிமை மிகமிகச் சொற்பமானதாகும். உண்மையில் அவருக்குத் தம் உசிதம்போல் நடந்துகொள்ளும் உரிமை ஏதுமில்லையென்றே கூறலாம். அவர் அமைச்சரவையின் உறுப்பினர்களைத் தேர்வு செய்யும் விஷயத்தில், பிரதம மந்திரியின் ஆலோசனையின்படிதான் செயல்படவேண்டும். மேலும், அவர் மேற்கொள்ளும் எந்தக் குறிப் பிட்ட நிர்வாக அல்லது சட்டமியற்றும் செயலிலும் பிரதம மந்திரி மற்றும் அவருடைய மாநில அமைச்சர்களின் ஆலோசனையின்படித் தான் செயல்பட வேண்டும். நிலைமை இவ்வாறிருக்க, உதாரண மாக, ஏதேனும் விசேட சூழ்நிலை அல்லது காரணத்தினால், பிரதம மந்திரி தமது அமைச்சரவையில் சிறுபான்மை சமூகத்தின் உறுப் பினர்களைச் சேர்த்துக்கொள்ளவில்லையென்றால், ஆளுநரால் ஏதும் செய்ய முடியாது. செயல்முறைக் கட்டளைகளின்படி ஒரு குறிப்பிட்டமுறையில் செயல்படுவதற்கு அதிகாரம் அளிக்கப்பட் டுள்ள போதிலும்கூட ஆளுநரால் ஏதும் செய்யமுடியாது. எனவே, ஆளுநர் தம் உசிதம்போல் எதுவும் செய்ய முடியாததாலும், அரசியல் சாசனத்தின் கீழ், இதை அமல்படுத்துவதற்கான அதிகாரி ஒருவரும் இல்லாததாலும் எந்த வழிகாட்டுதலும் கொடுக்கப்படவில்லை. அவை பயனற்றவை, எந்தக் குறிப்பிட்ட நோக்கமும் அதனால் ஈடேறாது. எனவே, இந்த சூழ்நிலையில், இத்தகைய செயல்முறைக் கட்டளைகளைக் கொண்டிருப்பது விரும்பத்தக்கதல்ல என்று உணரப் பட்டது. மாறுபட்ட சூழ்நிலையில் அது மெய்யாகவே பயனுடைய தாக இருக்கும். புதிய அரசியல் சாசனம் அமலுக்கு வந்த பின்னர் அந்த சூழ்நிலை இருப்பதாக எவ்வகையிலும் கற்பனை செய்து பார்க்க முடியாது. இந்த செயல்முறை கட்டளைகள் விரும்பத்தக்கதல்ல என்று உணரப்பட்டதற்கு அதுவே பிரதான காரணமாகும்.

**திரு. அவைத் தலைவர்:** இப்பொழுது, திருத்தம் என்னவெனில்:

''நான்காவது அட்டவணை நீக்கப்பட வேண்டும்:''

இந்தப் பிரேரணை ஏற்றுக்கொள்ளப்பட்டது. நான்காவது அட்டவணை அரசியல் சாசனத்திலிருந்து நீக்கப்பட்டது.

## இரண்டாவது அட்டவணை

[1]**திரு. அவைத் தலைவர்:** அவை இப்பொழுது இரண்டாவது அட்டவணையை விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, பின்வருமாறு, முன்மொழிகிறேன்:

''இரண்டாவது அட்டவணையின் Iம் பாகத்திற்கு பதிலாகப் பின் வருவது இணைத்துக் கொள்ளப்பட வேண்டும்:

பகுதி I

*முதலாவது அட்டவணையின் பாகம் Iல் குறிப்பிட்டுள்ளபடி, தற்போதைக்கு ஜனாதிபதி மற்றும் மாநிலங்களின் ஆளுநர்கள் சம்பந்தமான உபவிதிகள்*

1. முதலாவது அட்டவணையின் பகுதிIல் தற்போதைக்கு குடியரசுத் தலைவருக்கும், மாநிலங்களின் ஆளுநர்களுக்கும் மாதம்தோறும் கீழ்வருமாறு ஊதியம் அளிக்கப்படும், அதாவது:

குடியரசுத் தலைவர்: ரூ.10,000
மாநில ஆளுநர் : ரூ.5,500

2. இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், அதுவரையிலும், இந்திய டொமினியன் கவர்னர் ஜெனரலுக்கும், மாகாணங்களின் ஆளுநர்களுக்கும் முறையே வழங்கபட்டுவந்த படிகள் குடியரசுத் தலைவருக்கும் ஆளுநர்களுக்கும் வழங்கப்படவேண்டும்.

3. குடியரசுத்தலைவரும் ஆளுநர்களும் முறையே தமது பதவிக்காலம் முழுமைக்கும் இந்த அரசியல்சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் கவர்னர் - ஜெனரலும், ஆளுநர்களும் முறையே பெற்றுவந்த அதே சலுகைகளைப் பெறுவதற்கு உரிமையுடையவர்களாவர்.

4. துணைக் குடியரசுத் தலைவராக அல்லது குடியரசுத் தலைவராகத் தற்காலிகமாகச் செயல்படுகிற அல்லது அவருடைய பணிகளை ஆற்றி வருகின்ற வேறு எந்த நபரும், அல்லது ஆளுநரின் பணிகளை ஆற்றி வருகின்ற எந்த நபரும், குடியரசுத் தலைவர் அல்லது ஆளுநரின் அதே ஊதியங்கள், படிகள் மற்றும் சலுகைகளைப் பெறுவதற்கு உரிமை உடையவர்களாகிறார்கள்.''

1. அ.பே.வி, தொகுதி 10, அக்டோபர் 11, 1949, பக்கம் 116 -118.

பகுதி II

''பாகம் IIன் தலைப்பில், 'பாகம்I' என்ற சொல்லுக்கும் எண்ணுக்கும் பிறகு 'அல்லது பாகம்III' என்ற சொற்களும் எண்ணும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

''7வது பத்திக்குப் பதிலாக, பின்வரும் பத்தி சேர்த்துக்கொள்ளப் படவேண்டும்:

''முதலாவது அட்டவணையின் பாகம்I அல்லது பாகம்IIIல் கூறியுள்ளபடி, இப்போதைக்கு, எந்த மாநிலத்தின் அமைச்சர்களுக்கும், இந்த அரசியல்சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், அதுவரைக்கும், இணையான மாகாணத்தின் அல்லது இணையான இந்திய மாநிலத்தின் அத்தகைய அமைச்சர்களுக்கு வழங்கப்பட்டுவந்த அத்தகைய சம்பளங்களும் படிகளும் வழங்கப்படவேண்டும்.''

பகுதி III

''8வது பத்தியில், '1947 ஆகஸ்டு பதினைந்தாம் நாளுக்கு முன்பாக, அதுவரையிலும் முறையே சட்டப்பேரவையின் துணைத்தலைவருக்கும் மாநில மேலவையின் துணைத்தலைவருக்கும்'' என்ற சொற்களுக்கு பதிலாக, ''இந்திய அரசியல்சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், அதுவரையிலும் இந்திய டொமினியனின் அரசியல் நிர்ணயசபையின் துணை சபாநாயகர்' என்ற சொற்களைப் பயன்படுத்த வேண்டும்.

பகுதி IV

''இரண்டாவது அட்டவணையின் பாகம் IVக்கு பதிலாக, பின்வருவது சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்-

பகுதி IV

*முதலாவது அட்டவணையின் பாகம் Iல் உச்சநீதிமன்ற நீதிபதிகளுக்கும் மாநிலங்களின் உயர்நீதிமன்றங்களின் நீதிபதிகளுக்குமான ஏற்பாடுகள்*

10. (1) உச்சநீதிமன்றத்தின் நீதிபதிகளுக்கு, நடைமுறையில் அவர்கள் சேவைசெய்த காலத்திற்கு, மாதம் ஒன்றுக்குப் பின்வரும் விகிதங்களில் சம்பளம் கொடுக்கப்படவேண்டும். அதாவது: -

| | |
|---|---|
| தலைமை நீதிபதி | - ரூ. 5,000 |
| வேறு எந்த நீதிபதிக்கும் | - ரூ. 4,000. |

உச்சநீதிமன்றத்தின் ஒரு நீதிபதி, தான் பணியில் நியமிக்கப்படும்போது, இந்திய அரசின் கீழ் அல்லது அதனுடைய முந்திய அரசு, அரசுகள், அல்லது ஒரு மாநில அரசு அல்லது அதனுடைய ஏதாவது முந்திய அரசுகளின்கீழ் முன்பு செய்த எந்த சேவைக்காகவும் ஓய்வூதியம் (உடல் இயலாமைக்கான அல்லது காயமடைந்ததற்கான ஓய்வூதியம் அல்லாதது) பெறுபவராக இருந்தால், உச்சநீதிமன்றத்தில் அவருடைய சேவைக்கான சம்பளத்தில் அந்த ஓய்வூதியத்தொகை குறைத்துக்கொள்ளப்படும்.

(2) உச்சநீதிமன்றத்தின் ஒவ்வொரு நீதிபதிக்கும் வாடகை கொடுக்க வேண்டிய அவசியமின்றி ஓர் அதிகாரபூர்வமான குடியிருப்பை (வீட்டை) உபயோகப்படுத்திக் கொள்வதற்கு உரிமை உண்டு.

(3) 1948, அக்டோபர் 31-ம் தேதிக்கு முன்னால் சமஷ்டி நீதிமன்றத்தின் ஒரு நீதிபதியாக நியமிக்கப்பட்ட, மற்றும் இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வந்த தேதியில் இந்த அரசியல் சாசனத்தின் 308வது விதியின் (1) வது துணைவிதியின்படி உச்சநீதிமன்றத்தின் ஒரு நீதிபதியான ஒரு நீதிபதிக்கு இந்தப் பத்தியின் (2) வது உப- பத்தியில் கூறப்பட்ட எதுவும் பொருந்தாது. அத்தகைய ஒவ்வொரு நீதிபதியும், இந்தப் பத்தியின் (1) வது உப-பத்தியில் குறிப்பிட்டுள்ள சம்பளத்தோடுகூட, இவ்வாறு குறிப்பிடப்பட்ட சம்பளத்திற்கும், அரசியல்சாசனம், அமலுக்கு வருவதற்கு முன்பு வரையில் சமஷ்டி நீதிமன்றத்தின் ஒரு நீதிபதியென்ற முறையில் அவருக்குக் கொடுக்கப்பட்டு வந்த சம்பளத்திற்கும் இடையிலான வித்தியாசத்திற்கு சமமான தொகையை ஒரு விசேட சம்பளமாகப் பெறுவதற்கு அவருக்கு உரிமை உண்டு.

(4) உச்சநீதிமன்றத்தின் ஒவ்வொரு நீதிபதியும், பணியின்போது, இந்தியப் பிரதேசத்தினுள் பிரயாணம் செய்வதில் ஏற்படும் செலவுகளை ஈடுசெய்வதற்காக நியாயமான படிகளைப் பெறுவார்; மற்றும், குடியரசுத் தலைவர் அவ்வப்போது வரையறுத்துக்கூறக்கூடிய பிரயாணத்துடன் சம்பந்தப்பட்ட நியாயமானவசதிகளும் அவர்களுக்கு வழங்கப்படும்.

(5) உச்ச நீதிமன்றத்தின் நீதிபதிகளின் பணிக்கு வராமலிருப்பதன் விடுப்பு மற்றும் ஓய்வூதியம் சம்பந்தமான உரிமைகள் (விடுப்புப்படிகள் உள்ளீட்டு), இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்பு வரையிலும் சமஷ்டி நீதிமன்றத்தின் நீதிபதிகளுக்குப் பொருந்தி வந்திருந்த விதிமுறைகளின்படியே இருக்கும்.

II (1) முதலாவது அட்டவணையின் பாகம் Iல் குறிப்பிட்டுள்ளபடி, தற்போதைக்கு, ஒவ்வொரு மாநிலத்தின் உயர்நீதிமன்றத்தின் நீதிபதிகளுக்கு நடைமுறையில் சேவைபுரிந்ததற்கான காலம் சம்பந்தமாக மாதந்தோறும் கீழ்வருமாறு சம்பளம் வழங்கப்படும். அதாவது :-

தலைமை நீதிபதி - ரூ. 4000.

பிற நீதிபதிகளுக்கு - ரூ . 3,500.

(2) எந்த மாகாணத்திலாவது 1948 அக்டோபர் 31 ம் தேதிக்கு முன்னால் ஓர் உயர்நீதிமன்றத்தின் நீதிபதியாக நிரந்தரமாக நியமிக்கப்பட்ட ஒவ்வொரு நபரும், இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வந்த நாளில், இந்த அரசியல் சாசனத்தின் 310வது விதியின் (1) வது துணை விதியின் கீழ் இணையான மாநிலத்தின் உயர்நீதிமன்றத்தின் ஒரு நீதிபதியானால், மற்றும் அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், அதுவரையிலும், இந்தப் பத்தியின் உப-பார (1) ல் குறிப்பிட்டப்பட்டுள்ளதைக் காட்டிலும் உயர்வான வீதத்தில் சம்பளம் பெற்று வந்தால், அவ்வாறு குறிப்பிட்ட சம்பளத்திற்கும், அரசியல்சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்பு வரையிலும் உயர்நீதிமன்றத்தின் ஒரு நீதிபதி என்ற வகையில் அவருக்கு வழங்கப்பட வேண்டிய சம்பளத்திற்கும் இடையில் உள்ள வேறுபாட்டுக்கு சமமான தொகையை விசேஷ சம்பளமாகப் பெறுவதற்கு அவர் தகுதி உடையவராவார்.

(3) அத்தைய ஒவ்வொரு நீதிபதியும், இந்தியாவின் பிரதேசத்தினுள், பணிசம்பந்தமாகப் பிரயாணம் செய்யும்போது ஏற்படும் செலவுகளுக்கு ஈடுகட்டுவதற்கு நியாயமான படிகளைப் பெறுவார். மேலும் குடியரசுத் தலைவர் அவ்வப்போது வரையறுத்துக்கூறக்கூடிய பிரயாணம் சம்பந்தமாக நியாயமான வசதிகளும் அவருக்கு வழங்கப்படும்.

(4) எந்த ஓர் உயர்நீதிமன்றத்தின் நீதிபதிகளின் பணிக்கு வராமலிருப் பதன் விடுப்பு, மற்றும் ஓய்வூதியம் சம்பந்தமான உரிமைகள் (விடுப்புப் படிகள் உள்ளிட்டு) இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் வரையில், இணையான மாகாணத்தின் உயர் நீதிமன்றத்தின் நீதிபதிகளுக்குப் பொருத்திவந்த விதிமுறைகளின்படியே உட்பட்டிருக்கும்.

12. இந்த பாகத்தில், சந்தர்ப்ப சூழ்நிலை வேறுவிதமாக இருந்தாலன்றி,

(அ) '' தலைமை நீதிபதி'' என்ற சொற்றொடர் செயலமர் தலைமை நீதிபதியையும், ஒரு ''நீதிபதி'' என்ற சொல் குறித்த பணிபுரியும் நீதிபதி யையும் உட்படுத்தும்.

(ஆ) ''உள்ளபடியான பணி'' என்ற சொற்றொடர்,

(i) நீதிபதி ஒருவர் ஒரு நீதிபதிப்பணியை ஆற்றுகிற காலத்தை யும், அல்லது குடியரசுத் தலைவரின் வேண்டுகோளின்படி அவர் ஆற்று தற்குப் பொறுப்பேற்ற பிற பதவிப் பணிகளைப் புரிகிற காலத்தையும்

(ii) அந்த நீதிபதியின் வாராமை விடுப்புக்காலம் எதுவும் நீங்கலாக உள்ள பருவ விடுமுறைக் காலங்களையும், மற்றும்

(iii) ஓர் உயர்நீதிமன்றத்திலிருந்து உச்ச நீதிமன்றத்திற்கோ அல்லது உயர்நீதிமன்றத்திலிருந்து மற்றொரு உயர்நீதிமன்றத்திற்கோ மாற்றுதல் செய்வதால் ஏற்படும் பணிசேர் இடைக்காலத்தையும் உள்ளடக்கும்.

## பகுதி V

பகுதி V ன் தலைப்பில், ''தலைமைத் தணிக்கையர்'' என்ற சொற் களுக்கு பதிலாக, ''கணக்காய்வர் மற்றும் தலைமைத்தணிக்கையர் என்ற சொற்களை சேர்த்துக் கொள்ளவும்.

'14வது பத்திக்குப் பதிலாக, பின்வரும் பத்தியைச் சேர்த்துக் கொள்ளவும்:-

14. (1) இந்தியாவின் கணக்காய்வர் மற்றும் தலைமைத் தணிக்கை யருக்கு மாதம் ஒன்றுக்கு நான்காயிரம் ரூபாய் என்ற வீதத்தில் சம்பளம் கொடுக்கப்பட வேண்டும்.

(2) இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்பு வரையில் இந்தியாவின் தலைமைத் தணிக்கையராகப் பதவி வகித்து வந்த ஒருவர், அது அமலுக்கு வந்த தேதியில், இந்த அரசியல் சாசனத்தின் 310 ஆ விதி யின்படி இந்தியாவின் கணக்காய்வர் - தலைமைத் தணிக்கையராக ஆகி யிருக்கிற ஒருவர் இந்தப் பத்தியின் (1) வது உப-பத்தியில் குறிப்பிட்டுள்ள ஊதியத் தோடுகூட, அவ்வாறு குறிப்பிடப்பட்ட ஊதியத்திற்கும், அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்பு வரையில் இந்தியாவின் தலைமைத் தணிக்கையர் என்ற வகையில் அவருக்கு வழங்கப்பட்ட ஊதியத்திற்கும் இடையிலான வித்தியாசத்திற்கு சமமான தொகையை சிறப்பு ஊதிய மாகப் பெறுவதற்கு அவர் தகுதி உடையவராவார்.

''15 வது பத்தியில் தலைமை தணிக்கையர் என்ற சொற்கள் வரும் இடங்களில் அவற்றுக்கு பதிலாக, கணக்காய்வர் மற்றும் தலைமைத் தணிக்கையர் என்ற சொற்களை சேர்த்துக் கொள்ளவேண்டும்.''

உங்களுடைய அனுமதியுடன் விதிமுறைகளை நாளைய தினம் விளக்குகிறேன்.

**திரு. அவைத் தலைவர் :** நாளையதினம் காலை 10 மணி வரையில் அவை ஒத்திவைக்கப்படுகிறது.

பின்னர் அவை அக்டோபர் 12, 1949 புதன்கிழமை காலை 10 மணி வரையில் ஒத்திவைக்கப்பட்டது.

### அக்டோபர் 12, 1949, புதன்கிழமை

இந்திய அரசியல் நிர்ணயசபை, புதுடில்லி, அரசியல் சாசன மண்டபத்தில் காலை 10 மணிக்கு (1949, அக்டோபர் 12, புதன்கிழமை) கூடியது. அரசியல் நிர்ணயசபைத் தலைவர் மாண்புமிகு டாக்டர் இராஜேந்திரப் பிரசாத் தலைமை தாங்கினார்.

### இரண்டாவது அட்டவணை (தொடர்ச்சி)

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்-பொது) : திரு.தலைவர் அவர்களே, இரண்டாவது அட்டவணையில் அடங்கியுள்ள ஷரத்துகளுக்கு விளக்கம் கூறும் வகையில் ஒரு சில வார்த்தைகளை கூறுவதற்கு விரும்புகிறேன். நீதிபதிகளின் ஊதியம் பற்றிக் கூறும் அந்தப் பகுதியுடன் தொடங்குவதற்கு நான் விரும்புகிறேன்.

முதலாவதாக உச்ச நீதிமன்றம் சம்பந்தமாக, இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வந்ததிலிருந்து, உச்ச நீதிமன்ற நீதிபதிகளின் ஊதியங்கள் - தலைமை நீதிபதிக்கு மாதம் ரூ. 5000, அத்துடன் கூட, வாடகை இல்லாத ஒரு வீடு என்றும், ஒரு நீதிபதிக்கு மாதம் ரூ. 4000, அத்துடன் கூட வாடகை இல்லாத ஒரு வீடு என்றும் இருப்பதைக் காணலாம். உச்சநீதிமன்றம் சம்பந்தமாக நிலைமை இதுதான், அரசியல் சாசனத்தின்படி, உச்ச நீதிமன்றத்தின் ஒரு நீதிபதியாக இருக்க விரும்பும் எந்த சமஷ்டி நீதிமன்ற நீதிபதியும், உச்சநீதிமன்றத்தின் ஒரு நீதிபதியாக நியமனம் செய்யப்படுவார். எனவே, சமஷ்டி நீதிமன்றத்தின் எந்த நீதிபதியும், உச்சநீதிமன்றத்தின் நீதிபதியாவதற்கு விரும்பினால், பின்வரும் கேள்வி எழுகிறது: அவர் உச்ச நீதிமன்றத்தின்

1. அ.பே.வி., தொகுதி 10, 1949, அக்டோபர் 12, பக்கம் 119-112.

நீதிபதிகளுக்கு அரசியல் சாசனத்தில் நிர்ணயம் செய்யப்பட்டுள்ள ஊதியத்தைப் பெற வேண்டுமா, அல்லது சமஷ்டி நீதிமன்றத்தின் ஒரு நீதிபதி யென்றவகையில் இப்பொழுது பெற்று வருகிற ஊதியத்தைத் தொடர்ந்து பெறுவதை அனுமதிப்பதற்கு ஏதாவது வழிவகை செய்ய வேண்டுமா என்பதேயாகும். இது பற்றி வரைவுக் குழு இவ்வாறு முடிவு செய்திருந்தது - அதாவது, உச்சநீதிமன்ற நீதிபதிகளின் மாமூலான ஊதியங்கள் இரண்டாவது அட்டவணையில் கூறப்பட்டுள்ளதுபோல் இருக்கவேண்டும், அதே சமயத்தில், உச்ச நீதிமன்ற நீதிபதிகளாவதற்கு விரும்பும் சமஷ்டி நீதிபதிகள் தற்போது அவர்கள் பெறும் ஊதியங் களையே பெறுவதற்கு வழிவகை செய்யப்பட வேண்டும். இதற்காக, சமஷ்டி நீதிமன்றத்தின் நீதிபதிகள் இரு வகையினராகப் பிரிக்கப்படுகிறார்கள் - 1948 அக்டோபர் 31க்கு முன்னால் நிரந்தர நீதிபதிகளாக நியமிக்கப்பட்டவர்கள் மற்றும் 1948 அக்டோபர் 31க்குப் பிறகு நியமிக்கப்பட்டவர்கள். முதலாவது வகைப்பட்டவர்கள், அதாவது 1948 அக்டோபர் 31க்கு முன்னால் பதவியில் நியமிக்கப்பட்டவர்கள் இரண்டாவது அட்டவணையில் நிர்ணயிக்கப்பட்ட ஊதியத்திற்கும், அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் கடைசியாக ஒரு நீதிபதிக்கு வழங்கப்பட்டு வந்த ஊதியத்திற்கும் இடையிலான வித்தியாசத்திற்கு சமமான தொகையை தனிப்பட்ட ஊதியமாக அவர்கள் பெறுவார்கள். 1948 அக்டோபர் 31க்குப் பின்னால் வேலையில் நியமிக்கப்பட்டவர்கள் இரண்டாவது அட்டவணையில் நிர்ணயிக்கப்பட்ட விகிதங்களில் ஊதியம் பெறுவார்கள். எனவே அதன்படி, உச்ச நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி, அரசியல் சாசனத்தில் நிர்ணயிக்கப்பட்ட சம்பளத்தைக் காட்டிலும் ரூ. 2000 கூடுதலாகப் பெறுவார். அதே பொழுதில், சமஷ்டி நீதிமன்றத் தின் நீதிபதிகள் உச்ச நீதிமன்ற நீதிபதிகளானால் உச்ச நீதிமன்ற நீதிபதிகளுக்கு நிர்ணயிக்கப்படும் மாமூலான சம்பளத்தைவிட ரூ.1,500 கூடுதலாகப் பெறுவார்கள்.

உயர் நீதிமன்றத்தைப் பொறுத்தமட்டிலும், அரசியல் சாசனத்தின் கீழ், தலைமை நீதிபதிக்கு நிர்ணயிக்கப்பட்ட மாமூலான சம்பளம் ரூ.4,000; மற்ற நீதிபதிகளுக்கு மாமூலான சம்பளம் ரூ.3,500. இங்கேயும் கூட, ஓர் உயர் நீதிமன்றத்தின் எந்த நீதிபதியும், அரசியல் சாசனத்தின் கீழ் உயர்நீதிமன்றத்திற்கு நியமிக்கப் படுவதற்கு அவர் விரும்புவாரேயானால், அவரை அவ்வாறு நியமிப்பதற்கு குடியரசுத் தலைவர் கடமைப்பட்டுள்ளார். இதன் விளைவாக, உச்ச நீதிமன்றத்தின் கீழ் எழுகின்ற அதே பிரச்சினை உயர் நீதிமன்றத்தின் விஷயத்திலும் எழுகிறது, ஏனெனில், தற்போது நீதிபதிகளாக உள்ள அந்த நீதிபதிகள், சிலர் விஷயத்தில், இரண்டாவது அட்டவணையில் நிர்ணயிக்கப்

பட்டதைக் காட்டிலும் கூடுதல் ஊதியம் பெறுகிறார்கள். எனவே எந்த உத்தேசக் குறைபாட்டையும் அகற்றுவதற்காக, சமஷ்டி நீதிமன்றம் விஷயத்தில் கடைப்பிடிக்கப்பட்ட அதே நடைமுறைப் பின்பற்றுவ தென்றும் முடிவு செய்யப்பட்டுள்ளது. அதாவது, நீதிபதிகளை இரண்டு வகைப்பட்டவர்கள் என்றும் பிரிக்கப்படுவார்கள். இவ்வாறு, முதல் வகைப்பட்டவர்கள் ஒரு கூடுதல் சம்பளத்தை, தனிப்பட்ட சம்பள மாகப் பெறுவார்கள்-அது, அரசியல் சாசனத்தினால் நிர்ணயிக்கப் பட்ட சம்பளத்திற்கும் அவர்கள் ஏற்கனவே பெற்று வருகிற சம்பளத் திற்கும் இடையிலுள்ள வித்தியாசத்திற்கு சமமான தொகையாக இருக்கும். இரண்டாவது வகைப்பட்டவர்கள், அரசியல் சாசனத் தினால் நிர்ணயிக்கப்பட்ட சம்பளத்தைப் பெறுவார்கள்.

1948 அக்டோபர் 31ஐப் வேறுபடுத்திக் காட்டும் ஓர் எல்லைக் கோடாக நாங்கள் ஏன் கடைப்பிடித்தோம் என்பதை இங்கு விளக் குவது அவசியம். இதற்குக் காரணம் இதுதான்: 1948 அக்டோபர் 31க்கு முன்னால் நியமிக்கப்பட்ட எந்த நீதிபதியும், தற்பொழுது அவர் பெற்றுவரும் சம்பளத்தைத் தொடர்ந்து பெறுவார் என்று இந்திய அரசு பல்வேறு உயர் நீதிமன்றங்களுக்கும் சமஷ்டி நீதிமன்றத் திற்கும் அறிவிப்புச் செய்திருந்தது. ஆனால், 1948 அக்டோபர் 31க்கு பின்னால் நியமிக்கப்பட்ட நீதிபதிகள் விஷயத்தில் இதே உறுதிமொழி கொடுக்கப்பட முடியவில்லை. எனவே,இந்த உறுதிமொழியை உத்தரவாதப்படுத்துவதற்கே, இந்த வேறுபடுத்திக் காட்டும் எல்லைக் கோடு உருவாக்கப்பட்டது.

இரண்டாவது அட்டவணையில் நிர்ணயிக்கப்பட்ட சம்பள விகிதம் சம்பந்தமாகவும் பிற நாடுகளிலுள்ள சம்பள விகிதம் சம்பந்த மாகவும் ஒன்றிரண்டு வார்த்தைகள் கூறுவதற்கு விரும்புகிறேன். உதாரணமாக, அமெரிக்காவில் தலைமை நீதிபதி மாதம் ரூ.7,084 பெறுகிறார், அதேபொழுதில் இதர நீதிபதிகள் ரூ.6,958 பெறுகின் றனர். கனடாவில் தலைமை நீதிபதி ரூ.4,584ம், பிற நீதிபதிகள் ரூ.3,662ம் பெறுகின்றனர். ஆஸ்திரேலியாவில் உயர் நீதிமன்றத் தின் தலைமை நீதிபதி ரூ.3750ம் பிற நீதிபதிகள் ரூ.3,333ம் பெறுகின் றனர். தென் ஆப்பிரிக்காவில் தலைமை நீதிபதி ரூ.3,892 ம், பிற நீதிபதிகள் ரூ.3,611ம் பெறுகின்றனர். இரண்டாவது அட்டவணையில் நாம் நிர்ணயித்துள்ள ஊதியத்தை மேலே கொடுத்துள்ள புள்ளி விவரங் களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் யாரும், அமெரிக்காவைத் தவிர பிற நாடுகளில் தலைமை நீதிபதிகளுக்கும் நீதிபதிகளுக்கும் நிர்ணயிக்கப் பட்டுள்ள ஊதியங்களைக் காட்டிலும் நம்முடைய ஊதிய விகிதங்

கள் மிகவும் மேம்பட்டவை என்பதை உணருவார்கள் என்று நினைக் கிறேன்.

இந்த சம்பளங்களை நிர்ணயிப்பதில், நாம் நம்மால் முடிந்த வரை நியாயமாக இருந்துள்ளோம். உதாரணமாக, 1948 அக்டோபர் 31க்கு முன்பாகப் பணியில் நியமிக்கப்பட்டவர்களுக்கு அரசியல் சாசனத்தினால் நிர்ணயிக்கப்பட்ட மாமூலான சம்பளத்தைவிட அவர் களின் சம்பளம் அதிகமாக இருந்தால், விதிமுறையைக் கடைப் பிடிக்கும் வகையில், நாகபுரியின உயர் நீதிபதிகள் மாமூலான சம்ப ளத்தைவிடக் குறைவாகப் பெறுவதற்கு நாம் வகை செய்திருக்க முடியும் என்று வரைவுக் குழு மிகச் சரியாகவே கூறியிருக்க முடியும்; ஏனெனில் அவர்களின் சம்பளம் தற்போதிருந்துவரும் மாமூலான சம்பளத்தைவிடக் குறைவானதாகும். ஆனால் நாங்கள் அத்தகைய எந்தக் குறைபாட்டையும் நீடித்து இருக்கச் செய்ய விரும்பவில்லை, எனவே அதற்கு எதிரீடு செய்யும் ஒரு துணை விதியை சேர்க்கவில்லை. அவ்வாறு வரைவுக்குழு செய்திருந்தால் அது நியாயமாகவே இருந் திருக்கும். எனவே நீதித்துறையினரின் சம்பளங்களைப் பொறுத்த மட்டிலும், புகார் கூறுவதற்கு எந்த ஆதாரமும் இல்லை என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

இனி குடியரசுத் தலைவ்ரின் பிரச்சினைக்கு வருகிறேன். ஒன்றியத்தின் தலைவர் (குடியரசுத்தலைவர்) தற்போதைய கவர்னர்-ஜெனரலுக்கு பதிலாக வருபவர். அவருடைய சம்பளத்தை நாங்கள் ரூ.10,000 என்று நிர்ணயித்துள்ளோம்; கவர்னர் - ஜெனரல் பெற்று வந்துள்ள சம்பளத்தைக் காட்டிலும் இது குறைவா, அல்லது அதிகமா என்று ஒரு முடிவுக்கு வருவது பற்றி நாங்கள் பரிசீலனை செய்ய வேண்டும்.

1935, இந்திய அரசு சட்டத்தின் கீழ், கவர்னர்-ஜெனரலின் சம்பளம், ஆண்டு ஒன்றக்கு ரூ.2,50,800 என்று நிர்ணயிக்கப்பட்டது என்பதை அனைவரும் அறிவர். இது மாதத்திற்கு ரூ. 20,900 ஆகிறது. இந்த சம்பளமும் வருமான வரிக்கு உட்பட்டது தான், மத்திய சட்ட சபை அண்மையில் நிறைவேற்றிய சட்டத்தின்படி கவர்னர்-ஜெனரலின் சம்பளம் ரூ. 5,500 என்று நிர்ணயிக்கப்பட்டது, ஆனால் அந்த சம்பளத் திற்கு வருமான வரி இல்லை. கவர்னர்-ஜெனரலின் சம்பளம் வருமான வரிக்கு உட்படுவாதயிருந்தால், அது சுமார் ரூ.14,000க்கு வரும் என்று என்னிடம் தெரிவிக்கப்பட்டது. குடியரசுத் தலைவரின் வருமானத்தை ரூ.10.000 என்று நிர்ணயிக்கும் போது இரண்டு அம்சங்களை நாங்கள் கவனத்தில் எடுத்துக் கொண்டோம்.அதில் ஓர் அம்சம், குடியரசுத்

தலைவரின் சம்பளம் வருமான வரிக்கு உட்பட்டதாக இருக்க வேண்டும். அரசியல் சாசனத்தின்கீழ் அலுவலராக உள்ள எந்த நப ருக்கும், அல்லது அரசியல் சாசனத்தின்கீழ் பணிபுரியும் எந்த ஓர் அரசு ஊழிய ருக்கும் இந்த நாட்டின் பொது மக்களுக்கான எந்த நிதி நடவடிக்கையினாலும் சுமத்தப்படும் எந்த சட்டக் கடப்பாட்டினின்றும் விலக்கு இருக்கக்கூடாது என்று வரைக்குழுவும், அதுபோன்றே இந்த அவையின் கணிசமான எண்ணிக்கையிலான உறுப்பினர்களும் உணர்ந்தனர். எனவே இதன் விளைவாக, குடியரசுத் தலைவரின் சம்ப ளத்தை - அதை நாம் வருமானவரிக்கு உட்பட்டதாக்க வேண்டுமென் றால்- அதிகரிக்க வேண்டியது விரும்பத்தக்கதாகும் என்று நாங்கள் கருதினோம்.

குடியரசுத் தலைவரின் சம்பளத்தை ரூ.10,000 என்று நாங்கள் நிர்ணயித்ததன் மற்றையக் காரணத்தை உச்ச நீதிமன்றத்தின் தற்போ தையத் தலைமை நீதிபதியின் சம்பளத்தில் காணலாம். அது ரூ.7,000 ஆகும். நாட்டில் குடியரசுத் தலைவர்தான் ஆகவுயர்ந்த அலுவல ராகையால், எந்தத் தனிநபரும் குடியரசுத்தலைவரைக் காட்டிலும் கூடுதல் சம்பளம் வாங்குபவராக இருக்கக்கூடாது என்று வரைவுக் குழு கருதியது. எனவே உச்ச நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி ரூ.7000 சம்பளம் வாங்குகிறாரென்றால் அந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது குடியரசுத் தலைவரின் சம்பளம், தலைமை நீதிபதி யினுடைய சம்பளத்தைவிட ஓரளவு உயர்ந்ததாக இருக்க வேண்டும் என்பது மிகமிக அத்தியாவசியமாகும். இந்த எல்லா அம்சங்களை யும் கணக்கில் எடுத்துக்கொண்டு பார்த்தபோது, அவருடைய முறை யான சம்பளம் ரூ. 10,000 ஆக இருக்க வேண்டும் என்று நாங்கள் நினைத்தோம்.

குடியரசுத் தலைவரின் சம்பளத்தோடு கூட சில படிகளும் உண்டு, இந்தப் படிகள் சம்பந்தமாக, 1935ம் வருட இந்திய அரசுச் சட்டம் நிறைவேற்றப்பட்ட போது அந்தச் சட்டம் கவர்னர்-ஜெனர லின் சம்பளத்தை மட்டுமே நிர்ணயம் செய்தது என்பதை இங்கு கூறியாக வேண்டும்.படிகள் சம்பந்தமாக, கவுன்சிலுடன் கூடிய மேன்மை தங்கிய மன்னர் தான், அதை உத்தரவின் மூலம் நிர்ணயிக்க வேண்டும் என்று சட்டம் கூறுகிறது. ஆனால் துரதிருஷ்டவசமாக, 1935ம் வருட இந்திய அரசுச் சட்டத்தின் IIம் பாகத்தின் துணை விதிகள் ஒருபோதும் அமலுக்குக் கொண்டு வரப்படவில்லை. எனவே அதன் விளைவாக, 1937ம் ஆண்டில் அத்தகைய ஓர் உத்தரவின்

வரைவு தயாரிக்கப்பட்டிருந்த போதிலும், கவுன்சிலுடன் கூடிய மேன்மை தங்கிய மன்னர் அத்தகைய உத்தரவு எதையும் ஒரு போதும் வெளியிடவில்லை. எனவே, இந்திய அரசுச் சட்டம் சம்பந்தப்பட்ட வரையிலும், படிகள் சம்பந்தமாக எதுவுமே குறிப்பிடப்படவில்லை; எனவே, எந்தத் திட்டவட்டமான முடிவுக்கும் வருவதற்கு எத்தகைய புள்ளிவிவர அடிப்படையையும் வரைக் குழுவிடம் அந்தச் சட்டம் வழங்கவில்லை. எனவே அதன் விளைவாக, அரசியல் சாசனம் தொடங்கப்பட்ட போது கவர்னர்-ஜெனரல் பெற்ற அதே படிகளை குடியரசுத் தலைவர் தொடர்ந்து பெறுவார் என்ற துணைவிதியுடன் வரைவுக் குழு இந்த விஷயத்தை முடித்துக் கொண்டது. பிற்காலத்தில் நாடாளுமன்றம் குடியரசுத் தலைவரின் சம்பளம் மற்றும் படிகளை மாற்றக்கூடும், ஆனால் சம்பந்தப்பட்ட குடியரசுத் தலைவரின் பதவிக் காலத்தின் போது அவை மாற்றப்படக்கூடாது என்ற நிபந்தனைக்கு இது உட்பட்டதாகும்.

கவர்னர்-ஜெனரலுக்கு, அரசியல் சாசனம் அமலுக்குவந்த போது வழங்கப்பட்ட படிகள் குடியரசுத் தலைவரும் பெறுவதற்குத் தகுதியுடையவர் என்று வரைவுக்குழு வரையறுத்துக் கூறியபடி, குடியரசுத் தலைவர் என்னென்ன படிகளைப் பெறுவார் என்பது குறித்த விவரங்களை சபையின் முன்வைக்கப்பதற்கு நான் விரும்பு கிறேன்.

1949 - 50 ஆண்டுக்கான பட்ஜெட் (வரவு-செலவுத் திட்டம்) மதிப்பீடுகளிலிருந்து, ''கவர்னர்-ஜெனரலுக்கான படிகள்'' என்ற தலைப்பில் பின்வரும் புள்ளி விவரங்கள் பட்ஜெட்டில் இணைத்துக் கொள்ளப்பட்டன என்பதைக் காண்கிறேன்:

(1) விருந்தோம்பல் போன்றவற்றுக்கான படித்தொகைகள் ஆண்டுக்கு ரூ.45,000

(2) ஒப்பந்தப்படித் தொகையிலிருந்து செலவு ரூ.4,65,000

(3) அரசுப் போக்குவரத்து செலவு : மோட்டார்கார்கள் ரூ.73,000

(4) சுற்றுப்பயணச் செலவுகள் ரூ.81,000.

1949-50 பட்ஜெட் மதிப்பீட்டின்படி மொத்தப்படித்தொகைகள் ஆண்டுக்கு ரூ. 6,64,000.

முன்னரே கூறியது போன்று, படித்தொகைகளைப்பற்றி நான் ஏதும் கூற வேண்டிய அவசியமில்லை., ஏனெனில் படித்தொகைகள் எந்த சமயத்திலும் நாடாளுமன்றத்தினால் மாற்றப்படக்கூடும். முக்கிய மான பிரச்சினை சம்பளத்தைப் பற்றியதாகும், ரூ.10,000 என்று நிர்ண யிக்கப்பட்டுள்ள குடியரசுத்தலைவரின் சம்பளமானது, எனக்கும் வரைவுக் குழுவுக்கும் நான் குறிப்பிட்ட சூழ்நிலைகளை கவனத்தில் கொண்டு பார்க்கும்போது, மிகவும் நியாயமானதாகவே தோன்றுகிறது.

ஆளுநர்களின் சம்பளத்தைப் பற்றி நான் அதிகம் சொல்ல வேண்டிய அவசியமில்லை. அண்மையில் கவர்னர்-ஜெனரல் வெளி யிட்ட ஓர் ஆணையின் படி இது நிர்ணயிக்கப்பட்டுள்ளது. அவை மிகவும் நியாயமானதாக எனக்குத் தோன்றுகிறது, மாகாணங்களில், மிகவும் கூடுதலான சம்பளம் பெறும் அதிகாரி தலைமை நீதிபதியாக இருக்கும் போது, ஆளுநர் அந்த மாகாணத்தின் தலைமை நீதிபதியைக் காட்டிலும் ஓரளவு கூடுதல் சம்பளம் பெறவேண்டும் என்ற அதே கோட்பாடு இங்கும் கடைப்பிடிக்கப்படுகிறது, அந்தக் கண்ணோட் டத்திலிருந்துதான் ஆளுநர்களின் சம்பளம் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

நான் குறிப்பிட விரும்புகிற மற்றுமொரு விஷயம், ஆரம் பத்தில் கணக்காய்வர் மற்றும் தலைமைத்தணிக்கையர் சம்பந்தமாக எந்த விதிமுறையும் செய்வதாக உத்தேசிக்கவில்லை. இதிலும் கூட, இரண்டாவது அட்டவணையில், இந்த சம்பளம் ரூ. 4,000 என்று நிர்ண யிக்கப்பட்டிருந்தது. தற்போது இந்தப் பதவி வகிப்பவர் கம்ப்ட் ரோலர் மற்றும் தலைமைத் தணிக்கையராகத் தொடர்ந்து செயல்படும் பொழுதே, IIவது அட்டவணையால் நிர்ணயிக்கப்பட்ட சம்பளத் திற்கும் தற்பொழுது அவர் பெற்று வரும் சம்பளத்திற்கும் இடை யிலுள்ள வித்தியாசத்தைத் தனிப்பட்ட சம்பளமாக அவர் பெறுவார் என்ற காப்புவாசகத்திற்கு இது உட்படும். தற்போது இப்பதவி வகிப் பவர் மறைந்து, மற்றொருவர் நியமிக்கப்பட்டால், அட்டவணையில் நிர்ணயிக்கப்பட்ட சம்பளத்தை அவர் பெறுவார்.

இந்த அட்டவணையில் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ள பல்வேறு அலுவலர்களுக்கு, வரைவுக்குழு பரிந்துரைத்துள்ள சம்பளங்கள் பற்றிய பட்டியலை இந்த அவை ஏற்றுக் கொள்ளுமென்று நம்பு கிறேன்.

★ ★ ★

[1]**திரு. பிரபுதயாள் ஹிமத்சிங்கா:** ....ஐயா, டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்துள்ள விதியை நான் ஆதரிக்கிறேன்.

**பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரூ** (ஐக்கிய மாகாணங்கள்-பொது): தலைவர் அவர்களே, அரசியல் சாசன வரைவில் குடியரசுத் தலைவர் மாதம் ரூ.5,000மும், ஒரு மாநிலத்தின் ஆளுநர் மாதம் ரூ. 4,500ம் சம்பளம் பெற வேண்டுமென்று வகை செய்யப்பட்டிருந்தது. பின்னர் ....★

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** குடியரசுத் தலைவருக்கு மாதம் ரூ. 5,500.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, மூன்று விஷயங்கள் எழுப்பட்டுள்ளன, இதற்கு பதில் தேவைப்படுகிறது என்று மட்டுமே கூறவிரும்புகிறேன். உச்ச நீதிமன்ற நீதிபதிகள் வாடகையில்லாத வீடுகளில் குடியிருப்பதற்கு இரண்டாவது அட்டவணையில் வகை செய்யப்பட்டிருப்பதை திரு.காமத் எதிர்த்துள்ளார். அரசியல் சாசனத்தில் உச்ச நீதிமன்றத்தின் நீதிபதிகளுக்கு வீடு வழங்கும் பிரச்சினை, கவனமாகப் பரிசீலனை செய்தபின் முடிவு செய்யப்பட்டது. உச்ச நீதிமன்றத்திற்கு நியமிக்கப்படும் அதிக எண்ணிக்கையிலான நீதிபதிகள், இந்த நாட்டின் தொலைதூரங்களிலிருந்து தலைநகருக்கு வருபவர்கள் என்றும், அவர்களது பதவியின் கண்ணியத்திற்கு ஏற்புடைய ஒரு வீட்டைக் கண்டு ஏற்பாடு செய்து கொள்வதற்கு அவர்களது சொந்த வசதிகளையே பயன்படுத்திக் கொள்ளுமாறு விட்டுவிடுவது முறையாக இருக்காது என்றும் உணரப்பட்டது. எனவே,அவர்களுக்கு ஒரு வீட்டை ஏற்பாடு செய்து கொடுப்பதற்கு அரசு கடப்பாடு மேற்கொள்ள வேண்டும் என்று வரைவுக்குழு உணர்ந்ததற்கு இதுதான் பிரதான காரணமாகும்.

வாடகையில்லாத வீடு அவர்களுக்கு வழங்கப்பட வேண்டுமென்ற பிரச்சினையைப் பொறுத்தமட்டிலும், சமஷ்டி நீதிமன்றத்தின் நீதிபதிகளின் சம்பளங்களோடு ஒப்பிடுகையில், நாங்கள்

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 12, 1949, பக். 144.
2. மேற்படி அதே நூல், பக். 146-48.
★ புள்ளிகள் பேச்சு இடைமறிக்கப்பட்டதைக் குறிக்கின்றன.

பிரேரணை செய்துள்ள, உச்சநீதிமன்ற நீதிபதிகளின் சம்பளங்கள் குறைவாயுள்ளதை ஒருவகையில் அது ஈடு செய்யும் என்று நாங்கள் நினைத்தோம். இந்தக் குறிப்பிட்ட விஷயத்தில் என்னுடைய மதிப் புக்குரிய நண்பர் திரு. காமத் கூறிய ஏராளமான கூற்றுகள் என்னை ஓரளவு வியப்படையச் செய்தன. ஏனெனில் யாருக்கும் வாடகை யில்லாத வீடு வழங்குவதை அவர் ஆட்சேபிக்கிறார் என்றால், குடியரசுத் தலைவருக்கும், கவர்னர்-ஜெனரலுக்கும் நாம் வழங்குகிற இலவச வீடு பற்றியும் அவர் ஏதாவது கூறுவார் என்று நான் எதிர் பார்த்திருக்க வேண்டும். நான் தனிப்பட்ட முறையில் .....*

**திரு. எச்.வி. காமத்:** நான் வாடகையைப் பற்றிக் குறிப்பிட வில்லை. அது இலவச வீடா அல்லவா என்பது எனக்குத் தெரியாது

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** திரு. காமத் குறிப் பிட்டுள்ள இந்த விஷயத்தில் எந்த சாரமும் இருப்பதாக நான் நினைக்க வில்லை.

சம்பளத் தொகைகள் பிரச்சினை சம்பந்தமாக இந்த அவை யில் பலவகைப்பட்ட கருத்துக்கள் கூறப்பட்டிருக்கின்றன. குடியரசுத் தலைவர் ஒரு ரூபாய்க்கு மேல் பெறக் கூடாது என்று கூறும் அளவிற்கு எனது நண்பர் திரு. சிபன்லால் சாக்சேனா சென்றார். அந்த அளவு ஊதியத்திற்கு குடியரசுத் தலைவராகச் செயல்படுவதற்கு அலைந்து திரியும் ஒரு சன்யாசியைத் தவிர வேறு யாரும் கிடைக்க மாட்டார்கள் என்று கருதுகிறேன். மேலும் ஊர் சுற்றும் ஒரு சந்நியாசி, ஒன்றியத் தின் குடியரசுத் தலைவராக இருப்பதற்கு அவருடைய பிற பண்புகள் எதுவாக இருந்தபோதிலும், சிறிதும் பொருத்தமற்ற நபராவார்.

நீதிபதிகளின் சம்பளங்கள் சம்பந்தமாக இரு விஷயங்கள் எழுப்பப்பட்டுள்ளன. அட்டவணையில் நிர்ணயிக்கப்பட்டுள்ளதைக் காட்டிலும் கூடுதல் அளவாக நீதிபதிகளின் சம்பளங்கள் இருக்க வேண்டுமென்று இந்த அவையில் சிலர் கூறியிருக்கிறார்கள்.

நாம் நிர்ணயித்துள்ள சம்பளத்தின் படித்தரம் நாட்டினால் வழங்கப்படமுடிகின்ற ஆற்றலுடன் எவ்விதத்தொடர்பும் உடைய தல்ல என்று வேறு சிலர் கூறியிருக்கிறார்கள். என்னுடைய மதிப்பீட்டின்

★ புள்ளிகள் பேச்சு இடைமறிக்கப்பட்டதைக் குறிக்கின்றன.

படி, இந்த நாட்டில் நாம் நிர்ணயிக்கும் எதுவும் மக்களின் வருமானத்துடன் தொடர்புடையதாக இருக்கவேண்டும் என்ற கோரிக்கை ஒரு நல்ல அரசியல் கோரிக்கையேயாகும். ஆனால், அது நடைமுறை சாத்தியமான அரசியல் கோரிக்கை என்று சொல்வதற்கு நான் தயாராயில்லை. இந்த நாட்டிலும், இதர பிற நாடுகளிலும் சம்பளங்கள் பெரும்பாலும் வரவு மற்றும் தேவை என்ற விதியின் மீது சார்ந்துள்ளன. துரதிருஷ்டவசமாகவோ அல்லது அதிருஷ்டவசமாகவோ, சட்டப்பேரவையின் உறுப்பினர்களாகச் செயல்படுவதற்குப் பொருத்தமான நபர்கள் நிறையப்பேர் இருப்பதைக் காண முடியும். எனவே, இதன் விளைவாக, அவர்களின் சம்பளங்களை நாம் மிகவும் தாழ்ந்த மட்டத்தில் நிர்ணயிக்கிறோம். அதிருஷ்டவசமாகவோ, துரதிருஷ்டவசமாகவோ, நீதிபதிகளாக செயல்படத்தக்க நபர்களின் எண்ணிக்கை மிகவும் வரையறைக்குட்பட்டதாக இருக்கிறது. இது அபூர்வமானது என்று நான் கூறவிரும்பவில்லை. ஆனால் இவர்களைப் பெறுவது மிகவும் சிரமமான காரியம். எனவே, அவர்களுக்கு நடப்பு நிலவரத்திற்கேற்ப சம்பளம் கொடுக்க வேண்டியவர்களாக இருக்கிறோம். அட்டவணையில் இவர்களுக்காக நிர்ணயிக்கப்பட்ட சம்பளம் நடப்பு நிலவரத்துக்கு இசைவாக இருக்கிறது என்று நிச்சயமாகக் கருதுகிறேன். எனவே, நீதிபதிகளுக்கு நாம் நிர்ணயித்தள்ள சம்பள மட்டம் குறித்து எத்தகைய ஆழமான தகராறும் இருக்க முடியாது என்று நினைக்கிறேன்.

இனி, எனது நண்பர் திரு.ஹிமத் சிங்கா பிரேரணை செய்துள்ள திருத்தத்தை நான் எடுத்துக் கொள்கிறேன். நானும் அவரும் ஒரேமாதிரி நினைக்கிறோம் என்று கூறுவதற்கு விரும்புகிறேன். அவருடைய எண்ணத்திற்கு நான் மிகவும் பரிவு காட்டுகிறேன். ஆனால் அவர், ஒரு பொதுவான கோட்பாட்டை ஏற்றுக்கொள்ளும்படி என்னைக் கேட்டுக் கொள்ள விரும்புகிறார். அதாவது, ''பிரிவு Iல் குறிப்பிடப்பட்டுள்ள எந்தப்பிரதேசத்திலும் நியமிக்கப்படும் எந்த நீதிபதியும்'' என்று கூறும் கோட்பாடாகும். இந்தத் துணை விதிகளில் பொதுவான அடிப்படையிலான ஒருதிருத்தத்தைப் புகுத்துவது விரும்பத்தக்கதல்ல என்று நினைக்கறேன். ஏனெனில், 1948 அக்டோபர் 31 க்குப் பின்னால், நமது அரசியல் சாசனத்தின் விதிகளை கவனத்தில் கொண்டு பார்க்கும்போது, நீதிபதிகளின் சம்பளங்களில், மாகாண அடிப்படையில் எத்தகைய பாகுபாடும் இருக்க முடியாது. எல்லா நீதிபதிகளும், குறிப்பிட்ட உயர் நீதிமன்றம் அமைந்துள்ள பிரதேசம் எதுவாக இருந்தபோதிலும், ஒரே அடிப்படையில்தான் வைக்கப்பட்டுள்ளனர். எனவே, எந்த ஒரு

முரண்பாட்டையும் நீக்குவதற்கு ஒரு பொதுவான விதி அவசிய மில்லை, ஏனெனில் அத்தகைய முரண்பாடு மீண்டும் ஏற்படப் போவ தில்லை. முரண்பாடு இருந்து வருவதற்குக் காரணம், இந்திய அரசுச் சட்டத்தில், நீதிபதிகளின் சம்பளம் சம்பந்தமான சில விதிகள் மாகா ணத்திற்கு மாகாணம் ஒரு வேறுபாட்டைச் செய்திருந்தது. நான் எனது நண்பருக்குக் கூற விரும்புவது இதுதான்: இந்தக் குறிப்பிட்ட விவகாரம் சம்பந்தமாக வரைவுக்குழு மற்றொரு வழியில் இதற்கு வகை செய்யும் என்று நம்புகிறேன். அது ஏற்பட்டால் இந்தக் குறிப் பிட்ட திருத்தத்தை ஏற்றுக் கொள்ள வேண்டிய அவசியமிருக்காது, இதனால் பாதிக்கப்படும் நபரும் நன்மையடைவார். ஆனால் அது ஏற்படவில்லை என்று வரைவுக்குழு அறிந்தால், நம்முடைய மனதிலுள்ள குறிப்பிட்ட நபரின் குறையை அகற்றுவதற்கு ஒரு குறிப்பான திருத்தத்தைக் கொண்டுவரும் உரிமையை, வரைவுக்குழு தன்னிடம் தக்கவைத்துக் கொள்ளும்.

நான் முடிப்பதற்கு முன்னால், இந்தத் துணை விதியில் எதிர் பாராத வகையில் விடுபட்டுப்போன இரண்டு சொற்றொடர்களை இணைத்துக் கொள்வதற்கு உங்களுடைய அனுமதியைக் கேட்பதற்கு விரும்புகிறேன். IVம் பகுதியில் (2) வது உபபத்தியின் 11வது பத்தியை இங்கு குறிப்பிடுகிறேன். ஏழாவது வரியில் ''வேண்டும்'' என்ற சொல் லுக்குப் பின்னர், பின்வரும் சொற்களை இணைத்துக் கொள்வதற்கு விரும்புகிறேன்:

> ''இந்தப் பத்தி (1)வது உப-பத்தியில் குறிப்பிடப்பட்டுள்ள சம்பளங் களோடு கூட''.

பத்தி 11.1ன் 3வது உப-பத்தியில் மற்றொரு திருத்தத்தையும் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

''அத்தகைய'' என்ற முதலாவதாக வரும் சொல்லை நீக்கிவிட வேண்டும்; மற்றும் ''நீதிபதி'' என்ற சொல்லுக்குப் பின்னால் ''உயர் நீதிமன்றத்தின்'' என்ற சொற்களை சேர்த்துக் கொள்ள வேண்டும்.

**திரு. எச்.வி. காமத்:** அது என்னுடைய திருத்தம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் அதை ஏற்றுக் கொள்கிறேன். எனவே இப்பொழுது, திருத்தப்பட்ட வடிவத்தில் அட்டவணையை அவை ஏற்றுக்கொள்ளும் என்று நம்புகிறேன்.

**திரு. ஆர். கே. சித்வா:** குடியரசுத் தலைவர் மற்றும் ஆளுநர் களின் சம்பளங்கள் மற்றும் படித் தொகைகள் பற்றிய என்னுடைய திருத்தம் என்னவாயிற்று?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நாடாளுமன்றம் அதுபற்றி முடிவு செய்யும்.

**திரு. அவைத் தலைவர்:** இப்பொழுது நான் அட்டவணைக் கான திருத்தங்களை பகுதிவாரியாக வாக்கெடுப்புக்கு விடுகிறேன். இப்பொழுது நாம் அட்டவணையின் Iவது பகுதியில் இருக்கிறோம்.

★ ★ ★

**திரு. அவைத் தலைவர்:** 270வது திருத்தத்தின் மூன்றாவது பகுதியை டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக் கொண்டார். இப்பொழுதுள்ளபடி மூன்றாவது பகுதி கீழ்வருமாறு அமைந்துள்ளது.

> ''அட்டவணையில் IIவது பிரேரணை செய்யப்பட்டுள்ள IIவது பத்தி யின் (2) வது உப- பத்தியில் 'இந்தப் பத்தியின் 4(1) வது உப-பத்தியில் குறிப்பிட்டுள்ள' என்ற சொற்களுக்குப் பின்னர் 'இந்தப் பத்தியின் (1)வது உப-பத்தியில் குறிப்பிடப் பட்டுள்ள சம்பளத்தோடு கூட' என்ற சொற்களை சேர்க்கவும்.''

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** என்னுடைய சொந்த சொற்களை சேர்க்க விரும்புகிறேன்.

***(டாக்டர் அம்பேத்கரின் எல்லா திருத்தங்களும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. இரண்டாவது அட்டவணை திருத்தப்பட்ட விதத்தில் அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)***

பகல் உணவுக்குப் பிறகு, மாலை 4 மணிக்கு அவை மீண்டும் கூடியது. குடியரசுத் தலைவர் (மாண்புமிகு டாக்டர் ராஜேந்திர பிரசாத்) தலைமை தாங்கினார்.

## பகுதி VI-அ

[1]**திரு. அவைத் தலைவர்:** இப்பொழுது நாம் பகுதி VI-அ எடுத்துக் கொள்வோம்.

---

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 12, 1949, பக். 154-155.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

''பகுதி VIக்குப் பின்னர், பின்வரும் புதிய பகுதி சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:-

## பகுதி VI-அ

### முதலாவது அட்டவணையின் பகுதி III ல் மாநிலங்கள்

முதலாவது அட்டவணையின்IIIவது பகுதியிலுள்ள மாநிலங்களுக்கு VIம் பகுதியின் விதிகள் பொருந்துவது

211 அ. இந்த அரசியல் சாசனத்தின் VIம் பகுதியின் விதிகள், தற்போதைக்கு அந்த அட்டவணையின் பகுதி I ல் குறிப்பிட்டுள்ள மாநிலங்கள் சம்பந்தமாகப் பொருந்துவது போன்று, தற்போதைக்கு முதலாவது அட்டவணையின் பகுதி IIIல் குறிப்பிட்டுள்ள மாநிலங்களுக்கும் பொருந்தும். அதே சமயத்தில் கீழே கொடுக்கப்படும் மாற்றங்களுக்கும் விலக்குகளுக்கும் உட்பட்டதாகும், அதாவது:-

(1) மேலே கூறப்பட்ட பகுதி VIல் ''ஆளுநர்'' என்ற சொல் வருகின்ற இடங்களிலெல்லாம் அதை நீக்கிவிட்டு - 200வது விதியின் (ஆ) துணை விதியில் இரண்டாவது தடவையாக வரும் இடத்தில் தவிர - ''ராஜ் பிரமுக்'' என்ற சொல்லை சேர்த்துக் கொள்ளவும்.

(2)128 வது விதியில், ''பகுதி I'' என்ற சொல்லுக்கும் எண்ணுக்கும் பதிலாக, ''பகுதி III'' என்ற சொல்லும் எண்ணும் சேர்த்துக் கொள்ளப்படவேண்டும்.

(3) 131 / 132 மற்றும் 134 வது விதிகள் நீக்கப்படவேண்டும்.

(4) 135 வது விதியில், -

(அ) (1) வது துணைவிதியில் ''நியமிக்கப்படுவர்'' என்ற சொல்லுக்குப் பதிலாக, ''ஆகிறார்'' என்ற சொல்லை சேர்த்துக் கொள்ளவும்.

(ஆ)(3) வது துணைவிதிக்கு பதிலாக, பின்வரும் துணைவிதி சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும், அதாவது -

''(3) ராஜ்பிரமுக், வாடகையின்றித் தனது குடியிருப்பைப் பயன்படுத்திக் கொள்வதற்கு உரிமையுண்டு, ராஜ் பிரமுக்குக்கு, குடியரசுத் தலைவர், பொது அல்லது தனி உத்தரவின் மூலம் நிர்ணயிக்கும் தொகைகள் வழங்கப்படும்.''

(இ) (4)வது துணைவிதியில் 'ஊதியங்களும்' என்ற சொல் நீக்கப்பட வேண்டும்.

(5) 136வது விதியில், ''அந்த நீதிமன்றத்தின் தற்போதைய மிகவும் மூத்த நீதிபதி'' என்ற சொற்களுக்குப் பின்னர், ''அல்லது, இது சார்பாக குடியரசுத் தலைவரால் வரையறுத்துக் கூறப்படும் வேறு எந்த முறையிலும்'' என்ற சொற்களை சேர்த்துக் கொள்ள வேண்டும்.

(6) 144 வது விதியில், துணைவிதி(1)ன் நிபந்தனை நீக்கப்பட வேண்டும்

(7) 148வது விதியில் (1) வது துணை விதிக்கு பதிலாக, பின்வரும் துணை விதி சேர்க்கப்பட வேண்டும், அதாவது:-

''(1) ஒவ்வொரு சமஸ்தானத்திற்கும் ஒரு சட்டப் பேரவை இருக்க வேண்டும், அதில் ராஜ்பிரமுக் இருப்பார், மற்றும்-

(அ) மைசூர் சமஸ்தானத்தில், இரண்டு அவைகள்;

(ஆ) பிற சமஸ்தானங்களில், ஒரு அவை.''

(8) 163 வது விதியில், ''இரண்டாவது அட்டவணையில் குறிப்பிட்டுள்ளபடி'' என்ற சொற்களுக்கு பதிலாக, ''ராஜ் பிரமுக் நிர்ணயிக்கிறபடி'' என்ற சொற்களை சேர்க்க வேண்டும்.

(9)170வது விதியில் ''இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் வரையில் அந்த சமஸ்தானத்தின் மாகாண சட்டப் பேரவையின் உறுப்பினர்கள் விஷயத்தில் பொருந்துகின்ற'' என்ற சொற்களுக்கு பதிலாக ''ராஜ் பிரமுக் நிர்ணயம் செய்கின்றபடி'' என்ற சொற்களை சேர்க்கவும்.

(10) 177 வது விதியின் (3) வது துணைவிதியில் -

(அ) உப-விதி (அ)வுக்கு பதிலாக, பின்வரும் உப-விதிசேர்த்துக் கொள்ளப்படவேண்டும், அதாவது :-

(அ) குடியரசுத் தலைவர் பொதுவான அல்லது தனி உத்தரவின் மூலம் நிர்ணயித்தபடி ராஜ்பிரமுக்கின் படித் தொகைகளும் அவரது அலுவலகம் சம்பந்தப்பட்ட பிற செலவுகளும்;

(ஆ) உப-விதி (2)வுக்குப் பின்னர், பின்வரும் உப-விதி சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும், அதாவது:-

''(உஉ)திருவாங்கூர்-கொச்சி சமஸ்தானத்தைப் பொறுத்த மட்டிலும், இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், திருவாங்கூர் மற்றும் கொச்சி ஆகிய இந்திய சமஸ்தானங்களின் ஆட்சியாளர்களால் செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்தத்தின் கீழ் ஐம்பத்தொரு லட்ச ரூபாய் ஆண்டுதோறும் தேஸ்வம் நிதியத்திற்கு வழங்கப் பட வேண்டியிருக்கும்''

(11) 183 வது விதியில், (2)வது துணைவிதிக்கு பதிலாக, கீழ் வரும் துணை விதி சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும். அதாவது :-

''(2) இந்திவிதியின் (1) வது துணைவிதியின் கீழ் விதிமுறைகள் வகுக்கப்படுகின்ற வரையிலும் சமஸ்தானத்தின் சட்டப் பேரவை சம்பந்தமாக, அல்லது சமஸ்தானத்திற்கு சட்டப் பேரவை இல்லாத இடங்களிலும், இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் , கடைசியாக அமலில் இருந்த நடைமுறைவிதிகளும், நிலை ஆணைகளும் சமஸ்தானத்தின் ராஜ்பிரமுக்கினால் இது சம்பந்தமாகக் குறிப்பிடப்படும் மாகாணத்தின் சட்டப் பேரவை சம்பந்தமாக, அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் கடைசியாக அமலில் இருந்த

விதிமுறைகளும் நிலை ஆணைகளும் அந்த சமஸ்தானத்தின் சட்டப்பேரவை சம்பந்தமாகப் பொருந்தும்.

இது, சட்டப்பேரவையின் சபாநயாகர் அல்லது மேலவையின் தலைவரால் செய்யப்படும் மாற்றங்களுக்கும் திருத்தங்களுக்கும் உட்பட்டதாகும்.''

(12) 191 வது விதியின் (2) வது துணைவிதியில், ''மாகாணம்'' என்ற சொல்லுக்கு பதிலாக, ''இந்திய மாநிலம்'' என்ற சொற்கள் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்.

(13) 197வது விதிக்கு பதிலாக, பின்வரும் விதிசேர்த்துக் கொள்ளப்பட வேண்டும், அதாவது:-

நீதிபதிகளின் சம்பளங்கள் முதலியன

''197. ஒவ்வொரு உயர் நீதிமன்றத்தின் நீதிபதிகளும் குடியரசுத் தலைவரால் ராஜ்பிரமுக்குடன் ஆலோசனை கலந்ததற்குப் பின், அவ்வாப்போது நிர்ணயிக்கப்படுகின்றபடி சம்பளங்களும் படித்தொகைகளும் பெறுவதற்கும் விடுப்பு மற்றும் ஓய்வூதியம் சம்பந்தமான உரிமைகளுக்கும் அதேபொழுதில், ஒரு நீதிபதியின் சம்பளமோ, அல்லது விடுப்பு அல்லது ஓய்வூதியம் சம்பந்தசான அவருடைய உரிமைகளோ, அவர் வேலையில் நியமிக்கப்பட்ட பின் அவருக்குப் பாதகமான முறையில் மாற்றப்படக்கூடாது.''

பிற திருத்தங்களை பின்னர் முன்மொழியலாம் என்று நினைக்கிறேன்.

இந்தப் பகுதியின் ஆதார அடிப்படையான கருத்து என்னவெனில், சமஸ்தானங்களின் அரசியல் சாசனம் பற்றி விளக்குக்கின்ற இந்த அரசியல் சாசனத்தின் VIம் பகுதி இப்பொழுது 211 - அ விதியின் துணை விதிகளின் கீழ், IIIம் பகுதியிலுள்ள சமஸ்தானங்களுக்குத் தானாகவே பொருந்தும் என்பதைக்காணலாம். ஆனால் IIIம் பகுதியிலுள்ள இந்திய சமஸ்தானங்களுக்கு VIம் பகுதியைப் பொருந்தச் செய்வதில் விசேஷ சூழ்நிலைகள் இருக்கின்றன, அதற்கு வழிவகை செய்ய வேண்டியது அவசியமாகும். இந்தக் குறிப்பிட்ட 217 வது திருத்தத்தின் நோக்கம், IIIம் பகுதியிலுள்ள சமஸ்தானங்களின் விசேஷ சூழ்நிலைமைகளை கணக்கில் எடுத்துக் கொண்டு செயல்படுவதற்காக செய்யப்பட வேண்டிய இந்தத்திருத்தங்கள் அவசியப்படுகிற விதிகளை சுட்டிக் காட்டுவதேயாகும். இல்லாவிட்டால், IIIம் பகுதியிலுள்ள சமஸ்தானங்கள்-அவற்றின் உள்ளீடு அரசியல் சாசனத்தைப் பொறுத்தமட்டிலும்-பகுதிIல் உள்ள மாநிலங்களுடன் சமநிலையில் இருக்கும்.

★ ★ ★

[1]***பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:*** நான் முன்மொழிகிற திருத்தம் XIIவது பட்டியலில் உள்ள 288வது திருத்தமாகும்.

***திரு. அவைத் தலைவர்:*** இப்பொழுதுதான் நான் அதைக் கிடைக்கப் பெற்றேன். நீங்கள் அதை முன்மொழியலாம்.

***திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:*** ஆனால் அது முன்மொழியப் படவில்லை.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் :*** நீங்கள் அதை எவ்வாறு முன்மொழிய முடியும்?

***பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா:*** திரு.தலைவர் வாசித்த திருத்தத்தை நான் முன்மொழியப்போவதில்லை. XIIவது பட்டியலில் உள்ள எண். 288 திருத்தத்தைத்தான் முன்மொழிகிறேன்.

★ ★ ★

*இந்தியாவின் அரசியல் நிர்ணயசபை, புதுடில்லி அரசியல் சாசன மண்டபத்தில் பத்து மணிக்குக் கூடியது. அரசியல் நிர்ணய சபைத் தலைவர் (மாண்புமிகு டாக்டர் ராஜேந்திர பிரசாத்) தலைமை தாங்கினார்.*

★ ★ ★

## பகுதி VI-அ (தொடர்ச்சி)

***திரு. அவைத் தலைவர்:*** சமஸ்தானங்கள் சம்பந்தமான, திருத்தப்படுவதற்கு இருக்கிற பிற விதிகளையும் அனைத்துத் திருத்தங்களையும் எடுத்துக் கொள்வதும், பின்னர் பொதுவான விவாதம் நடத்துவதும் உசிதமானது என்று கருதுகிறேன். டாக்டர் அம்பேத்கர் அவை அனைத்தையும் வாசிக்க வேண்டிய அவசியமில்லை என்று நினைக்கிறேன்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :*** *(பம்பாய்-பொது):* ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

---

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 12, 1949, பக். 158.
2. மேற்படி அதே நூல், பக். 175-177.

''224வது விதியை நீக்கிவிடலாம்.''
''225வது விதியை நீக்கிவிடலாம்.''

''235வது விதிக்குப் பின்னர், பின்வரும் புதிய விதி சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும், அதாவது:-

''235 அ. (1) இந்த அரசியல் சாசனத்தில் எவ்வாறு கூறப்பட்டிருந்த போதிலும், முதலாவது அட்டவணையின் IIIம் பகுதியில் தற்போது கூறப் பட்டுள்ள ஒரு சமஸ்தானம், இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், அதுவரையிலும் ஏதாவது ஆயுதப்படை வைத்திருந்தால், நாடாளுமன்றம், சட்டத்தின் மூலம் வேறுவிதமாக ஏற்பாடு செய்கிற வரையில், அரசியல் சாசனம் அமலுக்கு வந்த பின்னரும் தொடர்ந்து அந்தப் படையை வைத்துக் கொள்ளலாம். இது சம்பந்தமாக குடியரசுத் தலைவர் அவ்வப்போது வெளியிடக்கூடிய பொதுவான அல்லது தனிப் பட்ட உத்தரவுகளுக்கு இது உட்பட்டதாகும்.

(2) இந்த விதியின் (1) வது துணை விதியில் குறிப்பிடப்பட்ட அத் தகைய எந்த ஆயுதப்படையும், ஒன்றியத்தின் ஆயுதப்படைகளின் பகுதி யாக அமையும்.

''236வது விதிக்கு பதிலாக, பின்வரும் விதி சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும். அதாவது:-

இந்தியாவின் பிரதேசத்தின் பகுதியாக இல்லாத எந்தப் பிரதேசம் சம்பந்தமான நிர்வாக, சட்டமியற்றும் அல்லது நீதித்துறை செயல்பாடுகளை மேற்கொள்வதற்கு ஒன்றியத்துக்குள்ள அதிகாரம்.

236. இந்திய அரசு, இந்தியப் பிரதேசத்தின் ஒரு பகுதியாக இல்லாத எந்தப் பிரதேசத்தின் அரசுடனும் உடன்பாட்டின் பேரில் அத்தகைய பிரதேசத்தின் அரசிடம் அமைந்துள்ள நிர்வாக, சட்டமியற்றும், நீதித்துறை செயல்பாடுகளை மேற்கொள்ளலாம்; ஆனால் அத்தகைய ஒவ்வொரு உடன் பாடும், அப்போதைக்கு அமலில் உள்ள, அந்நிய அதிகார வரம்பை செயல்படுத்துவது தொடர்பான எந்த சட்டத்திற் கும் உட்பட்டதாக, அதனால் நிர்வகிக்கப்படுவதாக இருக்க வேண்டும்.''

''237 வது விதி நீக்கப்பட வேண்டும்.''

''274 ஈ. விதிக்குப் பின்னர், பின்வரும் புதிய விதிகள் சேர்த்துக் கொள்ளப் பட வேண்டும். அதாவது:-

முதலாவது ஷெட்யூலின் IIIம் பாகத்தில் குறிப்பிடப்பட்டுள்ள சமஸ்தானங்களிலிருந்து ஏற்றுமதி பண்டங்களின் மீது விதிக்கப்படும் சில வரிகள் மற்றும் தீர்வைகள் மூலம் வியாபாரம் மற்றும் வர்த்தகம்மீதுகட்டுப் பாடுகளை விதிப்பதற்கு சில சமஸ்தானங்களின்அதிகாரம்.

274 ஈஈ. இந்தப் பகுதியில் முன்னால் கூறப்பட்ட விதிகளில் அடங்கி யுள்ளவற்றைப் பொருட்படுத்தாது, குடியரசுத் தலைவர் முதலாவது அட்டவணையின் IIIவது பகுதியில் இப்போதைக்குக் குறிப்பிட்டுள்ள ஒரு சமஸ்தானத்துடன், பிற சமஸ்தானங்களி லிருந்து அந்த சமஸ்தானத்தினுள் இறக்குமதி செய்யப்படும் பண்டங்கள் மீது அந்த சமஸ்தானத்தினால் விதிக்கப்படும் எந்த வரியையும் விதிப்பது மற்றும் வசூலிப்பது அல்லது அந்த சமஸ்தானத்தினால் விதிக்கப்படக்கூடிய தீர்வை, அல்லது அந்த சமஸ்தானத்திலிருந்து பிற சமஸ்தானங்களுக்கு ஏற்றுமதி செய்யக் கூடிய பொருள்களின் மீதான தீர்வை சம்பந்தமாக, குடியரசுத் தலைவர் ஓர் உடன்பாட்டுக்கு வரமுடியும். மற்றும் இந்த விதியின் கீழ் செய்து கொள்ளப்படும் எந்த ஒப்பந்தமும், இந்த ஒப்பந்தத்தில் குறிப்பிடப்படக்கூடியபடி, இந்த அரசியல்

சாசனம் அமலுக்கு வந்ததிலிருந்து பத்து ஆண்டுகளுக்கு மேற் படாத காலத்திற்குத் தொடர்ந்து அமலிலிருக்கும்.

அந்த ஒப்பந்தம் தொடங்கியகாலத்திலிருந்து ஐந்தாண்டுகள் முடிந்த பின்னால், இந்த அரசியல் சாசனத்தின் 260வது விதியின் கீழ் அமைக்கப் பட்ட நிதி ஆணையத்தின் அறிக்கையை ஆய்வு செய்த பின்னர், குடியரசுத் தலைவர் அவசியம் என்று கருதினால், அத்தகைய எந்த உடன்பாட்டை யும் முடிவுக்குக் கொண்டுவர முடியும், அல்லது மாற்றியமைக்க முடியும்.

தற்போதுள்ள சட்டங்களின் மீது 274அ, 274இ விதிகளின் தாக்கம்.

274 ஈஈஈ. இந்த அரசியல் சாசனத்தின் 274அ, மற்றும் 274இ விதிகளிலுள்ள எதுவும் தற்போதுள்ள எந்த சட்டத்தின் விதி களையும் குடியரசுத்தலைவர் தமது உத்தரவின் மூலம் வேறு விதமாக வகை செய்தாலன்றி-பாதிக்கக் கூடாது.

''302 வது விதிக்குப்பின்னர், பின்வரும் புதிய விதிசேர்த்துக் கொள்ளப் பட வேண்டும், அதாவது:-

இந்திய சமஸ்தானங்களின் மன்னர்களின் உரிமைகளும்விசேட சலுகைகளும்.

302அ. சட்டங்களை இயற்றுவதற்கு நாடாளுமன்றம் அல்லது ஒரு சமஸ்தானத்தின் சட்டப்பேரவையின் அதிகாரத்தைச் செயல் படுத்தும் போது அல்லது ஒன்றியம் அல்லது ஒரு மாநிலத்தின் நிர்வாக அதிகாரத்தை செயல்படுத்துவதில், ஓர் இந்திய சமஸ்தான மன்னரின் தனிப்பட்ட உரிமைகள், விசேஷ சலுகைகள், மரியாதை கள் சம்பந்தமாக, இந்த அரசியல் சாசனத்தின் 267 அ. விதியில் கூறப்பட்டுள்ளபடி, எந்த ஒப்பந்தம் அல்லது உடன்பாட்டின் கீழ் வழங்கப்பட்டுள்ள உத்தரவாதம் அல்லது உறுதிமொழியை உரிய கவனத்தில் எடுத்துக் கொள்ளவேண்டும்.

''306 வது விதிக்குப் பின்னர், பின்வரும் புதிய விதிகள் சேர்த்துக் கொள்ளப் பட வேண்டும் :-

முதலாவது அட்டவணையின் IIIம் பகுதியில் சமஸ்தானங்கள் சம்பந்தமான தற்காலிக துணைவிதிகள்.

''306-ஆ இந்த அரசியல் சாசனத்தில் உள்ளது எப்படியிருந் தாலும், அரசியல் சாசனம் அமலுக்கு வந்ததிலிருந்து, பத்து ஆண்டுக் காலகட்டத்தின் போது, நாடாளுமன்றம் எந்த சமஸ் தானம் சம்பந்தமாகவும் சட்டத்தின்படி வகை செய்யும் நீண்ட கால அல்லது குறுகிய காலகட்டத்தின் போது தற்போதைக்கு முதலாவது ஷெட்யூலின் IIIம் பகுதியில் குறிப்பிட்டுள்ளபடி

ஒவ்வொரு சமஸ்தானத்தின் அரசும், ஜனாதிபதியின் பொதுவான கட்டுப்பாட்டின் கீழ் இருக்கும், மற்றும் அவ்வப்பொழுது கொடுக்கப் படும் எந்தக் குறிப்பிட்ட வழிகாட்டுதல்களுக்கும் கட்டுப்பட்டு நடக்க வேண்டும். அத்தகைய வழிகாட்டுதல்களுக்கு இசைவாக நடப்பதற்குத் தவறுவதானது, இந்த அரசியல் சாசனத்தின் விதிகளுக்கு இசைவாக சமஸ்தானத்தின் அரசை நடத்திச் செல்வதற்குத் தவறியதாகக் கருதப்படும்.

''ஆனால் குடியரசுத் தலைவரது ஓர் உத்தரவின் மூலம், அந்த உத்தர

வில் குறிப்பிடப்படும் எந்த சமஸ்தானத்திற்கும் இந்த விதியின் ஷரத்துகள் பொருந்தாது என்று உத்தரவிட முடியும்.''

''258 வது விதியின் (1)வது துணை விதிக்கு பதிலாகப் பின்வரும் துணை விதி சேர்க்கப்பட வேண்டும்:-

''(1) இந்த அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள எதையும் பொருட்படுத்தாது, இந்திய அரசு, இந்த விதியின் (2)வது துணை விதியில் கூறப்பட்டுள்ளவற்றிற்கு உட்பட்டு அட்டவணையின் III ம் பகுதியில் குறிப்பிட்டுள்ளபடி, தற்போதைக்கு, ஒரு சமஸ்தானத்தின் அரசுடன், கீழ்வருவன சம்பந்தமாக ஓர் உடன்பாட்டுக்கு வரமுடியும்:-

(அ) அத்தகைய சமஸ்தானத்தில், இந்திய அரசினால் விதிக்கப்படக் கூடிய எந்தவரி அல்லது தீர்வையை விதிப்பது மற்றும் வசூல்செய்வது, மற்றும் அந்த வசூல் தொகையை இந்த அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளவற்றிற்கு ஏற்ப விநியோகிப்பது.

(ஆ) இந்த அரசியல் சாசனத்தின் கீழ் இந்திய அரசினால் விதிக்கக் கூடிய எந்த வரி அல்லது தீர்வையிலிருந்து, அல்லது வேறு எந்த ஆதாரங்களிலிருந்து வழக்கமாக ஒரு சமஸ்தானம் பெறுகின்ற எந்த வருமான இழப்பின் விளைவாக, அந்த சமஸ்தானத்திற்கு இந்திய அரசு எந்த நிதி உதவியும் வழங்குவது;

(இ) இந்த அரசியல் சாசனத்தின் 267அ விதியின் (1) வது துணை விதியின் கீழ் இந்திய அரசு வழங்கும் எந்த நிதி சம்பந்தமாகவும் அந்த சமஸ்தானத்தின் பங்கீடு குறித்து ஓர் உடன்பாடு எட்டப்பட்டால், அந்த சமஸ்தானம் சம்பந்தமாக இந்த அத்தியாயத்தின் விதிகள், அத்தகைய உடன்பாட்டின் ஷரத்துகளுக்கு உட்பட்டு பொருந்தும்.''

''பகுதி 9ன் அத்தியாயம் 1-ல் 267வது விதிக்குப்பிறகு, பின்வரும் புதிய விதி சேர்த்துக்கொள்ளப்பட வேண்டும், அதாவது,

மன்னர்களின் உபகாரச் சம்பளத் தொகைகள்

'267அ (1) இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், எந்த இந்திய சமஸ்தானத்தின் மன்னரும் செய்து கொண்ட எந்த ஒப்பந்தம் அல்லது உடன்பாட்டின் கீழ், இந்திய டொமினியனின் அரசினால், அத்தகைய சமஸ்தானத்தின் எந்த மன்னருக்கும் வரியின்றி, எந்தத் தொகைகளையும் உபகாரச் சம்பளமாக வழங்குவதாக உத்தரவாதம் அல்லது உறுதிமொழி கொடுத்திருந்தால்-

(அ) அத்தகைய தொகைகள் இந்தியாவின் ஒருங்கிணைப்பு நிதியத்திலிருந்து வழங்கப்பட வேண்டும், மற்றும்,

(ஆ) எந்த மன்னருக்காவது அவ்வாறு வழங்கப்படும் தொகைகளுக்கு வருமான வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட வேண்டும்.

(2) மேலே கூறப்பட்ட அத்தகைய எந்த இந்திய சமஸ்தானத்தின் பிரதேசங்களும், முதலாவது அட்டவணை பகுதி I அல்லது பகுதி IIIல் குறிப்பிட்டுள்ள ஒரு மாநிலத்தினுள் அடங்கியிருந்தால், அங்கு, இந்த விதியின் (1)வது துணை விதியின் கீழ், குறிப்பிடப்பட்ட காலத்திற்கு இந்திய அரசினால் ஏதாவது தொகைகள் வழங்கப்பட்டிருந்தால் அத்தொகைகள் அந்த சமஸ் தானத்தின் ஒருங்கிணைப்பு நிதியத்திலிருந்து கொடுக்கப்பட வேண்டும்.

இது, அதன் சார்பாக, இந்த அரசியல் சாசனத்தின் 258வது விதியின் (1)வது துணைவிதியின் கீழ் செய்துகொள்ளப்பட்ட எந்த உடன்பாட்டுக்கும் உட்பட்டதாக இருக்கும். இது குடியரசுத் தலைவரின் உத்தரவினால் நிர்ணயிக்கப்படும்.

270வது விதிக்குப் பின்னால் பின்வரும் புதிய விதி சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்:

''270 அ (1) இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வந்ததிலிருந்து -

இந்திய சமஸ்தானங்களின் சொத்து ஆஸ்திகள், கடன் பொறுப்புகள் மற்றும் கடப்பாடுகளுக்கு மரபுரிமை

(அ) முதலாவது அட்டவணையின் IIIம் பகுதியில் தற்போதைக்குக் குறிப்பிடப்பட்டுள்ள எந்த மாநிலத்திற்கும் இணையான எந்த இந்திய சமஸ்தானத்திலும் அரசியல் சாசனம்அமலுக்கு வருவதற்கு முன்னால் அதுவரையிலும் உடைமையாயிருந்த ஒன்றியத்தின் பட்டியலில் தொகுத்தளித்துள்ள எந்த விஷயம் சம்பந்தமான எல்லா ஆஸ்திகளும் இந்திய அரசின்உடைமையாக இருக்கும்; மற்றும்

(ஆ) முதலாவது அட்டவணையின் IIIம் பகுதியில் தற்போதைக்குக் குறிப்பிடப்பட்டுள்ள எந்த மாநிலத்திற்கும் இணையான எந்த சமஸ்தானத்தின் அரசின் மேலே கூறப்பட்ட எந்த விஷயம் சம்பந்தமானதுமான எல்லாக் கடன் பொறுப்புக்களும் இந்திய அரசின் கடன் பொறுப்புகளாக இருக்கும். இது சம்பந்தமாக இந்திய அரசு அந்த சமஸ்தானத்தின் அரசுடன் செய்துகொள்ளப்பட்ட எந்த உடன்பாட்டுக்கும் இது உட்பட்டதாகும்.

(2) இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வந்ததிலிருந்து, முதலாவது அட்டவணையின் IIIம் பகுதியில் தற்போதைக்குக் குறிப்பிடப்பட்டுள்ள ஒவ்வொரு மாநில அரசும் அனைத்து சொத்துக்கள், ஆஸ்திகள்,கடன் பொறுப்புக்கள், மற்றும் கடப்பாடுகள் அனைத்தும் சம்பந்தமாக - இந்த விதியின் (1) வது துணை விதியில் குறிப்பிடப்பட்டுள்ள ஆஸ்திகளும் கடன் பொறுப்புகளும் அல்லாதவை - இணையான இந்திய சமஸ்தானத்தின் வாரிசு ஆகும்.

**திரு. பிரஜேஸ்வர் பிரசாத்** (பீஹார்: பொது) : ஐயா, 224, மற்றும் 225 வது விதிகள் சம்பந்தமான இந்த 218மற்றும் 219 ஆகிய இரு திருத்தங்களும் முதலில் பைசல் செய்யப்பட வேண்டும் அல்லது இந்த விதிகளுக்கு மதிப்புமிக்க உறுப்பினர்களின் பெயரில் வந்துள்ள திருத்தங்களும் பிரேரணை செய்யப்படவேண்டும்.

**திரு. அவைத் தலைவர்:** அவை நீக்கப்பட வேண்டும். அவற்றைப் பைசல் செய்வதற்கு அதிக நேரம் எதுவும் தேவைப் படாது.

*(224 வது விதி அரசியல் சாசனத்திலிருந்து நீக்கப்பட்டது)*

## விதி 306-ஆ

[1]**திரு. அவைத் தலைவர்:** 222வது திருத்தம் : டாக்டர் அம்பேத்கர்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் ஏற்கனவே அதை முன்மொழிந்து விட்டேன்.

★ ★ ★

மதிய உணவிற்குப் பின் 4 மணிக்கு அவை மீண்டும் கூடியது. அரசியல் நிர்ணயசபைத் தலைவர் (மாண்புமிகு டாக்டர் இராஜேந்திர பிரசாத்) தலைமை வகித்தார். (அக்டோபர் 13, 1949)

## விதி 3

(மீண்டும் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டது)

[2]**திரு. அவைத் தலைவர்:** எண் 226 முதலிய திருத்தங்களை இப்பொழுது நாம் எடுத்துக்கொள்ளலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திருத்தங்களை என் சார்பில் முன்மொழியும்படி திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரியை கேட்டுக் கொள்கிறேன்.

★ ★ ★

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 13, 1949, பக். 183.
2. மேற்படி அதே நூல், பக். 210

## விதி 296

[1]திரு. அவைத் தலைவர்: இப்பொழுது நாம் 296 வது விதி-15வது திருத்தத்தை எடுத்துக்கொள்வோம். அதிக எண்ணிக்கையிலான திருத்தங்கள் வந்துள்ளன. சில திருத்தங்கள், வரைவுக்குழுவின் சார்பில் முன்மொழியப்படவிருக்கும் திருத்தத்திற்கான திருத்தங்களாகும். சில திருத்தங்கள் பிற உறுப்பினர்களால் முன்மொழியப்படவிருக்கும் பிற திருத்தங்களுக்கான திருத்தங்களாகும். பல திருத்தங்கள் ஒரே மாதிரியாக உள்ளன. எனவே, ஒரேமாதிரியாக உள்ள, பிற திருத்தங்களால் நிறைவு செய்யப்படுகின்ற திருத்தங்களை வலியுறுத்தாமலிருப்பதற்கு, உறுப்பினர்கள், அவர்களே ஓரளவு விருப்புரிமையைக் கடைப்பிடிப்பார்கள் என்று நம்புகிறேன்.

திரு. எச்.வி. காமத் (மத்தியமாகணங்கள் மற்றும் பேரார் : பொது): உங்களுடைய ஆணைக்கு நாங்கள் கட்டுப்படுகிறோம், ஐயா.

திரு. அவைத் தலைவர்: சாத்தியப்பட்டால், எத்தகைய ஆணையையும் விடுப்பதற்கு நான் விரும்பவில்லை.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (பம்பாய் : பொது) ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

சேவைகள் மற்றும் பதவிகளுக்கு ஷெட்யூல்டு வகுப்பார் மற்றும் ஷெட்யூல்டு பூர்வ குடிகளின் உரிமைக் கோரிக்கைகள்

"296வது விதிக்கு வந்துள்ள திருத்தங்களின் பட்டியலில் உள்ள 3163 வது திருத்தம் சம்பந்தமாகப் பின்வரும் விதிசேர்த்துக் கொள்ளப் படவேண்டும்:

"296 ஒன்றியத்தின் அல்லது ஒரு மாநிலத்தின் விவகாரங்கள் சம்பந்தமாக பணியிடங்களுக்கும் பதவிகளுக்கும் நியமனங்கள் செய்வதில், நிர்வாகத்தில் திறமையைப் பராமரிப்பதற்கு முரணில்லாத வகையில் ஷெட்யூல்டு வகுப்பினர் மற்றும் ஷெட்யூல்டு பழங்குடியினரின் கோரிக்கைகள் பரிசிலனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டும்."

★ ★ ★

[2]திரு. அவைத் தலைவர்: பதிலியாக வருகிற அடுத்த திருத்தம், எண். 23, டாக்டர் அம்பேத்கரின் பெயரில் இருக்கிறது.

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 14, 1949, பக். 229.
2. மேற்படி அதே நூல், பக். 236-237.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அதை முன்மொழியும் உத்தேசம் எனக்கு இல்லை.

**அவைத் தலைவர் :** பின்னர் எண் 24.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** முன்மொழியவில்லை.

***(மேலே குறிப்பிடப்பட்ட டாக்டர் அம்பேத்கரின் திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. திருத்தப்பட்ட வடிவத்தில் 296 வது விதி அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)***

★ ★ ★

## விதி 299

[1]**சர்தார் ஹுக்கம்சிங்:** என்னுடைய கேள்விக்கு பதிலளிக்கப் படவில்லை. இந்த நான்கு சீக்கியப் பிரிவினர் ஷெட்யூல்டு வகுப்பினரில் சேர்த்துக் கொள்ளப்பட்டுள்ளனரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நிச்சயமாக அவர்கள் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள்.

**திரு. கே.எம். முன்ஷி:** 300 அ விதியின் கீழ் ஷெட்யூல்டு வகுப்பினரின் பட்டியலை வெளியிடுவதற்கு குடியரசு தலைவருக்கு அதிகாரமளிக்கப்பட்டுள்ளது. அதில் இந்த ஷெட்யூல்டு வகுப்பினர் இடம் பெறுவர்.

**சர்தார் ஹுக்கம் சிங் :** குடியரசுத் தலைவர் இந்த மக்களை அந்தப் பட்டியலில் சேர்ப்பார் என்பதற்கு என்ன உத்தரவாதம்? இந்த உத்தரவாதத்தை அரசியல் சாசனத்தின் மூலம் பெறுவதற்காக நாங்கள் எல்லாப் பாதுகாப்புகளையும் விட்டுக் கொடுத்துவிட்டோம். அது செய்யப்படவில்லை.

**திரு. கே.எம்.முன்ஷி:** குடியரசுத் தலைவருக்கு அந்த அதிகாரம் இருக்கிறது. கொடுக்கப்பட்டுள்ள வாக்குறுதியை குடியரசுத் தலைவர் நிச்சயம் நிறைவேற்றுவார். இந்த முடிவு ஆலோசனைக்குழுவின் அறிக்கையில் இடம் பெற்றுள்ளது. சீக்கிய ஷெட்யூல்டு வகுப்பினர், ஷெட்யூல்டு வகுப்பினரின் ஒரு பகுதியாக இருப்பார்கள், நாம்

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 14, 1949, பக். 262

ஏற்கனவே ஏற்றுக் கொண்ட 296வது விதியின் கீழ் இவர்களுக்கு எல்லாப் பாதுகாப்புகளும் வழங்கப்பட்டுள்ளன. அந்த உறுதிமொழியிலிருந்து பின்வாங்கிடச் செல்லும் பேச்சுக்கே இடமில்லை. நான் கூறுவதை நீங்கள் நம்பலாம். சீக்கிய ஷெட்யூல்டு வகுப்பினர் பஞ்சாபின் ஷெட்யூல்டு வகுப்பினர் மற்றும் ஷெட்யூல்டு பழங்குடியினர் பட்டியலில் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள் என்று மீண்டும் கூறுகிறேன்.

***(திருத்தப்பட்ட வடிவத்தில் 299 வது விதி அரசியல் சாசனத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது)***

## *48வது விதி*

[1]***திரு. எச்.வி. காமத் :*** டாக்டர் அம்பேத்கர், முன்பு ஒரு நாள் எனக்கு அளித்த பதிலில் மிகத் தெளிவாகக் கூறியிருந்தார்; ஆனால் இப்பொழுது அவருடைய மனதிலேயே ஓரளவு சந்தேகம் ஏற்பட்டுள்ளதாகத் தோன்றுகிறது. இப்பொழுது அவர் ஆளுநர்களுக்கும் குடியரசுத்தலைவருக்கும் வாடகை இல்லாமல் குடியிருப்புகளை வழங்கக்கோரும் திருத்தத்தை நம் முன் கொண்டு வந்திருக்கிறார். இதனுடைய தர்க்க நியதிப்படி நாம் முன் சென்று, அமைச்சர்களுக்கும் வாடகை இல்லாத வீடுகளை வழங்க வேண்டும்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :*** ஐயா, நான் ஒன்று கூறுவதற்கு விரும்புகிறேன். இந்தத் திருத்தமானது ராஜ்பிரமுக்குகள் சம்பந்தமாக நாம் செய்துள்ள ஏற்பாட்டின் ஒரு தொடர் விளைவு அல்லது அதை யொத்ததேயாகும், அவ்வளவுதான். ராஜ்பிரமுக்குகளின் குடியிருப்புகள் சம்பந்தமாக, முன்பு முன்மொழியப்பட்ட துணைவிதிகளில் அவை வாடகையில்லாதவை என்று நாம் திட்டவட்டமாகக் கூறியுள்ளோம். ஆளுநர்கள் சம்பந்தமான இது போன்ற துணை விதிகளை ஒப்பிட்டுப்பார்க்கும் போது எப்படியோ ஒரு விஷயம் விடுபட்டுப்போயுள்ளது என்பதை நாங்கள் கண்டறிந்தோம், வாடகை இல்லாத வீடுகள் என்று நாங்கள் குறிப்பிடவில்லை. இந்தக் குறைபாட்டைச் சரி செய்வதற்காகவும் ஆளுநர்கள் மற்றும் குடியரசுத் தலைவர் சம்பந்தப்பட்டதை ராஜ்பிரமுக்குகளுடன் சமநிலைப்படுத்துவதற்கும் இந்தத் திருத்தம் தேவைப்படுகிறது. அமைச்சர்களின் பிரச்சினையைப் பொறுத்தமட்டிலும், அது நாடாளு

---

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 14, 1949, பக். 268

மன்றத்தினால் இயற்றப்படும் சட்டத்தின் வாயிலாக முறைப்படுத்தப் படும். நாடாளுமன்றமானது, அவர்களுக்கு சம்பளத்துடன் வீடும் வழங்குவதற்குத் தயாராக இருக்குமா, அந்த வீட்டுக்கு வாடகை யிருக்குமா, அல்லது வாடகையற்ற வீடா ஆகிய விஷயங்களெல் லாம் நாடாளுமன்றத்தினால் முறைப்படுத்தப்படும். ஏனெனில் அமைச் சர்களின் பதவிகள் எல்லாம் அரசியல் பதவிகளாகும்.அது, இந்த அவையின் நல்லிணக்கத்தையும் நம்பிக்கையையும் சார்ந்துள்ளது. அமைச்சர்களை நாடாளுமன்றத்தின் செயல்பாட்டிலிருந்தும், அதிகார வரம்பிலிருந்தும் அகற்றுவது சரியாக இருக்காது என்பதைத் திரு. காமத் எளிதாகப் புரிந்து கொள்வார் என்று நம்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர் :** இதை வாக்கெடுப்புக்கு விடுவதற்கு விரும்புகிறேன். திருத்தம் என்னவெனில்:

> ''48 வது விதியின் (3) வது துணை விதியில் குடியரசுத் தலைவருக்கு ஓர் அதிகாரபூர்வமான குடியிருப்பு இருக்கும்' என்ற சொற்களுக்கு பதிலாக, 'வாடகை இல்லாமல் அரசாங்க மாளிகையைப் பயன்படுத்திக் கொள்வ தற்கு அவருக்கு உரிமை உண்டு' என்ற சொற்கள் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்.''

*(இந்தத் திருத்தம் நிராகரிக்கப்பட்டது)*

**திரு. அவைத் தலைவர் :** இனி திரு.டி.டி. கிருஷ்ணமாச்சாரி முன்மொழிந்த திருத்தத்தை வாக்கெடுப்புக்கு விடுகிறேன். அவரது திருத்தம் என்னவெனில்,

> ''48 வது விதியின் (3) வது துணை விதியில் குடியரசுத் தலைவருக்கு ஓர் அதிகார பூர்வமான குடியிருப்பு இருக்கும்' என்ற சொற்களுக்கு பதிலாக, 'குடியரசுத் தலைவர் அவருடைய அதிகாரபூர்வமான குடியிருப்புகளை, வாடகையில்லாமல் உபயோகப்படுத்திக் கொள்வதற்கு உரிமையுண்டு' என்ற சொற்களை சேர்க்கவும்.''

(இந்தத் திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டது)

**திரு. டி.டி கிருஷ்ணமாச்சாரி:** ஐயா, 360வது எண் திருத்தத்தை முன்மொழிகிறேன்:

> ''62 வது விதியின் (5அ) துணைவிதி நீக்கப்பட வேண்டும்.''

இதற்கான காரணம் என்னவெனில், டாக்டர் அம்பேத்கரின் சார்பில் முன்பு நான் இந்த அவையில் கூறியபடி அட்டவணை IIIஅ வையும் ஆளுநர்களுக்கு ஆணையிடுவது சம்பந்தமான அட்டவணையை யும் முன்மொழிய நாங்கள் விரும்பவில்லை. இது சம்பந்தமான துணைவிதி இவ்வாறு கூறுகிறது:''(5அ) தனது அமைச்சர்களைத் தேர்வு செய்வதிலும், இந்த அரசியல் சாசனத்தின் கீழ் அவருடைய இதர

அலுவல்களை செயல்படுத்துவதிலும் குடியரசுத் தலைவர் பொதுவாக, அட்டவணை IIIஅ வில் வகுத்தளிக்கப்பட்டுள்ள ஆலோசனைகளை வழிகாட்டியாகக் கொள்வார்.'' அட்டவணை IIIஅ முன்மொழியப் படாததால், இந்த விதி அவசியமற்றதாகப் போய்விடுகிறது. அதனால் அதை நீக்கும்படி நான் பிரேரணை செய்கிறேன்.

**திரு. எச்.வி.காமத்:** ஐயா, சில மாதங்களுக்கு முன்னால் குடியரசுத் தலைவர் எப்போதும் தனது அமைச்சரவையின் ஆலோசனையை ஏற்றுக் கொள்வதற்குக் கடமைப்பட்டவரா என்ற முக்கியமான பிரச்சினையை நீங்கள் எழுப்பினீர்கள். இது சம்பந்தமாக நமது அரசியல் சாசனம் எதுவும் கூறவில்லை. குடியரசுத் தலைவருக்கு உதவுவதற்கும் ஆலோசனை கூறுவதற்கும் அமைச்சரவை ஒன்று இருக்க வேண்டும் என்று மட்டுமே அது கூறுகிறது. இந்த விஷயத்தைத் தெளி வாக்குவதற்கு, அரசியல் சாசனத்தில் எங்கேயேனும் ஏதாவது ஒரு துணைவிதியை சேர்ப்பதற்கு அந்த கமயத்தில் டாக்டர் அம்பேத்கர் முயற்சியை மேற்கொண்டார். இது தான் என்னுடைய ஞாபகம். நான் கூறியது சரியா, தவறா என்று தலைவர் தயைகூர்ந்து கூறும்படி கேட்டுக் கொள்கிறேன். அரசியல் சாசன வரைவில் எந்த இடத்திலும் இந்த விஷயம் தெளிவுபடுத்தப்படவில்லை. டாக்டர் அம்பேத்கர் இதைச் செய்வார் என்றும் தற்போதுள்ளது போல் அதைத் தெளிவற்ற தாக இருக்க விடமாட்டார் என்றும் நம்புகிறேன்.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, எனக்கு இது பற்றி முன் அறிவிப்பு கிடைத்திருந்தால் நலமாயிருந்திருக்கும். அப்பொழுது தேவையான மேற்கோள்களை நான் கொடுத்திருந்திருக்க முடியும். ஆனால் நான் ஒரு பொதுவான அறிக்கையைக் கொடுக்க முடியும். அமைச்சரவையின் ஆலோசனையை ஏற்றுக் கொள்ளும்படி குடியரசுத்தலைவரைக் கட்டாயப்படுத்துவதற்கு அரசியல் சாசனத் தில் ஏதாவது இருக்கிறதா என்ற விஷயம் பொதுவான பிரச்சினை யுடன் ஒப்பிடும்போது உண்மையில் ஒரு மிகவும் சிறிய விஷயமே. பொதுவான பிரச்சினைப் பற்றி நான் சிறிது கூற விரும்புகிறேன்.

ஒவ்வொரு அரசியல் சாசனமும் நாடாளுமன்ற ஜனநாயகம் என்று நாம் அழைப்பதுடன் சம்பந்தப்பட்ட வரையில், அரசின் மூன்று வெவ்வேறான அங்கங்கள் ஆட்சித்துறை, நீதித்துறை மற்றும் சட்டமன்றத்துறை ஆகியவை தேவைப்படுத்துகின்றன. ஆட்சித் துறை சட்டமன்றத் துறைக்குக் கீழ்ப்படிய வேண்டும் என்ற ஒரு

1. அ.நி.வி., தொகுதி 10, அக்டோபர் 14, 1949, பக். 269-70.

ஷரத்தை எந்த அரசியல் சாசனத்திலும் எந்த ஓர் இடத்திலும் நான் காணவில்லை. அது போன்றே, ஆட்சித்துறை நீதித்துறைக்குக் கீழ்ப் படியவேண்டும் என்ற ஒரு ஷரத்தையும் எந்த ஒரு அரசியல் சாசனத் திலும் எந்த ஓர் இடத்திலும் நான் காணவில்லை.எங்கும் அத்தகைய ஷரத்தைக் காண முடியாது. ஏனெனில், அரசியல் சாசனத்தின் விதிகள் அரசின் பல்வேறு அங்கங்களைக் கட்டுப்படுத்தும் என்பது பொது வாகப் புரிந்து கொள்ளப்பட்டுள்ளது. எனவே, இதன் விளைவாக, அரசியல் சாசனத்தைச் செயல்படுத்துவோர், சட்டபேரவையில் உள்ளவர்கள், ஆட்சித்துறையிலும் நீதித்துறையிலும் இருப்பவர்கள் தங்களுடைய செயல்பாடுகளை அறிவார்கள், தங்களுடைய எல்லை வரம்புகளையும், தமது கடமைகளையும் அறிவார்கள் என்று கருதப் படுகிறது, எனவே, அரசியல் சாசனத்தை செயல்படுத்துவதில் ஆட்சித் துறை நேர்மையாக இருந்தால், ஆட்சித்துறை அரசியல் சாசனத்தில் எத்தகையக் கட்டாயக் கடப்பாடு வகுக்கப்படாமலேயே சட்டப் பேரவைக்கு நிச்சயமாகக் கீழ்ப்படியும் என்று எதிர்பார்க்கப்பட வேண்டியதாகும்.

இதுபோன்றே, அரசியல் சாசனத்தை செயல்படுத்துவதில் ஆட்சித்துறை நேர்மையாக இருந்தால், உச்சநீதிமன்றம் வழங்கும் சட்ட முடிவுகளுக்கு ஏற்ப செயல்பட்டாக வேண்டும். எனவே என் னுடைய விண்ணப்பம் என்னவெனில், இது அரசின் ஓர் அங்கம், தனது எல்லை வரம்புகளுக்குள் செயல்பட்டு, அரசின் இதர அங்கங் களின் மேலாண்மைக்குக் கீழ்ப்படியும் விஷயமாகும். அரசியல் சாசனம் அதற்கு மேலாண்மை கொடுக்கின்ற வகையில், அது அரசியல் சாசன ரீதியான கடப்பாடு விஷயமாகும், இது அரசியல் சாசனத்திலேயே உள்ளார்ந்து அடங்கியுள்ளது.

ஐயா, எனக்கு நினைவிருக்கிறது, நீங்கள் இந்தக் கேள்வியை எழுப்பினீர்கள், நான் அதை ஆராய்ந்தேன். பிரிட்டிஷ் உயர்நீதிமன்றப் பிரிவின் இரண்டு முடிவுகள் என் னிடமுள்ளன, அவற்றை ஒரு நாள் இங்கு கொண்டு வந்து சபையில் குறிப்பிட விரும்பினேன். அதன் மூலம் விஷயத்தைத் தெளிவுபடுத்தலாம். ஆனால், இந்த விஷயம் இன்று இங்கு எழுப்பப்படுவது பற்றி எனக்கு முன்னதாக அறிவிப்பு இல்லை என்பதற்காக வருந்துகிறேன். எனினும் இங்கு எழுப்பப்பட்ட பிரச்சினைக்கு இதுதான் பதில்.

எந்தக் குறிப்பிட்ட அரசியல் சாசனரீதியான அதிகார ஆணை யமும், தன்னுடைய அதிகாரம் அரசியல் சாசனத்தினால் வரையறுக்கப் பட்டுள்ளது என்ற உண்மையை நினைவில் கொண்டாலொழிய, எந்த

அரசியல் சாசன ரீதியான அரசும் செயல்பட முடியாது; மற்றும், அந்தக் குறிப்பிட்ட அதிகார ஆணையத்திற்கும் வேறு எந்த அதிகார ஆணையத்திற்கும் இடையில் முடிவு செய்ய வேண்டிய, அரசியல் சாசனத்தினால் உருவாக்கப்பட்ட அதிகார ஆணையம் இருக்கிறதென்றால், அப்பொழுது அந்த அதிகார ஆணையத்தின் முடிவு வேறு எந்த அங்கத்தையும் கட்டுப்படுத்துவதாகும். குடியரசுத் தலைவர் தமது அமைச்சர்களின் ஆலோசனைக் கடைப்பிடிக்கிறாரா என்று பார்ப்பதற்கும், நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தை, ஆட்சித்துறை, தனது நிர்வாக அதிகாரத்தில் மீறக்கூடாது என்பதற்கும், அரசியல் சாசனத்தினால் உருவாக்கப்பட்ட நீதித்துறை அங்கத்தின் வியாக்கியானத்துடன் முரண்படும்போது ஒரு சட்டம் பற்றித் தனது சொந்த வியாக்கியானத்தை வழங்கலாகாது என்பதைப் பார்ப்பதற்கும் இந்த அரசியல் சாசனம் அளிக்கும் அதிகாரம் இது தான்.

**திரு. எச். வி. காமத்:** எந்த ஒரு குறிப்பிட்ட விஷயத்திலாவது குடியரசுத் தலைவர் அமைச்சரவையின் ஆலோசனையின்படி செயல்படாவிட்டால், அது அரசியல் சாசனத்தை மீறியதற்கு ஒப்பாகும். அப்பொழுது அவர் குற்றம் சாட்டப்படுவதற்கு ஆளாவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதுகுறித்து சிறிதும் ஐயத்திற்கிடமில்லை.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்** (சென்னை : பொது) : டாக்டர் அம்பேத்கரின் அறிக்கையோடு கூட நான் இவ்வாறு கூற விரும்புகிறேன்: அவ்வளவு முக்கியமில்லாத சில விஷயங்களில் குடியரசுத் தலைவர் அமைச்சரவையின் ஆலோசனையை ஏற்றுக் கொள்ளாமல் போகக்கூடும். ஓர் அமைச்சரவை கலைக்கப்படுவதற்கு விரும்பினால், பெரும்பான்மையின் நம்பிக்கையைப் பெற்ற வேறொரு அமைச்சரவையைத்தான் நியமிப்பேன் என்று கூறுவதற்கும், நிர்வாகத்தைத் தொடர்ந்து நடத்திச் செல்வதற்கும் ஜனாதிபதிக்கு உரிமை உண்டு. சில, அரிதாக ஏற்படும் சம்பவங்களில், பொறுப்பான ஆட்சியின் நலனை முன்னிட்டு, தனது பொறுப்பான அமைச்சர்களின் ஆலோசனையை குடியரசுத் தலைவர் மீறக்கூடும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** என் பதிலுரையில் ஒரு விஷயத்தை மட்டும் குறிப்பிட விரும்புகிறேன். ஒரு காலத்தில் அதுதான் நிலை. மன்னர் என்ன செய்ய முடியும் என்பது மெகாலேயின் இங்கிலாந்தின் வரலாறு என்ற நூலில் மிகவும் தெளிவாக விளக்கப்

பட்டுள்ளது. ஆனால் இவையெல்லாம் மரபு சம்பந்தப்பட்ட விஷயங்கள் என்று நான் கூறுவேன். கனடாவில் திரு. மெக்கன்ஸிகிங் அமைச்சரவை கலைக்கப்பட வேண்டும் என்று விரும்பியபோது இந்தப் பிரச்சினை எழுந்தது. கவர்னர் - ஜெனரல் ஒரு முடிவு கூறுவதற்குக் கடமைப்பட்டவரா அல்லது ஒரு மாற்று அமைச்சரவை அமைக்கும்படி எதிர்க்கட்சித் தலைவருக்கு அழைப்பு விடுவதற்கு அவருக்கு உரிமை உண்டா என்பதேயாகும். பிரிட்டிஷ் அரசின் ஆலோசனையின் பேரில், கவர்னர்-ஜெனரல் திரு. மெக்கன்ஸிகிங்கின் ஆலோசனையை ஏற்று நாடாளுமன்றத்தைக் கலைத்தார்.

**திரு. எச்.வி.காமத் :** டாக்டர் அம்பேதகரின் கருத்துக்கு பதிலாக, இது சம்பந்தமாக அரசியல் சாசனத்திலேயே ஒரு விதியை ஏற்படுத்தி விட்டால் என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இந்தப் பிரச்சினையை இவ்வாறு நாம் விவாதிக்க முடியாது.

***(முன்பு கூறப்பட்ட, திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரியின் 360 வது எண் திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. 62 வது விதியின் (5அ) துணைவிதி நீக்கப் பட்டது).***

## 303 வது விதி

[1]**மாண்புமிகு திரு.கே. சந்தானம்:** ஒரு மாகாணத்தினுள் இணைந்துவிட்டதன் மூலம் தனது சமஸ்தானத்தை இழந்த ஒரு நபர் தொடர்ந்து மன்னராக இருக்க முடியுமா, அல்லது அவர், மன்னருக்கு வாரிசு ஆவாரா என்று நான் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** இதிலுள்ள சிரமம் என்னவெனில், இது ஒரு சிக்கலான பிரச்சினையாகும். இது திகைப்படையச் செய்கிறது. தனது சமஸ்தானத்தை இழந்த ஒரு நபர், அப்படியிந்த போதிலும் 267 அ என்ற விதியின் விளக்கத்தின்கீழும், மற்றும் அதன் நோக்கத்திற்காகவும் அவர் மன்னர்தான்.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம் :** அவருடைய மகனும் ஏன் மன்னராக முடியாது?

---

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 14, 1949, பக். 282.

***திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:*** ஆகக்கூடும்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் :*** மன்னர் பற்றிய விளக்கமானது, மன்னர் மானிய நிதியத்திலிருந்து பணம் வழங்கப் படும் ஓர் எல்லைக்குட்பட்ட நோக்கத்திற்காகவே இவ்வாறு கூறப் படுகிறது என்று கருதுகிறேன். வேறு எந்தக் குறிப்பும் இதற்குக் கிடையாது.

***மாண்புமிகு திரு. கே. சந்தானம் :*** ஒரே சமயத்தில் இருவர் அலவன்சுகள் பெறுவதற்கு உரிமையுடையவர்கள் என்று பொருள் படும்படி இதன் வியாக்கியானம் அமைந்துள்ளதா என்பதே என்னுடைய கேள்வியாகும். ஒப்பந்தப்படி, மானியம் பெறுவதற்கு ஒரு சமயத்தில் ஒரு நபருக்குத்தான் உரிமை உண்டு என்பதை உறுதிப் படுத்துவதற்கு விரும்புகிறேன்.

***திரு. அவைத் தலைவர்:*** அது சரியன்று கருதுகிறேன். ஏனென்றால் மன்னர் என்று அங்கீகரிக்கப்பட்ட நபர் மட்டுமே பெறுவதற்கு உரிமையுடையவர்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** அங்கீகாரம் சம்பந்தப்பட்ட விதிகளினால் இது தீர்மானிக்கப்படும். இரண்டு, அல்லது மூன்று, அல்லது நான்கு நபர்களை குடியரசுத் தலைவர் அங்கீகரிக்கப் போவதில்லை என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன்.

குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் வழங்குவதற்காகவே, இந்த சொற்றொடர் திட்டமிட்டுப் பயன்படுத்தப்பட்டுள்ளது.

***மாண்புமிகு திரு. கே. சந்தானம்:*** அவரை மன்னர் என்றோ அல்லது வழித்தோன்றல் என்றோ அழைக்கலாம்.

***திரு. அவைத் தலைவர்:*** திரு.சந்தானம் அவர்களே, நீங்கள் தெரிவித்த கருத்து மிகத் தெளிவாக இருக்கிறது என்று கருதுகிறேன். மேற்கொண்டு இது சம்பந்தமாக எந்த விவாதமும் அவசியம் என்று நான் கருதவில்லை. இதை நான் வாக்கெடுப்புக்கு விடுகிறேன்.

***(303 வது விதியின் (1) வது துணை விதியின் (என் என்) உப-விதிக்கு பதிலாக திரு.டி.டி. கிருஷ்ணமாச்சாரி கொடுத்த திருத்தம் ஏற்றுக் கொள்ளப் பட்டது.)***

[1]**திரு. அவைத் தலைவர்:** இனி, நாம் அட்டவணையை எடுத்துக் கொள்ளலாம்.

**முதலாவது அட்டவணை**

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின் வருமாறு முன்மொழிகிறேன்:

> "முதலாவது அட்டவணைக்குப்பதிலாகப் பின்வருவதை சேர்த்துக் கொள்ளவேண்டும்:-
>
> "முதலாவது அட்டவணை
> (1வது, 4வது விதிகள்)
>
> இந்தியாவின் மாநிலங்களும் பிரதேசங்களும்
>
> பகுதி I

| மாநிலங்களின் பெயர்கள் | இணையான மாகாணங்களின் பெயர்கள் |
|---|---|
| 1. அசாம் | அசாம் |
| 2. வங்காளம் | மேற்குவங்கம் |
| 3. பீஹார் | பீஹார் |
| 4. பம்பாய் | பம்பாய் |
| 5. கோசல்-விதர்ப்பா | மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் |
| 6. சென்னை | சென்னை |
| 7. ஒரிசா | ஒரிசா |
| 8. பஞ்சாப் | கிழக்குப் பஞ்சாப் |
| 9. ஐக்கியமாகணங்கள் | ஐக்கிய மாகணங்கள் |

> மாநிலங்களின் ஆட்சிப்பகுதிகள்
>
> அசாம் மாநிலத்தின் ஆட்சிப்பகுதி, இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் அது வரையிலும் அசாம் மாகாணம், காசி சமஸ் தானங்கள், மற்றும் அசாம் பழங்குடி (மலை)ப்பகுதிகள் ஆகியவற்றில் அடங்கியிருந்த பிரதேசங்களைக் கொண்டவையாக இருக்கும்.
>
> வங்காள மாநிலத்தின் ஆட்சிப்பகுதி இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் வரையில் மேற்கு வங்காளம் என்ற மாகாணத்தில் அடங்கியிருந்த பிரதேசமாக இருக்கும்."

**திரு. பி.தாஸ்** (ஒரிசா : பொது): ஒரிசாவின் பெயர் உத்கல் என்று மாற்றப்பட வேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நீங்கள் இது சம்பந்த மாக ஒரு திருத்தத்தைப் பிரேரணை செய்யலாம்.

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 14, 1949, பக். 286-288.

''பம்பாய் மாநிலத்தின் ஆட்சிப்பகுதி இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் வரையில் பம்பாய் மாகாணத்தில் அடங்கியிருந்த பிரதேசம், 1935ம் வருட இந்திய அரசு சட்டத்தின் 290அ பிரிவின் கீழ் வெளியிடப்பட்ட ஆணையின் பயனாக, இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் வரையில், அந்த மாகாணத்தின் ஒரு பகுதி போன்று நிர்வகிக்கப்பட்டு வந்த பிரதேசம், அல்லது அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் வரையிலும், 1947, உபரி-மாகாண எல்லை வரம்பு சட்ட விதிகளின் கீழ், மாகாணத்தின் அரசினால் நிர்வகிக்கப்பட்ட பிரதேசம் முதலியவை அடங்கியதாக இருக்கும்.

பிற மாநிலங்கள் ஒவ்வொன்றின் ஆட்சிப்பகுதி, இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், அது வரையில், இணையான மாகாணத்திலும் பிரதேசங்களிலும் அடங்கியிருந்தன. அவை,1935, இந்திய அரசு சட்டத்தின் 290 அ பிரிவின் கீழ் வெளியிடப்பட்ட ஓர் உத்தரவின் விளைவாய், அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், அது வரையிலும், அந்த மாகாணத்தின் பகுதியாக அமைந்தது போல் நிர்வகிக்கப்பட்டுவந்தன.

## பகுதி II

மாநிலங்களின் பெயர்கள்

1. ஆஜ்மீர்
2. போபால்
3. பிலாஸ்பூர்
4. குடகு
5. கூச் - பெஹார்
6. டில்லி
7. இமாசலப் பிரதேசம்
8. கட்ச்
9. மணிபுரி
10. ராம்பூர்
11. திரிபுரா

### மாநிலங்களின் ஆட்சிப் பகுதிகள்

ஆஜ்மீர் மாநிலத்தின் ஆட்சிப்பகுதிகள் இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் வரையில், ஆஜ்மீர் - மீர்வாரா மற்றும் பந்த்பிப்லோடா என்ற பிரதம ஆணையர்களின் மாகாணங்களில் அடங்கியிருந்தன.

கூர்க் மற்றும் டில்லி மாநிலங்கள் ஒவ்வொன்றின் ஆட்சிப்பகுதியும் இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், அது வரையிலும் அதே பெயரிலான பிரதம ஆணையரின் மாகாணங்களில் அடங்கியிருந்த ஆட்சிப்பகுதியைக்கொண்டதாக இருக்கும்.

பிற மாநிலங்கள் ஒவ்வொன்றின் ஆட்சிப்பகுதியும், இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், அதுவரையிலும், 1935, இந்திய அரசு சட்டத்தின் 290 அ பிரிவின் கீழ் வெளியிடப்பட்ட ஓர் உத்தரவை முன்னிட்டு, அதே பெயருடைய பிரதம ஆணையரின் மாகாணம் போல் நிர்வகிக்கப்பட்டு வந்தன.

பகுதி III

*சமஸ்தானங்களின் பெயர்கள்*

*1. ஹைதராபாத்*
*2. ஜம்மு - காஷ்மீர்*
*3. மத்திய பாரத்*
*4. மைசூர்*
*5. பாட்டியாலா மற்றும் கிழக்கு பஞ்சாப் சமஸ்தானங்களின் ஒன்றியம்.*
*6. ராஜஸ்தான்*
*7. சௌராஷ்டிரம்*
*8. திருவாங்கூர் - கொச்சி*
*9. விந்தியப் பிரதேசம்*

*சமஸ்தானங்களின் ஆட்சிப் பகுதிகள்*

*ராஜஸ்தான் சமஸ்தானத்தின் ஆட்சிப்பகுதி, இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், அது வரையிலும் ராஜஸ்தான் ஐக்கிய சமஸ்தானத்திலும், அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால், அதுவரையிலும், 1947, உபரி-மாகாண அதிகாரவரம்புச் சட்டத்தின் விதி களின் கீழ் அந்த சமஸ்தானத்தின் அரசினால் நிர்வகிக்கப்பட்டு வந்த ஆட்சிப் பகுதிகளைக் கொண்டதாக இருக்கும்.*

*சௌராஷ்டிர மாநிலத்தின் ஆட்சிப்பகுதி இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் வரையிலும் கத்தியவார் ஐக்கிய மாநிலங் களிலும் (சௌராஷ்டிரா), அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் வரையிலும் 1947 உபரி-மாகாண அதிகார வரம்பு சட்டத்தின் விதிகளின் கீழ் அந்த மாநிலத்தின் அரசினால் நிர்வகிக்கப்பட்ட ஆட்சிப் பகுதிகளும் அடங்கியதாக இருக்கும்.*

*பிற மாநிலங்கள் ஒவ்வொன்றின் ஆட்சிப் பகுதியும் இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னால் வரையிலும் இணையான இந்திய சமஸ்தானத்தில் அடங்கியிருந்த ஆட்சிப்பகுதி அடங்கியதாக இருக்கும்.*

பகுதி IV

*அந்தமான் மற்றும் நிக்கோபார் தீவுகள்*

ஐயா, நான் முன்மொழிந்துள்ள திருத்தத்திற்கு விளக்கம் எதுவும் தேவை என்று கருதவில்லை.

**திரு. ஜெய்நாரயண் வியாஸ்:** சிரோகி சமஸ்தானம் எந்த இடத் திலும் குறிப்பிடப்பட்டுள்ளதா என்பதை அறிய விரும்புகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் :** 1947 ஆம் வருட கூடுதல் மாகாண அதிகார வரம்புச் சட்டத்தின் கீழ், சிரோகியின் ஒரு பகுதி பம்பாய் மாகாணத்திலும் மற்றொரு பகுதி ராஜஸ்தான் மாகா ணத்திலும் நிருவகிக்கப்படுவதாகத் தெரிகிறது. அதனால் தான் இது எங்கும் குறிப்பிட்டுச் சொல்லப்படவில்லை.

## விதி 264-அ

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (பம்பாய் : பொது) திருத்தம் எண் 425ஐ முன்மொழிகிறேன்:

''பட்டியல் XII-ன் (இரண்டாவது வாரம்) திருத்தம் எண் 307ல் உத்தேசிக்கப்பட்ட திருத்தம் 264அ-க்கு பதிலாக, பின்கண்டவை சேர்க்கப்பட வேண்டும்:

சரக்கு விற்பனை அல்லது கொள்முதல் மீது வரி விதிப்பதை கட்டுப்படுத்தல்

264. அ (1) மாநில ஒன்றன் சட்டம் எதுவும் சரக்குகளின் விற்பனை அல்லது கொள்முதலை

(அ) அந்த மாநிலத்துக்கு வெளியே, அல்லது

(ஆ) இந்திய ஆட்சிப்பகுதிக்குள் அச்சரக்குகளை இறக்குமதி செய்கையில் அல்லது அதற்கு வெளியே அச்சரக்குகளை ஏற்றுமதி செய்கையில் நிகழுமிடத்து அத்தகைய விற்பனை அல்லது கொள்முதல் மீது வரி எதனை விதித்தலோ விதிப்பதற்கு அதிகாரம் அளித்தலோ ஆகாது.

விளக்கம்:- சரக்குவிற்பனை சம்பந்தப்பட்ட பொதுச்சட்டத்தின் கீழ், அத்தகைய விற்பனை அல்லது கொள்முதல் மற்றொரு மாநிலத்தில் நடந்திருந்தாலும் கூட இந்த விதியின் துணை விதியின்படி, அந்த மாநிலத்தில் நுகரும் நோக்கத்திற்காக நேரடியாக அத்தகைய ஒரு விற்பனை அல்லது கொள்முதல் அந்த மாநிலத்தில் நடந்துள்ளதாகக் கருதப்படும்.

(2) நாடாளுமன்றம், சட்டம் மூலம் வேறு வகையில் வகை செய்தாலன்றி, ஒருமாநிலத்தின் சட்டம் எதுவும், மாநிலங்களுக்கிடையே நடைபெறும் வர்த்தகம், பெருவாணிபம் நடைபெறும்போது ஏற்படும் விற்பனை அல்லது வாங்குதல் மீது ஒரு வரியை விதிக்கவோ அல்லது விதிப்பதற்கு அதிகாரம் வழங்கவோ முடியாது.

எனினும் இதற்கு விதி விலக்கு உண்டு; அதாவது இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னர் எந்த மாநில அரசாங்கமும் சரக்குகள் விற்பனை அல்லது வாங்குதல் மீது சட்டபூர்வமாக வசூலிக்கும் வரி இந்த விதியின் ஷரத்துக்கு எதிராக இருப்பினும், 1951 மார்ச் 31-ம் நாள் வரை தொடர்ந்து வசூலிக்கப்படலாம் எனக் குடியரசுத்தலைவர் ஆணை பிறப்பிக்கலாம்.

(3) மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்கள் என்று நாடாளுமன்றம் சட்டமூலம் அறிவித்துள்ளபடி, அத்தகைய சரக்கு விற்பனை அல்லது வாங்குதல் மீது ஒருவரிவிதிக்கும் அல்லது வரி விதிப்பதற்கு அதிகாரம் வழங்கும் எந்த ஒரு சட்டத்தையும் குடியரசுத் தலைவரின் பரிசீலனைக்கு சமர்ப்பித்து, அவருடைய இசைவு பெற்றாலன்றி ஒரு மாநிலச் சட்ட மன்றம் இயற்றுவது செல்லுபடியாகாது.

வாணிகம் நாடு முழுவதும் சுதந்திரமாக நடைபெற விற்பனை வரி பெருமளவில் சிரமங்களை ஏற்படுத்தியுள்ளதை ஒவ்வொரு

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 16, 1949, பக். 325-327.

வரும் அறிவர். பல மாகாண அரசாங்கங்கள் விதிக்கும் பல்வகை யான விற்பனை வரிகள், இறக்குமதி அல்லது ஏற்றுமதி கீழ்வரும் சரக்குகளை அல்லது மாகாணங்களுக்கிடையிலான வர்த்தகம், வியா பாரம் சம்பந்தப்பட்ட சரக்குகளைப் பாதிக்கின்றன. இத்தகைய குழப் பமான நிலையை அனுமதிக்கக் கூடாது என்பது ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளது; மற்றும் மாகாணங்கள் விற்பனை வரியை விதிக்கலாம், ஆனால் சில வரைமுறைகள் இருக்க வேண்டும்; அத்தகைய வரை முறைகளால், மாகாணங்கள் விற்பனைவரி விதிப்பது சட்ட முறை யான வரையறைக் குட்பட்டதாக இருக்கும். எனவே, மாகாணங்கள் விற்பனை வரி விதிக்கும் அதிகாரத்திற்கு சில கட்டுப்பாடுகளை நிர்ணயம் செய்யும் குறிப்பிட்ட சில ஷரத்துகள் இருக்க வேண்டும் என்று கருதப்பட்டது.

இந்த விதி 264அ ல் உள்ள சில ஷரத்துகள் அரசியலமைப்புச் சட்டத்தின் பல பகுதிகளில் கூறப்பட்டுள்ளவைதான்; மீண்டும் அவை குறிப்பிடப்பட்டுள்ளன என்பதை முதலில் அவைக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். உதாரணமாக, நான் முன்மொழிந்துள்ள விதி 264அ ன் துணைவிதி (1)ல் கண்டுள்ள துணைவிதி(ஆ) அரசியலமைப்புச் சட்டத்திலுள்ள விதியை மறுபடியும் குறிப்பிடுகிறது: ஏற்றுமதி, இறக்குமதி வரிவிதிப்பு மத்திய அரசாங்கத்தின் தனிப்பட்ட அதிகார வரம்பிற்குட்பட்டதாக இருக்கும் என்று சட்டப் பட்டியலில் பதிவாகி யுள்ளது. அதனால், துணைவிதி (1) ஆ யைப் பொறுத்தவரை, எந்த அர்த்தம் கொண்டாலும், விற்பனை வரியை விதிப்பதற்கு மாகா ணங்களுக்குள்ள அதிகார வரம்பை இது பறித்துக் கொள்கிறது என்பதில் எவ்வித விவாதத்திற்கும் இடமில்லை.

அவ்வாறே, மாநிலங்களிடையே சம்பந்தப்பட்ட வாணிகம் குறித்து அண்மையில் நாம் நிறைவேற்றிய பகுதி Xஅ மீண்டும் துணை விதி (2)ல் கூறப்பட்டுள்ளது.எனவே, துணைவிதி (2)யைப் பொறுத்த வரை உண்மையில் புதிதாக அதில் எதுவுமில்லை. விற்பனை வரி எதுவும் விதிக்கப்பட்டால் பகுதி Xன் ஷரத்துக்களுக்கு முரண்பட்டதாக அது இருக்கக் கூடாது என்று மட்டும்தான் கூறுகிறது.

துணை விதி (3)யைப் பொறுத்தவரை, இந்தியா முழுவதிலுள்ள மக்களின் வாழ்விற்கு இன்றியமையாப் பொருள்கள் சில உள்ளன வென்றும், அவை கிடைக்கும் மாகாணங்களில் அரசாங்கத்தின் விற்பனை வரிக்கு அவை உட்படுத்தப்படக்கூடாது என்றும் ஒத்துக்

கொள்ளப்பட்டது. எனவே, இந்தியா முழுவதுமுள்ள மக்கள் வாழ்விற்கு இன்றியமையாத அத்தகைய பொருள் எதுவுமிருந்தால், அத்தகைய பொருள் மீது சம்பந்தப்பட்ட மாகாணம் வரி விதிப்பதற்கு முன்பு, அந்த மாகாணம் நிறைவேற்றியுள்ள அத்தகைய சட்டம் குடியரசுத் தலைவரின் ஒப்புதலைப் பெற்றிருக்க வேண்டும், அதனால், குடியரசுத் தலைவரும், மத்திய அரசாங்கமும், குறிப்பிட்ட மாகாணம் விதிக்கும் குறிப்பிட்ட வரி விதிப்பால் எவ்வித இடையூறும் ஏற்படாதிருக்க உறுதிசெய்ய முடியும்.

துணை விதி (2) க்குள்ள காப்பு வாசகம் முக்கியமானது; இதை சபையின் கவனத்திற்கு கொண்டு வருகிறேன். மாகாணங்கள் விதிக்கும் சில விற்பனை வரிகள் விதி 264அ-ல் கண்டுள்ள ஷரத்துக்களுக்கு ஏற்புடையதாக இல்லை என்பது முற்றிலும் உண்மைதான். அனேகமாக, அவை ஷரத்துக்களுக்கு அப்பாற்பட்டதாக உள்ளன. அரசியல் சாசனத்தில் நிர்ணயிக்கப்பட்டுள்ள சட்ட ஆட்சி அமலுக்கு வரும்போது, அரசியல் சாசனத்துக்கு முரண்பட்ட எல்லாச் சட்டங்களும் தானாக ரத்தாகிவிடும். அத்தகைய வரிகளை வசூலிக்கும் மாகாணங்களின் வருவாய் பெருமளவில் அவ்வரிகள் மூலம் கிடைக்கும் வருமானத்தைச் சார்ந்து இருப்பதால், அரசியல் சாசனம் அமலுக்கு வந்த நாளிலிருந்து சில நிதி கஷ்டங்கள் அல்லது பாதிப்புகள் அவற்றுக்கு ஏற்படக்கூடும்.

ஆகையால், அரசியல் சாசனத்தின் பொது ஷரத்துகளுக்கு விளக்கம் அளிக்கும் வகையில், முரண்பாடு எதுவும் இருந்தாலும் அல்லது விதி 264அ-ன் ஷரத்துகளுக்கேற்ப எந்த மாகாணமும் விதித்துள்ள எவ்வித விற்பனை வரியும், அத்தகைய ஒரு சட்டம் 1951 மார்ச் 31 ஆம் நாள் வரை தொடர்ந்து அமலில் இருக்கும்; அதாவது, முடிந்த வரையில் சரிப்படுத்திக் கொள்வதற்கும், இந்த விதியின் ஷரத்துகளுக்கேற்ப அவைகளுடைய சட்டத்தை அமைத்துக் கொள்ளுவதற்கும் நடைமுறையில் மேலும் சில மாதங்கள் கூடுதலாகக் கொடுக்க உத்தேசித்துள்ளோம்.

என்னுடைய திருத்தத்தைப் பொறுத்தவரையில், மேலும் விளக்கம் எதுவும் தேவை என்று கருதவில்லை. ஏதாவது சந்தேகம் எழுந்தால், நான் விவாதத்திற்குப் பதிலளிக்கும் போது தெளிவுபடுத்திட விரும்புகிறேன்.

★ ★ ★

[1]**திரு. மகாவீர் தியாகி:** .... இப்போதைய விற்பனை வரி முறையில் பல குறைபாடுகள் உள்ளன. இப்போது டில்லியில் விற்பனைவரி கிடையாது; ஐக்கிய மாகாணங்களில், மோட்டார் கார், ரேடியோ, சைக்கிள் இன்னும் சில பொருள்கள் மீது விற்பனை வரி விதிக்கப்படுகிறது. மீரத்திலுள்ள ஒருவர் மோட்டார் கார் அல்லது சைக்கிள் ஒன்று வாங்க விரும்பும்போது மீரத்திலுள்ள விற்பனை நிலைத்திற்கு அவர் போய் வாங்குவதில்லை. டில்லிக்கு வருகிறார். இதனால் உள்ளூர் வர்த்தகம் பாதிக்கப்படுகிறது. நான் அமைதியாக இருக்க வேண்டுமென்று டாக்டர் அம்பேத்கர் சமிக்ஞை செய்கிறார். அவர் தேவையில்லாத வகையில் தமது செல்வாக்கைப் பயன்படுத்து கிறார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தாங்கள் சுட்டிக் காட்டிய கருத்தை நான் கேட்டுக் கொண்டு வருகிறேன்.

**திரு. மகாவீர் தியாகி:** நான் கூறும் கருத்தை கவனத்துள் கொண்டு இருக்கிறீர்களா? அதனைப் பாராட்டுகிறீர்களா! நான் கூறு வதை ஏற்றுக்கொள்வீர்களா? உங்களுக்குப்பின்னால் மக்கள் பிரதி நிதிகள் உள்ளனர். டாக்டர் அம்பேத்கர் அவர்களே, நீங்கள் நியாய மாக இருந்தால், நியாயம் என்ன என்பதை அங்கீகரித்தால், மக்க ளுக்கு நீங்கள் நியாயம் செய்தீர்களேயானால், உங்கள் வாழ்க்கையில் நீங்கள் உச்ச நீதிமன்றத்தின் நீதிபதியாவீர்கள் என்பதை நான் உங்க ளுக்கு உறுதியாகக் கூறமுடியும். நான் கூறிய வகையில்தான் வரி வசூலிக்கப்படுகிறது என்பதைத் தாழ்மையுடன் மீண்டும் தெரிவித்துக் கொள்கிறேன். .......

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சபை முன்னர் மூன்று திருத்தங்கள் உள்ளன. என்னுடைய நண்பர் பேராசிரியர் சிபன்லால் சாக்சேனாவின் திருத்தம் முதலாவது உள்ளது. அவருடைய திருத்தத்தின்படி, வரிவிதிக்கும் அதிகாரம் நாடாளுமன்றத்திற்குத்தான் இருக்க வேண்டும். இவ்வாறு அவர் கூறுகிறார்.

---

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 16, 1949, பக். 330-331.
2. மேற்படி அதே நூல், பக். 339-340.

இந்த உத்தேச சட்டத்திற்கு இரண்டு அடிப்படையான ஆட்சேபனைகள் உள்ளன. முதலாவதாக, இந்திய அரசாங்கத்தின் நிதித்துறை மற்றும் மாகாணங்களின் பிரதமர்களுக்குமிடையே இவ் விஷயத்திற்கு பல்வேறு சமயங்களில் ஆதரவு திரட்டப்பட்டது. அப்போதைய உத்தேசத் திட்டப்படி விற்பனை வரி விதிப்பதில் ஏற்படும் சிரமங்களை நீக்குவதற்கு, மத்திய அரசாங்கமே வரி விதித்து, வசூல் செய்து, ஒத்துக் கொள்ளப்பட்ட ஒருவகை கொள்கைகள் அடிப் படையில் ஏதாவது ஓர் ஆணையம் அளிக்கும் அறிக்கையின் அடிப் படையில் பகிர்ந்து அளிக்க வேண்டுமென்பதாகும்.

அதிர்ஷ்டவசமாக அல்லது துரதிர்ஷ்டவசமாக, இத்திட்டத் திற்கான இக்கொள்கையை மாகாண பிரதமர்கள் எதிர்த்தனர். என் னுடைய பார்வையில் அவர்களின் முடிவு சரியானதாகும்.

அரசமைப்புச் சட்ட வரைவில் கூறப்பட்ட திட்டம் நிர்ண யித்துள்ள நிதிமுறை, நான் அறிந்தவரை இதர முறைகளைக் காட்டி லும் சிறப்புடையது என்று நான் தயங்காது கூறமுடியும். இதில் ஒரு குறைபாடு உள்ளது என்பதைக் கூற வேண்டும். மாகாணங்கள், தங்க ளுடைய நிதி ஆதாரங்களுக்கு மத்திய அரசாங்கம் வழங்கும் மானியங் களை பெருமளவில் சார்ந்துள்ளன என்பதுதான் அக்குறைபாடாகும். பணமசோதவை ஏற்காது மறுப்பது, சட்டமன்றத்திற்குள்ள அதிகாரம், சட்டமன்றத்திற்குள்ள அத்தகைய அதிகாரம், பொறுப்புள்ள அர சாங்கம் செயல்படும் முறைகளில் ஒன்றாகும். நாம் உத்தேசித்துள்ள திட்டத்தின் கீழ், மாகாணத்தில் பணமசோதா மிகவும் குறைந்த அள வுள்ளதாகவே இருக்கும். நேரடியாக மாகாணங்கள் விதிக்கும் வரிகள் சாதாரணமானவையாகவே இருக்கும்; எனவே, இந்த வழக்கமான அரசாங்கத்தின் மீது நம்பிக்கை இல்லை என்னும் முறையினைப் பின்பற்றி வரிகள் விதிப்பை ஏற்கமுடியாது என்று கூறும் நிலையில் சட்டமன்றம் இருக்க முடியாது. எனவே, மாகாணங்கள் சார்ந்துள்ள பெருமளவிலான வருவாய் ஆதாரங்கள் மத்திய அரசாங்கத்திடம் குவிக்கப்பட்டிருக்கும் நிலையில், அரசமைப்புச் சட்ட முறையிலான அரசாங்கம் என்ற கருத்தின் அடிப்படையில், குறைந்தது ஒரு முக்கிய மான வருவாய் ஆதாரத்தை மாகாணங்களிடம் விட்டுவிடுவது விரும்பத்தக்கதாகும். எனவே, இக்கருத்தின் அடிப்படையில், விற்பனை வரியை மாகாணங்களின் கையில் விட்டுவிடுவது என்ற உத்தேசத் திட்டம் மிகவும் நியாயமானதாகும். அவ்வாறு இருப்பதனால்,

என்னுடைய நண்பர் பேராசிரியர் சிபன்லால் சாக்சேனாவின் திருத்தம் மண்கவ்வகிறது என்று நினைக்கிறேன்.

என்னுடைய நண்பர் திரு.தியாகியின் திருத்தத்தைப் பொறுத்த வரை,அவர் கூறியவைகளுக்கு என்னுடைய அனுதாபம் பெரிதும் உண்டு என்று கூற ஆசைப்படுகிறேன். 1937ல் விற்பனை வரித் திட்டம் புகுத்தப்பட்ட போது அதன் மூலம் கிடைத்த வருமானம் மிகக் குறைவு என்பதில் எவ்விதச் சந்தேகமும் இல்லை. பம்பாய், சென்னை யைப் பொறுத்தவரை புள்ளிவிவரங்களை ஆராய்ந்தேன். 1937ல் சென்னையில் கிடைத்த வரிவருமானம் சுமார் ரூ2.35 கோடியாக இருந்தத. இப்போது இது கிட்டத்தட்ட ரூ. 14 கோடியாகும். பம்பா யிலும் அதே நிலைதான்: அதாவது, 1937ல் விற்பனை வரி வருமானம் சுமார் ரூ. 3.5 கோடி; இப்போது இதே வருமானம் ரூ. 14கோடி அளவை எட்டுகிறது. இது பெருமளவிலான அதிகரிப்புதான் என்பதை ஏற்றுக் கொள்ளவேண்டும். நான் அறிந்த அளவில், வரிவிதிப்பு முறை இரண்டு கொள்கைகளின் அடிப்படையில் மாற்றி அமைக்கப்படலாம் என்ற சாதாரண காரணத்திற்காக, வருவாயைப் பெருக்கும் நோக் கத்தில் விற்பனை வரி விதிப்பு முறையுடன் விளையாடுவது விரும்பத் தக்கது என்று நான் கருதவில்லை. பல்வேறு வகுப்புகளிடையிலான சமத்துவம் என்பது ஒன்று. ஒரு வகுப்பினர் மீது அடுத்த வகுப் பினரைக் காட்டிலும் அதிக வரி விதிக்கப்பட்டால், வரிச் சுமையைச் சமப்படுத்தும் வகையில் வரி விதிக்கும் முறையை கையாளுவது நியாயமானதாகும்.

இரண்டாவது முக்கிய கொள்கை உலகம் முழுவதும் ஒத்துக் கொள்ளப்பட்டதாக இருக்கிறது என்று நான் நினைக்கிறேன். அதாவது, மக்களின் வாழ்க்கைத் தரத்தைக் குறைக்கும் முறையில் எந்த வரி முறையும் கையாளப்படக்கூடாது. ஒரு மாகாண மக்களின் வாழ்க்கைத் தரத்துடன் விற்பனைவரி மிகவும் இணைந்து தொடர் புள்ளதாக இருக்கிறது என்பதில் எனக்கு சிறிதளவும் சந்தேகமில்லை. ஆனால், என்னுடைய நண்பரிடம் எனக்குள்ள எல்லா அனுதாபத் துடன், அவருடைய திருத்தம் ஏற்றுக் கொள்ளப்பட்டால் மாகா ணங்கள் விற்பனை வரி விதிக்கும் அதிகாரம் சுதந்திரமுள்ளதாகவும், தடங்கல் எதுவுமில்லாததாகவும் இருப்பதாகப் பொருள் கொள்ள முடியாது என்பது எனக்கு மீண்டும் புலப்படுகிறது. நாடாளுமன்றம் விதிக்கும் ஓர் உச்ச வரம்புக்கு அது உட்பட்டதாக இருக்கும். விற்பனை வரி விதிக்க மாகாணங்களை நாம் அனுமதித்தால், மாறிவரும்

சூழ்நிலைகளுக்கேற்ப விற்பனை வரி விதிப்பு விகிதத்தை மாற்றியமைத்துக் கொள்ள அவை சுதந்திரமுள்ளதாக இருக்க வேண்டும்; எனவே, விற்பவை வரி செயல்பாட்டு முறையில் மத்திய அரசாங்கத்தின் உச்ச வரம்பு ஒரு பெரிய இடையூறாக இருக்கும். என்னுடைய நண்பர் திரு. தியாகி மாகாண சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டால், அவருடைய கருத்துக்களை அங்கு வெளிப்படுத்துவார், மக்கள் வாழ்க்கைத் தரத்தில் விற்பனை வரியின் தாக்கம் முக்கியமானதாகும் என்றும், அதன் காரணமாக மாகாண அரசாங்கங்கள் எங்கே பந்தை எறிவது என்பதில் மிகவும் கவனமாக இருக்க வேண்டுமென்றும் மாகாண அரசாங்கத்திடம் கூறி, அவருடைய கருத்துகளைச் செயல்படுத்துவார் என்பதில் எனக்கு சந்தேகமில்லை.

**திரு. மாகாவீர் தியாகி:** நான் இங்கு இருப்பது உங்களுக்கு மிகவும் தொந்தரவாக இருக்கிறதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லவே இல்லை. நான் மாகாணத்தின் பிரதம அமைச்சராக இருந்தால், உங்களுடைய கருத்தைத் தான் நானும் மேற்கொண்டிருப்பேன்.

மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் பண்டிட் குன்ஸ்ருவின் திருத்தத்தை இப்போது எடுத்துகொள்வோம். அவருடைய திருத்தத்தின் நோக்கம் நடைமுறையில் துணைவிதி(1)க்குக் கொடுக்கப்பட்டுள்ள விளக்கத்தில் நிறைவேறியுள்ளதென எண்ணத்தோன்றுகிறது. விற்பனை வரி என்பது நுகர்வு மீது விதிக்கப்படும் வரிதான் என்ற உண்மை இத்துணைவிதியில் வலியுறுத்தப்பட்டுள்ளது. எனவே, அவருடைய திருத்தம் மேலும் விஷயத்தை சீராக்கும் என்று நான் கருதவில்லை.

ஒரே ஒரு கருத்துப் பற்றித்தான் நான் ஒரு வார்த்தை கூற வேண்டியதுள்ளது என்று நினைக்கிறேன். துணை விதி (1)ல் கூறப்பட்டுள்ள ''ஏற்றுமதி செய்வதிலும் மற்றும் இறக்குமதி செய்வதிலும்'' என்னும் சொற்றொடருக்குப் பொருந்துவதை சில நண்பர்கள் விரும்பவில்லை என்பது எனக்குத் தெரியும். சரியான சொற்றொடரைத் தேர்ந்து எடுக்க வரைவுக்குழு அதிகமாக நேரத்தைச் செலவிட்டது. அக்குமுவைப் பொறுத்தவரை முடிந்த அளவுக்கு இச்சொற்றொடர் சரியாக இருக்கிறதென்று திருப்தி அடைந்தது.

இந்த விதியின் இப்பகுதிக்கெதிராகக் கூறப்பட்டுள்ள விமர்சனத்தைப் போக்கும் வகையில் இச்சொற்றொடருக்குப் பதில் வேறு சில சொற்றொடர்கள் எதையும் பயன்படுத்த முடியுமா என்பதை மேலும் வரைவுக்குழு பரிசீலனை செய்யும் என்பதையும் இங்கு குறிப்பிடத் தயாராக உள்ளேன். இத்திருத்தத்தை சபை ஏற்றுக் கொள்ளு மென்று நம்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் முன் மொழிந்துள்ளதை வாக்கெடுப்பிற்கு விடுவதற்கு முன்னால், ஒரு சில வார்த்தைகள், குறிப்பாக மாண்புமிகு நிதி அமைச்சர் எனக்கு முன்னால் இருப்பதால், கூறிக்கொள்ள ஆசைப்படுகிறேன். முன்மொழியப்பட்டுள்ள விதிக்கு ஆதரவாகவோ அல்லது எதிராகவோ எதுவும் நான் கூறவிரும்பவில்லை. ஆனால், பெருமளவில் தங்களுடைய வருவாய் ஆதாரங்கள் குறைக்கப்பட்டுள்ளன என்ற மனக்குறை மாகாணங்களில் உள்ளது என்பதை குறிப்பிட விரும்புகிறேன்; மேலும், வருவாயில் ஏழ்மையாக உள்ள மாகாணங்களில் வருமான வரியிலிருந்து கொடுக்கப்படும் பங்கு அவைகளுக்குத் திருப்தியளிப்பதாக இல்லை. வருமான வரியிலிருந்து அளிக்கப்படும் பங்கு பற்றி சபையில் பரிசீலனை செய்யும் நேரத்தில் இதனை நிதி அமைச்சர் மனதில் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன்; அவ்வாறு செய்வதால், வருவாய் மிக்க மாகாணங்களுக்கு அதிகம் அளிப்பதும், வருவாய் குறைவாக உள்ள மாகாணங்களிடமிருந்து அந்தக் குறைந்த வருவாயையும் எடுத்துக் கொள்வதும் அரசாங்கத்தின் கொள்கையாக உள்ளது என்று யாரும் குறை சொல்ல முடியாதபடி இருக்க வேண்டும்.

இப்போது பல்வேறு திருத்தங்களை வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

எல்லாத் திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன.

***(டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த அசல் திருத்தம் ஏற்றுக் கொள்ளப் பட்டது. திருத்தப்பட்டவாறு விதி 264 அ அரசியல் அமைப்புச் சட்டத்துடன் இணைக்கப்பட்டது.)***

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** விதி 280 அ-வை விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளுமாறு தங்களை வேண்டிக் கொள் கிறேன்.

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 16, 1949, பக். 342.

**பண்டிட் ஹிருதய நாத் குன்ஸ்ரூ :** இன்று இந்த விதி எடுத்துக் கொள்ளப்படுவதை நான் ஆட்சேபிக்கிறேன். இத்திருத்தம் எனக்கு இன்று காலையில்தான் கிடைத்தது. இத்திருத்தம் முக்கியமான விஷயம் பற்றியதாகும். இதனைப்படிப்பதற்கும், பின்னர் திருத்தங்கள் எதையும் நான் கொண்டு வர விரும்பினால், அவ்வாறு செய்வதற்கும் கால அவகாசம் தேவைப்படுகிறது.

**திரு. நசிருதீன் அகமது:** அத்தோடு எந்த அரசியலமைப்பிலும் காணப்படாத ஒரு புதிய வகையான 'நெருக்கடி' என்ற விஷயமும் இந்த விதியால் புகுத்தப்பட்டுள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இச்சபையின் நடவடிக்கையில் இத்தகைய துறை நுணுக்கங்கள் தடைகளாக இருக்க நீங்கள் அனுமதிக்கமாட்டீர்கள் என்று நம்புகிறேன். மதிப்பிற்குரிய உறுப்பினர் காலை 9 மணிக்கு திருத்தத்தை பெற்றிருந்தாலும் கூட ஒன்பது மணியிலிருந்து பன்னிரண்டு மணி வரை அவருக்கு அவகாசம் இருந்தது. இத்திருத்தத்தில் புரியாத விஷயம் எதுவுமில்லை. மதிப்பிற் குரிய பண்டிட் குன்ஸ்ருவைக் காட்டிலும் அறிவாற்றலில் குறைந்த மனிதன் கூட படித்தவுடன் இதனைப் புரிந்து கொள்ளமுடியும். இது பற்றி எனக்கு எவ்வித சந்தேகமுமில்லை.

**பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரூ :** இது ஒரு முக்கியமான விஷயமாகும். டாக்டர் அம்பேத்கரின் அவசரமும், நயமற்ற தன்மையும் உறுப்பினர்களின் உரிமைகள் - சபை விதிகளின் கீழ் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள தெளிவான உரிமைகள் - பறிக்கப்படுவதை அனுமதிக்கக்கூடாது. டாக்டர் அம்பேத்கர் இத்திருத்தத்தை அவசர மாக நிறைவேற்ற விருப்பப்படுவதாக இருந்தாலும்கூட, இதனைப் படித்துத் தெரிந்து கொள்ள அதிகமான நேரம் தரப்பட வேண்டுமென்பது என்னுடைய கோரிக்கையாகும்.

**திரு. அவைத் தலைவர்:** நிகழ்ச்சி நிரலில் கண்டுள்ளபடி விதி களை வரிசையாக எடுத்துக்கொள்வோம். விதி274 ஈஈ யை இப்போது விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளலாமென்று கருதுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவ்வாறு செய் வதற்கு நான் தயாராகவே உள்ளேன். ஆனால், நமக்கு நேரம் அதிகம் இல்லை என்பதை மறந்துவிடக்கூடாது. தேவைக்கு அதிகமாக துறை

நுணுக்கங்களுக்கு முக்கியத்துவம் கொடுப்பது சரியென்று நான் நினைக்கவில்லை.

**பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரு:** வரைவுக் குழுவின் தலைவர், தன்னுடைய பதவியின் அந்தஸ்துக்கேற்ப, மற்றவர்களின் உரிமைகளை மதிப்பதற்குப் பதிலாக, அவைகளைக் குறைத்து மதிப்பிடுவது பரிதாபத்துக்குரியதாகும்.

## விதி 274 ஈஈ

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** பின்கண்டவற்றை நான் முன்மொழிகிறேன்:

பட்டியல் XVII (இரண்டாவது வாரம்) திருத்தம் எண் 400 சம்பந்தமாக விதி 274ஈக்குப் பின்னர் பின்வரும் விதி சேர்க்கப்பட வேண்டும் :-

முதல் அட்டவணை பகுதி IIIல் கண்ட மாநிலங்கள் பெரு வாணிக முறையில் சரக்குகள் ஏற்றுமதி இறக்குமதிசெய்வதில் வசூலிக்கும் வரிகள் மீது கட்டுப்பாடுகள் விதித்தல்.

"274ஈஈ. இந்தப் பகுதியின் முன்கண்ட ஷரத்துகளில் அல்லது இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னர் இதர மாநிலங்களிலிருந்து இறக்குமதிசெய்யும் சரக்குகள் மீது அல்லது வேறு மாநிலங்களுக்கு ஏற்றுமதியாகும் சரக்குகள் மீது எந்தவரி அல்லது கட்டணம் வசூல் செய்யும் எந்த மாநிலமும், இந்திய அரசாங்கத்திற்கும் அந்த மாநிலத்திற்கு மிடையே ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டிருந்தால், அரசியல் சாசனம் அமலுக்கு வந்ததிலிருந்து பத்தாண்டுகளுக்குக் குறையாமல், அந்த ஒப்பந்தம் நிபந்தனைக்குட்பட்டு, வரி அல்லது கட்டணத்தைத் தொடர்ந்து விதித்து, வசூலிக்கலாம்.

ஆனால்:

அத்தகைய ஒப்பந்தம் அமலுக்கு வந்த ஐநதாண்டு முடிந்த பின்னர், அரசியல் சாசனத்தின் விதி 260 கீழ் அமைக்கப்பட்ட நிதி ஆணையத்தின் அறிக்கையை ஆய்ந்த பின்னர், அவ்வாறு செய்வது அவசியம் என்று கருதினால் எந்த நேரத்திலும் அத்தகைய ஒப்பந்தம் எதையும் குடியரசுத் தலைவர் ரத்து செய்யலாம் அல்லது மாற்றம் செய்யலாம்.

ஏற்கனவே அவை ஏற்றுக்கொண்டுள்ள விதி258க்கு இப் புதிய விதி ஒரு சாதாரணமான பின் விளைத்தொடர் திருத்தம்தான்; பகுதி III-ல் குறிப்பிடப்பட்டுள்ள மாகாணங்களுடன், சில நிதி சம்பந்தப்பட்ட சரிக்கட்டுதலை ஏற்படுத்தும் நோக்கத்தில் இந்திய அரசாங்கம் உடன்படிக்கை செய்து கொள்ளும் அதிகாரம் விதி 258 மூலம் வழங்கப் பட்டுள்ளது.

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 16, 1949, பக். 342.

(திருத்தம் 274ஈஈ ஏற்றுக் கொள்ளப்பட்டு அரசியலமைப்புச் சட்டத்துடன் இணைக்கப்பட்டது.)

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இப்போது நண்பர் மதிப்பிற்குரிய பண்டிட் குன்ஸ்ருவின் ஆட்சேபனை இல்லையென்றால், புதிய விதி 280யை எடுத்துக்கொள்ளலாம். மேற்கொண்டும் அரைமணி நேரம் அவர் எடுத்துக்கொண்டுள்ளார்.

**திரு. அவைத் தலைவர்:** அதனைப் பின்னர் எடுத்துக்கொள்வது நல்லது என்று கருதுகிறேன்.

★ ★ ★

## விதி 280அ

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பின்வருவதை முன்மொழிகிறேன்:

''விதி 280க்குப் பின்னர், கீழ்க்கண்ட புதிய விதி சேர்க்கப்பட வேண்டும்:

நிதி நெருக்கடி பற்றிய ஷரத்து

''280 அ. (1) இந்தியாவின் அல்லது அதன் ஆட்சி எல்லைப் பகுதியில் எதிலும் நிதி ஸ்திரத்தன்மை அல்லது நிதி மதிப்பு அச்சுறுத்தப்படுகின்ற ஒரு சூழ்நிலை உருவாகியுள்ளதென்று தாம் திருப்தி கொள்ளும் வகையில் குடியரசுத்தலைவர் கருதுவாரே யானால், பின் கண்ட நடவடிக்கைக்கான ஓர் அறிவிப்பை அவர் பிரகடனப்படுத்தலாம்:

(2) குறிப்பிடப்பட்ட விதி 275ன் (1) ன் கீழ் ஒரு நெருக்கடிநிலை அவசரச் சட்டம் பிரகடனப்படுத்தப்படுவதிற்குப் பொருந்துவது போன்று, இந்த அரசியல் சாசனத்தின் விதி 275 துணை விதி (அ)ன் ஷரத்துக்கள் இவ்விதியின் துணைவிதி (1) ன் கீழ் பிரகடனப்படுத்தப்படுவதற்குப் பொருந்தும்.

(3) இந்த விதியின் துணைவிதி (1)ல் கூறப்பட்ட அத்தகைய பிரகடனம் எதுவும் அமலில் இருக்கும் காலத்தில் ஒன்றியத்தின் ஆட்சித்துறை பிறப்பிக்கும் கட்டளைகளில் குறிப்பிடப்படும் நிதி ஒழுங்குக்கட்டுப்பாடுகளைக் கடைப்பிடிக்குமாறு எந்த மாநில அரசாங்கத்திற்கும் ஆணையிடலாம்; உத்தேச நோக்கத்திற்குத் தேவையான, போதுமான இதர கட்டளைகளையும் குடியரசுத் தலைவர் வழங்கலாம்.

(4) இந்த அரசியல் சாசனத்தில் என்ன குறிப்பிடப்பட்டு இருப்பினும்

(அ) அத்தகைய கட்டளை எதிலும் பின்வருபவை அடங்கும்:

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 16, 1949, பக். 345.
2. மேற்படி அதே நூல், பக். 361.

(i) ஒரு மாநில நிருவாகத்தில் பணிபுரியும் அனைவரின் அல்லது எந்த ஒரு பிரிவு நபர்களின் ஊதியம் மற்றும் படிகள் குறைக்கப்படக் கோரும் ஒரு ஷரத்து;

(ii) இந்த அரசியல் சாசனத்தின் விதி 182 ன் ஷரத்துக்கள் பொருந்து கின்ற அனைத்து பண மசோதாக்கள் அல்லது ஏனைய மசோதாக்கள் மாநிலத்தின் சட்டமன்றத்தால் நிறைவேற்பட்டபின்னர் குடியரசுத்தலை வரின் பரிசீலனைக்குச் சமர்ப்பிக்கப்படக் கோரும் ஒரு ஷரத்து;

(ஆ) இந்த விதியின் துணைவிதி (1)ன் கீழ் அறிவிக்கப்பட்ட எந்தப் பிரகடனமும் அமலிலிருக்கும் காலத்தில் மத்திய அரசாங்க நிருவாகத் தில் பணிபுரியும் உச்சநீதிமன்ற, உயர் நீதிமன்ற நீதிபதிகள் உட்பட அனைத்து பணியாளர்கள் அல்லது எந்தக்குறிப்பிட்ட பிரிவு பணியாளர் கள் ஆகியோரின் ஊதியம் மற்றும் படிகளைக் குறைக்க குடியரசுத் தலைவர் தகுந்த அதிகாரம் பெற்றவராக இருக்க வேண்டும்.

(5) இந்த விதியின் துணைவிதி (3)ன் கீழ் வழங்கப்பட்ட கட்டளைகளை நிறைவேற்றத் தவறுவது எதுவும்,இந்த அரசியல் சாசனத்தின் ஷரத்துக் களுக்கேற்ப மாநில அரசாங்கத்தை நிருவாகம் செய்யத் தவறியதாகக் கருதப்படும்.

இந்நாட்டின் தற்போதைய பொருளாதார, நிதிநிலையைக் கருத்தில் கொண்டு பார்க்கும் போது, புதிய விதி 280அ-ல் நிர்ணயிக்கப் பட்டுள்ள சில ஷரத்துகள் பற்றிய அக்கறை குறித்து விவாதம் செய்யும் உறுப்பினர் யாரும் இருக்க முடியாது. எனவே, நம்முடைய அரசிய லமைப்புச் சட்டத்தின் வரைவில் இந்த விதி சேர்க்கப்பட்டதை நியாயப்படுத்திப் பேசி நேரத்தை வீணாக்க விரும்பவில்லை. நான் செய்ய விரும்புவது எல்லாம் இதுதான் : 1930 அல்லது அதையடுத்த ஆண்டுகளில் நிறைவேற்றப்பட்ட அமெரிக்க நாட்டின் தேசிய மீட்பு சட்டத்தின் முறையினையே ஏறக்குறைய இந்த விதி பின்பற்றுகிறது. அமெரிக்கவில் ஏற்பட்ட பெரிய பொருளாதார வீழ்ச்சியின் காரண மாக ஏற்பட்ட அமெரிக்க மக்கள் அனுபவிக்கும் பொருளாதார, நிதி இடையூறுகளை நீக்குவதற்கு அமெரிக்க அதிபருக்கு அதிகாரம் வழங் கும் இத்தகைய ஷரத்துக்கள் அச்சட்டத்தில் உள்ளன. உதாரணமாக, அத்தகைய ஒரு ஷரத்தை இந்த அரசியல் சாசனத்தில் சேர்ப்பது தேவை யென நாங்கள் கருதியதின் காரண மென்னவென்றால், அமெரிக்க நாட்டின் அரசியல் சாசனத்தின் கீழ் நிறைவேற்றப்பட்ட சட்டத்திற் கெதிராக குறுகிய காலத்திலேயே உச்சநீதிமன்றத்தில் வழக்குத் தொடரப்பட்டதேயாகும். சட்டம் முழுவதும் அரசியல் சாசனத்திற்கு முரண்பட்டவையென உச்ச நீதிமன்றம் தீர்ப்பளித்தது. அதனால், உச்சநீதிமன்றத்தின் தீர்ப்பிற்குப் பின்னர், தேசிய மீட்பு சட்டத்தின் ஷரத்துகளின்கீழ் அமெரிக்க அதிபர் விரும்பும் எதையும் செய்ய இயலாது. நமது குடியரசுத் தலைவரும் இம்மாதிரியான ஒரு நிதி,

பொருளாதார நெருக்கடியைச் சந்திக்க வேண்டியது இருந்தால், அவருக்கு ஏற்படக்கூடிய இவ்வகையான இக்கட்டு, இடையூறு களைத் தவிர்க்கும் நோக்கத்துடன் அரசியல் சாசனத்தில் வெளிப்படை யாகவே ஒரு ஷரத்தினை வரைந்திடுவது சாலப் பொருந்துமென நாங்கள் கருதினோம். அதன் காரணமாகவே இந்த விதி கொண்டு வரப்பட்டுள்ளது.

★ ★ ★

*திரு. அவைத் தலைவர் :* நீங்கள் எதுவும் சொல்ல வேண்டுமா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* நீங்கள் அவசிய மென்று கருதினால் நான் பேசுகிறேன்.

*திரு. அவைத் தலைவர் :* இல்லை, இல்லை. நான் அவ்வாறு சொல்லவில்லை. திருத்தத்தை வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

*திரு. எச்.வி.காமத்:* ''அச்சுறுத்தப்பட்ட'' என்ற வார்த்தையை ''மிகவும் பயங்கரமாக அச்சுறுத்தப்பட்ட'' என்று மாற்ற டாக்டர் அம்பேத்கர் பரிசீலிக்கலாம் என்று கூறுகிறேன்.

*திரு. அவைத் தலைவர்:* உங்களது யோசனையை கூறி இருக் கிறீர்கள், அது பரிசீலனைக்குரியதா என்பதை அவர் கவனிப்பார். டாக்டர் அம்பேத்கருக்கு ஆலோசனை கூறுவதாகச்சொல்லி, இரண் டாவது முறையாக நீங்கள் பேசுவதற்கு அனுமதிக்க முடியும் என்று நான் கருதவில்லை.

*சிரஜத் ரோகிணிகுமார் செளத்ரி (அஸ்ஸாம் : பொது):*நான் ஒரே ஒரு வார்த்தை மட்டும் கூற விரும்புகிறேன்.

*திரு. அவைத் தலைவர் :* விவாதத்தை நான் ஏற்கனவே முடித்து விட்டேன்.

*(எட்டுத் திருத்தங்களும் நிராகரிக்கப்பட்டன. டாக்டர் அம்பேத்கரின் முதல் திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. விதி 280-அ அரசியல் சாசனத்தில் இணைக்கப் பட்டது.)*

★ ★ ★

**திரு.பி. தாஸ்:** இந்திய ஆட்சிப் பகுதியிலுள்ள தீர்ப்பாயம் வருமான வரித் தீர்பாயம் அல்லது இப்போதுள்ள பல்வேறு இரயில்வே தீர்ப்பாயங்களுக்கு பொருத்துமா என்பதை டாக்டர் தெளிவுபடுத்த வேண்டும். அதன் அதிகாரம் விஸ்தரிக்கப்படுமானால், வருமான வரித் தீர்ப்பாயம் உடனடியாகக் கலைக்கப்பட வேண்டும். வருமான வரித் தீர்ப்பாயம் அதன் துறையில் இறுதி அதிகாரம் படைத்ததாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த விவாதத்திற்கு இவை தொடர்புள்ளவையா? வருமான வரித்தீர்ப்பாயம் பற்றி பேசுவதற்கு இங்கு என்ன இடமுள்ளது?

**திரு.பி. தாஸ்:** இந்த விதியில் பின் வருமாறு கூறப்பட்டுள்ளது:

> ''இந்தியாவின் ஆட்சிப் பகுதியில் எந்த நீதிமன்றம் அல்லது எந்தத் தீர்ப்பாயம் எத்தகைய விஷயத்திலும் அல்லது வழக்கிலும் அளித்துள்ள தீர்ப்பு, முடிவு, தண்டனை, அல்லது தீர்ப்பு ஆணையை எதிர்த்து மேல் முறையீடு செய்ய உச்ச நீதிமன்றம் தன் உசிதம் போல் சிறப்பு அனுமதி வழங்கலாம்''

'தீர்பாயம்' என்பது வருமான வரித் தீர்ப்பாயம் என்று பொருள் படாது என்ற உறுதியை நீங்கள் அளிக்க வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி. ஆர். அம்பேத்கர்:** நீங்கள் இதர பணியாளர் பற்றியும் கூறினீர்கள் உச்ச நீதிமன்றத்தில் வருமான வரி வழக்குகளையும் எடுத்துக் கொள்ள வகை செய்யும் ஷரத்தினைச் சேர்ப்பதற்கு இது திருத்தப்பட்டுள்ளது என்பது எனக்கு ஞாபகமிருக்கிறது. அவ்வாறே திருத்தப்பட்டுள்ளது என்பதும் எனக்குத் தெரியும்.

**பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா :** ஐயா, துணைவிதி (2)மிகவும் விரிவாக உள்ளது; அது தேவையற்றது என்பது எனது தாழ்மையான கருத்தாகும். இதன் வாசகம் வருமாறு:

> ''ஆயுதப்படைகள் சம்பந்தப்பட்ட எத்தகைய சட்டத்தின் கீழ் அல்லது சட்டத்தினால் அமைக்கப்பட்ட எத்தகைய நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயம் வழங்கிய அல்லது நிறைவேற்றிய தீர்ப்பு, விவாத முடிவு, தண்டனை அல்லது ஆணைக்கு ''இந்த விதியின் துணைவிதி (1)ல் கண்டுள்ள எதுவும் பொருந்தாது''.

இராணுவ அலுவலர்கள் மற்றும் இராணுவக் குற்றங்கள் பொறுத்தவரை உச்ச நீதிமன்றத்தின் அதிகார வரம்பிலிருந்து அவை

காப்புரிமை பெற்றவையாக இருக்கலாம்; ஆனால் அந்தச் சட்டங்களின் கீழ் அமைக்கப்பட்ட நீதிமன்றங்களின் தீர்ப்புகள் இராணுவ படைகள் சம்பந்தப்பட்ட பல சட்டங்களுக்கு உடன்பட்டவையாக உள்ளன. அத்தகைய வழக்குகளில் குற்றம்சாட்டப் பெற்றோர் இராணுவ படையைச் சாராத மக்கள் அல்லது சிவில் வழக்குகளில் குற்றம் சாட்டப்பட்டவர்களாக உள்ளனர். சொல்லப்போனால், படையினர் குடியிருப்புச்சட்டம் அல்லது பிராந்திய படைகள் சட்டம் பற்றிய வரை, படை சாராதவர்கள் மீது சாட்டப்பட்ட சில குற்றச் சாட்டுகள் உள்ளன; எனவே, உச்ச நீதிமன்றத்தின் அதிகார வரம்புக்குள் இத்தகைய தண்டனைகள் ஏன் கொண்டுவரப்படக்கூடாது என்பதற்குத் எவ்வித காரணமும் இல்லை. இந்த துணைவிதியில் அளவுக்கு அதிகமாக வார்த்தைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதற்குத் திருத்தம் தேவையாகும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** தலைவர் அவர்களே, மதிப்பிற்குரிய நண்பர் திரு டி.டி. கிருஷ்ணமாச்சாரி முன்மொழிந்த விதிபற்றி என்னுடைய நண்பர் பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா சில கருத்துக்களைக் கூறியிருப்பதால், இதற்கு சிறிது விளக்கம் அளிக்க வேண்டியது என்னுடைய கடமையாகும்.

விதி112ஐயும், பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா முன்மொழிந்த திருத்தத்தையும் நாங்கள் பரிசீலனை செய்தபோது, இராணுவ நீதிமன்றம் அளித்த எத்தகைய தீர்ப்பிற்கும் எதிரான மேல்முறையீட்டை அனுமதிப் பதற்கு உச்ச நீதிமன்றத்திற்கு, விதி 112 கீழ் அதிகாரம் இருக்குமென்று நான் கூறியது உண்மைதான். தத்தவ ரீதியாகவும் இக்கருத்து இன்னும சரியானதாகும்; இதுபற்றி என் மனதில் சந்தேகம் எதுவுமில்லை, ஆனால் நான் சொல்ல மறந்துவிட்டது இதுதான்: பிரிவி கவுன்சில் உள்ளிட்ட, பிரிட்டில் நீதிமன்றங்கள், நம்முடைய உயர் நீதிமன்றங்கள் அளித்துள்ள தீர்ப்பகளின் படி, சட்டத்தின்கீழ் சிவில் நீதிமன்றங் களுக்கு அதிகாரம் வரம்பு இருந்தாலும், இராணுவ நீதிமன்றம் அளித்த எந்தத் தீர்ப்பையும் அல்லது முடிவையும் அல்லது ஆணையையும் தங்களுடைய அதிகார வரம்பு மூலம் இடையிட்டுத் தடுக்க மாட்டா என்பது அங்கீகரிக்கப்பட்ட கொள்கையாகும். உயர் அதிகாரம் படைத்த உரிமையியல் நீதிமன்றங்கள், இத்தகைய அதிகார வரம்பு பெற்று இருந்தாலும், அந்த அதிகார வரம்பினைப் பயன்படுத்த

மாட்டோம் என்று கூறியிப்பதற்கான காரணமென்ன என்பதை ஆய்ந்திட விரும்பவில்லை. ஆனால், உண்மை அதுதான்.

பிரபுக்கள் சபை, பிரிட்டிஷ் உயர் நீதிமன்றப் பிரிவு மற்றும் பிரிவு கவுன்சில் போன்ற பிரிட்டிஷ் நீதிமன்றங்கள் அளித்துள்ள முடிவினையும் அதேபோல் இரண்டு அல்லது மூன்று வழக்குகளில் நமது சமஷ்டி நீதிமன்றம் அளித்துள்ள முடிவினையும் நமது நீதிமன்றங்களும் பின் பற்றினால், துணை விதி (2)க்கு அவசியமில்லாது போயிருக்கும். ஆனால் துரதிர்ஷ்டவசமாக, சந்தேகத்திற்குரிய நிலையில் இந்த முக்கியமான விஷயம் விட்டுவிடக்கூடாது என்று பாதுகாப்பு அமைச்சகம் உணர்கிறது; மற்றும் ஆயுதப் படைகள் சம்பந்தப்பட்ட சட்டத்தின்கீழ் அமைக்கப்பட்ட தீர்ப்பாயம் அல்லது நீதிமன்றத்திற்கு எதிராக உயர் உரிமையியல் நீதிமன்றங்களாக உள்ள உயர் நீதிமன்றமோ அல்லது உச்ச நீதிமன்றமோ இத்தகைய அதிகார வரம்பினைச் செலுத்தக்கூடாது என்று கூறும் ஒரு சட்ட ரீதியான ஏற்பாடு இருக்க வேண்டும் என்று அது கருதுகிறது.

இது ஒரு தத்துவரீதியான கேள்வி மட்டுமல்ல. இது ஆயுதம் தாங்கிய படைகளின் கட்டுப்பாடு சம்பந்தப்பட்ட விஷயமாகையால், இது ஒரு நடைமுறை முக்கியத்துவம் பெற்ற விஷயமாகவும் உள்ளது. ஆயுதப்படைகள் சம்பந்தமாக ஏதேனும் கூற வேண்டுமானால் அதன் கட்டுப்பாட்டை நிலைநிறுத்தும் அவசியம் என்றுதான் சொல்ல வேண்டும். ஆயுதப்படையின் கட்டுப்பாட்டை நிலைநிறுத்துவதற்காக ஏற்படுத்தப்பட்ட ஒரு நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயத்தின் முடிவுக் கெதிராக நீதிகோரி உச்ச நீதிமன்றம் அல்லது உயர்நீதிமன்றத்தை ஆயுதப்படையைச் சேர்ந்த ஒரு நபர் அனுகினால், கட்டுப்பாடு என்பது மறைந்து போய்விடுமென்று பாதுகாப்புத்துறை அமைச்சகம் கருதுகிறது. இந்த வாதத்திற்கெதிராக எத்தகைய பதிலும் இருக்க முடியாது என்பதை நான் கூறியாக வேண்டும். இக்குறிப்பிட்ட திருத்தம் மூலம் விதி112ல் துணைவிதி (2)சேர்க்கப்பட்டிருப்பதற்கு இதுதான் காரணமாகும்.

உயர் நீதிமன்றங்கள் மேற்பார்வையிடும் அதிகாரம் சம்பந்தமாக இதே மாதிரியான ஒரு ஷரத்தும் அமைக்கப்பட்டுள்ளது. விதி 112ல் துணை விதி (2)யைச் சேர்ப்பது ஏன் என்பதை நியாயப்படுத்துவதற்கு நான் அளிக்கும் காரணம் இதுதான்.

இருப்பினும், உயர் நீதிமன்றம் அல்லது உச்ச நீதிமன்றத்தின் அதிகாரங்களை துணை விதி (2) முற்றிலும் நீக்கிவிடவில்லையென் பதை நான் கூறவேண்டும். ஒரு குறிப்பிடப்பட்ட சட்டத்தின்படி அமைக்கப்படும் தீர்ப்பாயத்தின் அதிகாரக் கரத்தில் ஆயுதப்படை யின் உறுப்பினர் ஒருவரை முற்றிலும் சட்டம் விட்டு விடவில்லை. ஏனெனில், விதி 112ன் துணைவிதி (2)ல் என்ன கூறப்பட்டிருந் தாலும், ஆயுதப்படைகள் சம்பந்தப்பட்ட சட்டம் அளித்துள்ள அதிகார வரம்பை மீறி ராணுவ நீதிமன்றம் நடந்து கொள்ளுமானால் அப்போது உச்ச நீதிமன்றமோ அல்லது உயர் நீதிமன்றமோ இதில் தலையிட உரிமை உண்டு.

இத்தகைய ராணுவ நீதிமன்றத்தை அல்லது தீர்ப்பாயத்தை உருவாக்கிய சட்டத்தின் வரம்பிற்குட்பட்டு தனது சட்ட வரம்பினைப் பயன்படுத்தியுள்ளதா என்பதை உயர்நீதிமன்றமும் உச்ச நீதிமன்றமும் பரிசீலனை செய்ய அவைகளுக்கு வழிவகை உண்டு. இரண்டாவதாக, சாட்சியம் எதுவுமின்றி, ராணுவ நீதிமன்றம் தனது தீர்ப்பை அளித் தால், அப்போதும் கூட, சாட்சியம் எதுவுமிருக்கிறதா என்பதைப் பரிசிலனை செய்யக்கோரும் மேல் முறையீட்டை உயர்நீதிமன்றமும் உச்சநீதிமன்றமும் அனுமதிக்கலாம்.

உண்மையில் பார்த்தால், போதுமான சாட்சியம் உள்ளதா என்பதைப் பரிசீலனை செய்ய உயர்நீதிமன்றம் அல்லது உச்சநீதி மன்றத்திற்கு வழிவகை இல்லைதான். இவ்விரு நீதிமன்றங்களின் சட்ட அதிகார வரம்பிற்கு அப்பாற்பட்டுள்ள விஷயமாகும் இது. சாட்சியம் இருக்கிறதோ இல்லையோ, அவை அந்த நீதிமன்றங்கள் அனுமதிக்கும் விஷயங்களாகும். அதே மாதிரியாக, சொல்ல வேண்டு மானால், தனக்கெதிராக மேற்கொள்ளப்பட்ட ராணுவ நீதிமன்றத் தின் நடவடிக்கைகள் நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தின் கீழ் எடுக்கப்பட்டுள்ளதா அல்லது விதிக்கட்டின்றி எடுக்கப்பட்டுள்ளதா என்பதை விசாரிக்க சிறப்புரிமை பேராணைகள் வழங்க நீதிமன்றங் களுக்கு அவர் மேல் முறையீடு செய்யலாம். எனவே, பாதுகாப்பு அமைச்சகம் எழுப்பிய இடர்ப்பாடுகளைக் கருத்தில் கொண்டு பார்க்கும் போது இது ஒரு தேவையான் விதி என்பதே என்னுடைய கருத்தாகும். இதைத் தவிர வேறு எதனையும் உண்மையில் இது செய்யவில்லை. அனைத்து உயர்நிலை நீதிமன்றங்களும் அங்கீகரித் துள்ள, ஏற்கெனவே உள்ள விதி ஒன்றுக்கு சட்ட முனையிலான அங்கீ காரத்தை அளிப்பதேயாகும் இது.

ஆயுதப்படை சம்பந்தப்பட்ட சட்டம் குறித்து சில உறுப்பினர்கள் சிறிது கவலை கொண்டுள்ளதாக என்னிடம் சொன்னார்கள் ஆயுதப்படையில் நேரடியாகப் போர்ப்பணியில் ஈடுபடுபவர்களும் போர்ப் பணி அல்லாதவற்றில் ஈடுபடுபவர்களும் இருப்பதாகச் சொல்லப்பட்டது. ராணுவச் சட்டத்தின்கீழ் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்கும், ஆயுதம் தாங்கி இருப்போருக்குமிடையிலே வேறுபாட்டைக் காண்பது முற்றிலும் இயலாத காரியமென்று எனக்குத் தோன்றுகிறது; ஆயுதப் படையில் கட்டுப்பாடு எவ்வாறு பெரிதும் தேவைப்படுகிறதோ போர்ப் பணி அல்லாதவற்றில் ஈடுபடுபவர்களிடையிலும் கட்டுப்பாட்டைப் பராமரிப்பது பெரிதும் அவசியமாகிறது.

என்னுடைய நண்பர் திரு. சித்வா, ஆயுதப் படையைச் சேர்ந்த ஒருவர் சில குற்றத்தைச் செய்யும் போது, கண்மூடித்தனமாக கார் ஓட்டி ஒருவரைக் கொன்று விடுவது அல்லது அது போன்ற குற்றத்தைச் செய்யும்போது, அவர் பொதுவாக ராணுவ நீதிமன்றத்தில் விசாரிக்கப்படுகிறார். சாதாரண குற்றவியல் நீதிமன்றத்தின் முன் நிறுத்தி அவர் மீது குற்ற விசாரனை செய்ய எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படுவதில்லை என்று கூறினார். அப்படியா; இது எனக்குத் தெரியாது. ஆயுதப்படையைச் சேர்ந்த ஒரு நபரைப் பொறுத்தவரை, இரண்டு நீதிமன்ற விசாரணைக்கு உட்படுத்தப்படுகிறார் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை. அவர் இராணுவச் சட்டத்தின்கீழ் அமைக்கப்பட்ட நீதிமன்றத்தின்சட்ட வரம்பிற்குட்பட்டவராக உள்ளார்என்பதிலும், அதே நேரத்தில் நாட்டின் சாதாரணச் சட்டத்தின் கீழ் அவருக்கு விதிவிலக்கு எதுவும் கொடுக்கப்படுவதில்லை என்பதிலும் எத்தகைய ஐயமும் இல்லை. உதாரணமாக இந்திய தண்டனைச் சட்டப்படியும் ராணுவச் சட்டப்படியும் குற்றம் ஒன்றை ஒரு மனிதன் செய்துவிட்டால் இவ்விரு சட்டங்களின்படியும் அவன் மீது வழக்குத் தொடரலாம். இத்தகைய வழக்கிலிருந்து இராணுவத்தைச் சேர்ந்த ஒருவர் தப்பித்துக் கொண்டால், இது விஷயம் பற்றி மக்கள் தொடர் நடவடிக்கை எதுவும் மேற்கொள்ளாததுதான் காரணமாகும். ஒருவர் ஆயுதப்படையிலுள்ளவர் என்ற காரணத்திற்காக நாட்டின் சாதாரணச் சட்டம் மூலம் குற்றச்சாட்டப்படுவதிலிருந்து அவர் தப்பித்துக் கொள்ள முடியாது என்பதுதான் சட்டத்தின் பொதுவான தத்துவமாகும்; அவர் தண்டிக்கப்படுவதற்கு உரியவராகவே தொடர்ந்து இருக்கிறார், இச் சட்டக் கட்டுப்பாடுடன், அவர் சேர்ந்துள்ள பணி சம்பந்தப்பட்ட சட்டத்தின் படியும் கட்டுப்பட்டவராக உள்ளார்.

**திரு. மகாவீர் தியாகி:** ஒரு குற்றத்திற்கு அவர் இரண்டு தண்டனையை அனுபவிக்க வேண்டுமா?

**மாண்புமிகு பி.ஆர். அம்பேத்கர் :** ஆம்.

**ஸ்ரீ ஆர்.கே. சித்வா:** இதுபற்றி சற்றுத் தெளிவாகக் கூறக் கூடாதா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது முற்றிலும் தெளிவாகவே இருக்கிறது. இந்திய தண்டனைச் சட்டத்தின் பிரிவு 2 கூறுகிறது: ''ஒவ்வொரு நபரும்'' என்பது உயர்ந்தவர் அல்லது தாழ்ந் தவர், படையில் பணிப்புரிபவர் அல்லது படையில் பணிப்புரியா தவர் என்றே பொருள்படும்.

**திரு. அவைத் தலைவர்:** திரு டி.டி. கிருஷ்ணமாச்சாரி, இதற்குப் பின்னர் நீங்கள் எதுவும் கூற விரும்புகிறீர்களா?

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி :** இல்லை.

**திரு. அவைத் தலைவர் :** திருத்தங்களை வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

*(திருத்தம் நிராகரிக்கப்பட்டது.)*

திருத்தம் எண் 421ல் கூறியுள்ள விதி 112 யை முன்வைக்கிறேன். அது வருமாறு:

உச்ச நீதிமன்றத் தின்மேல்முறை யீடு சிறப்பு அனுமதி

''பட்டியல் XVன் திருத்தம் எண் 364ஐ இரண்டாவது வாரம் பொறுத்தமட்டில் பின்கண்ட விதி சேர்க்கப்பட வேண்டும்:-

112 (1) இந்திய ஆட்சி எல்லைக்குட்பட்ட பகுதியிலுள்ள எந்த நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயம் எந்த வழக்கு அல்லது விஷயத் தின் மீது வழங்கிய அல்லது நிறைவேற்றிய தீர்ப்பு, தீர்ப்பாணை, முடிவு, தண்டனை அல்லது ஆணையை எதிர்த்து மேல்முறையீடு செய்ய, தனது விடுப்பு அதிகார அடிப்படையில் உயர்நீதிமன்றம் சிறப்பு அனுமதி வழங்ககலாம்.

(2) ஆயுதப்படை சம்பந்தப்பட்ட எந்த சட்டத்தினால் அல்லது அச்சட் டத்தின் கீழ் அமைக்கப்பட்ட நீதிமன்றம் அல்லது நடுவர் மன்றம் எதுவும் வழங்கிய அல்லது நிறைவேற்றிய தண்டனை அல்லது வாத முடிவுக்கும் இந்த விதியின்துணைவிதி (1)ல் கண்ட எதுவும் பொருந்தாது.

பிரேரணை ஏற்றுக்கொள்ளப்பட்டது

(திருத்தப்பட்டவாறு அரசியல் சாசனத்துடன் விதி 112 சேர்க்கப் பட்டது.)

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** துணைவிதிகள் விவாதத்தின் இறுதிக் கட்டத்தில் இப்போது நாம் இருக்கிறோம். நான்கு அல்லது ஐந்து துணைவிதிகள் பற்றி வாதம், பிரதிவாதம் தேவை இல்லை.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** சபை முன் வைக்கப்பட்ட சில திருத்தங்கள் முக்கியத்துவம் பெற்றவை. அவைகள் பற்றி முழுமையாக விவாதிக்க வேண்டுமென்று நினைக்கிறேன். தலைவர் முடிவுக்கு இவ்விஷயத்தை விட்டு விடுகிறேன். பொருள் தெளிவாகவும், சுருக்கமாகவும் இருப்பதற்கு ''நாடாளுமன்றத்தால் உருவாக்கப் பட்ட'' என்ற வார்த்தைகள் முற்றிலும் இன்றியமையாதவை என்று நினைக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** (பம்பாய் : பொது): என் நண்பர் திரு. சந்தானம் கொண்டுவந்துள்ள திருத்தம் முற்றிலும் தேவையற்றது. விதி 60ல் கூறப்பட்டுள்ள ஷரத்துக்களை அவர் கருத்தில் கொள்ள மறந்துவிட்டதன் காரணமாக இத்திருத்தத்தை அவன் முன் மொழிந்துள்ளார். நாடாளுமன்றம் சட்டம் இயற்றும் அதிகாரத்துக் குட்பட்ட அனைத்து விஷயங்களுக்கும் ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரம் விஸ்தரிக்கப்படும் என்று விதி 60 கூறுகிறது. அதாவது, ஒருங்கியல் பட்டியலில் கண்டுள்ள மாநில சட்டமன்றங்கள் இயற்றும் சட்ட அதிகாரத்திற்குட்பட்டவை மீது இந்த அதிகாரம் விஸ்தரிக்கப்பட மாட்டாது என்ற நிபந்தனைக்குட்பட்டதாகும்; இருப்பினும், அவ் விஷயங்கள் குறித்து நாடாளுமன்றம் சட்டம் இயற்றினால், ஒன்றியத்தின் அத்தகைய ஆட்சி அதிகாரம் அவ்விஷயங்களுக்கு விஸ்தரிக்கப் படும். எனவே நண்பர் திரு. கிருஷ்ணமாச்சாரி விதி 59ன் துணைவிதி (1) உபவிதி (அ)ல் முன்மொழிந்துள்ள திருத்தம், நாடாளுமன்றம் சட்டம் இயற்றும் அதிகார வரம்புக்கு மீறியதாக இருக்காது.

**மாண்புமிகு கே. சந்தானம்:** அச்சட்டங்களுடன் மட்டும் இந்த விதி வரையறுத்துக் கொள்ளவில்லை; அது மேலும்கூட விஸ்தரிக்கப் படும்.

---

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 17, 1949, பக். 390.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இல்லை, அது மேலும் விஸ்தரிக்கப்படாது. உப விதியில் திருத்தம் கொண்டு வருவதற்கான அவசியம் இதுதான் : பட்டியல் Iல் குறிப்பிட்டுக் கூறப்பட்டுள்ள பொருள்கள் மீது மத்திய அரசாங்கத்தின் ஆட்சி அதிகாரம் விஸ்தரித்து இருப்பதோடு மட்டுமின்றி, பட்டியல் IIIல் கூறப்பட்டுள்ள பொருள்கள் மீதும் விஸ்தரிக்கப்படுத்தப்படலாம். பட்டியல் IIIல் கூறப்பட்டுள்ள எப்பொருள் பற்றியும் நாடாளுமன்றம் சட்டம் எதையும் நிறைவேற்றும் போது, அச்சட்டம் மத்திய அரசாங்கத்திற்கு ஆட்சி அதிகாரத்தை அளித்தால், குடியரசுத் தலைவர் இடைக்காலத் தடையளிக்கும் அவரின் அதிகாரம், அச்சட்டத்திற்கும் விஸ்தரிக்கப்படும். எனவே, இத்தகைய வார்த்தைகள் தேவை இல்லை. மாண்புமிகு திரு. சந்தானத்தின் திருத்தம் முற்றிலும் தேவையற்றது; அப்பொருள் பற்றி விதி 60ல் கூறப்பட்டுள்ளது.

(திரு. சந்தானத்தின் திருத்தம் நிராகரிக்கப்பட்டது.)

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நண்பர் திரு. கிருஷ்ணமாச்சாரி முன் மொழிந்த ஷரத்து பழையது. 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச்சட்டத்தின் கீழ் மாகாணங்களின் ஆளுநர்களுக் களிக்கப்பட்ட செயல்முறைக் கட்டளைகளில் இது குறிப்பிடப் பட்டுள்ளது. செயல்முறைக் கட்டளைகளின் பத்தி 17 பின்வருமாறு கூறுகிறது:

> மசோதாக்களை நிறுத்திவைக்கும் அவருடைய பொதுவான அதிகாரங் களுக்குப் பாதிப்பு எதுவும் இல்லாமல் எம்முடைய பெயரில் எமது அரசாங்கம் அதற்கு ஒப்புதல் அளிக்காது, எந்த மசோதாவும் அல்லது அதில் குறிப்பிட்டுள்ள ஷரத்துக்கள் எவற்றுக்கும் ஏற்பு இசைவு அளிப்பதை கவர்னர் ஜெனரல் பரிசீலனைக்கு நிறுத்தி வைக்கும்; உதாரணமாக
>
> (ஆ) உயர் நீதிமன்றம் நிறைவேற்றும் வகையில் அந்த நீதிமன்றத்திற்கு சட்டம் அளித்துள்ள நிலைக்கு ஆபத்து விளைவிக்கும் வகையில் எந்த மசோதாவும் சட்டமாக்கப்படும்போது உயர்நீதிமன்றத்தின் அதிகாரங் களைப் பாதிக்குமென்று அவர் கருதும் எந்த மசோதாவும்.''

இந்த ஷரத்து வரைவுக்குழு நான்காவது அட்டவணையில் சேர்க்கும் உத்தேசத்துடன் அப்படியே நகல் செய்துள்ள செயல்முறைக் கட்டளைகளே தவிர வேறல்ல. திருத்தங்கள் தொகுதி IIல் பக்கங்கள்

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 17, 1949, பக். 393-94.

368-369ல் இதனைக் காணலாம். நான் அப்போது கூறிய காரணங் களுக்காக, என்னுடைய பரிந்துரையின் பேரில் பகுதி Iல் மாநிலங் களின் ஆளுநர்களுக்கான செய்முறைக் கட்டளைகளை அடங்கிய அத்தகைய அட்டவணை எதுவும் தேவையில்லை என்ற முடிவுக்கு இச்சபை வந்துள்ளது. இருப்பினும், உத்தேசித்துள்ள செயல்முறைக் கட்டளைகளின் குறிப்பிட்ட பகுதி அடங்கிய பத்தி 17, அரசியல் சாசனத்தில் எப்படியும் இணைத்துக்கொள்ளப்பட வேண்டுமென்று வரைவுக்குழு உணர்ந்தது. இவ்வாறு செய்வதற்கான காரணங்கள் வருமாறு.

உயர் நீதிமன்றங்கள் மத்திய அரசாங்கம் மாகாண அரசாங்கங் களின் கீழ் வருகின்றன. உயர்நீதிமன்றத்தின் அதிகார வரம்பு, அதன் அமைப்பைப் பொறுத்தவரை, அவை சந்தேகத்திற்கு இடமின்றி மத்திய அரசாங்கத்தின் கீழ்வரும். உயர்நீதிமன்றத்தின் அமைப்பை அல்லது அதிகார வரம்பை மாற்றிட மாகாண அரசாங்கத்திற்கு அதிகாரம் இல்லை, ஆனால், பட்டியல் IIல் கூறப்பட்ட எந்த விஷயங் கள் குறித்த அதிகாரம் பற்றியும், நிதி அதிகாரம் பற்றியும் புதிய அர சியல் சாசனத்தின்படி மாநில அரசாங்கத்திடம் அதிகாரம் கொடுக்கப் பட்டுள்ளது. உதாரணமாக, உயர்நீதிமன்றம் அனுமதிக்கும் வழக்கின் மதிப்பை உயர்த்தி, உயர்நீதிமன்றத்தின் நிதி அதிகார வரம்பை ஒரு மாநில சட்டப் பேரவை ஒரு மசோதாவை நிறைவேற்றி, எளிதாகக் குறைத்து விடமுடியும். உயர்நீதிமன்றத்தின் அதிகாரத்தை மாநில அரசாங்கம் குறைத்து விடுவதற்கு அது ஒரு முறையாக இருக்கலாம்.

இரண்டாவதாக, பட்டியல் IIல் கண்ட எந்தப் பதிவுகளின் கீழ் எந்தச்சட்டமும் நிறைவேற்றி - உதாரணமாக கடன்தள்ளுபடி அல்லது இத்தகைய வேறு சட்டம் எதுவும் - எந்த நீதிமன்றம் அல்லது வாரியம் வழங்கும் தீர்ப்பே இறுதியானது, முடிவானது என்றும், அவ்விஷ யத்தில் உயர்நீதிமன்றத்திற்கு எவ்வித அதிகாரமும் முற்றிலும் இல்லையென்றும் மாகாணங்கள் கூறலாம்.

அத்தகைய சட்டம் அரசியல் சாசனம் உயர்நீதிமன்றத்திற்கு அளிக்க விரும்புகிற அதிகாரத்தை குறைத்து விடுவதற்குச் சமமாகு மென்று எனக்குத்தெரிகிறது. எனவே, அத்தகைய சட்டம் இறுதி யாக்கப்படுவதற்கு முன்னர், அச்சட்டம் நடைமுறைக்கு வர அனுமதிக் கப்படலாமா என்பது பற்றி அல்லது அச்சட்டம் உயர்நீதிமன்றத் தின் அதிகாரத்தை பெரிதும் குறைத்து, உயர்நீதிமன்றம் உயிரற்ற சிப்பி

போன்று ஆக்கப்பட்டுவிடுமா என்பது பற்றி பரிசீலனை செய்ய குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் இருக்க வேண்டும்.

குடிமக்களுக்கிடையிலும், சட்டப் பேரவை, ஆட்சித்துறை ஆகியவற்றிற்கு இடையிலும் ஏற்படும் தகராறுகள் பற்றி தீர்ப்பளிக்கும் ஒரு முக்கிய அமைப்பாக உயர்நீதிமன்றம் வேண்டுமென்று அரசியல் சாசனம் உத்தேசித்துள்ளபடியால்,அரசியல் சாசனத்தால் உருவாக்கப்படும் ஒரு முக்கிய அமைப்பைப் பராமரித்திட குடியரசுத் தலைவருக்கு இத்தகைய அதிகாரம் அளிப்பது மிக மிக அவசியம் என்று பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** வாசகத்தை எளிமையாக்க நான் கூறிய யோசனை பற்றி என்ன சொல்லுகிறீர்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** திருத்த வரைவுகள் எவற்றையும் இப்போது என்னால் பரிசீலனை செய்ய முடியாது.

**திரு. எச்.வி.காமத்:** சரி, பின்னர் ஒரு கட்டத்தில் பரிசீலனை செய்யுங்கள்.

**திரு. அவைத் தலைவர்:** வாக்கெடுப்பிற்கு இதனை விடுகிறேன்.

(திரு.டி.டி. கிருஷ்ண்மாச்சாரியின் திருத்தம்)

திருத்தம் இதுதான்:

"விதி175க்கு பின் வரும் காப்புவாசகம் சேர்க்கப்படவேண்டும்:

எந்த ஒரு விஷயம் சட்டமாக்கப்பட்டால் அது உயர்நீதிமன்றத்தின் அதிகாரங்களைக் குறைக்கும், அந்த நீதிமன்றத்திற்கு இந்த அரசியல் சாசனம் அளிக்க உத்தேசித்துள்ள அந்தஸ்துக்கு அது இடர் உண்டாக்கும் என்று ஆளுநர் கருதினால், அதற்கு இசைவு அளிக்காமல். குடியரசுத் தலைவரின் பரிசீலனைக்கு அதனை அவர் நிறுத்திவைக்க வேண்டும்.

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர், நீங்கள் பதிலளிக்க விரும்புகிறீர்களா?

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 17, 1949, பக். 402.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** விதி 8யுடன் இந்த விதியையும் சேர்த்துப் பொருள் கொள்ள வேண்டும்.

விதி 8 கூறுவதாவது -

> ''இந்த அரசியல்சாசனம் இந்திய ஆட்சிப்பகுதியில் அமலுக்கு வருவதற்கு முன்னர் நடைமுறையிலிருந்த எல்லாச் சட்டங்களும், இப்பகுதியின் ஷரத்துகளுக்கு முரண்பட்டவையாக இருக்குமானால், அத்தகைய முரண்பாடுகள் தவிர்க்கப்பட வேண்டும்."

மேலும், இந்த விதி கூறுவது எல்லாம் இதுதான்: அவதூறுகள், பொய்க் குற்றச்சாட்டுகள், பழித்துறை மற்றும் தகைமைக்கும் பண்பாட்டுக்கும் ஒழுக்கப் பண்புக்கும் தீங்கு உண்டு பண்ணக்கூடிய விஷயங்கள் காப்பிற்கு குநற்தகம் விளைவிக்கக்கூடிய வேறு எந்த விஷயங்கள் குறித்த சட்டங்களும் அல்லது நாட்டின் பாதுகாப்புக்குக் குந்தகம் விளைவிக்கக்கூடிய வேறு அந்த விஷயங்கள் குறித்த சட்டங்களும் விதி 8னால் பாதிக்கப்படமாட்டா. அதாவது அவை தொடர்ந்து செயலில் இருக்கும். நீதிமன்ற அவமதிப்பு என்ற வார்த்தைகள் இல்லாவிட்டால், நீதிமன்ற அவமதிப்பு சம்பந்தப் பட்ட எந்த சட்டத்திற்குள் விதி 8 பொருந்தும்; மற்றும் அது நீக்கப்படும். அத்தகைய சூழ்நிலை ஏற்படுவதைத் தடுப்பதற்காகத்தான் ''நீதிமன்ற அவமதிப்பு'' என்ற வார்த்தைகள் சேர்க்கப்பட்டுள்ளன. எனவே, இத்திருத்தை ஏற்றுக் கொள்வதில் எவ்வித இடர்ப்பாடுமில்லை.

என்னுடைய நண்பர் திரு. சந்தானம் எழுப்பிய கருத்து பற்றி சொல்ல வேண்டுமானால், அடிப்படை உரிமைகள் சம்பந்தப் பட்டவரை அரசாங்கம் என்ற வார்த்தை, இரண்டு வகையில் பொருள் படும்படி பயன்படுத்தப்பட்டுள்ளது என்பது முற்றிலும் உண்மையே. இவ்வார்த்தையில் மத்திய அரசாங்கமும் மாகாணங்களும் அடங்கும். இது உண்மையாக இருந்தாலும் கூட ஒரு மாநில அரசாங்கமும், மத்திய அரசாங்கமும் சட்டம் இயற்றலாம் என்பதை அவர் மனத்தில் கொள்வார் என்று நினைக்கிறேன். அவதூறு, மான நஷ்டம், பழித்துரை, நாட்டின் யாதுகாப்பு முதலியன போன்ற தலைப்புப் பொருள்கள் ஒருங்கியல் பட்டியில் சேர்க்கப்பட்டுள்ளன. ஏனெனில் இப்பொருள்கள் பற்றி இயற்றப்பட்ட சட்டங்களில் மிகப் பெரிய மாறுபாடு எதுவும் இருப்பின், ஒரே மாதிரியான சட்ட முறை இருப்பது அவசியம் என்று மத்திய அரசாங்கம் கருதினால் இவ்விஷயத்தில் அது தலையிட்டு, ஒரே சீரான நிலைமையை அமலாக்க முடியும்.

**மாண்புமிகு திரு.கே. சந்தானம்:** ஒருங்கியல் பட்டியலிலும் அல்லது வேறு எந்தப் பட்டியலிலும் நீதிமன்ற அவமதிப்பு சேர்க்கப் படவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சரி, அவ்வாறு செய்யலாம்.

**திரு. அவைத் தலைவர் :** அப்படியானால், இவ்விரு திருத் தங்களையும் வாக்கெடுப்பிற்கு விடுகிறேன். உண்மையில், பண்டிட் தாகூர் தாஸ் பார்கவாவின் திருத்தம் திரு.கிருஷ்ணமாச்சாரியின் திருத் தத்திற்கு ஒரு திருத்தமல்ல, அது முற்றிலும் வேறுபட்டது. அவற்றின் மீது தனித்து வாக்கெடுப்பு நடத்துகிறேன். முதலில் திரு. கிருஷ்ண மாச்சாரியின் திருத்தத்தை வாக்கெடுப்பிற்கு விடுகிறேன்.

திருத்தம் இதுதான்:

> ''விதி 13ன் துணைவிதி (2)ல், அவ்வாறு என்ற வார்த்தைக்குப் பின்னர், 'நீதிமன்ற அவமதிப்பு' என்ற வார்த்தைகள் இடையில் சேர்த்துக் கொள்ளப்படவேண்டும்.''

திருத்தம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

பண்டிட் தாகூர் தாஸ் பார்கவாவின் திருத்தம் நிராகரிக்கப் பட்டது.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** சரி, இப்போது 302 அஅஅ என்னும் புதிய விதியை அதாவது திருத்தம் எண் 450ஈ விவாதத்திற்கு எடுத்துக் கொள்வோம். இப்போது நிறைவேற்றப்பட்டுள்ள திருத்தம் முழுமை பெற ''நீதிமன்ற அவமதிப்பு'' என்ற வார்த்தைகள் ஒருங்கியல் பட்டியலில் சேர்க்கப்படவேண்டுமென்ற ஓர் ஆலோசனையை திரு. சந்தானம் தெரிவித்துள்ளார். அது பின் விளைவானாதாகும் என்று நினைக்கிறேன். அதனைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் :** தலைவர் அவர் களே, இது சம்பந்தமாக இப்போது ஒரு திருத்தத்தை முன்மொழி கிறேன்:

> ''ஒருங்கியல் பட்டியலில் 15க்குப் பின்னர், பின்வரும் குறிப்பு சேர்க்கப் படவேண்டும்:
>
> ''15அ நீதிமன்ற அவமதிப்பு.''

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 17, 1949, பக். 403.

**திரு. அவைத் தலைவர்:** இதற்கு எவ்விதமான எதிர்ப்பும் இருக்குமென்று நான் கருதவில்லை.

**திரு. நசிருத்தீன் அகமது:** இத்தகைய பல விஷயங்கள் இன்னும் இருக்கக்கூடும்.

**திரு. அவைத் தலைவர் :** இருக்கலாம், தக்க நேரத்தில் அவை பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும். எனவே, இதன்மீது இப்போது வாக்கெடுப்பு நடைபெறும்.

மேற்கண்ட திருத்தம் நிறைவேற்றப்பட்டது.

(பதிவு எண் 15அ ஒருங்கியல் பட்டியலில் சேர்க்கப்பட்டது.)

## புதிய விதி 302 அஅஅ

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** தலைவர் அவர்களே, என்னுடைய நண்பர் திரு.சித்வா நிலமையை முற்றிலும் தவறுதலாகப் புரிந்து கொண்டு இருக்கிறார் என்று நினைக்கிறேன். ஏழாவது அட்டவணையில் பட்டியல் IIஐப் பார்ப்பாரானால் நண்பர் திரு. டி.டி.கிருஷ்ணமாச்சாரி முன்மொழிந்த திருத்தத்திலுள்ள விஷயங்கள் சம்பந்தப்பட்ட இனங்கள் 30, 35கீழ் மத்திய அரசாங்கத்திற்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரம் குறைவானதுதான் என்பது அவருக்குப் புலப்படும். இனம் 30ன் கீழ் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரம் விமானப் போக்குவரத்தை நிறுவுவதற்கும் முறைப்படுத்துவதற்கும்தான். இனம் 35ன் கீழ் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரம் துறைமுகப் பொறுப்புக் கழகத்தின் விதிமுறைகளையும் அதிகாரங்களையும் வரையறுப்பதற்குத்தான். துறைமுகங்கள், விமான நிலையங்கள் அல்லது விமான தளங்கள் அமைந்துள்ள பிரதேசம் சம்பந்தப்பட்டவரை, மாகாணா ஆட்சிப் பிரதேசத்தின் ஒரு பகுதியாக இருப்பதும், எனவே விமான நிலையம் அல்லது துறைமுகம் சம்பந்தமாக மாநில அரசாங்கம் நிறைவேற்றும் எந்த சட்டமும் விமானநிலையம் அல்லது துறைமுகம் அமைந்துள்ள பிரதேசத்துக்கும் பொருந்தும் என்பதும் அவருக்குப் புரியும். பதிவு நுழைவின் கீழ் மத்திய அரசாங்கத்தின் நிருவாக

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 17, 1949, பக். 405-506.

அதிகாரத்திற்குட்பட்ட எல்லா விஷயங்கள் குறித்தும் சட்டமியற்ற மத்திய அரசாங்கத்திற்கு 30,35 ஆகிய பதிவுகள் அதிகாரம் வழங்க வில்லை குறைந்த அதிகாரங்களை வழங்கப்படுகின்றன. எனவே, இந்த விதியில் பொதிந்துள்ள திட்டம் இதுதான் விமான நிலையங் கள் மற்றும் துணைமுகங்கள் அமைந்துள்ள பகுதிகள் மாகாணங் களின் ஆட்சிப் பகுதிக்கு உட்பட்ட பகுதியாகவே இருக்கும். விமான நிலையங்கள் மற்றும் துறைமுகங்கள் அமைந்துள்ள பகுதிகளுக்கும் பொருந்தும் வகையில் பட்டியல் IIல் கண்டுள்ள இனங்களின் கீழ் சட்டங்கள் இயற்றும் அதிகாரத்தை மாநிலங்கள் வைத்துக்கொள்ளும். உதாரணமாக விமான நிலையங்கள் துறைமுகங்களைத் தனது ஆட்சிப் பகுதியில் கொண்டுள்ள ஒரு மாநிலம் அங்கு நோய்த் தடுப்புக் காப்பு போன்ற குறிப்பிட்ட காரணத்திற்காக சட்டங்கள் இயற்ற லாம். அத்தகைய சட்டங்கள் குடியரசுத் தலைவர் பிரகடனம் செய்யும் எத்தகைய அறிவிக்கைக்கும் உட்பட்டவையாகும். நண்பர் திரு. சித்வா தம்முடைய திருத்தத்தை இப்போது விலக்கிக் கொள்வார் என்று நம்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர் :** திருத்தம் எண் 450யை வாக்கெடுப் பிற்கு விடுகிறேன். திருத்தம் இதுதான்:

விதி 302அஅ-க்குப் பின்னர் பின்வரும் புதிய விதி சேர்க்கப்பட வேண்டும்:

பெருந்துறைமுகங்கள் விமான நிலையங்கள்சம்பந்தமான விசேடஷரத்துகள்

(1) ''இந்த அரசியல் சாசனத்தில் எது எவ்வாறிருப்பினும் குடியரசுத் தலைவர் பொது அறிவிக்கை வாயிலாக அந்த அறிவிக்கையில் குறிப்பிடப்படும் தேதியிலிருந்து -

(அ) நாடாளுமன்றத்தால் அல்லது ஒரு மாநிலச் சட்டமன்றத் தால் இயற்றப்பட்ட சட்டம் எதுவும் பெருந்துறைமுகம் அல்லது விமான நிலையம் எதற்கும் பொருந்துவதாகாது என்றோ, அந்த அறிவிக்கையில் குறிப்பிடப்படும் விதிவிலக்குகளுக்கு அல்லது திருத்தங்களுக்குட்பட்டு அதற்குப் பொருந்துவதாகும் என்றோ பணிக்கலாம் அல்லது

(ஆ) நடைமுறையில் உள்ள சட்டம் எதுவும் மேற்சொன்ன தேதிக்கு முன்பு செய்யப்பட்டவை அல்லது செய்யாது விடப்பட்டவை என்பதைப் பொறுத்துத் தவிர, பெருந்துறைமுகம் அல்லது விமான நிலையம் எதிலும் செயல்படுவது அற்றுப்போகும் என்றோ, அது அத்தகைய துறைமுகம் அல்லது விமான நிலையத்திற்றுகுப் பொருந்துவதில் அந்த அறிவிக் கையில் குறிப்பிடப்பட்டிற்கும் விதிவிலக்குக்கு அல்லது திருத்தங்களுக்கு உட்பட்டுச் செல்லுபடியாகும் என்றோ பணிக்கலாம்.

2) இந்த விதியில்

(அ)''பெருந்துறைமுகம்'' என்பது நாடாளுமன்றம் இயற்றிய சட்டம் எதனாலுமோ அல்லது அதன் வழியாலோ அல்லது நடைமுறையில் உள்ள

சட்டம் எதனாலுமோ அதன் வழியாலோ பெருந்துறைமுகம் என அறிவிக்கப்பட்டுள்ள ஒரு துறைமுகம் எனப்பொருள்படும், மேலும், அப்போதைக்கு அத்தகைய துறைமுகத்தின் எல்லைகளுக்குள் அடங்கியுள்ள பரப்பிடங்கள் அனைத்தையும் அது உள்ளடக்கும்.

(ஆ) விமான நிலையம் என்பது விமான நிலையங்கள், விமானங்கள், விமானபோக்குவரத்து ஆகியவை சம்பந்தமான சட்டங்களின் பொருட்டு பொருள் வரையறை செய்யப்பட்ட விமான நிலையம் என்று பொருள் படும்.

திருத்தம் ஏற்கப்பட்டது. விதி 302 அஅஅ அரசியல் சாசனத்தில் இணைக்கப்பட்டது.

★ ★ ★

**திரு. அவைத் தலைவர்:** திரு. காமத்தின் திருத்தத்தை வாக்கெடுப்பிற்கு இப்போது விட வேண்டியதுள்ளது. எனக்கு வேறு வழி எதுவும் இல்லை.

**மாண்புமிகு பி.ஆர். அம்பேத்கர்:** திருத்தத்தை விலக்கிக் கொள்ளுமாறு அவரைக் கேட்டுக்கொள்ளலாம்.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தத்தை முன்மொழிய வேண்டாமென்று அவருக்கு ஆலோசனை கூறினேன். விலக்கிக் கொள்ளுவதும், கொள்ளாததும் அவருடைய விருப்பத்தைப் பொறுத்ததாகும்.

**திரு. எச்.வி. காமத் :** நான் விலக்கிக் கொள்ளவில்லை.

**திரு. அவைத் தலைவர்:** விலக்கிக் கொள்ள மாட்டேன் என்று அவர் கூறுகிறார்.

திருத்தம் இதுதான்:

''திருத்தங்கள் பட்டியலில் (தொகுதி I) எண் 2வது திருத்தத்தில் உத்தேச முகப்புரைக்கு பதிலாக பின்வருபவை சேர்க்கப்பட வேண்டும் :-

''ஆண்டவன் பெயரால்,

இந்திய மக்களாகிய நாம்,

இந்திய நாட்டின் இறையாண்மையுடைய ஒரு ஜனநாயகக் குடியரசாக நிறுவவும் அதன் குடிமக்கள் அனைவருக்கும்

சமூக, பொருளாதார, அரசியல் நீதியும்;

எண்ணம், அதன் வெளியீடு, கோட்பாடு சமய நம்பிக்கை வழிபாடு

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 17, 1949, பக். 442.

*சுதந்திரமும் சமுதாயப்படி நிலை, வாய்ப்பு நலம் ஆகியவற்றில் சமத்துவமும் அவர்கள் அனைவரிடையேயும் சகோரத்துவத்தையும் தனி மனிதப் பண்பையும், தேச ஒற்றுமையையும் வளர்க்கவும் ஈடுபாட்டுடன் உறுதிபூண்டு நமது அரசியல் நிர்ணய சபையில் ஈங்கிதனால் இந்த அரசியல் சாசனத்தை ஏற்று, இயற்றி நமக்கு நாமே வழங்கிக் கொள்கிறோம்.''*

**திரு. எச்.வி.காமத் :** இந்தத் திருத்தத்தை ஆதரிப்போர் எதிர்ப்போர் என்று கூறாகப் பிரிந்து வாக்கெடுப்பு நடத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**பண்டிட் கோவிந்த மாளவியா:** இப்பிரச்சினை குறித்து இத் தகைய வாக்கெடுப்பு நடத்த வேண்டுமென்று நானும் விரும்புகிறேன்.

**மௌலானா ஹஸ்ரத் மோஹனி:** இந்தப் பிரச்சினையில் நானும் இதேபோன்று வாக்கெடுப்பை ஆதரிக்கிறேன்.

**பண்டிட் கோவிந்த மாளவியா:** இந்நாட்டிற்கும் மக்களுக்கும் அநீதி இழைக்கின்றோம் என்று நான் கருதுவதால் இத்தகைய வாக்கெடுப்பு நடத்துவதை நான் விரும்புகிறேன். இவ்விஷயத்தில் யார் யார் என்ன கருத்து கொண்டுள்ளனர் என்பதையும் அறிந்துகொள்ள விரும்புகிறேன்.

*சபை உறுப்பினர்கள் கையை உயர்த்தி வாக்களித்தனர்.*

*ஏற்பாளர்கள் : 41*
*எதிர்ப்பாளர்கள் : 68*

*திருத்தம் நிராகரிக்கப்பட்டது.*

**மதிப்பிற்குரிய உறுப்பினர்கள்:** இத்துடன் விவாதத்தை நிறுத்திக் கொள்ளலாம்.

[1]**திரு. அவைத் தலைவர்:** விவாத நிறுத்தம் ஏற்றுக்கொள்ளப் பட்டதாகவே கருதுகிறேன். டாக்டர் அம்பேத்கரை இப்போது பதில் அளிக்க அழைக்கிறேன்.

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** தலைவர் அவர்களே, வரைவுக் குழு தீட்டிய முகப்புரையிலிருந்து வேறுபடும் அல்லது வேறுபடுவ தாகக் கருதப்படும் திருத்தத்திலுள்ள விஷயம் இது தான்: ''அதிகாரமும்,

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 17, 1949, பக். 454-456.

ஆணையுரிமையும் யாரிடமிருந்து பெறப்பட்டது'' என்னும் கூடுதல் வார்த்தைகள் சேர்க்கப்பட வேண்டும். எனவே, இப்போதுள்ள கேள்வி, சபையின் பொதுவான எண்ணத்தைத் தவிர, அரசியல் சாசன வரைவுக்குழு தயாரித்துள்ள முகப்புரை வேறு எப்பொருளை யும் கூறுகின்றதா என்பதுதான்; அதாவது, இந்த அரசியல் சாசனம் மக்களிடமிருந்து உருவாக வேண்டும்; இச்சட்டத்தை உருவாக்கும் இறையாண்மை மக்களிடம் இருக்க வேண்டும். இதுதவிர விவா தத்திற்குரியதாக வேறு எந்த விஷயமும் இருப்பதாக நான் நினைக்க வில்லை. இத்திருத்தத்தில் கூறப்பட்ட கருத்து முகப்புரையின் வரை விலேயே அடங்கியுள்ளது என்பது என்னுடைய வாதமாகும்.

**மௌலானா ஹஸ்ரத் மோஹனி :** பினனர், ஏன் திருத்தத்தை நீங்கள் ஏற்றுக்கொள்ளவில்லை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னுடைய வாதம் சரியானது என்பதை இப்போது விரிவான முறையில் விளக்கிக் கூற விரும்புகிறேன்.

தலைவர் அவர்களே, இத்திருத்தத்தை ஒருவர் பரிசீலித்துப் பார்த்தால், மூன்று தெளிவானபகுதிகளை அவர் காணலாம். ஒரு பகுதி தெளிவாக விளக்குவதாக இருக்கிறது. இரண்டாவது பகுதி விளித் துரைப்பதாக அமைந்துள்ளது. மூன்றாவது பகுதி சட்ட முறையான தாக உள்ளது.

தெளிவாக விளக்கும் பகுதியில் பின்வரும் சொற்றொடர் அடங்கியுள்ளது: 'இந்திய மக்களாகிய நாம், நமது அரசியல் நிர்ணய சபையில், இன்று, இம்மாதம் ஈங்கிதனால் ஏற்று, சட்டமாகயியற்றி, நமக்கு நாமே இந்த அரசியல் சாசனத்தை வழங்கிக் கொள்கிறோம்'. இந்த அரசியல் சாசனத்தை உருவாக்கும் அதிகாரம், ஆளுகை உரிமை, இறையாண்மை மக்களிடம் அடங்கியுள்ளது என்று கூறுகின்றதா அல்லது அவ்வாறு கூறவில்லையா என்று கவலையுறும் இச்சபை யின் உறுப்பினர்கள், இப்பகுதியிலிருந்து திருத்தத்தின் இதர பகுதி களைப் பிரித்துப் பார்க்க வேண்டும்; அதாவது நான் படித்துக் காட்டிய துவக்க வார்த்தைகளை 'நமது அரசியல் நிர்ணய சபையிலுள்ள இந்திய மக்களாகிய நாம், இன்று, ஈங்கிதனால் இந்த அரசியல் சாசனத்தை ஏற்று இயற்றி நமக்கு நாமே வழங்கிக் கொள்கிறோம்....*

---

★ புள்ளிகள் குறியீட்டைக் குறிக்கின்றன.

**திரு. மகாவீர் தியாகி:** இதில் மக்கள் எங்கு வருகிறார்கள்? அரசியல் நிர்ணயசபை உறுப்பினர்கள்தான் இதில் குறிப்பிடப்படு கிறார்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இது வேறு விஷயம். தற்போதைக்கு ஒரு குறிப்பிட்ட அம்சம் பற்றித்தான் விவா திக்கிறேன். அதாவது இந்த அரசியல் சாசனம் மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு, இயற்றப்பட்டு, வழங்கப்பட்டுள்ளது என்று இந்த அரசியல் சாசனம் கூறுகிறதா அல்லது கூறவில்லையா என்பதுதான் அந்த அம்சம். எளிய நடையில் அமைந்துள்ள இந்த அரசியல் சாச னத்தை மிகவும் விளக்கமாகவும் தெள்ளத் தெளிவாகவும் அமைந் துள்ள அதன் இதர பகுதிகளுடன் சேர்த்துப் படிக்கும் எவருக்கும் அதன் முகப்புரையும் இதைத்தான் கூறுகிறது என்பதில் எத்தகைய ஐயமும் இருக்க முடியாது.

இந்த அரசியல் சாசனம் குறுகிய வாக்குரிமை அடிப்படை யில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களைக் கொண்டு நிறைவேற்றப்பட்டு வருகிறது என்று நண்பர் திரு. தியாகி கூறினார். இந்த நாட்டிலுள்ள வயதுவந்த ஆண், பெண் வாக்காளர்களைக் கொண்டு இச்சபை தேர்ந்தெடுக்கப்பட்டது என்ற பொருளில் கூற முடியாது என்பது உண்மைதான். ஒரு கருத்துக் கணிப்பின் அடிப்படையில் மக்களைக் கலந்தாலோசிக்காமல் இந்த அரசியல் சாசனத்தை நடைமுறைப் படுத்தலாகாது என்றும் நண்பர் திரு. தியாகி கூறுகிறார். இது முற்றி லும் வேறு விஷயம். இந்த அரசியல் சாசனம் இச்சபையால் நிறை வேற்றப்பட்டால் செல்லுபடியாகுமா அல்லது பொதுமக்கள் வாக் கெடுப்பு மூலம் நிறைவேற்றப்படும்போதுதான் அது செல்லுபடி யாகுமா என்று நாம் விவாதித்துக் கொண்டிருக்கும் விஷயத்துக்கும் இதற்கும் சம்மந்தமில்லை. இதுபற்றி தான் நாம் விவாதித்துக் கொண்டு இருக்கின்றோம். மக்களிடமிருந்து இந்த அரசியல் சாசனம் உரு வானது என்பதை இச்சட்டம் ஏற்றுக் கொண்டு, அங்கீகரித்து, பிரக டனப்படுத்துகின்றதா? இல்லையா? அவ்வாறு இச்சட்டம் ஏற்றுக் கொள்கிறது என்று நான் தெளிவாகக் கூறுகிறேன்.

அமெரிக்க அரசியல் சாசனத்தின் முகப்புரையையும் மதிப்பிற் குரிய உறுப்பினர்கள் பரிசீலிக்க வேண்டுமென்பது என்னுடைய ஆசை யாகும். அதன் ஒரு பகுதியை மட்டும் இங்கு படித்துக் காட்டுகிறேன்.

அது கூறுகிறது: "அமெரிக்க ஐக்கிய கூட்டரசு நாடுகளின் மக்களாகிய நாம் - இதர பகுதிகளை நான் படிக்கவில்லை-''அமெரிக்க ஐக்கிய கூட்டரசு நாடுகளின் மக்களாகிய நாம் அமெரிக்க ஐக்கிய கூட்டரசு நாடுகளுக்காக இந்த அரசியல் சாசனத்தை விதித்தமைத்துக் கொண்டிருக்கிறோம்.'' அந்நாட்டு அரசியல் சாசனத்தை ஒரு சிறிய குழுதான் வரைவு செய்தது என்பதை அனேக உறுப்பினர்கள் அறிவார்கள். அந்த அரசியல் சாசனத்தை வரைய பிலடெல்பியா நகரில் கூடிய சிறிய குழுவில் பிரதிநிதித்துவம் பெற்றிருந்த மாகாணங்களின் எண்ணிக்கையும் மற்றும் இதர விவரங்களும் இப்போது எனக்கு நினைவுக்கு வரவில்லை. மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் : (13 மாகாணங்கள் இருந்தன.) எனவே, 13 மாகாணங்களின் பிரதிநிதிகள் பிலடெல்பியாவில் ஒரு சிறிய மாநாட்டைக் கூட்டி ஓர் அரசியல் சாசனத்தை ஏற்று இயற்றி மக்களின் பெயராலும் அதிகாரத்தாலும், அம்மக்களின் இறையாண்மையின் அடிப்படை ஆதாரத்தாலும்தான் . நாங்கள் அவ்வாறு செய்தோம் என்று கூறுகிறார்கள் என்றால், இம்மாபெரும் நாட்டின் பிரதிநிதிகளான 292 உறுப்பினர்களடங்கிய ஒரு பிரதிநிதித்துவக் குழு, இந்நாட்டு மக்களின் பெயரில் தாங்கள் செயல்படுகின்றோம் என்று ஏன் சொல்லிக்கொள்ளக்கூடாது? இதனை என்னால் தனிப்பட்ட முறையில் புரிந்துகொள்ள முடியவில்லை. (கேளுங்கள், கேளுங்கள், ஆரவாரம்).

**மௌலானா ஹஸ்ரத் மோஹனி:** நான் அவ்வாறு கருதவில்லை. அது ஒரு குழு மட்டும் தான்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** மௌலானா அவர்களே, அது வேறு விஷயம். அதுபற்றி நான் விவாதிக்க முடியாது. எனவே, இந்த வாதத்தைப் பொறுத்தவரை, எவ்வித பயத்திற்கும் சந்தேகத்திற்கும் இடமில்லை. பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் இறையாண்மையின் அணு அளவு சாயல்கூட இந்த அரசியல் சாசனத்தில் காணப்படுவதை இந்த அவையிலுள்ள உறுப்பினர் எவரும் விரும்ப மாட்டார்கள். அவ்வாறு இருப்பதை ஒருவரும் கடுகளவுகூட விரும்புவதில்லை. இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வருவதற்கு முன்னர் இருந்த பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் இறையாண்மையின் அடையாளம் எதுவும் இருப்பதை முற்றிலும் நீக்கி விடுவதுதான் உண்மையில் நமது விருப்பமாகும். இதுபற்றிய விஷயத்தில், இச்சபை உறுப்பினர் எவருக்கும் வரைவுக்குழு உறுப்பினர் எவருடனும் எவ்விதக் கருத்து வேறுபாடும் இல்லை.

இந்த ஆண்டின் முற்பகுதியில், பிரிட்டிஷ் காமன்வெல்த் அமைப்புடன் நம் நாடு தொடர்பு வைத்துக்கொள்ளுமென்று இந்த அரசியல் நிர்ணய சபை ஓர் அறிவிப்பை வெளியிட்டதன் காரணமாக, அத்தகைய உறவு மக்களின் இறையாண்மையை குறைத்துவிடும் என்று சில உறுப்பினர்களுக்கு சிறிது பயம் அல்லது சந்தேகம் உள்ளது என்று நான் ஊகிக்கிறேன்.

தலைவர் அவர்களே, இவ்வாறு நினைப்பது சரியல்ல என்று கருதுகிறேன். சுதந்தரமான ஒவ்வொரு நாடும், பிற சில நாடுகளுடன் ஏதேனும் ஒரு வகையில் நேச உடன்படிக்கை வைத்திருக்க வேண்டும். ஓர் இறையாண்மையுள்ள நாடு மற்றொரு இறையாண்மையுள்ள நாட்டுடன் ஒப்பந்தம் ஒன்று செய்து கொள்வதன் காரணமாக அந்த நாடு குறைந்த இறையாண்மை பெற்ற நாடாக ஆகிவிடாது (குறுக்கீடு). மிக மோசமான ஓர் உதாரணத்தைக் கூறுகிறேன். எனக்குத் தெரியும், சில உறுப்பினர்களுக்கு அத்தகைய அச்சம் இருக்கிறது என்று (குறுக்கீடு).

**திருமதி பூர்ணிமா பானர்ஜி :** தலைவர் அவர்களே, நான் ஒன்று.

**திரு. அவைத் தலைவர் :** டாக்டர் அம்பேத்கர் தொடர்ந்து பேசட்டும். யாரையும் எதையும் குறைகூறும் வகையில் அவர் எதுவும் கூறவிடவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இந்த அரசியல் சாசனம் தனது அதிகாரத்தை, ஆதார அடிப்படையை, இறையாண்மையை மக்களிடமிருந்து பெற வேண்டும் என்பது ஒவ்வொரு உறுப்பினரின் வேட்கையாகும். இந்த வேட்கையைத்தான் அரசியல் சாசனத்தின் முகப்புரை பிரதிபலிக்கிறது என்று கூறுவேன்.

எனவே, இந்த திருத்தத்தை ஏற்றுக் கொள்ள நான் தயாராக இல்லை. இந்த திருத்தத்தின் வாசகம் பற்றி எதுவும் சொல்ல நான் விரும்பவில்லை. கண்ணியத்தோடு சொல்ல வேண்டுமானால், நாங்கள் வரைந்துள்ள முகப்புரையில் இடம் பெறும் வகையில் இத்திருத்தத்தின் வாசகம் அமையவில்லை என்றே கூறவேண்டும். எனவே, வரைவுக் குழு தயாரித்துள்ள வாசகத்தை மாற்றியமைக்க எந்தவிதமான நியாயமும் இல்லை என்று கருதுகிறேன்.

*(திருத்தம் நிராகரிக்கப்பட்டது. பிரேரணை ஏற்றுக் கொள்ளப்பட்டு, அரசியல் சாசனத்தின் முகப்புரையில் சேர்த்துக் கொள்ளப்பட்டது.)*

★ ★ ★

**திரு. அவைத் தலைவர்:** இந்த கூட்ட அமாவின் இறுதி கட்டத்தில் இப்போது இருக்கின்றோம். சபையை நான் ஒத்திவைப்பதற்கு முன்னர், சில விஷயங்களை தீர்மானிக்க வேண்டியதுள்ளது. நாம் முடிவு செய்ய வேண்டிய விஷயங்களில் ஒன்று அரசியல் சாசனத்தின் மூன்றாவது முறை வாசிப்புக்கான கூட்ட அமர்வை எப்போது கூட்டுவது என்பதாகும். கூட்டத்தைக் கூட்டுவது எப்போது தேவையென்று நான் கருதுகின்றேனோ, அப்போது கூட்டுவதற்கு முந்திய பல சந்தர்ப்பங்களில் அவை எனக்கு அனுமதி வழங்கியுள்ளது. இப்போதும் கூட அவை அத்தகைய அனுமதியை எனக்கு அளிக்கும் என்று நினைக்கிறேன். இது சம்பந்தமாக முறைப்படியான ஒரு தீர்மானத்தை முன்மொழியும்படி மாண்புமிகு திரு. சத்திய நாராயண சின்ஹாவைக் கேட்டுக்கொள்கிறேன்.

**மாண்புமிகு திரு. சத்திய நாராயணசின்ஹா:** தலைவர் அவர்களே, பின்வரும் பிரேரணையை முன்மொழிகிறேன்:

> ''தலைவர் 1949 நவம்பரில் குறிப்பிடுகின்ற தேதிவரை அவை ஒத்திவைக்கப்படுகிறது.''

**திரு. அவைத் தலைவர்:** பிரேரணை வருமாறு:.

> ''அவைத்தலைவர் 1949 நவம்பர் மாதம் குறிப்பிடுகின்ற தேதி வரை அவை ஒத்திவைக்கப்படுகிறது.''

*(பிரேரணை நிறைவேற்றப்பட்டது.)*

**திரு. அவைத் தலைவர்:** முன் அறிவிப்பு கொடுக்கப்பட்ட அனைத்து திருத்தங்கள் பற்றியும் முடிவு செய்துள்ளோம் என்று நினைக்கிறேன். அவை குறித்து மேலும் எதுவும் நான் கூறத் தேவையில்லை. அரசியல் சாசனத்தின் இரண்டாவது வாசிப்பு முடிந்து விட்டது. இச்சபை அண்மையில் நிறைவேற்றிய விதி 38-ஆர் கீழ் எனக்களிக்கப்பட்டுள்ள அதிகாரத்தின்படி, தேவைப்படும் முறையில் விதிகளைத் திருத்திடவும், நிறுத்தக் குறியீடுகளை மாற்றவும், பக்க ஓரக் குறிப்புகளைத் திருத்தி, பூர்த்தி செய்யவும் மற்றும் அரசியல் சாசனத்தில் திருத்தங்களைப் பரிந்துரை செய்யவும், அரசியல் சாசன

வரைவைத் திருத்தங்களுடன் வரைவுக் குழுவுக்கு அனுப்ப வேண்டியுள்ளது. நீங்கள் எனக்கு வழங்கியுள்ள அதிகாரத்தின் கீழ் இவ்வாறு செய்கிறேன். நான் பின்னர் அறிவிப்புக் கொடுக்கும் வரை இத்துடன் சபை நடவடிக்கையை ஒத்திவைக்கிறேன்.

★ ★ ★

1949 நவம்பர் திங்களில் அவைத் தலைவர் குறிப்பிடுகின்ற தேதி வரை அவை ஒத்திவைக்கப்பட்டது.

## உறுப்பினர்கள் பிரமாணம் எடுத்துக்கொண்டு பதிவேட்டில் கையெழுத்திடுதல்

[1]**திரு. அவைத் தலைவர்:** இன்னும் இரண்டு உறுப்பினர்கள் பதவிப்பிரமாணம் எடுத்து, பதிவேட்டில் கையெழுத்திட வேண்டியுள்ளது.

பின்வரும் உறுப்பினர் பதவிப்பிரமானம் எடுத்து, பதிவேட்டில் கையெழுத்திட்டால் :-

எம். ஆர். மாசானி (பம்பாய் - பொது.)

**திரு. அவைத் தலைவர்:** அரசியல் சாசன வரைவை இப்போது பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளுவோம்.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய் பொது): தலைவர் அவர்களே, அரசியல் நிர்ணயசபை விதி 38 -ஆரின் கீழ் வரைவுக் குழு திருத்தியுள்ள குழுவின் அறிக்கையையும், இந்தியாவின் அரசியல் சாசனத்தின் வரைவையும் அவையில் நான் சமர்ப்பிக்க வேண்டியுள்ளதால் பின்கண்டதை முன்மொழிகிறேன்:

> "இந்திய நாட்டின் அரசியல் சாசன வரைவில் வரைவுக்குழு பரிந்துரை செய்துள்ள திருத்தங்கள் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்பட வேண்டும்."

அவையின் கடந்த கூட்டத் தொடரில் நிறைவேற்றப்பட்ட விதிகளை மாற்றும் அல்லது திருத்தும் நோக்கத்திற்காக வரைவுக்குழு

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 14, 1949, பக். 459.

செய்துள்ள பரிந்துரைகள் மீதோ அல்லது அறிக்கை மீதோ நீண்ட தொரு உரையாற்றுவது என்னுடைய நோக்கமல்ல.

நான் கூற விரும்பும் ஒரே ஒரு விஷயம் இதுதான்: அவை முன் வைக்கப்பட்டுள்ள திருத்தங்கள், நீக்கல்கள், விலக்கல்கள் அடங்கிய நீண்ட பட்டியல் IIல் சேர்க்கப்பட்டுள்ள திருத்தங்களின் துணைப் பட்டியல் பற்றியோ நான் வருத்தம் தெரிவிக்கப் போவதில்லை. பட்டியல் IIல் கண்ட திருத்தங்களின் துணைப் பட்டியலையும் திருத் தங்கள், நீக்கல்கள், விலக்கங்கள் அடங்கிய பட்டியலையும் வரைவுக் குழு தவிர்த்திருந்தால் சரியானதாக இருந்திருக்குமென்பது என் னுடைய கருத்தாகும். ஆனால் வரைவுக்குழு எத்தகைய குறுகிய கால அவகாசத்திற்குள் இப்பணியைச் செய்ய வேண்டியிருந்தது என்பதை அவை உணர வேண்டும். அரசியல் நிர்ணய சபையின் கடந்த கூட்டத் தொடர் அக்டோபர் 17ம் நாள் முடிவடைந்தது என்பது அனைத்து உறுப்பினர்களுக்கும் தெரியும். இன்று நவம்பர் 14ம் நாள். இப்போது அரசியல் சாசனத்தில் இடம்பெற்றுள்ள 395க்கும் குறையாத விதி களை ஆய்வு செய்யும் மிகப் பெரிய பணியைச் செய்து முடிக்க ஒரு மாத அவகாசம் கூட வரைவுக்குழுவுக்கு இல்லை என்பது தெள்ளத் தெளிவு. நான் கூறியதுபோல், வரைவுக் குழுவுக்கு ஒரு மாத அவகாசம் கூட இல்லை என்று கூறுவது மட்டும் போதாது. ஏனென்றால் விதி 38-ஆர் குறிப்பிடுவது போல், வரைவுக்குழு திருத்தியுள்ள அரசியல் சாசனத்தின் வரைவை இக்கூட்டத்தொடர் தொடங்குவதற்கு ஐந்து நாட்களுக்கு முன்னர் எல்லோருக்கும் சுற்றுக்கு அனுப்ப வேண்டும். உண்மையில் நவம்பர் 6ம் நாள்தான் இது சுற்றுக்கு அனுப்பப் பட்டது. அதாவது கூட்டத்தொடர் ஆரம்பமாவதற்கு எட்டு நாட்க ளுக்கு முன்னர். அதனால் வரைவுக்குழுவுக்குக் கிடைக்கும் கால அவகாசம் எட்டு நாட்கள் குறைக்கப்பட்டுள்ளது. குறித்த காலத்தில் அரசமைப்பு வரைவை சுற்றுக்கு அனுப்புவதற்காக, அச்சகத்திற்குச் சில நாட்கள் முன்கூட்டியே வரைவுக்குழு தயாரித்த வரைவை அனுப்ப வேண்டியதிருந்தது. அவ்வாறு செய்தால்தான் வரைவின் அச்சிட்ட பிரதிகளை உறுப்பினர்களுக்கு அனுப்புவதற்கு முன்கூட்டிய கிடைக் கும். இச்சிரமத்தையும் கருத்தில் கொள்ள வேண்டும். அச்சகத்திற்கு நவம்பர் 4ம் நாள் வரைவு கொடுக்கப்பட்டது. வரைவுக்குழு கூறிய மாற்றங்களையும் திருத்தங்களையும் அச்சுப் பிரதிகளில் திருத்துவதற்கு அச்சகத்திற்குள்ள கால அவகாசம் ஒரு நாள்தான் என்பதையும் நீங்கள் பார்க்க வேண்டும். 395 விதிகள் அடங்கிய ஒரு பெரிய ஆவணத்தில் பிழைதிருத்தங்கள் செய்யப்பட்ட சரியான படிவத்தை ஒரே நாளில்

தயாரித்தளிப்பது அச்சகத்தாருக்கோ அல்லது வரைவுக்குழுவிற்கோ அல்லது பிழைதிருத்தம் செய்யும் பொறுப்புள்ளவருக்கோ இயலாத காரியமாகும்.

5ம் நாள் அச்சகத்தார் அளித்த படிவத்தில் பிழைகள் விடப் பட்டவை திருத்தப்படாமலும் சரிசெய்யப்படாமலும் இருந்ததை உறுப்பினர்கள் கவனத்திற்குக் கொண்டு வருவதற்குத்தான் நீண்ட பிழைதிருத்தப் பட்டியல் தயாரிக்கப்பட்டதற்குப் போதுமான காரண மாகும் என்பது என்னுடைய கருத்தாகும். இந்நாட்களையெல்லாம் கழித்துப் பார்த்தால், இப்பெரிய பணியை முடித்திட வரைவுக்குழு வுக்கு பத்து நாட்கள் அவகாசம்தான் இருந்தது.

பத்து நாட்கள் என்பது மிகவும் குறைந்த காலமாகும். இக் குறைந்த கால அவகாசம்தான் படிவம் IIல் இரண்டாவது திருத்தப் பட்டியல் இணைக்கப்பட்டதை நியாயப்படுத்துகிறது என்பது என் பார்வையில் சரியானதாகும். இதனைப் பரிசீலனை செய்ய வரைவுக் குழுவுக்கு போதுமான கால அவகாசம் கிடைத்திருக்குமானால், பிழைத் திருத்தங்கள் பட்டியலை வெளியிடுவதையோ அல்லது துணைத் திருத்தங்கள் பட்டியலையோ நிச்சயமாகத் தவிர்த்திருக்க முடியும். பிழைத் திருத்தங்களையும் இரண்டாவது திருத்தங்கள் பட்டியலை யும் ஒப்பிட்டுப் பார்ப்பதால் ஏற்படக்கூடிய சிரமத்திற்காக அவை மன்னிக்கும் என்பது என்னுடைய நம்பிக்கையாகும். இச்சிரமத்திற்கு வரைவுக்குழுதான் காரணம்.

தலைவர் அவர்களே, அரசியல் சாசன வரைவில் வரைவுக் குழு பரிந்துரைந்துள்ள திருத்தங்கள், மாற்றங்களின் தன்மை குறித்து இத்தருணத்தில் நான் விவாதிக்கத் தேவை இல்லை. அறிக்கையின் பத்தில் மாற்றங்களின் தன்மை பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. வரைவுக்கு செய்துள்ள மாற்றங்கள் உண்மையில் மூன்று வகைப் படும். விதிகள், 2ல் துணைவிதிகள், உபவிதிகள் ஆகியவற்றிக்கு மறு இலக்கமிடுதலும், நிறுத்தக் குறையீடுகளிடுவதும் முதலாவது மாற்றத் தில் அடங்கும். கடந்த கூட்டத் தொடரில் நடைபெற்ற விவாதத்திற்குப் பின்னர் விதிகள் பல பக்கங்களில் சிதறுண்டு கிடந்ததாலும், ஒரு குறிப்பிட்ட தலைப்பின் கீழ் அவைகளைக் கொண்டுவர முடியாத

நிலையிருந்தாலும், இத்தகைய மாற்றங்களைச் செய்ய வேண்டிய திருந்தது. குறிப்பிட்ட ஒரு பொருள் பற்றி விளக்கும் விதிகள் யாவை என்பதை வாசகர்களும் அவை உறுப்பினர்களும் முழுமையாக அறிந்து கொள்வதற்காக சில விதிகளை ஒரு பகுதியிலிருந்து மற்றொரு பகுதிக்கும், ஒரு அத்தியாயத்திலிருந்து மற்றொரு பகுதிக்கும் மாற்றி, இணைத்துப் படிப்பதற்கு வசதியாகவும், முழுமையாக அறிந்து கொள்வதற்கும், விஷயத்தைத் தெளிவாக அரசியல் சாசனத்தில் வழங்குவதற்கு இது தேவை என்று வரைவுக்குழு கருதியது.

அறிக்கையில் கூறப்பட்ட இரண்டாவது வகை மாற்றங்கள் முற்றிலும் பின்தொடர்விளைவுள்ளதாகவும், விதிமுறை சார்ந்ததாக வும் உள்ளன. ''இந்த அரசியல் சாசனத்தினுடைய'' என்று விட்டுப் போன வார்த்தைகள் மாதிரி வரைவு விதிகளில் பல இடங்களில் காணப்படுபவை இரண்டாவது மாற்றங்களில் அடங்கும், இவை முற்றிலும் பின்விளைவு சார்ந்ததாகவும், விதிமுறை சார்ந்ததாகவும் உள்ளன.

சில இடங்களில் பெரிய எழுத்துக்கள் சிறிய அச்சு வடிவத் தில் அச்சாகி உள்ளன; அதனால் சில திருத்தங்கள் செய்ய வேண்டிய திருந்தது. மன்னர், ராஜ்பிரமுக் போன்ற வார்த்தைகளில் மாற்றம் செய்ய வேண்டிய திருந்தது. ஏனெனில் இறுதியாக பொருள் வரை யறை பற்றிய ஷரத்துக்களை நாம் விவாதித்துக் கொண்டிருந்தபோது இத்தகைய மாற்றங்கள் செய்யப்பட்டன. இதர மாற்றங்களை ''தேவையான திருத்தங்கள்'' என்று இரத்தினச் சுருக்கமாகக் கூறலாம். அத்தகைய தேவையான திருத்தங்கள் இரண்டு வகையாகும் - விதி யில் கணிசமான அளவிற்கு மாற்றம் தேவைப்படாத திருத்தங்கள் ஒரு வகை. இத் திருத்தங்கள் தேவை, ஏனெனில், கடந்த கூட்டத்தொடரில் இந்த விதிகள் நிறைவேற்றப்பட்டபோது பயன்படுத்தப்பட்ட வாசக வார்த்தைகள் சிலவற்றின் பொருள் தெளிவாக இல்லை, அல்லது சரி செய்யப்பட வேண்டிய சில குறைபாடுகள் இருந்தன என்பது தெரியவந்தது. சம்பந்தப்பட்ட விதிகளின் பொருளில் கணிசமான வகையில் மாற்றம் ஏற்படாத முறையில் திருத்தங்கள் செய்யப் பட்டுள்ளன. இவைகளில் கணிசமான அளவிற்கு மாற்றங்கள் இருந் தாலும், அத்தகைய மாற்றங்கள் அவசியமானவை என்று வரைவுக் குழு கருதியது. அத்தகைய கணிசமான மாற்றங்கள் செய்யப்படா

விட்டால், கடந்த கூட்டத் தொடரில் நிறைவேற்றப்பட்ட விதியிலுள்ள பல்வேறு குறைபாடுகளும், விட்டுவிடப்பட்டவையும் அப்படியே நிலைத்து நின்றுவிடும்.இவ்வாறு அக்குறைபாடுகள் தொடர்வதை அனுமதிப்பது விரும்பத்தக்கதல்ல. எனவே, பத்தி 2ன் உட்கூறு (ஈ)ல் தெரிவிக்கப் பட்டுள்ள மாற்றங்களைச் செய்வது சம்பந்தமாக தக்க ஆலோசனையளிக்கும் பொறுப்பினை வரைவுக்குழு ஏற்றுக் கொண்டது. இம் மாற்றங்கள் ஏற்றுக் கொள்ளத்தக்கவையென்று இச்சபை ஒத்துக் கொள்ளும் என்பது எனது நம்பிக்கை. கணிசமான அளவிற்கு மேற் கொள்ளப்பட்ட திருத்தங்களைப் பொறுத்தவரை - அவைகள் சில வற்றிற்கு பத்தி 4ல் போதுமான விளக்கம் தரப்பட்டுள்ளது, இம்மாற் றங்களை நியாயப்படுத்தி அறிக்கையில் கூறப்பட்டிருப்பதை நான் திரும்பக் கூறத் தேவையில்லை.

தலைவர் அவர்களே, வரைவுக்குழு அளித்துள்ள அறிக்கைக்கு மேல் நான் எதுவும் கூறத் தேவை இல்லை என்று நினைக்கிறேன். அறிக்கையையும், அவை உறுப்பினர்களுக்கு ஏற்கனவே அனுப்பப் பட்டுள்ள அறிக்கையிலும் மற்றும் பட்டியல் இரண்டிலும் வரைவுக் குழுவால் பரிந்துரை செய்யப்பட்ட மாற்றங்களையும் இச்சபை ஏற்றுக் கொள்ளும் என்று நம்புகிறேன்.

## விதிகளில் திருத்தங்கள்

**திரு. அவைத் தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் அறிக்கையைச் சமர்ப்பித்துள்ளார். வரைவுக்குழு பரிந்துரை செய்துள்ள திருத்தங் களையும், அரசியல் சாசன வரைவையும் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ள வேண்டுமென்பது சபை முன்வைக்கப்பட்டுள்ள பிரேரணை யாகும்.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** பண்டிட் குன்ஸ்ரூ, நீங்கள் எழுப்பி யுள்ள ஒழுங்குப் பிரச்சினை இதுதான் என்று நினைக்கிறேன். அதாவது இப்போது உத்தேசிக்கப்பட்டுள்ள இந்த விதி இச்சபையின் முடிவு

★ புள்ளிகள் குறுக்கீட்டை குறிப்பிடுகின்றன.

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 15, 1949, பக். 507-509.

களுக்கு அப்பாற்பட்டதாக உள்ளது; மேலும் எடுக்கப்பட்ட முடிவிற் குரிய பலனும் கிட்டவில்லை. இதுதானே உள்ள கருத்து.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் :*** *(பம்பாய் : பொது):* வரைவுக்குழு விதி 365ல் உத்தேசித்துள்ள மாற்றம் பயன் விளைவு ஏற்படுத்தக்கூடிய மாற்றமா என்பதுதான் இந்த ஒழுங்குப் பிரச்சினை மூலம் எழுகின்ற ஒரே கேள்வியாகும். இது தேவையானது மட்டு மின்றி, பயன் விளைவு ஏற்படுத்தக்கூடியதுமாகும் என்பது வரைவுக் குழுவின் முடிவு. அது இத்தகைய முடிவுக்கு வருவதற்குக்காரணம் உண்டு. சில விஷயங்களில் மாநிலங்கள் ஒரு குறிப்பிட்ட முறையில் தான் செயல்பட வேண்டுமென்று வழிகாட்டும் கட்டளைகளை வழங்குவதற்கு மத்திய அரசாங்கத்திற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டு விடும் போது அத்தகைய வழிகாட்டுக் கட்டளைகளை மாநிலங் கள் நிறைவேற்றத் தவறிவிடக்கூடும்; அத்தகைய நிலைமையில் அவற்றின் மீது நடவடிக்கையெடுக்க மத்திய அரசாங்கத்திற்கு அதிகாரம் வழங்கப் படவில்லையெனில், அரசியல் சாசனம் மத்திய அரசாங்கத்திற்கு அளித்திட உத்தேசிக்கும் வழிகாட்டும் கட்டளை களை மறுப்பதாகும். ஒவ்வொரு உரிமைக்கும் பின்னால் ஒரு பரிகாரம் இருக்க வேண்டும் அவ்வாறு பரிகாரம் இல்லாவிட்டால் அந்த உரிமை வெறும் காகித அளவிலான உரிமையாகத்தான் இருக்கும் கட்டளைகளை மறுப்பதாகும். ஒவ்வொரு உரிமைக்கும் பின்னால் அது பொருளற்ற சத்தும் சாரமுமற்ற ஓர் அற்பமான உரிமையாகத் தான் இருக்கும். இந்த விதி பயனளிக்க கூடிய விதியாக இருக்க வேண்டும் என்று வரைவுக்குழு கருதியதற்கு இதுதான் காரணம்.

தலைவர் அவர்களே, அரசியல் நிர்ணய சபையின் கடந்த கூட்டத்தொடரில் நிறைவேற்றப்பட்ட ஷரத்துக்களுக்குப் புறம்பாக வரைவுக்குழு எதையும் செய்துவிடவில்லை என்பதை விளக்க விரும்புகிறேன். நண்பர் பண்டிட் குன்ஸ்ரூவை விதி 280அ, துணை விதி(5) மற்றும் விதி 306ஆ வை படித்துப் பார்க்கும்படிக் கேட்டுக் கொள்கிறேன். விதி 280அ துணைவிதி(5) ஆகியவையும் 306ஆ-வின் பிரதான பகுதியின் இறுதியில் அடங்கியுள்ள ஷரத்துகளும் தற்போது விதி 365ல் சேர்க்கப்பட்டுள்ளன. இவ்வாறு பார்க்கும் போது விதி 356ஐ வரைவுக்குழுவினால் இடைச்செறுகல் செய்யப்

பட்ட ஒரு புதிய விதி என்று கருத முடியாது. என்னுடைய மாண்புமிகு நண்பர் .......*

**பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ரு:** மாண்புமிகு நண்பர் பேசும் போது இடையில் குறுக்கிடுவதற்கு மன்னிக்கவும். முதலாவது அட்ட வணையின் பகுதி ஆவில் சேர்க்கப்பட்டுள்ள மாநில அரசாங்களின் மீது மத்திய அரசாங்கம் செலுத்தும் அதிகாரம் சம்பந்தப்பட்டது விதி 306ஆ ஆகும். இவ்வாறிருக்கும் போது அரசாங்கத்தின் இத்தகைய அதிகாரத்தை என்னுடைய மாண்புமிகு நண்பர் அனைத்து மாநிலங் களுக்கும் விஸ்தரித்துள்ளார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** என்னுடைய நண்பர் எனது உரையை முடித்துக்கொள்ள அனுமதித்தால், விதி 280-அ-வை படித்துக் காட்டுகிறேன்; நான் இங்கு குறிப்பிடுவது புரிய வரைவி லுள்ளதை அல்ல; மாறாக இரண்டாவது வாசிப்பின் போது நிறை வேற்றப்பட்ட பழைய வரைவிலுள்ளதையே குறிப்பிடுகிறேன். இவை நிதி சம்பந்தப்பட்ட ஷரத்துக்கள். விதி 280அ-ன் கூறு (5) கூறுவதாவது: "இந்த விதி (3)ன் கீழ் வழங்கப்பட்ட வழிகாட்டு கட்டளைகள் எதையும் நிறைவேற்றத் தவறுவது இந்த அரசியல் சாசனத்தின் ஷரத்துக்களுக்கிணங்க மாநில அரசு நடந்து கொள்ளத் தவறியதாகக் கருதப்படும்''. எனவே, விதி 280-அ ன் துணைவிதி (5)ஐ விதி 365 தன்னுள் இணைத்துக் கொள்ளவே முயலுகிறது. என்னுடைய நண்பர் விதி 306ஆ வை மீண்டும் பார்ப்பாரேயானால் ....*

**பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரு:** மீண்டும் இடையில் குறுக்கிட மாண்புமிகு நண்பர் என்னை அனுமதிப்பாரா?.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னுடைய வாதத்தை நான் முடித்த பின்னர் அவர் பேசினால் நல்லது என்று நினைக்கிறேன். முதலாவது அட்டவணையின் பகுதி-ஆவில் இப்போதுள்ள பகுதி IIIல் கண்ட மாநிலங்களுக்கு கட்டளைகளும் செயல்முறை அறிவுரைகளும் அளிக்கும் அதிகாரம் பற்றி விளக்கும் விதி 306அ வை அவர் படித்துப் பார்த்தால், கடைசிப் பகுதி இவ்வாறு கூறுவதை அவர் பார்க்கலாம்:

---

* புள்ளிகள் குறுக்கீட்டை குறிப்பிடுகின்றன.

''இத்தகைய வழிகாட்டு கட்டளைகளைக்கு உடன்பட்டு செயல்படத் தவறுவது அரசியல் சாசனத்தின் ஷரத்துக்களுக் கேற்ப மாநில அர சாங்கத்தை நடத்திச் செல்லத் தவறுவதற்கும்.'' எனவே, விதி365 புதிய கொள்கை எதையும் புகுத்தவில்லை என்பதே என்னுடைய வாத மாகும். கட்டளைகள் வழங்கும் அதிகாரம் பற்றிக் கூறும் பல்வேறு பகுதிகளை இது சாதாரணமாக ஒன்று சேர்க்கிறது அல்லது இணைக் கிறது; கட்டளைகள் வழங்க எங்கு அதிகாரம் கொடுக்கப்பட் டுள்ளதோ, அதை நிறைவேற்றத் தவறினால், அவ்விஷயத்தில் அரசியல் சாசனத்தின் ஷரத்துக்களை நிறைவேற்றத் தவறும் சூழ்நிலை உருவாகி யுள்ளது என்று கருத குடியரசுத் தலைவருக்கு வாய்ப்பு ஏற்படுகிறது.

அரசியல் சாசனத்தின் ஷரத்துக்களுக்கேற்ப மாநில அரசாங்கம் செயல்படத் தவறிவிட்டது என்று கருதுவதற்கு கொடுக்கப்பட்டுள்ள அதிகாரம் பற்றிக் குறிப்பாகக் குறிப்பிட்டுக் கூறாத விதிகள் 256ம் 257ம் மட்டுமேயாகும். கட்டளையிடும் அதிகாரம் மத்திய அரசாங்கத் துக்கு உள்ளது என்று மட்டுமே அது கூறுகிறது.எனவே, விதி 280அ (5) மற்றும் விதி 306ஆ ல் அடங்கியுள்ள கோட்பாடு புதிய விதி 365ல் எவ்வகையிலும் விஸ்தரிக்கப்பட்டிருந்தால், இந்த உண்மை உறுதி யாகக் கூறப்படாத சில விதிகளில்தான் அது விஸ்தரிக்கப்பட்டிருக் கும். கட்டளையிடும் அதிகாரம் சில விதிகளில் வழங்கப்பட்டுள்ளது என்று அரசியல் சாசனம் உறுதியாகக் கூறும்போது, அரசியல் சாச னத்தின் ஷரத்துக்களுக்கேற்ப செயல்பட மாநில அரசாங்கம் தவறி விட்டது என்று குடியரசுத் தலைவர் கருதுவதற்கு உரிமை இருக்க வேண்டும்; அல்லது அவ்வாறு குடியரசுத் தலைவர் கருதுவது சட்ட பூர்வமானதாக இருக்க வேண்டும் என்று பணிவுடன் சபையில் தெரிவித்துக் கொள்கிறேன். கட்டளையிடும் அதிகாரம் பற்றிக் கூறும் இதர சில விதிகள் விதி 365ன் அதிகார வரம்பிலிருந்து விட்டு விடப் பட்டிருக்கக்கூடும் என்ற கூற்றை நியாயப்படுத்த முடியாது. இச்சபை ஏற்கனவே நிறைவேற்றியுள்ள விதி 280அ மற்றும் விதி 306ஆ ஆகிய வற்றில் தெளிவாக கூறப்பட்டுள்ள ஷரத்தினை விஸ்தரிப்பதும், முழுமையாக்குவதும்தான் விதி 365ன் நோக்கமாகும். ஆகையால், புதிதாக எதுவும் சேர்க்கப்படவில்லை என்பதைத் தாழ்மையுடன்

தெரிவித்துக் கொள்கிறேன். விதி 280 அ துணைவிதி 5 மற்றும் விதி 306 ஆ அகியவை போன்ற நிலையிலுள்ள சில விதிகளில் விட்டுப் போன வற்றை இது சாதாரணமாகச் சரிசெய்கிறது.

**பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரூ:** அரசியல் நிர்ணயசபை திருத்தியபடி அரசியல் சாசன வரைவில் டாக்டர் அம்பேத்கர் மேற்கோளாகச் சுட்டிக் காட்டிய விதி 280-அ மற்றும் விதி 306-ஆ ஆகியவை இப்போதுள்ள விவாதத்திற்குச் சம்பந்தப்பட்டவையல்ல என்பதை நான் சுட்டிக்காட்டுகிறேன். விதி 280-அ நிதி நெருக்கடிகளைப் பற்றி மட்டும்தான் குறிப்பிடுகிறது.

இந்தியா அல்லது அதன் எப்பகுதியின் நிதி ஸ்திரத்தன்மை அல்லது நிதிநிலை அச்சுறுத்தலுக்குள்ளாகியுள்ளது என்று குடியரசுத் தலைவர் பிரகடனப்படுத்தும்போதுதான் அந்த விதியின் கீழ் அவருக் களிக்கப்பட்டுள்ள அதிகாரத்தைப் பயன்படுத்துவார். எனவே, அந்த விதி செயல்படும் வாய்ப்பு மிகவும் குறைவானதுதான். நெருக்கடி நிலையைப் பிரகடனப்படுத்த குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் வழங்கும் மற்றொரு விதி அரசியல் சாசனத்தில் இருக்கிறது. போர் அல்லது உள் நாட்டுக்குழப்பம் மூலம் இந்தியா அச்சுறுத்தப்படும் வேளையில்தான் அத்தகைய பிரகடனத்தை பிறப்பிக்கலாம். சில நெருக்கடி காலங்களில் மத்திய அரசாங்கம் பயன்படுத்தும் அதிகாரத்தை எல்லாக் காரியங்களுக்கும் விஸ்தரிப்பதை இந்த விதிகள் நியாயப்படுத்தவில்லை. முதலாவது அட்டவணை பகுதி ஆ வில் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்களைப் பொறுத்தவரைதான் விதி 306 ஆ ன் அதிகாரம் வரையறுக்கப்பட்டுள்ளது. முதலாவது அட்டவணை பகுதி-அ வில் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்களைப் பொறுத்த வரை இத்தகைய ஷரத்து அரசியல் சாசனத்தில் இல்லை. விதி 306-ஆ மற்றும் விதி 280-அ ஆகியவற்றின் ஷரத்துக்கள் விஸ்தரிக்கப் படவில்லை என்று டாக்டர் அம்பேத்கரே ஒத்துக்கொண்டுள்ளார். அவற்றைப் பொதுவானவையாக அமைத்துள்ளார். விதிகள் 306-அ, 280-அ ஆகியவற்றில் குறிப்பிடப்பட்டுள்ள மத்திய நிருவாகத்தின் அதிகாரத்தின் விரிவான வரம்பின் கீழ், முதல் அட்டவணை பகுதி அ-ல் குறிப் பிடப்பட்டுள்ள மாநிலங்களையும் கொண்டு வந்துள்ளார். தலைவர் அவர்களே, இவ்வாறு அவர் ஒப்பிட்டுக் கூறுவது நியாய

மானது அல்ல என்று பணிவுடன் கூறிக்கொள்கிறேன். எவ்வகையிலும் அது முழுமையானதல்ல. முதல் அட்டவணை பகுதி-அ வில் கண்டுள்ள மாநிலங்கள் விஷயத்தில் அவை என்ன செய்திருந்தாலும் அதே ஷரத்துகளை முதல் அட்டவணை பகுதி அ-வில் கண்டுள்ள மாநிலங்களுக்கும் விஸ்தரிக்கலாம் என்று இதற்கு அர்த்தமாகாது. எனவே, அரசியல் நிர்ணயசபையின் வெளிப்படையான முடிவுகளுக்கப்பால், விதி 365 ன் வாசகம் பொருள் தருவதாகாது. முதலாவது அட்டவணை பகுதி ஆ, பகுதி அ ஆகியவற்றில் குறிப்பிட்டுள்ள மாநிலங்களுக்கிடையே ஒரு சில வேறுபாடுகளை பேணவேண்டும். ஆனால் வரைவுக்குழு விரும்புகிறது என்பதற்காக அவ்வகை வேறுபாடுகளை நீக்கிவிட முடியாது.

**பண்டிட் பாலகிருஷ்ண சர்மா** (ஐக்கிய மாகாணங்கள் : பொது) சில கருத்துக்களைக் கூற என்னை அனுமதிப்பீர்களா?

**திரு. அவைத் தலைவர் :** ஒழுங்குப் பிரச்சினையா?

**பண்டிட் பாலகிருஷ்ண சர்மா :** ஆம்.

**திரு. அவைத் தலைவர் :** டாக்டர் அம்பேத்கர் ஏற்கனவே பதிலளித்துவிட்டாரே.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இன்றைய இந்திய அரசாங்க சட்டத்திலும் கூட இதே கருத்துக்கூறும் ஷரத்து ஒன்று 122வது பிரிவில் உள்ளது என்பதை தங்களின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். மாகாணங்களுக்கு கட்டளையிடும் அதிகாரம் கவர்னர்-ஜெனரலுக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. அத்தகைய கட்டளை எதுவும் செயலாக்கப்படவில்லை என்று கவர்னர்-ஜெனரலுக்கு தெரிந்தால், அந்தக் கட்டளைகளைத் தமது உசிதம் போல் நிறைவேற்றும்படி ஆளுநருக்கு அவர் ஆணை பிறப்பிக்கலாம். சொல்லப்போனால் இந்த ஷரத்து மிகவும் அவசியமானது, ஏனெனில், இந்திய அரசாங்கத்தின் உணவுக் கொள்கையை பஞ்சாப் அரசாங்கம் செயல் படுத்தாத காரணத்தால், கவர்னர்-ஜெனரலின் அதிகாரங்கள் பயனற்ற தாகிவிட்டன என்பதை நாம் அனைவரும் -

நம்மில் போர் காலத்தில் அமைச்சர்களாக இருந்தவர்கள் - அறிவோம். இத்தகைய கட்டளைகளை நிறைவேற்றாத ஒரு மாகாணம் மத்திய அரசாங்கத்தை முழுமை யாகச் செயலிழக்கச் செய்யும் நிலைக்குத் தள்ளிவிட முடியும். எனவேதான் கட்டளைகளை அமலாக்கம் செய்யும் அதிகாரம் மத்திய அரசாங்கத்துக்கு இருப்பது அவசிய மாயிற்று.

இது ஒரு முக்கியமான விஷயமாகும், ஆதலால் இப்போது செய்யப்பட்ட திருத்தம் மிகுந்த பயனளிக்ககூடியது மட்டுமல்லாது, இந்திய அரசாங்கத்தின் ஸ்திரத்தன்மைக்கும் மிகவும் தேவையானது மாகும்.

★ ★ ★

[1]**பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரு :** ... தலைவர் அவர்களே, நான் முடித்துக் கொள்முன் மற்றும் ஒரு கருத்தைக் கூற விரும்பு கிறேன். விதி 365-ன் வாசகத்தை நியாயப்படுத்தும் அரசியல் சாச னத்தின் பலவிதிகளை வரைவுக்குழு மேற்கோள் காட்டியுள்ளது. அவ்வாறு மேற்கோள் காட்டப்பட்டதில் விதி 371ம் ஒன்று: இது பழைய விதி 306-ஆ வை ஒத்துள்ளது. அந்த விதி விட்டுவிடப்பட் டிருப்பின், விதி 365 சிறிது நியாயமானதாக இருக்கும்; ஆனால் விதி 306வது அரசியல் சாசனத்திலிருந்து விட்டு விடப்படவில்லை. அது விதி 371 ஆக உள்ளது; ஆனால் வரைவுக்குழு திருத்தியுள்ள விதி 371ன் வாசகத்தை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அரசியல் நிர்ணயசபை கடந்த மாதம் திருத்தியுள்ள விதி 306-ஆ....

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் மேற்கொண்டு பேசுவதற்கு முன்னர் ஒரு விஷயத்தைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்: அதாவது ''இத்தகைய கட்டளைகளை நிறைவேற்ற எவ்வகையிலும் தவறுவது இந்த அர சியல் சாசனத்தின் ஷரத்துக்களின்படி மாநில அரசாங்கம் செய்யும்

★ புள்ளிகள் குறுக்கீட்டை குறிப்பிடுகின்றன.

1. அ.பே.வி., தொகுதி 10, அக்டோபர் 15, 1949, பக். 519.

தவறாகக் கருதப்பட வேண்டும் என்னும் சொற்கள்'' மூல விதயான 306ஆ-வை ஒத்துள்ள 371ஆ வது விதியிலிருந்து நீக்கப்பட்டுள்ளன என்பதை அவருக்கு நினைவூட்ட விரும்புகிறேன்.

**பண்டிட் ஹிருதயநாத் குன்ஸ்ரூ:** அவ்வாறாயின் இது விஷயத்தில் நான் மேற்கொண்ட நிலை சரியானது என்றாகிறது. மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் தாகூர்தாஸ் பார்கவா பரிந்துரைத்தபடி விதி 365 நீக்கப்படுமானால், வரைவுக்குழு முன்பு வரைந்த பழைய விதி 306-ஆ-வை மேற்கொள்ளலாம். இதுவன்றி, இந்தப் பிரச்சினையை டாக்டர் அம்பேத்கர் எழுப்பியிருப்பதால், தற்போது நாம் விவாதித்துவரும் இப்போதைய அரசியல் சாசன வரைவில் இடம் பெற்றுள்ள 371ஆ வது விதியை ஒத்திருக்கும் விதி 306ஆ ஒரு வரையறைக்குட்பட்ட காலத்திற்கு உரியதாகவே இருக்கும் என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அது பத்தாண்டு காலத்துக்கே நடைமுறையில் இருந்துவரும். எனவே, அரசியல் சாசனத்தில் நிரந்தரமாக இடம் பெறக்கூடிய ஒரு புதிய ஷரத்தை அறிமுகப்படுத்துவதை நியாயப்படுத்துவதற்கு இந்த ஷரத்தைப் பயன்படுத்த முடியாது என்பது தெளிவு.

இதனால் தான் மாண்புமிகு என்னுடைய நண்பர் டாக்டர் அம்பேத்கர் விதி 306-ஆ-வை வரைவது சம்பந்தமாக செய்யப்பட்டுள்ள மாற்றத்தை எனக்குச் சுட்டிக்காட்டிய போது விதிகள் 353 மற்றும் 360ஐ குறிப்பிட்டேன்.

**திரு. எச்.வி. காமத்:** 371-ஆம் விதி பத்தாண்டுகளுக்கு அதிகமான காலக்கெடுவுக்கு வழிவகை செய்துள்ளது என்பதை நான் சுட்டிக் காட்டலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ''இந்த அரசியல் சாசனத்தில் எது எவ்வகையாயினும், இந்த அரசியல் சாசனம் அமலுக்கு வரும் நாளிலிருந்து பத்தாண்டுக் காலக் கெடுவுக்குள் அல்லது நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம் நிர்ணயிக்கும் அதிக அளவு அல்லது குறைந்த அளவு காலக்கெடுவுக்குள்...'' இன்ன பிற.

★ ★ ★

[1]**திரு. மகாவீர் தியாகி :** ஐயா, தலைவர் என்றால் அரசியல் நிர்ணய சபையின் தலைவரைக் குறிக்கிறது. ''அரசின் தலைவரை யல்ல'' என்று நான் நினைக்கிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** ஒன்றியத்தின் தலைவரைத் தவிர வேறு தலைவர் எவரும் இல்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனது பதிலில் இதற்கு விளக்கம் அளிக்க விரும்புகிறேன். திரு. சித்வா தமது உரையை முடித்துக் கொள்ளட்டும்.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் முன்மொழி கிறேன்:

> ''78-ஆம் விதியின் (1) ஆம் துணைவிதியின் (ஆ) உபவிதியில் 'சட்டம் எதற்கும் கீழான குற்றம்' என்பதற்குப் பதிலாக 'சட்டம் எதற்கும் எதிரான குற்றம்' என்ற சொற்கள் சேர்க்கப்பட வேண்டும்.''

★ ★ ★

[3]**திரு. ஆர்.கே. சித்வா:** ஐயப்பாடுகள் எதற்காவது பதில் கிடைக்குமானால் பயனுள்ளதாக இருக்கும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, வரைவுக் குழுவினால் திருத்தம் செய்யப்பட்ட 366-ஆம் விதியின் (12)ஆம் துணை விதியின் முன்வடிவை எனது நண்பர் திரு. சித்வா நோக்கு வாராகில் திருத்தம் எண் 562-அ வின் கருப்பொருளான 367-ஆம் விதியின் உபவிதி (3)ல் புதிதாக ஒன்றுமில்லை என்பதை அவர் கவனிக்க முடியும். 366-ஆம் விதி ஒரு விளக்க விதி, ஆகையால் அரசியல் சாசனத்தின் கருத்துப்படி வெளிநாட்டரசு எது என்பதற்கு

---

1. அரசமைப்புப் பேரவை விவாதங்கள், அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 15 நவம்பர் 1949, பக்கம் 525.
2. அதே தொகுதி, பக்கம் 536.
3. அதே நூல், பக். 550-551.

விளக்கம் அளிக்க உபவிதி (12) முயல்கிறது. சட்டமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட 366-ஆம் விதியின் துணைவிதி (12) மிகவும் பூடகமானதாகவும், சுருக்கமானதாகவும் உள்ளதாகக் கருதப்பட்டது. அதற்கு ஒரு விரிவான வடிவமும் உருவமும் கொடுப்பது விரும்பத்தக்கது. எனவே துணைவிதி (12)ஐ நீக்குவதே சிறந்த வழி என்று வரைவுக் குழு தீர்மானித்தது. இது திருத்தம் எண் 497-ஆல் நிறைவேற்றப்பட்டுள்ளது. இப்பொழுதுள்ள திருத்தம் எண் 562-அ அதற்குப் பதிலாகக் கொண்டுவரப்பட்டுள்ளது. இந்தியாவைப் பொறுத்தமட்டில் ஒரு குறிப்பிட்ட நாட்டை, வெளிநாடல்ல என்று ஆணை ஒன்றின் மூலம் குடியரசுத் தலைவர் அறிவிக்கலாம் என்ற முக்கியமான வழிவகையை, அவையில் தாக்கல் செய்யப்பட்ட அறிக்கையுடன் கூடிய முன்வரைவு கொண்டிருந்தது. 367-ஆம் விதியின் (3) ஆம் துணைவிதியின் முக்கியப் பகுதியும் அதுவேதான். இந்தப் பொருள் குறித்து நாடாளுமன்றம் சட்டமியற்றலாம் என்றும், அப்படி சட்டமியற்றும்போது எந்த ஒரு நாட்டையும் வெளிநாடல்ல என்று ஓர் ஆணையின் மூலம் அறிவிக்கக் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் அளிக்கிறது என்பது மட்டும் சேர்க்கப்பட்டுள்ளது. ஆணையில் குறிப்பிடப்பட்டுள்ள நோக்கங்களுக்காக என்ற சொற்கள் கொண்ட வரம்புரை இல்லாது, இந்த அதிகாரத்தை நெளிவு சுளுவற்ற அடிப்படையில் அளிப்பது விரும்பத்தக்கதல்ல என்று வரைவுக்குழு மேலும் உணர்ந்தது. ஏனெனில் நாடாளுமன்றத்துக்கும் குடியரசுத் தலைவருக்கும் ஓர் அன்னிய நாட்டை வெளிநாடு என்று சொல்வது அல்லது ஒரு குறிப்பிட்ட நாட்டை வெளிநாடல்ல என்று அறிவிப்பது ஆகிய இருவழிகளில் ஒன்றைத் தேர்ந்தெடுப்பதைத் தவிர வேறு வழியில்லாத நிலை உருவாகும். இதன் விளைவாக வெளி நாடல்ல என்று அறிவிக்கப்பட்ட நாட்டின் மக்கள் தாமாகவே இந்தியக் குடிமக்களாவதுடன், இந்த அரசியல் சாசனத்தின்படி இந்திய மக்களுக்குரிய உரிமைகள் அவர்களுக்கும் அளிக்கப்பட வேண்டியதாகிவிடும். ஓர் அன்னிய நாட்டை வெளிநாடல்ல என்று அங்கீகரிப்பது விரும்பத்தக்கது என்றாலும், ஆணையில் குறிப்பிடப்பட்டுள்ள நோக்கத்திற்காக மட்டுமே என்று வரையறுப்பது இந்த நாட்டின் நலனுக்கு உகந்தது. குடியரசுத் தலைவர் ஆணையைப் பிறப்பிக்கும்போது தமது நிலையை முற்றிலும் விரிவான அடிப்படையில் அறிவிக்க முடியும் அதாவது ஓர் அன்னிய

நாடு வெளிநாடல்ல என்று அறிவிக்கும் போது அந்த வெளிநாட்டின் குடிமக்கள், இந்தியக் குடிமக்கள் அனுபவித்து வரும் உரிமைகள் எல்லாவற்றையும் அனுபவிக்க முடியாது என்பதையும், குறிப்பிட்டுள்ள சில உரிமைகளையே அனுபவிக்க முடியும் என்பதையும் பிரகடனப்படுத்த முடியும். எனவே இந்த நோக்கத்திற்காகவும் இந்த விஷயங்கள் சம்பந்தமான வழிவகைகளுக்காகவும் 366-ஆம் விதியின் துணைவிதி (12) ஐ 367-ஆம் விதியின் துணைவிதி (3) ஆக மாற்றுவதே விரும்பத்தக்கது என்று நாங்கள் கருதினோம்.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** இந்தப் பிரச்சினையில் உறுப்பினர்களிடையே ஓர் உடன்பாட்டிற்கு வர, இன்றிலிருந்து 25-ஆம் தேதி வரை காலக்கெடு உள்ளது என்று பண்டிட் பார்கவா யோசனை தெரிவித்துள்ளார். அவர்கள் இதை ஏற்றுக் கொள்வார்களெனில் அப்படியே செய்யலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது) : நவம்பர் 26-ல் தனது அமர்வை முடித்துக் கொள்ளும் இச்சட்டமன்றம், அதற்கு முன்பு, 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின் 290-ஆம் பிரிவைத் திருத்துவதன் மூலம், இந்தச் சிக்கலுக்குத் தீர்வுகாண முடியும். தனது இதர அதிகாரங்களுடன் ஒரு மாகாணத்தின் பெயரை மாற்றவும் கவர்னர் ஜெனரலுக்கு அனுமதி வழங்குவதன் மூலம், இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி, ஏற்கெனவே கவர்னர்-ஜெனரல் எடுத்த நடவடிக்கைகளை நிறைவேற்ற, குடியரசுத் தலைவர் 391-ஆம் விதியின் கீழ் நடவடிக்கை எடுத்து பட்டியலைத் திருத்த முடியும். இதற்கு ஒரு சில நிமிடங்களே போதுமானது. வரைவுக்குழு அல்லது உள்துறை 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின் 290-ஆம் பிரிவைத் திருத்த, ஒரு மசோதாவை கொண்டுவர முடியும். இந்த மசோதாவை ஜனவரி 26-ஆம் தேதிக்குள் நிறைவேற்ற முடியும்.

1. அ.பே.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 16 நவம்பர் 1949, பக்கம் 574.

**மாண்புமிகு திரு. கே. சந்தானம்:** பெயரை மாற்றுவதற்கு எங்களுக்குக் கருத்து வேறுபாடு இல்லை. ஆனால் 'ஆரியவர்த்தா' என்ற பெயர்தான் பிரச்சினை. அதுபோலவே, கவர்னர்-ஜெனரலும் பெயரை 'ஆரியவர்த்தா' என்று மாற்ற நாங்கள் அனுமதிப்போம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** கட்சியின் முடிவின் படி அது ஆரியவர்த்தாவாக இருக்க முடியாது. திரு. பாபு புருஷோத்தம தாஸ் தாண்டன் இதைக் கவனத்தில் எடுத்துக் கொள்வார் என நினைக் கிறேன்.

**மாண்புமிகு பண்டிட் கோவிந்த வல்லபந்த் :** (ஐக்கிய மாகா ணங்கள் பொது) நீங்கள் ஒதுக்கித் தள்ளியதை ஐக்கிய மாகாண அரசு நிறைவேற்றவோ, கவர்னர்-ஜெனரல் ஏற்றுக் கொள்ளவோ முடியாது. இதை நாம் எல்லோரும் ஒப்புக்கொள்கிறோம்.

**திரு. அவைத் தலைவர்:** அப்படியென்றால் இப்பொழுது செய்வதற்கு ஒன்றுமில்லை.

**மாண்புமிகு பண்டிட் கோவிந்த வல்லபந்த்:** டாக்டர் அம்பேத் கர் அளித்த யோசனைப்படி, தாம் கலைந்து செல்வதற்கு முன் திருத் தத்திற்கான மசோதா ஒன்றை நிறைவேற்றலாம்.

**திரு. அவைத் தலைவர்:** அது டாக்டர் அம்பேத்கர் செய்ய வேண்டியது.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** இப்பொழுது திருத்தங்கள் எல்லா வற்றையும் முடிவு செய்து விட்டோம். மேலும் பொதுவான விவாதத் திற்கு நேரம் இல்லை. ஆனால் உண்மையில் எழுப்பப்பட்ட பிரச் சினைகள் அனைத்தையும், விவாதிக்கப்பட வேண்டிய விஷயங்கள் அனைத்தையும் விவாதித்துவிட்டோம். எனவே திருத்தங்கள் பல வற்றின் விவாதங்களுக்கு டாக்டர் அம்பேத்கரைப் பதிலளிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

1. அ.பே.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 16 நவம்பர் 1949, பக்கம் 575-582.

**திரு. ராஜ் பகதூர்:** நான் ஒரே ஒரு விஷயத்தை மட்டும் குறிப்பிட விரும்புகிறேன். சிரோகி பற்றிய ஆணையை அவைமுன் வைக்க நான் கேட்டுக் கொள்ளலாமா? அதன் மூலம் அதன் உள்ளடக் கத்தை அறிந்து கொண்டு அதை ஏற்றுக் கொள்வதா, அங்கீகரிப்பதா அல்லது வேறு எவ்விதத்திலாவது கவனத்தில் எடுத்துக்கொள்வதா, அல்லது வேண்டாமா என்பதை முடிவு செய்ய முடியும்.

**திரு. அவைத் தலைவர்:** இந்த அவைமுன் வைக்கப்பட வேண்டிய விஷயமல்ல அது என்று நினைக்கிறேன். மற்ற அவையில் கவனிக்கப்பட வேண்டிய விஷயம் இது. இந்த அவை சம்பந்தப் பட்டதல்ல அது, டாக்டர் அம்பேத்கர், நீங்கள் என்ன சொல்லு கிறீர்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** தலைவர் அவர் களே, இந்த அவை உறுப்பினர்களால் கடுமையாக விமர்சிக்கப் பட்ட சில விதிகளைக் குறித்து என் பதிலில் எடுத்துரைக்க விரும்பு கிறேன். தங்கள் உரைகளில் உறுப்பினர்கள் கருத்துக் கூறிய எல்லா விதிகளையும் குறித்துப் பேசுவது உண்மையிலேயே முடியாத காரியம். எனவே கடுமையான விமர்சனங்களுக்குட்பட்ட முக்கியமான விதி களைப் பற்றி மட்டுமே எடுத்துக்கூற விரும்புகிறேன்.

22-ஆம் விதியிலிருந்து நான் ஆரம்பிக்கிறேன். வரைவுக் குழு வால் திருத்தம் செய்யப்பட்ட இந்த விதியும், அதன் ஷரத்துகளும் முற்றிலும் புரிந்து கொள்ளப்படவில்லை என்று எனக்குத் தோன்று கிறது. எனவே சுருக்கமான முறையில், வரைவுக் குழுவால் திருத்தம் செய்யப்பட்ட இந்த விதி, திட்டவட்டமாக நிறைவேற்றப் போவது என்ன என்பதைக் கூற விரும்புகிறேன். வரைவுக் குழுவால் திருத்தப் பட்ட 22ஆம் விதியின் ஷரத்துகள் பின்வரும் முக்கியமான விஷயங் களைக் கொண்டுள்ளன.

முதலாவது, தடுப்புக் காவல் சட்டவழக்கு எதுவாகினும், அது சட்டத்தால் அங்கீகரிக்கப்பட வேண்டும். அது நிருவாகத் துறையின் விருப்பத்திற்கு இணங்க இருக்க முடியாது.

இரண்டாவது, துணை விதி (7) உபவிதி (ஆ) வின் கீழ் மூன்று மாதங்களுக்கு மேல் தடுப்பக் காவலில் வைக்க நீதிக் குழுவின் அங்கீகாரத்திற்கு அளிக்கப்படவேண்டியதில்லை என்று நாடாளுமன்றம், சட்டத்தின் மூலம் தீர்மானிக்கும் வழக்குகளைத் தவிர்த்து மூன்று மாதங்களுக்கு அதிகமான கால அளவுள்ள தடுப்புக் காவல் வழக்குகள் நீதிக் குழுவின் முன் வைக்கப்பட வேண்டும்.

மூன்றாவது, நீதிக் குழுவுக்கு முன்பு வைக்கப்படவேண்டிய வழக்குகள் அல்லது அதற்குத் தேவையற்ற வழக்கானாலும் ஒவ்வொரு வழக்கிற்கும் தடுப்புக் காவலில் வைத்திருக்க வேண்டிய அதிக அளவிலானக் காலக்கெடுவை நாடாளுமன்றம் தீர்மானிக்கும். தடுப்புக் காவலில் சிறைவைக்கப்பட்ட எவரையும் காலவரையின்றி தடுப்புக் காவலில் வைக்க முடியாது. தடுப்புக் காவலில் வைப்பதற்கான அதிக அளவிலானக் காலக்கெடுவை சட்டத்தின் மூலம் நாடாளுமன்றம் நிர்ணயிக்க வேண்டும்.

நான்காவது, 22-ஆம் விதியின்படி, நீதிக் குழு முன் வைக்கப்பட வேண்டிய வழக்குகள் குறித்தும், நீதிக் குழு பின்பற்றவேண்டிய நடைமுறைகளையும் நாடாளுமன்றம் தீர்மானிக்கும். வரைவுக் குழுவினால் திருத்தப்பட்ட 22-ஆம் விதியின் ஷரத்துகளை, மூல விதி 15-அ-வுடன் உறுப்பினர்கள் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டுமென்று விரும்புகிறேன். மூல விதி 15-அ வைப்பற்றி இரண்டு குற்றச்சாட்டுகள் உள்ளன. துணைவிதி (7) நிர்ணயித்துள்ள அதிக அளவிலான தடுப்புக் காவலுக்கு உட்பட்டு துணைவிதி 4 (அ) இருக்கவில்லை. துணைவிதி (4)அ தொடர்பற்று தனியாக இருந்தது. இரண்டாவது குறைபாடு, விதி 4-அவின் கீழ் தடுப்புக் காவலில் வைக்கப்பட்டவர்கள் சம்பந்தமாக எந்தக் காரணத்திற்காகத் தடுப்புக் காவலில் வைக்கப்பட்டுள்ளார்கள் என்பதைத் தெரியப்படுத்த வேண்டிய அவசியம் தேவையற்றதாக இருந்தது. மூல விதி 15-ஆவில் இருந்த இந்த இரு குறைபாடுகளும் 22-ஆம் விதியின் துணைவிதி (4)ன் மூலம் நீக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

22-ஆம் விதியின்படி, அந்த விதியில் மாற்றம் செய்யப்பட்டிருப்பினும், இன்னும் அந்த விதியைக் குறித்து, திருமதி பூர்ணிமா

பானர்ஜிக்குச் சில கருத்து வேறுபாடுகள் இருப்பதாக அவருடைய உரையிலிருந்து தெரிகிறது. சட்ட அதிகாரமின்றித் தடுப்புக் காவலில் வைக்கப்பட வாய்ப்புகள் இருப்பதாகவும், இரண்டாவதாக இன்னும் பல வழக்குகள் நீதித்துறையின் முன் வைக்கப்பட வேண்டிய அவசியம் இல்லாமலிருப்பதையும், நேற்று அவர் தம்முடைய உரையில் எடுத்துக் கூறினார். அவருடைய முதல் குற்றச்சாட்டைப் பொறுத்த வரையில், அவர் மிகவும் தவறான எண்ணம் கொண்டுள்ளார் என்று தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். சாதாரணச் சட்டத்தின் மூலம் காவலில் வைக்கப்படுவதிலிருந்து, தடுப்புக் காவல் சட்டத்தின் மூலம் காவலில் வைக்கப்படுவது மாறுபட்டாலும், தடுப்புக் காவலில் வைக்கப்படுவது, சட்டத்தின் அடிப்படையில்தான் இருக்க வேண்டும். அது நிருவாகத் துறையின் விருப்பப்படி இருக்க முடியாது. இந்த விஷயம் மிகவும் தெளிவானதே. இரண்டாவது, புதிய 22-ஆம் விதி, சில வகை வழக்குகளை நீதிக்குழு முன்பு வைக்க வேண்டியதிலிருந்து விலக்களிப்பதைக் குறித்து அவர் கூறியது சரிதான் என்று ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் இந்த மாதிரியான ஒரு பாகுபாடு நிச்சயம் அவசியம் என்பதையும் சொல்லிக் கொள்கிறேன். ஒரு குறிப்பிட்ட நபர் தடுப்புக் காவலில் வைக்கப்பட்டிருப்பதற்கான காரணங்களை, நீதிக் குழு உறுப்பினர்கள் அறிந்து கொள்வதை அனுமதிப்பது விரும்பத்தகாததாக இருக்கலாம். ஏனெனில் தடுப்புக் காவலுக்கான சூழ்நிலை ஆபத்தானதாகவும், அதன் விளைவுகள் பயங்கரமானதாகவும் இருக்கலாம். உண்மை நிகழ்ச்சிகளை வெளியிடுவது நாட்டின் சுதந்திரத்துக்கு பேராபத்து விளைவிக்கக் கூடியதாக இருக்கலாம். நீதிக் குழுவின் தலையீடின்றி மூன்று மாதத்திற்கு அதிகமாகத் தடுப்புக் காவலில் வைக்கப்படுபவர்கள் சம்பந்தமாகக் கூட இரண்டு மனநிறைவு செய்யக் கூடிய சூழ்நிலைகள் உள்ளதை அவர் சந்தேகத்துக்கிடமின்றி உணர்ந்திருப்பார். முதலாவது இதுதான்: இந்த வழக்குகள் நாடாளுமன்றத்தால் வரையறை செய்யப்படும். அவை குறித்து நிருவாகத் துறையினர் தம் விருப்பப்படி தீர்மானிக்க முடியாது. நீதிக் குழுவுக்கு முன், எப்படிப்பட்ட வழக்குகள் கொண்டுவரப்படவேண்டிய அவசியம் இல்லை என்று நாடாளுமன்றம் தீர்மானிக்கும் வழக்குகளில் மட்டும் மூன்று மாதத்திற்கு அதிகமாக ஒரு நபரை தடுப்புக் காவலில் வைக்க அரசுக்கு அதிகாரமுள்ளது. ஆனால் மிகவும் முக்கியமானது என்னவென்றால், நீதிக்

குழு எடுத்துச் செல்லவேண்டிய வழக்குகள், அதற்கு அவசிய மில்லாத வழக்குகள் ஒவ்வொன்றிற்கும், அதிக அளவிலான தடுப்புக் காவல் காலக்கெடுவை நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம் தீர் மானிக்கும் என்பதாகும். இது மிக முக்கியமானது என்பதை உணர வேண்டும்.

வரைவுக் குழு 22-ஆம் விதி சம்பந்தமாக ஆலோசித்தளித்த இந்தத் திருத்தங்களைக் கணக்கிலெடுத்துக் கொண்டால் விதி 15-ஆ-வின் ஷரத்துகளில் காணப்பட்ட கடுமை அதிகம் குறைந்துள்ளது என்று நினைக்கிறேன். 22-ஆம் விதியைப் பொறுத்தவரையில், எனக்கு அவசியம் என்று தோன்றியதை எடுத்துக் கூறி, அந்தப் பிரச்சினையை முடித்த நிலையில், அடுத்ததாக 373-ஆம் விதியை எடுத்துக் கொள்ள விரும்புகிறேன். 273ஆம் விதியுடன் அவ்விதி நெருங்கிய தொடர் புடையது.

373-ஆம் விதிக்கு எதிராக, அதிக அளவிலான விமர்சனம் இருந்தது. அரசியல் சாசனத்தில் இப்படிப்பட்ட விதியைச் சேர்ப் பதின் நியாயத்தையும், அதன் தகுதியைப் பற்றியும் சில உறுப் பினர்கள் சவால் விட்டனர். பின்வரும் கேள்வியை உறுப்பினர்களின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்: அரசியல் சாசனத்தில் இந்த விதி இடம் பெறாவிட்டால் என்ன நேரக்கூடும்? இந்த விதி அரசியல் சாசனத்தில் சேர்க்கப்படாவிட்டால் என்ன நேரக்கூடும் என்பது தெளிவானதே. இதுதான் நடக்கக்கூடும்: த்டுப்புக் காவலில் உள்ள யாவரும், 22-ஆம் விதியின் கீழ் அனுமதிக்கப்பட்டுள்ள மூன்று மாதத் தடுப்புக் காவலில் இருந்தவர்கள், 1950 ஜனவரி 26-ல் உட னடியாக விடுதலை ஆவார்கள். அதற்குள் நாடாளுமன்றம் 22-ஆம் விதியின் (7) ஆம் துணைவிதியின் கீழ் அதிக காலக்கெடுவிற்குத் தடுப்புக் காவலில் வைக்க அனுமதித்து சட்டமியற்றவில்லையென் றால் ஏற்படக் கூடியது இதுதான். இது ஒரு விரும்பத்தகுந்த விளைவு தானா என்பதே கேள்வி. தற்பொழுதுள்ள சட்டப்படி தடுப்புக் காவலில் வைக்கப்பட்டுள்ளவர்களை மேலும் அதிகக் காலக்கெடு வுக்கு தடுப்புக் காவலில் வைக்க அனுமதிக்கும் சட்டத்தை 1950 ஜனவரி 20க்குள் கொண்டுவரும் நிலையில் நாடாளுமன்றம் இல்லையென் பதால் ஜனவரி 26ல் எல்லோரும் விடுதலைச் செய்யப்படவேண்

டுமா? அது பெரும் பயங்கர விளைவுகளை ஏற்படுத்தும் என்றுதான் தோன்றுகிறது. எனவே உடனடியாகவோ, அல்லது ஜனவரி 26க்கு முன்போ நாடாளுமன்றம் கூட்டப்பட்டு அந்த நாளிலிருந்து அமலுக்கு வரும் ஒரு சட்டத்தை இயற்றுவது சாத்தியமில்லை என்ற உண்மையின் அடிப்படையில், அரசியல் அமைப்புச் சட்டத்தின் கீழ், விதி 22ன் ஷரத்துகள் முற்றிலும் செயல்பட, நாடாளுமன்றம் செய்ய வேண்டிய பணியை நிறைவேற்றும் அதிகாரத்தை வேறு ஒரு அதிகார அமைப்புக்கு அளிக்கவேண்டும். அரசியல் சாசனத்தின்படி இப்படிப்பட்ட அதிகாரி யார்? நிச்சயமாகக் குடியரசுத் தலைவர்தான். 26-ஆம் தேதியன்றும் அதற்கு முன்பும் பதவியில் இருக்கக்கூடிய ஒரே அதிகாரி குடியரசுத் தலைவராகத்தான் இருப்பார். நாடாளுமன்றத்தின் பொறுப்பை ஏற்றுக்கொண்டு உடனடியாக சட்டம் இயற்றி, விதி 22ன் ஷரத்துகளுக்கு செயலாக்கமூட்டி தடுப்புக் காவல் காலக் கெடுவை நீட்டிக்க முடியும். எனவே இது முற்றிலும் அவசியமானது. தடுப்புக் காவல் சம்பந்தமான தடங்கலிலிருந்து பாதுகாக்க ஏற்பாடு செய்வது மிக அவசியமானது. நாடாளுமன்ற அதிகாரத்துக்குட்பட்டு இயற்றப்படக்கூடிய சட்டத்தை குடியரசுத்தலைவர் நிறைவேற்ற அதிகாரம் அளிக்கும் 373 போன்ற விதி அவசியமாகிறது. ஐயா, மேலும் 373-ஆம் விதியின் ஷரத்துகளில் எந்தவித புதுமையும் இல்லை என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். ஏனெனில், இந்த அரசியல் சாசனத்தின் விதிகளுக்குப் பொருந்தும்படி நடப்பிலுள்ள சட்டங்களில் மாற்றம் செய்ய வேறுபல விதிகளின் மூலம் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் வழங்கியுள்ளோம். நாடாளுமன்றத்தால் இந்த மாற்றங்களைச் செய்யமுடியும். ஆனால் நாடாளுமன்றத்தால் உடனடியாக ஜனவரி 26ல் இந்தியச் சட்டமன்றங்களால் இயற்றப்பட்டுள்ள ஏராளமான சட்டங்கள் சம்பந்தமாக மாற்றங்கள் செய்வது, அரசியல் சாசனத்துக்குப் பொருத்தமாகக் கொண்டுவருவது சாத்தியமற்றது என்பது உணரப்பட்டுள்ளது. எனவே இந்த அதிகாரம் குடியரசுத் தலைவருக்கு அளிக்கப்பட்டுள்ளது. இதேபோன்று எதிர்கொள்ளும் இடர்ப்பாடுகளை நீக்க, இந்த அரசியல் சாசனத்தையே தற்காலிகமாக திருத்தம் செய்ய, மற்றொரு விதியின் மூலம் குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது என்பதால், இது ஏதோ ஒரு புதிய முயற்சியென்றோ அல்லது தவறான எண்ணம் கொண்டதோ அல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். நேர்மாறாக,

தடுப்புக் காவல் சம்பந்தமாக சீர்குலைவைத் தடுக்க உதவ அவசிய மான விதி என்றுதான் இதனைக் கூறவேண்டும்.

ஐயா, இப்பொழுது ராணுவச் சட்டம் சம்பந்தமான 34-ஆம் விதிக்கு வருவோம். இந்த விதியைக் குறித்தும் கடுமையான விமர் சனங்கள் இருந்தன. 34-ஆம் விதிக்கு எதிராகப் பேசிய உறுப்பினர் கள் அரசியல் சாசனத்தின் 20ஆம் விதியின் துணைவிதி (1) மற்றும் 21ஆம் விதியின் செயல்பாடுகளைத் தெளிவாகப் புரிந்துகொள்ள வில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். 20-ஆம் விதியின் துணைவிதி (1) மற்றும் 21-ஆம் விதியைப் படித்துக் காட்ட விரும்புகிறேன். இந்த இருவிதிகளிலும் அடங்கியுள்ள ஷரத்து களைச் சரிவரப் புரிந்துகொள்ளாமல் 34-ஆம் விதியின் விரும்பத் தக்க தன்மையை - மேலும் சொல்வதென்றால் அதன் அவசியத்தை - உறுப்பினர்கள் அறிந்து கொள்வது சாத்தியமில்லை எனலாம். 20-ஆம் விதியின் துணைவிதி (1) பின்வருமாறு கூறுகிறது:

> ''குற்றமென கருதப்படும் செயல் அது இழைக்கப்படும்போது நடப்பி லுள்ள சட்டத்தை மீறியதாக இருந்தாலன்றி எந்த ஒரு நபரும் குற்றச்சாட் டுக்கு உள்ளாக முடியாது.''

21-ஆம் விதி கூறுகிறது:

> ''எந்த ஒரு தனி நபரின் உயிரும், தனிப்பட்ட சுதந்திரமும் சட்டத் தினால் தீர்மானிக்கப்பட்டுள்ள நடைமுறைகளாலன்றி வேறு எந்த முறை யிலும் பறிக்கப்பட முடியாது.''

நாட்டின் ஏதாவது ஒரு பகுதியில் கலகம், கிளர்ச்சி, அல்லது அரசைக் கவிழ்க்க முயற்சி நடைபெறும்போது ராணுவச் சட்டம் அறிமுகப்படுத்தப்படுவது யாரும் அறிந்ததே. ராணுவச் சட்டத்திற்குப் பொறுப்பான அதிகாரி இரண்டு விஷயங்களைச் செய்கிறார். தமது ஆணையின் மூலம் சில செயல்களை தமது அதிகாரத்துக்கு எதிரான குற்றங்கள் என்று அவர் அறிவிக்கிறார். மேலும், இரண்டாவதாக, அவர் குற்றங்கள் என்று அறிவித்துள்ள செயல்களை இழைப்பவர்களை, விசாரணை செய்ய அவர் மேற்கொள்ளும் நடைமுறைகளை தீர் மானிக்கிறார். பதற்றம் நிறைந்த பகுதியின் பொறுப்பிலுள்ள ராணுவ

அதிகாரியால் அறிவிக்கப்பட்டுள்ள செயல்கள் எதுவும், நடப்பிலுள்ள சட்டப்படி குற்றமல்ல என்பது மிகத் தெளிவானது. ஏனெனில் அந்தப் பிராந்திய அதிகாரி (கமாண்டர்) சட்டம் இயற்றும் அதிகாரியல்ல. ஒரு குறிப்பிட்ட செயலைக் குற்றம் என்று அறிவிக்கும் அதிகாரம் அவருக்குக் கிடையாது. இரண்டாவதாக அவருடைய ஆணையை மீறுவது ''நடப்பிலுள்ள சட்டம்'' என்பதன் பொருள்களுக்குட்பட்டு குற்றமாகாது. ஏனெனில் நடப்பிலுள்ள சட்டம் என்பது சட்டம் இயற்ற அதிகாரம் உள்ளவர்களால் இயற்றப்பட்ட சட்டம் என்றே பொருள்படும். மேலும் தலைமைக் கமாண்டர் அல்லது ராணுவக் கமாண்டர் உருவாக்கும் நடைமுறைகள் சட்டப்படியான நடைமுறைகளாகக் கருதமுடியாது. ஏனெனில் அவருக்குச் சட்டம் இயற்றும் அதிகாரம் கிடையாது. சட்டம், ஒழுங்கைப் பாதுகாக்கும் தன் பணிகளை நிறைவேற்றுவதற்காக அவர் நிறைவேற்றிய ஆணைகள் இவை. 34-ஆம் விதியில் குறிப்பிட்டுள்ள நிபந்தனைகள் ஏதும் இல்லாது 20-ஆம் விதியின் துணைவிதி (1) மற்றும் 21-ஆம் விதி மட்டும் இருந்தால் நாட்டின் எப்பகுதியிலும் ராணுவச் சட்டத்தைக் கொண்டுவரமுடியாது. மேலும் எந்தப் பகுதியிலாவது கலகம் தோன்றுமானால் சட்டம், ஒழுங்கை விரைவில் நிலைநாட்டுவது அரசுக்கு முடியாத காரியமாகிவிடும்.

எனவே ஒரு தீர்மானமான அறிவிப்பு அல்லது உறுதியான வழிவகைகளை உருவாக்குவது அவசியமாகிறது. 20-ஆம் விதியில் அல்லது 21-ஆம் விதியில் கூறப்பட்டிருப்பது எதுவாயினும், செயல்கள் எதையாவது தம்முடைய ஆணைக்கு எதிரான குற்றம் என்று தலைமைக் கமாண்டர் அறிவித்தால் அந்தச் செயல் குற்றமே என்பதை அனுமதிக்க இது அவசியம். அதே போன்று, அவரால் குறிப்பிடப்பட்ட நடைமுறைகள் சட்டத்தால் வகுக்கப்பட்ட நடைமுறைகளாகக் கருதப்படும். நமது அரசியல் சாசனத்தின் 34-ஆம் விதி இல்லையென்றால் ராணுவச் சட்ட நிர்வாகம் முற்றிலும் சாத்தியமில்லாததாகிவிடும். சட்டம், ஒழுங்கை நிலைநாட்டுவது, இந்த மாதிரி நிலைமையில் சாதிக்க முடியாத பணியாகிவிடும். ஐயா, 20 (1) விதிகளின் கடுமையைக் குறைக்க, 34-ஆம் விதி மிகவும் அவசியமானது என்று தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. எச்.வி. காமத்:** அரசு ஊழியர்களைத் தவிர மற்றவர்களின் செயல்பாடுகளுக்கும் அவர்களின் பொறுப்பிலிருந்து விடுவிக்க இந்த விதியில் ஏன் வகைசெய்யப்பட்டுள்ளது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஏனெனில், எனது நண்பர் வழக்குரைஞர் என்றால் இதன் அவசியத்தை அறிந்திருப்பார்....

**திரு. எச்.வி. காமத் :** நான் வழக்குரைஞர் அல்ல.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ராணுவச் சட்டம் அமலில் இருக்கும்போது குற்றவாளிகளைத் தண்டிப்பது படைத் தலைவர் மட்டுமல்ல; படைத்தலைவரின் உதவிக்கு குடிமக்கள் ஒவ்வொருவரும் முன்வந்து பொறுப்பை தமது தோள்களிலே சுமக்கக் கடமைப்பட்டுள்ளனர். படைத்தலைவரின் பரிவாரத்தைச் சேராத, சாதாரணக் குடிமகன், பணி எதையாவது நிறைவேற்றும்போது அவருடைய செயலின் பொறுப்பிற்கு நடவடிக்கை எடுக்காமல் விடுவிக்கப்பட வேண்டும். ஏனெனில் அவருடைய செயலும் நாட்டின் அமைதியைப் பாதுகாப்பதற்காக புரிந்த செயல் என்பதால் ஒரு ராணுவ அதிகாரியும், சாதாரண குடிமகனும் அமைதியைக் காக்கும் பணியில் ஈடுபடும்போது அவர்களிடையே வேறுபாடு ஏன் காட்டப் பட வேண்டும். ஐயா, இப்பொழுது பசுவதை குறித்துள்ள விதியைப் பற்றி பேச நினைக்கிறேன். பட்டியல் IV-ல் எண் 549 என்று குறிக்கப் பட்டுள்ள ஓர் ஒப்புக்கொள்ளப்பட்ட திருத்தத்தை வரைவுக் குழு அளித்திருப்பதால் அதைக் குறித்து எதுவும் கூறத்தேவையில்லை. வரைவுக்குழு முன்மொழிந்த புதிய வரைவு விதி 48ன் மீது அதிருப்தி கொண்டவர்களுக்கு இது கொஞ்சம் ஆறுதல் அளிக்கும் என நம்புகிறேன்.

அவையின் அலுவல்கள் சம்பந்தமான 77-ஆம் விதிக்கு வருவோம். இந்த விதியைப் பற்றிய விவாதத்தின்போது, இந்த விதியின் அவசியத்தையே சில உறுப்பினர்கள் புரிந்துகொண்டதாகத் தெரியவில்லை. இந்த விதி தேவையானதுதான் என்று கருதப்பட்டால்,

★ புள்ளிகள் குறுக்கீட்டை குறிப்பிடுகின்றன.

அலுவல் விதிமுறைகளை நிறைவேற்றும் அதிகாரம் பிரதம மந்திரி யிடம் இருக்க வேண்டுமென்று சில உறுப்பினர்கள் கருத்துத் தெரி வித்தனர். வேறு சிலர் இந்த விதி தேவைதான் என்றால் சிறப்பான முறையில் அவையின் நடவடிக்கைகளை மேற்கொள்ள இந்தத் துணை விதியில் ''சிறப்பான'' என்ற சொல்லைச் சேர்க்க வேண்டுமென்று கூறியுள்ளனர். 77-ஆம் விதி குறித்த விவாதத்தில் பங்கு கொண்ட உறுப்பினர்களில் பெரும்பாலோர் இவ்விதியின் அடிப்படையைப் புரிந்து கொண்டதாகத் தெரியவில்லை. அலுவல் விதிகளை நிறை வேற்றும் அதிகாரம் பிரதம மந்திரியிடம் இருக்கவேண்டுமென்ற விஷயத்தைக் குறித்து சரியாகப் புரிந்துகொள்ளப்படவில்லை என்று நான் நினைக்கிறேன். யதார்த்தத்தில், பிரதம மந்திரிதான் முடிவு எடுக்கிறார். இந்த விதியில் குடியரசுத் தலைவரைப் பற்றிக் குறிப்பிடப் பட்டிருப்பினும், குடியரசுத் தலைவர் பிரதம மந்திரியின் ஆலோ சனைப்படியே நடக்கக் கடமைப்பட்டுள்ளார். எனவே 77-ஆம் விதி யின்படி குடியரசுத் தலைவரால் வெளியிடப்படும் அலுவல் விதிகள், உண்மையிலேயே முதல் மந்திரியாலும் அவருடைய ஆலோசனைப் படியுமே வெளியிடப்படும்.

ஐயா, 77ஆம் விதியின் அவசியத்தைத் தெளிவாக அறிந்து கொள்ள 77-ஆம் விதி 53-ஆம் விதிக்கு நெருங்கிய தொடர்புடையது என்பதை புரிந்து கொள்வது அவசியம். உண்மையில் 53-ஆம் விதி யின் தொடர்ச்சிதான் 77-ஆம் விதி. 53-ஆம் விதி, தேவையான ஒரு வழிவகையை ஏற்படுத்திக் கொடுக்கிறது. அரசியல் சாசனத்தின் பொதுவான ஷரத்துகளின்படி ஒன்றியத்தின் எல்லா நிருவாகங்களும், குடியரசுத் தலைவரால் நிறைவேற்றப்பட வேண்டும். குடியரசுத் தலைவருக்கு அனுமதிக்கப்பட்டுள்ள இந்த அதிகாரத்தை, அவர் தாமே நிறைவேற்றவேண்டும் என்று விவாதிக்கப்படும். இந்த மாதிரி யான விவாதத்தைத் தவிர்க்கவே, 53-ஆம் விதி அறிமுகப்படுத்தப் பட்டுள்ளது. ஒன்றியத்தின் நிருவாக அதிகாரத்தை குடியரசுத் தலைவர் தாமே நேரிடையாக நிறைவேற்றலாம் அல்லது மற்றவர்கள் மூலமாக நிறைவேற்றலாம் என்று இந்த விதி கூறுகிறது. வேறு வார்த்தைகளில் கூறுவதென்றால், அரசியல் அமைப்புச் சட்டத்தில் தமக்கு அளிக்கப் பட்டுள்ள அதிகாரத்தை குடியரசுத் தலைவர், மற்றவர்களுக்கு ஒப் படைக்க 53-ஆம் விதி அனுமதி அளித்துள்ளது. ஐயா, இப்பொழுது

தம்முடைய அதிகாரத்தை தம்மாலின்றி மற்றவர்கள் மூலம் நிறைவேற்ற அனுமதிக்கும் 53-ஆம் விதியில் அடங்கியுள்ள இந்தக் குறிப்பிட்ட ஷரத்தை செயல்படுத்தத்தக்கதாக ஆக்க வேண்டும். இல்லை யென்றால் 53-ஆம் விதி செல்லாததாகிவிடும். அலுவல் விதிகளை குடியரசுத் தலைவரே உருவாக்க வேண்டும் என்று 77-ஆம் விதியில் வகை செய்யப்பட்டுள்ளது போல சட்டரீதியான வழிவகையைச் செய்ய வேண்டிய அவசியம் என்ன என்ற கேள்வி எழக்கூடும். அவர் தம் விருப்பப்படி செயல்பட அல்லது செயல்படாமல் இருக்க குடியரசுத் தலைவருக்கே ஏன் விட்டுவிடக்கூடாது? எனவேதான் 77-ஆம் விதி போன்ற சட்ட வழிவகைகளை செய்ய வேண்டிய அவசியத்தை விளக்க வேண்டுமென்பது அவசியமாகிறது.

77-ஆம் விதியை விமர்சிக்கும்போது இரண்டு விஷயங்களை மனதில் கொள்ள வேண்டும். வேறு அலுவலர் யாருக்காவது அல்லது அதிகார அமைப்புக்கு தமது அதிகாரத்தை ஒப்படைக்க குடியரசுத் தலைவர் விரும்பினால், இந்த மாதிரி அதிகாரத்தை ஒப்படைத்த தற்கு ஏதாவது சாட்சியம் அவசியம். ஒரு நீதிமன்றத்தில் இம்மாதிரி கேள்வியை எழுப்பும் ஒருவருக்கு, குடியரசுத் தலைவர் தம் அதிகாரத்தை வேறொருவரிடம் ஒப்படைத்ததை நிரூபிக்க முடியாது. இரண்டாவது, குடியரசுத் தலைவர் ஒரு குறிப்பிட்ட நபருக்கு தமது பெயரில் அல்லது அரசின் பெயரில் செயல்படும் அதிகாரத்தை அளித்தால், அந்தக் குறிப்பிட்ட நபர் அல்லது அந்த குறிப்பிட்ட அதிகாரி யார் என்பது வரையறுக்கப்பட வேண்டும். இல்லையென்றால், குடியரசுத் தலைவர் தமது அதிகாரத்தை ஒப்படைப்பது பற்றியும், ஒன்றியத் தலைவரின் அதிகாரத்தைச் செயல்படுத்தும் அதிகாரியின் அதிகார வரம்பைப் பற்றியும் பல்வேறு வழக்குகள் எழக்கூடும். நமது நீதிமன்றங்களில் நடைபெறும் வழக்குகளில் நன்கு பழக்கமுற்றவர்களுக்கு வங்காள அரசுக்கும், ஷிவ்நாத் பானர்ஜிக்கும் இடையே தடைபெற்ற பிரபல வழக்குகள் நன்கு நினைவிலிருக்கும். இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்படி, அந்தச் சட்டத்திற்கு எதிராக குற்றம் இழைத்தவர்களை கைது செய்ய சிலருக்கு ஆளுநர் அதிகாரம் வழங்கியிருந்தார். கல்கத்தா உயர்நீதிமன்றத்தில் இதுபற்றி கேள்வி எழுந்தது. அந்தக் குறிப்பிட்ட சட்டப்படி கைதுசெய்ய உத்தரவு அளித்தவருக்கு அந்த அதிகாரம்

உள்ளதா என்ற கேள்வி எழுப்பப்பட்டது. கைது செய்ய அதிகாரம் அளிக்கப்பட்ட அந்தக் குறிப்பிட்ட நபர், வங்காள அரசு தீர்மானித்த நபர்தானா என்பதை நிரூபிக்க வங்காள நீதிமன்றம் கேட்டுக் கொள்ளப்பட்டது. வங்காள அரசு இதை நிரூபிக்க தனது அலுவல் விதிகளை நீதிமன்றத்தின் பார்வைக்கு அளிக்கவேண்டியிருந்தது. அலுவல் விதிகளின்படி குறிப்பிட்ட நபர்தான் அந்த அதிகாரத்தை பயன்படுத்தியுள்ளார் என்பது குறித்து நீதிமன்றம் திருப்தி கொள்வது அவசியமாயிருந்தது.

இந்த மாதிரி அதிகார ஒப்படைப்பு வழக்குகளை தவிர்க்கவே, 77-ஆம் விதி போன்ற ஓர் ஏற்பாட்டை அறிமுகப்படுத்த நாம் விரும்பினோம். இந்திய அரசாங்கத்தின் சார்பாக செயல்பட மற்ற நபர்களுக்கு அதிகாரம் ஒப்படைப்பதற்கான நாடாளுமன்றத்தின் அதிகாரத்தை இந்த விதி பறித்துவிடவில்லை. நாடாளுமன்றம் இந்த மாதிரியாக ஏற்பாடுசெய்யும்போது, எந்தவித வழக்குகளும் எழுப்பப்படுவதைத் தவிர்க்கும் வகையில், குடியரசுத் தலைவரின் செயல்பாடுகள் அமைய வேண்டும்.

சபை செயலுருவதற்குத் தேவையான குறைந்தபட்ச உறுப்பினர்களின் எண்ணிக்கை 'கோரெம்' பற்றிய விதியான 100 ஆம் விதியைப் பற்றி என் பதிலில் நான் ஏதாவது கூறவேண்டுமா என்று தெரியவில்லை. பிற நாட்டு சட்டமன்றங்களில் நடைமுறையிலுள்ள கோரெத்துடன் ஒப்பிடுகையில், ஆரம்பத்தில் நிச்சயித்த கோரெம் மிக அதிகம் என்ற அச்சம் தெரிவிக்கப்பட்டதால், கோரெத்தைக் குறைக்க யோசனைக் கூறப்பட்டுள்ளது. வரைவுக் குழுவின் ஆலோசனை இறுதியான தீர்மானம் அல்ல. நாடாளுமன்றத்தின் சட்டத்துக்குட்பட்டே அது நிறைவேற்றப்படும். சிறிது கால அனுபவத்திற்குப் பிறகு நாடாளுமன்ற நடவடிக்கைகளை அதிக கோரெத்துடன் நடத்த முடியும் என்ற முடிவுக்கு வருமானால் 100-ஆம் விதியிலுள்ள ஷரத்துகளை நாடாளுமன்றம் திருத்தி அமைக்க எவ்விதத் தடையும் இல்லை. அது முற்றிலும் வளைந்து கொடுக்கக் கூடிய ஏற்பாடு என்பதுடன், நடப்பிலுள்ள நடைமுறையைக் கணக்கிலெடுத்துக் கொண்டு, இந்த ஏற்பாட்டைப் போன்ற எதிர்கால

அனுபவத்தை வழிகாட்டியாக நாடாளுமன்றம் வைத்துக் கொள்ள அனுமதிக்கிறது.

138-ஆம் விதியைப் பற்றி சிறிது விமர்சிக்கப்பட்டது. நமது நீதிபதிகளுக்கு அதிகச் சலுகைகள் காட்டக்கூடாது என்று வாதிக்கப் பட்டது. நீதிபதிகளின் சம்பளங்கள் இப்பொழுது ஆய்வுக்கான விஷயம் அல்ல என்பதை மட்டும் கூறிக் கொள்கிறேன். தற்போது பணியிலுள்ள நீதிபதிகளுக்கு ஒரு வகை சம்பள விகிதத்தையும், எதிர் காலத்தில் நியமிக்கப்படும் நீதிபதிகளுக்கு ஒரு வகை சம்பள விகிதத் தையும் அவை நிர்ணயித்துள்ளது. நாம் இப்பொழுது கவனத்தில் எடுத்துக் கொள்ளவேண்டிய விஷயம் என்னவென்றால், ஒரு குறிப் பிட்ட மாநிலத்தின் உயர் நீதிமன்ற நீதிபதியாக நியமிக்கப்பட்ட ஒருவரை அந்த நீதிமன்றத்திலிருந்து மற்றொரு மாநில உயர்நீதி மன்றத்துக்கு மாற்றல் செய்ய அரசுக்கு அனுமதியுள்ளதா என்பதே. அப்படியென்றால், இந்த மாற்றத்தால் அவருக்கு ஏற்பட்ட இழப் பீட்டைச் சரிக்கட்ட ஏதாவது பண உதவியுடனான படி அளிக்க வேண்டுமா? நீதிபதிகளின் நியமனத்தைப் பொறுத்தவரையில், அது ஐ.சி.எஸ் போன்று ஒரே பணியாளர் தொகுதியாகக் கருதப்பட வேண்டுமென்று வரைவுக்குழு எண்ணியதால், ஓர் உயர் நீதிமன்றத் தின் நீதிபதியை மற்றொரு நீதிமன்றத்துக்கு மாற்றல் செய்யப்படக் கூடியவராக இருப்பது அவசியம். மத்திய அரசுக்கு இந்த அதிகாரம் ஒதுக்கப்படவில்லையென்றால் நீதிநிர்வாகம் மிகவும் கஷ்டமான விஷயமாகிவிடும். ஒரு வட்டாரத்தில் திறமையாளர்கள் தட்டுப் பாடாக இருக்கையில், ஓர் உயர்நீதிமன்றத்திலிருந்து மற்றொரு நீதிமன்றத்திற்கு நீதிபதியை மாற்றம் செய்வதன் மூலம் அந்த நீதிமன்றத்தை வலுப்பெறச் செய்யமுடியும். இரண்டாவதாக, தல அரசியல், மற்றும் போட்டி பொறாமைகளுக்கு ஆளாகாத ஒரு உயர்மன்ற நீதிபதியை வேறு ஓர் இடத்திலிருந்து மாற்றம் செய்து கொண்டுவருவது விரும்பத்தக்கது. எனவே மாற்றத்துக்கான அதிகாரம் மத்திய அரசின் கையில் இருக்க வேண்டும் என்று நாங்கள் எண்ணினோம்.

ஓர் உயர்நீதிமன்றத்திலிருந்து மற்றொரு நீதிமன்றத்துக்கு நீதிபதிகளின் மாற்றல் அதிகாரத்தைத் தவறாக பயன்படுத்தக்கூடும்

என்ற உண்மையையும் நாங்கள் கணக்கில் எடுத்துக் கொண்டோம். ஒரு குறிப்பிட்ட நீதிபதி மாகாண அரசுக்கு வளைந்து கொடுப்பவராக இல்லாமல், சில நீதித்துறை விவகாரங்களில் சில குறிப்பிட்ட நடவடிக்கைகளை எடுத்திருப்பதுடன், மாறான அணுகுமுறையைக் கடைப்பிடித்திருக்கலாம்; மாகாண அரசு விரும்பாத சில முடிவுகளை எடுத்ததன் மூலம் மாகாண அரசுக்கு அவர் தலைவலியைக் கொடுத்திருக்கலாம்; இத்தகைய ஒரு நீதிபதியை மாற்றல் செய்ய ஒரு மாகாண அரசு விரும்பக்கூடும். இந்த மாற்றங்களைச் செய்யும் போது இந்த மாதிரி விஷயங்களின் பாதிப்பு இருக்கக் கூடாது என்பதில் நாங்கள் கவனமாக இருந்தோம். பொது நிர்வாகத்தின் வசதிக்கான அடிப்படையில் மாற்றங்கள் நடைபெற வேண்டும். எனவேதான் இந்தியாவின் தலைமை நீதிபதியை கலந்தாலோசித்து இப்படிப்பட்ட மாற்றங்கள் செய்யும் நடைமுறை அறிமுகப்படுத்தப் பட்டுள்ளது. வட்டார அல்லது சொந்த விருப்பு வெறுப்பினால் பாதிக்கப்படாத முறையில் அவர்தான் ஆலோசனை அளிக்க முடியும்.

இழப்பீட்டுக்கு வழிவகை செய்யாத முறையில் இந்த மாற்றங்கள் இருக்க வேண்டுமா என்பதே எஞ்சி நிற்கும் ஒரு கேள்வி. இது ஒரு கடினமான விஷயம். வட்டாரச் சட்ட நிபுணர்களின் அவையிலிருந்து உயர்நீதிமன்றத்துக்கு நீதிபதி நியமிக்கப்படுகிறார். அவருக்கு அங்கு ஒரு குடும்பம் இருக்கும். அவருக்கு அங்கு சொந்த வீடும் அவர் தனிப்பட்ட முறையில் அக்கறை கொண்டுள்ள உடைமைகளும் இருக்கும். ஓர் உயர்நீதிமன்றத்திலிருந்து மற்றொரு நீதிமன்றத்துக்கு மாற்றம் செய்யப்படும்போது அவர் தம் குடும்பம் முழுவதையும், உடைமைகள் அனைத்தையும் புதிய இடத்துக்கு முற்றிலுமாக எடுத்துச் செல்ல முடியாது. ஏற்கெனவே பணிபுரிந்து வந்த இடத்தில் குடும்பத்தின் ஒரு பகுதியை விட்டு வைப்பதுடன், புதிய இடத்திலும் வீடு மற்றும் இதர வசதிகளை செய்துகொள்ள வேண்டியிருக்கும். எனவேதான் மாற்றல் செய்யப்பட்ட நீதிபதிக்கு தனிப்பட்ட படி அளிக்க நாடாளுமன்றம் அனுமதிக்க வழிவகை செய்வது நியாயமானதே என்று வரைவுக்குழு எண்ணியது. வரைவுக்குழு அளித்துள்ள திருத்தத்தில் எந்தவிதத் தவறும் இல்லை என்றே கருதுகிறேன்.

எனது நண்பர் திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி கொண்டுவந்த திருத்தத்தை (எண். 618) குறிப்பிட்டுப் பேசியவர்கள், அதை ஏற்றுக் கொண்டுள்ள காரணத்தினால், விதி எண் 148-ஐக் குறித்து நான் எதுவும் கூறத் தேவையில்லை என்று கூற விரும்புகிறேன்.

அதே போன்று 320-ஆம் விதி அதிகமாக விமர்சிக்கப்பட்டது. (குற்றமாக எடுத்துக் கொள்ளவில்லையென்றால் அது முற்றிலும் ஒரு பயனற்ற விமர்சனமே), ஒரு கட்டத்தில் உறுப்பினர்கள் ஆட்சேபம் செய்த பகுதிகள் மறுபரிசீலனை செய்யப்பட்ட திருத்தங்களினால் நீக்கப்பட்டதன் மூலம் அது ஏற்றுக் கொள்ளக் கூடியதாக ஆகி விட்டது.

365-ஆம் விதி குறித்து கணிசமான விவாதங்களும், கருத்து மோதல்களும் நடைபெற்றன. நானும் விவாதத்தில் என்னுடைய கருத்தை எடுத்துக் கூறினேன். நான் கூறியவற்றை எல்லாம் கணக்கில் எடுத்துக் கொண்டு பார்த்தால் 365-ஆம் விதி மிகவும் அவசியமானது என்பதை உறுப்பினர்கள் கண்டு கொண்டிருப்பார்கள் என்பதில் எனக்கு சந்தேகமில்லை. ஆரம்ப கட்டத்தில் சபை எடுத்த தீர்மானத்தை அது எந்தவிதத்திலும் மாற்றிவிடவில்லை.

இப்பொழுது 378-ஆம் விதிக்கு வருவோம். தேர்தல் காரணங்களுக்காக மக்கள் தொகையை நிர்ணயிப்பதில் ஒரு சீரான தன்மைக்கான வழிவகை இந்த விதியில் இருக்க வேண்டுமென்று வாதிக்கப் பட்டது. ஒரேமாதிரியான விதி இருக்க வேண்டுமென்ற ஆலோசனையை ஏற்றுக் கொள்ளும் நிலையில் நான் இல்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். பல்வேறு மாகாணங்களில் மாறிவரும் சூழ்நிலையில் ஒரே மாதிரியான விதியை ஏற்றுக் கொள்வது சாத்தியமல்ல. பல்வேறு மாகாணங்களில் மாறுபட்ட சோதனைகள் மூலம் தொகுதிக்கான மக்கள் தொகையை தீர்மானிக்கும் சுதந்திரம் மத்திய அரசிடம் இருக்க வேண்டும். பல்வேறு மாகாணங்களுக்கு வேறுபட்ட விதிகளை உபயோகப்படுத்துவதால் ஏதாவது பெரும் தவறு ஏற்படுமானால் எதிர்கால நாடாளுமன்றம் நியாயமான முடிவுக்கு வரமுடியும். ஏனெனில் தொகுதிகள் சம்பந்த

மான எல்லா விஷயங்களும் நிச்சயமாக நாடாளுமன்றத்தின் முன் வைக்கப்பட்டு மத்திய அரசால், தொகுதி ஒவ்வொன்றிற்கும் நிச்சயிக்கப்பட்டுள்ள மக்கட் தொகை சரியானதா, அதிகமானதா அல்லது குறைவானதா என்பதை நாடாளுமன்றம் முடிவு செய்யும். ஐயா, இப்பொழுது 391-ஆம் விதியைப் பார்க்கலாம்.

**பண்டிட் பாலகிருஷ்ண சர்மா:** 378-ஆம் விதியா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** 379-ஆம் விதியைப் பற்றி எனது மதிப்பிற்குரிய நண்பர் திரு. சர்மாவின் ஆட்சேபனையை நான் நன்கு புரிந்து கொள்கிறேன். முக்கியமாக ''இந்திய டொமினியன்'', என்ற சொற்களைக் குறித்தே அவருடைய ஆட்சேபம் உள்ளது. தலைமை வரைவாளர் திரு. முகர்ஜியின் உதவியுடன் ''இந்திய டொமினியன்'' என்ற சொற்களை நீக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் அந்த விதியை மாற்றி எழுத முயன்றேன். நான் வெற்றி பெறவில்லை என்பதை ஏற்றுக்கொள்கிறேன். இப்பொழுது உள்ளபடியே அந்த விதியை விட்டுவிடும்படி திரு. சர்மாவை கேட்டுக் கொள்கிறேன். அது துரதிருஷ்டவசமானதுதான். நமக்கு இருக்கிற குறைந்த கால அளவில் அதற்கு வேறு வழி எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.

இப்பொழுது 391-ஆம் விதியைப் பொறுத்தவரையில் நிலைமை இதுதான். புதிய மாகாணங்களை உருவாக்க இரண்டு வித ஏற்பாடுகள் அரசியல் சாசனத்தில் உள்ளன. அரசியல் சாசனம் அமலுக்கு வந்த பிறகு மாகாணங்களை உருவாக்கலாம். 26 நவம்பருக்கும் 26 ஜனவரிக்கும் இடைப்பட்ட காலத்தில் புதிய மாகாணங்களை உருவாக்கலாம். அரசியல் சாசனம் அமலான பிறகு உருவாக்கப்படும் மாகாணங்கள் சம்பந்தமாக செயல்படும் விதிகள் 3-ம் 4-ம் ஆகும். புதிய மாகாணங்களை உருவாக்க மாகாணங்களின் தற்போதைய எல்லைகளை மாற்றியமைக்கும் அதிகாரத்தை, சபை நாடாளுமன்றத்துக்கு அளித்துள்ளது. அந்த விதிகள் தெளிவான வகையாகையால் என்னிடமிருந்து வேறு எந்த விளக்கமும் தேவை இல்லை என்று நினைக்கிறேன்.

இப்பொழுதிலிருந்து ஜனவரி 26-க்குள் உருவாக்கப்படும் புதிய மாகாணங்கள் சம்பந்தமாக 1935-ஆம் வருட இந்திய அரசாங்கச் சட்டத்தின் 290-ஆம் பிரிவும் இன்றைய அரசியல் சாசனத்தின் 391-ஆம் விதியும் செயல்திறன் கொண்டவையாக இருக்கும். ஐயா, இன்றிலிருந்து ஜனவரி 26-க்குள், 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டப்படி நடவடிக்கை எடுக்க அதிகாரம் பெற்ற அதிகாரி நடவடிக்கை எடுத்தால், இந்திய அரசாங்கச் சட்டத்தின் பிரிவு 290 படி நிறைவேற்றப்பட்ட ஆணையை குடியரசுத்தலைவர் 391-ஆம் விதிப்படி செயல்படுத்த முடியும் என்று விதி எண் 391 கூறுகிறது. ''25 ஜனவரியன்று, 1935 ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் ரத்து செய்யப்பட இருப்பினும்'' இதில் ஒரு முக்கியமான விஷயம் என்னவென்றால் எடுக்கப்பட்ட நடவடிக்கை செயல்திறன் இழந்துவிடாது என்பதாகும். 391-ஆம் விதிப்படி 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டப்படி எடுக்கப்பட்ட நடவடிக்கையை மேற்கொண்டு செயல்படுத்த, ஓர் ஆணையின் மூலம் முதல் பட்டியலில் திருத்தம் செய்து அதற்கு செயல்திறன் கொடுக்க குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. இதன் விளைவாக மாநிலங்களின் மேலவையை பிரதிநிதித்துவப்படுத்தும் நான்காவது பட்டியலிலும் மாற்றம் கொண்டுவரப்படும்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** ஜனவரி 26-க்குப் பிறகே அவர் நடவடிக்கை எடுக்கமுடியும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஆம், எந்த நேரத்திலும் நடவடிக்கை எடுக்கலாம். ஆனால் அதை அரசியல் நிர்ணய சபை கவனத்தில் எடுத்துக் கொள்ளமுடியாது. நவம்பர் 26-க்குப் பிறகு அது இந்த நோக்கத்திற்குச் செயல்படாது. நவம்பர் 25க்குப் பிறகும், 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் செயல்திறனுடன் இருக்கும். அந்தச் சட்டம் செயல்திறனுடன் இருக்கும் வரையில், அதன்படி கவர்னர்-ஜெனரலுக்கு நடவடிக்கை எடுக்கும் உரிமை தொடரும். அவர் விரும்பும் எந்த நேரத்திலும் நடவடிக்கை எடுக்க முடியும். எனது நண்பர் சித்வா ஒரு கேள்வியை எழுப்பியுள்ளார்: அதாவது இன்றிலிருந்து ஜனவரி 25க்குள் எடுக்கப்படும் நடவடிக்கை

எதுவாகினும் நாடாளுமன்றத்தின் ஆய்வுக்கு உட்படவேண்டுமா? ஜனவரி 26-ல் நமது அரசியல் அமைப்புச் சட்டம் நடைமுறைக்கு வரப்போவது எனது நண்பர் சித்வாவுக்கு ஞாபகம் இருக்கும் என நினைக்கிறேன். ஜனவரி 26 வரை, 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்திற்குட்பட்டு 1947 ஆகஸ்டு 15-ல் ஏற்றுக் கொள்ளப் பட்ட அரசியல் சாசனமே நடைமுறையில் இருக்கும். இந்த விஷயத்தில் இந்தியச் சட்டமன்றம் அல்லது நாடாளுமன்றம் கலந்தாலோசிக்கப்படவேண்டுமா என்பது, 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின் பிரிவு 290-ல் உள்ள நிபந்தனைகளே தீர்மானிக்கின்றன.

எனது நண்பர் திரு. சித்வா இந்திய அரசாங்கச் சட்டத்தின் 290-ஆம் விதியைக் கவனித்தால் கவர்னர்-ஜெனரல் மாகாணச் சட்டமன்றத்தின் அல்லது இந்தியச் சட்டமன்றத்தின் கருத்துகளை அறிந்து கொள்ள வேண்டிய அவசியமில்லை என்பதை அவர் காணமுடியும். அந்த ஆணையால் பாதிக்கப்படும் மாகாண அரசின் அபிப்பிராயத்தை அறிந்து கொள்ள வேண்டியது மட்டுமே அவர் செய்ய வேண்டியதெயல்லாம். எனவே 290-ஆம் விதியின் செயல்பாட்டை பொறுத்தவரையில் - இன்றிலிருந்து ஜனவரி 25 தேதிவரை மாநிலங்கள் சம்பந்தமான மாற்றங்கள் செய்வதற்குள்ள ஒரே ஒரு விதிமுறை இதுவே என்ற நிலையில் - 290-ஆம் பிரிவின்படி முடிவு எடுக்கையில் கவர்னர்-ஜெனரல் மாகாண சட்டமன்றம் மற்றும் இந்தியச் சட்டமன்றம் ஆகியவற்றைக் கலந்தாலோசிக்க வேண்டிய அவசியமில்லை. எனது நண்பர் திரு. சித்வாவின் விருப்பத்தை உலகமே விரும்பினாலும் நிறைவேற்றமுடியாது. எனவே 270-ஆவது பிரிவின்படி உள்ள வழிவகைகளுடன் அவர் திருப்தி அடைய வேண்டும். வேறு எந்த விதிகளுக்கும் பதில் தேவை இல்லை என்று நினைக்கிறேன். வரைவுக்குழு கொண்டுவந்துள்ள திருத்தங்களை ஏற்றுக் கொள்ளும் நிலையில் இருக்கும் என்ற நம்பிக்கையுடன் என் உரையை முடித்துக் கொள்கிறேன். (கைதட்டல்).

**திரு. அவைத் தலைவர்:** ஒவ்வொரு திருத்தமாக வாக்கெடுப்புக்கு விடுகிறேன். ஏதாவது திருத்தத்தின் மீதான திருத்தங்கள் மற்றும் வரைவுக்குழுவின் திருத்தங்களுக்கு திருத்தங்கள் உள்ளதை உறுப்

பினர்கள் கவனித்திருப்பார்கள் என நினைக்கிறேன். உறுப்பினர்கள் கொண்டுவந்த பல திருத்தங்கள் வரைவுக்குழுவால் ஏற்றுக் கொள்ளப்பட்டதாக இருக்கலாம். அல்லது தாங்கள் முன்மொழிந்த திருத்தங்களை சில உறுப்பினர்கள் விலக்கிக்கொள்ள சம்மதமுள்ளவர்களாக இருக்கலாம்.

***(வரைவுக்குழுவின் 96 திருத்தங்கள் மட்டும் ஏற்றுக் கொள்ளப் பட்டன. 66 திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன. 36 திருத்தங்கள் திரும்பப் பெற்றுக் கொள்ளப் பட்டுள்ளன.)***

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர்:** சபையை இன்று ஒத்திவைப்பதற்கு முன்பு நமது அடுத்த நடவடிக்கைகள் என்ன என்பது குறித்து ஒரு கால அட்டவணையைத் தயார் செய்யவேண்டும். இன்று பிற்பகலில் நாம் அமரப் போவதில்லை என நினைக்கிறேன். எத்தனை பேர் பேசப்போகிறார்கள் என்பதை உறுப்பினர்களிடமிருந்து தெரிந்து கொள்ள விரும்புகிறேன். எனவே ஒரு பட்டியல் தயாரித்தால் நேரத்தை ஒதுக்க உதவியாக இருக்கும். அடுத்த சனிக்கிழமை அமர்வைப் பற்றி இப்பொழுது தீர்மானிக்க முடியாது என நினைக்கிறேன். சனிக்கிழமை அமர்வு உள்ளதா இல்லையா என்பதை வெள்ளிக் கிழமை முடிவு செய்யலாம் என நினைக்கிறேன். இன்றிலிருந்து நடைபெறப் போகும் அமர்வுகள் பற்றி அவையின் விருப்பம் என்ன?

**மதிப்பிற்குரிய பல உறுப்பினர்கள் :** ஒரு நாளைக்கு ஐந்து மணி நேரம்.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா** (சென்னை - பொது) : மாலை 2.30-லிருந்து 6.30 வரை ஒரே அமர்வு, ஒரு தடவை மட்டும் நாங்கள் வருகை தந்தால் போதுமானது.

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள். அதிகாரபூர்வ வெளியீடு தொகுதி 10, 16 நவம்பர் 1949, பக்கம் 606.

**திரு. அவைத் தலைவர்:** ஒவ்வொரு உறுப்பினரும் எவ்வளவு நேரம் பேச வேண்டும்?

**திரு. கே.எம். முன்ஷி :** பதினைந்து நிமிடங்கள். ஒவ்வொரு நாளும் ஐந்து மணிநேரம். இன்றிலிருந்து அடுத்த அமர்வு வரை உறுப்பினர்களுக்குச் சில நாட்கள் ஓய்வு கிடைக்கும். இதுவே என் கருத்து.

**மதிப்பிற்குரிய பல உறுப்பினர்கள் :** அரை மணி நேரம்.

[1]**திரு. அவைத் தலைவர்:** ஒவ்வொரு பேச்சாளருக்கும் 20 நிமிடம் என்ற சமரச முடிவுக்கு வரலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இப்பொழுது நாம் செய்யக் கூடியதெல்லாம் நாளைக்கு நாம் அமரப் போகிறோமா என்பதை முடிவு செய்வதுதான். இதற்கிடையில் பேசுவதற்கு விருப்பம் தெரிவிக்கும் உறுப்பினர்களின் பெயர்களைக் கொடுக்கச் சொல்வது விரும்பத்தக்கது. பொதுவிவாதத்தில் பங்கு கொள்ள விரும்பும் உறுப்பினர்களின் எண்ணிக்கையை அறிந்து கொண்ட பிறகு ஒரு நாளில் இரண்டு அமர்வுகள் வைத்துக் கொள்வதா என்பதையும் ஒவ்வொரு பேச்சாளரும் எவ்வளவு நேரம் பேசவேண்டும் என்பதையும் நீங்கள் முடிவு செய்வது சாத்தியமாகும். இந்த நேரத்தில் எத்தனை உறுப்பினர்கள் பேச விரும்புகிறார்கள் என்பதைக் கூறும் நிலையில் யாரும் இல்லை. பேச்சாளர்கள் அதிகம் இருக்கப் போவதில்லை என்றால், உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் ஒதுக்கப்படும் நேரத்தை அதிகரிப்பதுடன், ஓர் அமர்வே போதுமானதாக இருக்கும். நாளை நடைபெற உள்ள அமர்வைப் பற்றி மட்டும் நீங்கள் முடிவு செய்துவிட்டு இதற்கிடையில் உறுப்பினர்களை அவர்களது விருப்பத்தைத் தெரிவிக்கச் சொல்லுங்கள். அதன்படி பேச்சாளர்கள் பட்டியலைத் தயாரித்து விட்டால் பிறகு மற்ற விஷயங்களைக் குறித்து நாம் முடிவு செய்யலாம். அதாவது ஒவ்வொரு பேச்சாளரும் பேச அனுமதிக்கப்பட்ட

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள். அதிகாரபூர்வ வெளியீடு தொகுதி 10, 16 நவம்பர் 1949, பக்கம் 606.

நேரம், தினந்தோறும் நடைபெறும் அமர்வுகள் ஒன்றா, இரண்டா, ஆகியவற்றையும் நிச்சயிக்க வேண்டும்.

**திரு. அவைத் தலைவர் :** அது ஒரு நடைமுறை யோசனை என நினைக்கிறேன்.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி :** ஐயா, வழக்கம்போல் பத்தி லிருந்து ஒன்று வரைக்கும் மற்றும் மூன்றிலிருந்து ஐந்து வரைக்கும் நாளை நாம் அமரலாம் என்று கூறலாமா?

**திரு. அவைத் தலைவர்:** தற்போதைக்கு வழக்கம் போல், நாளைக் காலை பத்து மணிக்கு நாம் அமரலாம் எனக் கருதுகிறேன். விவாதத்தில் பங்கு கொள்ள விரும்புவர்கள் தங்கள் பெயர்களை அலுவலகத்திற்கு இன்று மாலைக்குள் அனுப்புவார்கள் என எதிர் பாக்கிறேன். இந்தத் தகவல்களைப் பொருத்துத்தான் நமது அமர்வு நேரத்தை நாம் தீர்மானிக்க முடியும். ஒருவர் தன் பெயரை விவா தத்தில் பங்கு கொள்ள கொடுத்திருந்தாலும் பங்கு கொள்ளாமலும் இருக்கலாம்.

*நாளை பத்து மணி வரைக்கும் அவை ஒத்தி வைக்கப்படுகிறது.*

*1949 நவம்பர் 17, வியாழன் பத்துமணி வரை அரசியல் நிர்ணய சபைக் கூட்டம் ஒத்திப்போடப்பட்டது.*

புதுடில்லியில் அரசியல் சாசன மண்டபத்தில் (ஹாலில்) 10 மணிக்கு இந்திய அரசியல் நிர்ணயசபை கூடியது. அரசியல் நிர்ணய சபைத் தலைவர் மாண்புமிகு டாக்டர் ராஜேந்திரப் பிரசாத் தலைமை தாங்கினார். (வியாழன் 17, நவம்பர் 1949).

[1]**திரு. அவைத் தலைவர் :** டாக்டர் அம்பேத்கர் அவர்களே, அரசியல் அமைப்புச் சட்டத்தின் மூன்றாவது வாசிப்பை நாம் இப் பொழுது எடுத்துக் கொள்ளலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (பம்பாய் : பொது) தலைவர் அவர்களே, இப்பொழுது பின்வருமாறு முன்மொழி கிறேன்:

> "அரசியல் நிர்ணய சபையால் முடிவு செய்யப்பட்ட அரசியல் சாச னத்தை நிறைவேற்றலாம்."

(கைதட்டல்)

**திரு. மகாவீர் தியாகி** (ஐக்கிய மாகாணங்கள் பொது) : வாழ்த்துக்கள்.

**திரு. எச்.வி. காமத்** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் பொது) : டாக்டர் அம்பேத்கர் தயவு செய்து பேசட்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் இறுதியில் பேசவே விரும்புகிறேன். இந்த நேரத்தில் பேசுவது வழக்கமில்லை.

**திரு. என்.வி. காட்கில்** (பம்பாய் பொது) : இந்த விஷயத்தை இப்பொழுது விவாதத்திற்கு விடலாம். (சிரிப்பு)

**திரு. மகாவீர் தியாகி:** நாம் நிறைவேற்றும் இந்த அரசியல் சாசனத்தைப் பற்றி டாக்டர் அம்பேத்கரின் கருத்தென்ன?

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள், அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 17 நவம்பர் 1949, பக்கம் 607-608.

**திரு. அவைத் தலைவர்:** நாம் அலுவல்களைக் கவனிக்க ஆரம்பிக்க வேண்டும் என்று நினைக்கிறேன். அரசியல் நிர்ணய சபையால் முடிவு செய்யப்பட்ட அரசியல் சாசனம் நிறைவேற்றப் பட வேண்டுமென்று அவர் முன்மொழிந்துள்ளார். இத்தீர்மானம் இப்பொழுது விவாதத்திலுள்ளது. இந்த மூன்றாவது வாசிப்புக்கு எவ்வளவு நேரம் தேவைப்படும் என்பதை நேற்று விவாதித்தபோது விவாதத்தில் பங்குகொள்ள விரும்பும் உறுப்பினர்களின் பெயர்களைத் தெரிவிக்கும்படி கேட்டுக்கொண்டேன். பேசுவதற்கு விருப்பம் தெரிவித்து மூன்று மணி அளவு வரை, 71 உறுப்பினர்கள் தங்கள் பெயர்களை அளித்துள்ளனர். மேலும் சில பெயர்கள் இன்று காலை யில் கிடைத்துள்ளன. இப்பொழுதுள்ள நிலைமையில் இந்த வாரம் மூன்று நாட்களும், அடுத்த வாரம் ஐந்து நாட்களும் நாம் அமர்ந் தால், நமக்கு 24 மணி நேரம் கிடைக்கும். ஒவ்வொருவரும் 20 நிமிடம் எடுத்துக் கொண்டால், இந்த நேரத்திற்குள் பேச விருப்பம் தெரிவித் துள்ள ஒவ்வொரு வருக்கும் வாய்ப்புக் கொடுத்து சமாளிக்கலாம் என நினைக்கிறேன். எனவே நாம் அதிக நேரம் அமரத் தேவை யில்லை.

★ ★ ★

**திரு. எச்.வி. காமத் :** நாம் நான்கு மணி நேரம் அமரலாம்.

**திரு. அவைத் தலைவர் :** இப்பொழுதுள்ள நிலைமயில் நாம் நான்கு மணி நேரம் அமர்வது அவசியமில்லை.

**திரு. எச்.வி. காமத் :** நாம் நான்கு மணிநேரம் அமர்ந்தால் வெள்ளிக்கிழமைக்குப் பதில் வியாழக்கிழமையே கூட்டத் தொடரை முடித்துவிட்டால் சட்டமன்றக் கூட்டத் தொடருக்கு முன்பு அதிக மான இடைவேளை இருக்கும்.

**டாக்டர் பி.எஸ். தேஷ்முக்** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் பொது): சில மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் பிறகு வந்து, தங்களுடைய பெயர்களைக் கொடுக்கலாம்.

**திரு. அவைத் தலைவர் :** அவர்கள் வரக்கூடும். நமக்கு முடிவு செய்வதற்கு சில பணிகளும் உள்ளன. இன்றும் நாளையும், எவ் வகையிலும் இந்த வார இறுதிவரை நாம் மூன்று மணி நேரம் மட்டும் அமர வேண்டும். நாம் எதிர்பார்த்த அளவு பணிகளை முடிக்கா விட்டால், அவசியமானால், அடுத்த வாரம் நாம் இரண்டாவது அமர்வை வைத்துக் கொள்ளலாம்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி** (சென்னை: பொது) : பத்தி லிருந்து ஒன்று வரையா?

**திரு. அவைத் தலைவர் :** ஆம்.

**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** இதை முற்றிலும் ஆதரிக் கிறோம்.

**திரு. அவைத் தலைவர் :** இப்பொழுது எந்த வரிசையில் உறுப் பினர்களை அழைக்க வேண்டுமென்பது தெளிவாகவில்லை. வழக் கமான முறையையே பின்பற்றவேண்டுமென நினைக்கிறேன். உறுப் பினர்கள் எழுந்து நின்றால் தேர்ந்தெடுக்க முடியும்.

**திரு. எச்.ஜே. கண்டேகர்** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்: பொது) : அகர வரிசையில் அழைக்கவேண்டும்.

**திரு. அவைத் தலைவர்:** அது இயற்கையாக இருக்காது. வழக்க மான நடைமுறையைப் பின்பற்றுவோம். அதில் எந்தவிச் சங்கடமும் இருக்காது.

*(அரசியல் சாசனத்தின் முக்கியத்துவத்தைக் குறித்தும் வரைவுக் குழு மற்றும் அதன் தலைவர் டாக்டர் அம்பேத்கர் அவர்களின் பணிகளைப் பாராட்டியும், உறுப்பினர்கள் ஆற்றிய உரைகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பகுதிகள் இங்கு அளிக்கப்பட்டுள்ளன - ஆசிரியர்)*

**திரு. வி.ஐ. முனிசாமி பிள்ளை** (சென்னை : பொது) : ஐயா, தலைவர் அவர்களே, மதிப்பிற்குரிய நண்பர் டாக்டர் அம்பேத்கர் கொண்டு வந்துள்ள தீர்மானத்தை ஆதரிக்க இந்த மரியாதைக்குரிய சபையின் முன் நிற்கிறேன்....

.... ஐயா, வரைவுக்குழு நிறைவேற்றியுள்ள அரிய பணியை இப்பொழுது பாராட்டுகிறேன். அவர்கள் சேவை நமக்கு மதிப்பு மிக்கவை. முக்கியமான விதிகளைக் குறித்து முடிவுகள் எடுக்க, இரவு பகல் எனப் பாராது உழைத்தனர். வரைவுக் குழுவின் தலைவர் டாக்டர் பி.ஆர். அம்பேத்கரின் திறமைக்கும், புத்தி கூர்மைக்கும் கண்டிப்பாகப் பாராட்டுத் தெரிவித்தாக வேண்டும். (பலத்த கையொலி ஆரவாரம்). ஹரிஜன மக்கள் மட்டுமல்லாது, இந்தியாவில் வசிக்கும் எல்லா சமூகத்தினரும், டாக்டர் அம்பேத்கரின் திறமையை அங்கீகரித்திருப்பது அம்பேத்கரின் சமூகத்தைச் சேர்ந்த எனக்குப் பெருமையாக உள்ளது. போற்றற்குரிய நந்தனார், வைஷ்ணவப் பெரியார் திருப்பாணாழ்வார், எல்லாவற்றிற்கும் மேலாக மிகப்பெரும் தத்துவ ஞானியும், இந்தியாவில் மட்டுமல்ல, உலகம் முழுவதும் பெயரும் புகழும் பெற்றவருமான திருவள்ளுவர் போன்றோர் ஷெட்யூல்டு வகுப்பில் தோன்றிய அரும் புதல்வர்கள்.

ஹரிஜன வகுப்பைச் சேர்ந்த இந்த நட்சத்திரக் கூட்டத்திலே இப்பொழுது டாக்டர் அம்பேத்கரையும் நாம் சேர்க்க வேண்டும். ஹரிஜன வகுப்பினரின் முக்கியத்துவத்தை உலகத்திற்கு எடுத்துக் காட்டியதுடன் அவர்கள் மிகவும் உயர்ந்த நிலைக்குச் சென்று உலகிற்கு மிகுந்த சேவை செய்யமுடியும் என்பதையும் நிரூபித்துக் காட்டியுள்ளார். ஹரிஜன சமூகத்துக்கு அவர் ஆற்றிய தொண்டை நான் அறிவேன். 1950 ஜனவரி 26-லிருந்து அமலுக்கு வரும் அரசியல்

சாசனத்தைத் தயாரித்ததன் மூலம் இந்திய நாட்டிற்கு மகத்தான தியாகமும், சேவையும் அவர் செய்துள்ளார். அரசியல் சாசனத்தைத் தயாரிக்கும் பணியில் ஈடுபட்ட முக்கிய வரைவாளர் மற்றும் இதர அலுவலர்களின் உழைப்பையும் குறைத்து மதிப்பிட முடியாது. அவர்களும் அதே அளவு பாராட்டுக்குரியவர்களே.

[1]**சேத் கோவிந்த தாஸ்** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்: பொது) : தலைவர் அவர்களே, மூன்று வருடங்களாக நாம் தயாரித்து வந்த அரசியல் சாசனத்தின் மூன்றாம் வாசிப்புத் தொடங்கும் இன்று, நான் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். இந்த நேரத்தில், முதலில், இந்த அரசியல் சாசனத்திற்கு ஒரு சரியான உருக்கொடுக்க, கடினமாகப் பணிபுரிந்த டாக்டர் அம்பேத்கரை வாழ்த்துகிறேன். நாடாளுமன்றத்தால் இறுதி செய்யப்பட்டுள்ள இந்த அரசியல் சாசனம் நிறைவேற்றப்பட வேண்டும் என்ற தீர்மானத்தை அவர் கொண்டுவந்துள்ளார். டாக்டர் அம்பேத்கர் தற்கால மனு என்று அழைக்கப்படுகிறார். அந்தக் கூற்றின் உண்மை எப்படியிருப்பினும், அவரிடம் ஒப்படைக் கப்பட்ட அரசியல் சாசனத்தைத் தயாரிக்கும் பொறுப்பான பணிக்கு மிகவும் பொருத்தமானவர் டாக்டர் அம்பேத்கர் என்று கூற முடியும்....

[2]**திரு. ரோகிணி குமார் சௌத்திரி** (அசாம் : பொது): ஒரு தகவல் பிரச்சினை, டாக்டர் அம்பேத்கரை மனு என்று அழைப்பதன் மூலம் மதிப்பிற்குரிய உறுப்பினர் இந்து சட்டத் தொகுப்பைக் குறிப்பிடுகிறாரா?

**சேத் கோவிந்த தாஸ் :** +இல்லை ஐயா, இந்து சட்டத் தொகுப்புக்கும் இந்தக் கூற்றுக்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. இந்து சட்டத் தொகுப்பின் பல விதிகளுக்கு நான் எதிரி என்பது இந்த சபைக்குத் தெரியும் என நினைக்கிறேனர்.

---

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள் அதிகாரபூர்வ வெளியீடு தொகுதி 10, 17 நவம்பர் 1949.

2. அதே தொகுதி, பக்கம் 611.

\+ இந்தி மொழி உரைகளின் மொழிபெயர்ப்பு.

[1]**திரு. லட்சுமிநாராயண சாகு:** இதைப் பொறுத்தவரையில் டாக்டர் அம்பேத்கரின் கடின உழைப்புக்கு என் மனப்பூர்வமான வாழ்த்துக்களையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொண்டாலும், அவருடைய உழைப்பில் விளைந்த இந்தச் செயற்கையான பண்டம், திரும்பத் திரும்ப செய்யப்பட்ட மாற்றங்களால், உருவிழந்து பரிகசிக்கத் தகுந்ததாகிவிட்டது. தமது பதிலில், இது முற்றிலும் தம் பணி அல்ல என்பதை அவர் எடுத்துச் சொல்வார் என்று நான் நம்புகிறேன். இந்த நாட்டின் பெரும்பான்மைக் கட்சியின் விருப்பத்திற்கிணங்க அவர் அரசியல் சாசனத்தை உருவாக்க வேண்டியிருந்தது...

★ ★ ★

[2]**திரு. ஆர்.கே. சித்வா:** வரலாற்றில் மறக்க முடியாத இந்த அரசியல் சாசனத்தை உருவாக்க, மறக்கமுடியாத இந்த மண்டபம் விசேடமாகப் புதுப்பித்து அழகு செய்யப்பட்டது. 1946 டிசம்பர் 6-ல் இந்த மண்டபத்தில் நுழைந்து இன்றுடன் மூன்றாண்டாகிறது. அதாவது துல்லியமாகக் கூறுவதென்றால் மூன்றாண்டுக்கு 15 நாட்களுக்குக் குறைவான காலத்தில் இந்த அரசியல் சாசனச் சட்டம் தயாரிக்கப்பட்டு முடிவு செய்யப்பட்டுள்ளது. 1946 டிசம்பர் 9-லிருந்து 1947 டிசம்பர் வரை நடைபெற்ற நமது விவாதங்களுக்குப் பிறகு 1948 பிப்ரவரி முதல் தேதியில் அரசியல் சாசன வரைவு நமக்கு அளிக்கப்பட்டது. இந்த அரசியல் சாசனம் 313 விதிகளைக் கொண்டிருந்தது. இன்று, நாம் இந்த அவையில் 395 விதிகளை அளித்துள்ளோம். 82 புதிய விதிகளைச் சேர்த்துள்ளோம். 220 பழைய விதிகள் நீக்கப்பட்டு விட்டதுடன், சுமார் 120 விதிகளில் சொல்லாக்கம் முற்றிலும் மாற்றப் பட்டுள்ளது. முகப்புரையை கால்புள்ளி, அரைப்புள்ளி ஆகியவைகளில் மாற்றங்கள் எதுவும் இல்லாமல் ஏற்றுக் கொண்டுள்ளோம். பல விதிகளில் மாற்றங்கள் செய்யப்பட்டுள்ளன. இந்த அரசியல் சாசனத்தை அவசர கோலத்தில் தயாரிக்கக்கூடாது என்பதைப் புரிந்து கொண்டு செயலாற்றியதில் நான் மகிழ்ச்சி அடைவதுடன் சபையும்

1. அரசியல் நிர்ணய சபை விவாதங்கள், அதிகாரபூர்வ வெளியீடு தொகுதி 10, 17 நவம்பர் 1949, பக். 613.
2. மேற்படி அதே நூல், பக். 623.

மகிழ்ச்சியடைகிறது. நாம் பெருமை கொள்ளும் அளவிற்குத் தயாரிக்கப்பட்ட இந்த அரசியல் சாசனத்தை உருவாக்குவதில் இந்த அளவு அதிகமான கால அளவை எடுத்துக் கொண்டது நியாயமானதே. பணத்தை சிறிது விரையம் செய்துவிட்டதாகவும், அதிக காலம் எடுத்துக் கொண்டதாகவும் இந்த மண்டபத்துக்கு வெளியே குற்றச் சாட்டுகள் எழுந்துள்ளன. அதற்கு எந்தவித ஆதரவும் நாம் கொடுக்க முடியாது. நம்மில் சிலர் திருத்தங்களை வேண்டுமென்றே அனுப்பிய தாகவும் பேச்சுக்கள் நிகழ்த்துவதற்காக அவற்றைக் கொண்டு வந்த தாகவும் கூறப்பட்டது. இதையெல்லாம் செவிமடுக்கவோ, அல்லது இந்தவித விவாதங்களைக் கேட்கவோ முடியாது. இந்த அரசியல் சாசன மண்டபத்தில் தமது சொற்போர்களை சிறந்த முறையில் நடத்தினோம். நமது கருத்துகளை எடுத்துரைத்தோம். நமது வாதப் பிரதி வாதங்களை வரைவுக்குழு சரியான நோக்கில் எடுத்துக் கொண்டது. நாம் நமது கடமையைச் செய்துவிட்டோம். எதிர்கால சந்ததிகள் அறிந்து கொள்ள கூட்ட நடவடிக்கைகளின் ஆவணங்கள் உள்ளன. நாம் நேரத்தை வீணடித்து விட்டோமா அல்லது நமது நாட்டு மக்களுக்கு நம் கடமையை நிறைவேற்றி விட்டோமா என்பதையும் நாம் எல்லோரும் பெருமை கொள்ளும் அளவிற்கு அரசியல் சாசனத்தை உரு வாக்கியுள்ளோமா என்பதையும் வரலாற்று ஆசிரியர்கள் தான் தீர்மானிக்க முடியும். நான் உண்மையிலேயே பெருமை கொள்கிறேன்.

[1]இந்த அரசியல் சாசனம் குறித்து வரலாறுதான். தீர்ப்புச் சொல்ல முடியும். அது நிச்சயமாக, குறையற்றது என்று சொல்ல முடியாது. அதில் சில குறைபாடுகள் இருக்கலாம். சில குறைபாடுகள் உள்ளதை நான் அறிவேன். என்னுடைய தீர்மானங்களைக் கொண்டு வந்து இந்த மண்டபத்தில் காரசாரமாக வாதிட்டேன் என்பதைக் குறிப்பிட்டேன். அவை ஏற்றுக் கொள்ளப்படவில்லை. இது ஒரு சிறந்த அரசியல் சாசனம் என்பதை மக்களுக்குக் கூற வேண்டியது என் கடமை. இதை அரசியல் நிர்ணய சபையின் ஒவ்வொரு உறுப்பினரும் கூறவேண்டும் என்று எதிர்பார்க்கிறேன். கருத்து வேற்றுமை

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 17 நவம்பர் 1949, பக். 623.

எது இருந்தாலும் நாம் பெருமை கொள்ளும் அரசியல் சாசனம் இது என்று உலகுக்கு அறிவிக்க வேண்டும். பல்வேறு நாடுகள் ஏற்றுக் கொள்ளும் அளவுக்கு தகுதி வாய்ந்த ஒரு ஆவணமாக உலக நாடுகள் இதை ஏற்றுக் கொள்ளும். எனவே, ஒரு ஜனநாயக இறையாண்மை பெற்ற நாட்டை துவக்கும் வரலாற்று நாளான 1950 ஜனவரி 26-ல் இந்த அரசியல் சாசனம் சட்டமாகிறது என்பதில் பெருமைப்படு கிறேன்.

★ ★ ★

[1]**திரு. குலாதார் சாலிகா** (அசாம் - பொது) : தலைவர் அவர்களே, முதற்கண் வரைவுக் குழுவின் பணிகளையும், அவர்கள் எதிர் கொண்ட பலத்த இடர்ப்பாடுகளுக்கிடையே இந்த அருமையான அரசியல் சாசனத்தைத் தயாரித்துக் கொடுத்ததற்கு முக்கியமாக டாக்டர் அம்பேத்கருக்கு நமது புகழாரத்தை அளிக்க வேண்டும். வரைவுக் குழு உறுப்பினர்களுக்கு நாம் நன்றி தெரிவிக்க வேண்டும். முக்கியமாக திரு. முன்ஷி அவர்களுக்கு, பல்வேறு விஷயங்களில் அவர் ஈடுபட்டிருந்தாலும், எப்பொழுதும் இருதரப்பினரும் உடன்படும் வழிவகைகளை முன்வைக்க அவர் பாடுபட்டார். அவருடைய பணியைப் பாராட்டுவதுடன் இந்த அரசியல் சாசனத்தின் வெற்றிக்கு மௌனமாகப் பாடுபட்ட ஊழியர்களையும், அலுவலர்களையும் பாராட்ட வேண்டும். நாம் மிகச் சிறந்ததொரு அரசியல் சாசனத்தை உருவாக்காவிட்டாலும் அதே நேரத்தில் இந்தியாவில் நிலவும் இன்றையச் சூழ்நிலையில் நாம் உருவாக்க முடிந்த சிறந்த அரசியல் சாசனம் இது என்பதைச் சொல்வது மிகவும் அவசியமாகும். பல்வேறு அரசியல் சட்டங்களிலிருந்து, அவசியமுள்ள ஒரு சாசனம் தயாரிக்கப்பட்டுள்ளது. வரைவுக் குழு உறுப்பினர்கள் தங்கள் உரிமையை வலியுறுத்தி முன் நிற்கவில்லை. அதுவும் ஒரு சாதக மான சூழ்நிலையை உருவாக்கியுள்ளது. அவர்களின் விருப்பு வெறுப் பற்ற அணுகுமுறை மூலம், தேவைப்பட்ட ஒரு சாசனத்தைத் தயாரிக்க முடிந்தது. 6 கோடி தீண்டப்படாத மக்கள் இந்த அரசியல் சாசனத் தால் திருப்தி அடைந்துள்ளதாக மூன்றாவது வாசிப்பின் தொடக்

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 17 நவம்பர் 1949, பக். 625-626.

கத்தில், தி ந. முனிசாமி பிள்ளை தெரிவித்துள்ளார். உண்மையிலேயே இது ஒரு பெரும் பங்களிப்புதான். நாம் இவ்வளவு நாட்களாக ஒதுக்கி வைத்திருந்த தீண்டப்படாதவர்கள் திருப்தி அடைந்திருக்கிறார்கள் என்றால் நாம் ஒரு சிறப்புமிக்க பணியைப் புரிந்துள்ளோம். வரைவுக் குழுவுக்கு எனது முழுப் பாராட்டுதல்கள். மற்றும் மௌனமாக பணிபுரிந்த ஊழியர்களுக்கும் மற்ற உறுப்பினர்களுக்கும் இன்று நம் முன்னுள்ள இந்த சாசனத்தைத் தயாரித்தளித்த அவர்களுக்குப் பாராட்டுக்கள்.

★ ★ ★

[1]**திரு. கோகுல்பாய் தவுலத்ராம் பட் :** முதன் முதலாக அரசியல் சாசன முன்வடிவு அவைமுன் கொண்டுவரப்பட்டபோது அது ஒரு பூங்கொத்தாக இருப்பதைக் கண்டேன். பல இடங்களிலிருந்தும் கொண்டுவரப்பட்ட மலர்களால் கட்டப்பட்ட பூச்செண்டு போன்று இருந்தது. அதில் காகிதப் பூக்களும், சில ரோஜாக்களும், அரிய மல்லிகைப் பூக்களும் இருந்தன. பலவகைப்பட்ட மணங்களைக் கொண்ட மலர்கள் அதில் காணப்பட்டன. நாமே தயாரித்த பூங்கொத்து தான் இன்று நம் முன் உள்ளது. அதில் நாம் இணைத்துள்ள சில பூக்கள் நம்மனதுக்கு உகந்த மணம் நிரம்பிய அழகிய பூக்களைக் கொண்டுள்ளன என்பதை நிச்சயமாகக் கூறுவேன். இந்த உலகில் நமக்குப் பலதரப்பட்ட பொருள்களும் தேவை என்பதை எல்லோரும் அறிவோம். முள்ளில்லாமல் எல்லாமே ரோஜா மலர்களாக மட்டுமே இருந்தால், ஒரே நேரத்தில் அதை மனிதனால் முழு அளவில் அனுபவிக்க முடியாது. அவன் மனம் தடுமாறிப் போவான். பூங்கொத்திலுள்ள மலர்களின் மிகைப்பட்ட வாசனையைக் குறைக்க சில விதிகளை நாம் சேர்த்துள்ளோம் என்று நம்புகிறேன். நாட்டின் மறுசீரமைப்புக்கும், இந்தப் புதிய அரசியல் சாசனத்தைப் பயன்படுத்தவும், நம் மக்கள் வேகமாக முன்னேறிச் செல்வார்கள் என்பதே என் ஆணித்தரமான நம்பிக்கை. அப்பொழுதுதான் நம் நாடு புனர்நிர்மாணத்திற்கான சரியான பாதையில் செல்வதாகக் கூறமுடியும். வரைவுக் குழுவின் உறுப்பினர்களுக்கும், இதில் ஈடுபட்டு உழைத்த இதர உறுப்பினர்

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 17 நவம்பர் 1949, பக். 648-52.

களுக்கும் என்னுடைய நன்றியை மீண்டும் தெரிவித்துக் கொள் கிறேன்.

★ ★ ★

[1]*பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:* வரைவுக்குழு ஆற்றியுள்ள சேவைகளைப் பாராட்டும் இசைக்குழுவில் நானும் சேர்ந்து கொள் கிறேன். தம்முடைய மிக நெருங்கிய அனுபவம் வாய்ந்த நண்பர்கள் அதில் பணி புரிந்தனர். அவர்கள் அடைந்த வெற்றிக்கு அவர்களை பாராட்டுகிறேன். கூட்டுச் செயலர் திரு. முகர்ஜியின் பணியைக் குறித்து என் பாராட்டுதலை பதிவு செய்துகொள்ள விரும்புகிறேன். மேலும் இவ்வரசியல் சாசனத்தை நாம் பெறுவதற்கு இந்தப் பணி யில் நம்முடன் ஒத்துழைத்த இதர உறுப்பினர்களுக்கும் என் பாராட் டுக்கள்.

★ ★ ★

[2]*மாண்புமிகு திரு. என்.வி. காட்சில்:* ஐயா, இந்த அரசியல் சாசனம் ஒரு கருவி மட்டுமேயாகும்; அது ஒரு முடிந்த கதையல்ல. நல்ல பணியாளரிடம் அது ஒரு சிறந்த கருவியாகப் பயன்படும். உறுதியான பணியாளருக்கு அவர் விரும்புவதை அது அளிக்கும். விருப்பமில்லாத பணியாளருக்கு அதில் குறைகூறுவதற்கு எவ்வளவோ உள்ளது. அதில் குறைபாடுகள் இருப்பினும், முகப்புரையில் அறிவிக் கப்பட்டிருக்கும், பொருளாதார மற்றும் சமூக நோக்கங்களை அடைய முடியும் என்பதே என் தாழ்ந்த நம்பிக்கை. அதில் குறைபாடுகள் உள்ளன. மற்றவர்களைப் போல நான் அதைக் கண்மூடித்தனமாகப் புகழவில்லை. விசுவாமித்திரரைப் போல மறுத்தளிக்கவும் விரும்ப வில்லை. தொலைநோக்குள்ள அரசியல் நிர்ணயசபைத் தலைவர், சுறுசுறுப்புடன் இயங்கும் பரந்த நோக்கம் கொண்ட பிரதமர், ஆர்வம் கொண்ட மன்ற உறுப்பினர்கள், பொறுப்பான எதிர்கட்சியினர் ஆகியோருடன் இந்த அரசியல் சாசனத்தின் மூலம் நாம் போற்றும் லட்சியங்களை அடைய எதுவும் தடையாக இருக்கமுடியாது என்று நினைக்கிறேன்.

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 18 நவம்பர் 1949, பக். 653.
2. மேற்படி அதே நூல், பக். 660-61.

[1]**திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்** *(சென்னை: பொது) :* எல்லா வகுப்பினர்களும், இந்துக்கள், முஸ்லீம்கள், சீக்கியர்கள், அதாவது பார்சிகள், ஷெட்யூல்டு வகுப்பினர், மற்றும் ஷெட்யூல்டு பழங்குடியினர்களின் பிரதிநிதிகள் அரசியல் சாசனத்தை உருவாக்கு வதில் பங்கு கொண்டுள்ளனர். எல்லா அரசியல் நலன்களுக்கும் இங்கு இடமளிக்கப்பட்டுள்ளன. எல்லாவிதச் சிந்தனைப் போக்கு களின் தலைவர்களும் இங்குள்ளனர். டாக்டர் அம்பேத்கர் கூட பார்வையாளராக வந்தவர்தான். ஆனால் இந்த அரசியல் சாசனத்தை உருவாக்குவதில் தலைமைப் பாத்திரம் தாங்கினார். யார் ஐயப் பாடுடன், விமர்சன நோக்குடன் வந்தாரோ, அவரே இறுதியில், இந்த அரசியல் சாசனத்தைத் தயாரிப்பதில் பொறுப்பை ஏற்றுக் கொண்டு அதை உருவாக்கியுள்ளார். அவரை நான் வாழ்த்துவதுடன் அவருக்கு நாம் அளித்த நல்லாதரவிற்காக நம்மையே வாழ்த்திக் கொள் கிறோம். அதை அவர் ஏற்றுக் கொண்டு நடந்த முறையைப் பாராட்டு கிறேன். இருப்பினும் நெருங்கிய தொடர்பின் மூலம் ஒருவர் மற் றொருவரின் கருத்தை நன்கு புரிந்து கொள்ள முடியும். நாம் தூரத்தி லிருக்கும்போது துரும்பைக்கூட பூதாகரமாக பெரிதுபடுத்து கிறோம். எவ்வித ஆர்வத்துடன் இந்த அரசியல் சாசனம் உருவாக்கப் பட்டதோ அதே ஆர்வத்துடன் இது செயல்படுத்தப்படுமானால், இந்த உலகில் நாம் ஒரு முன்னணி நாடாக விளங்குவோம்.

நம்மால் எளிதில் மறக்க முடியாத அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் போன்ற பிரபல சட்ட நிபுணர்கள் நம்மிடையே உள்ளனர். அவருடைய உடல்நிலை மோசமாக நலிவுற்று இருந்தும் அரசியல், நிர்ணய சபைக்கு உள்ளேயும் வெளியிலே குழுக்களிலும் அவர் மகத்தான சேவை புரிந்துள்ளார். நமது நண்பர் திரு. கோபாலசாமி அய்யங்கார் போன்ற நிருவாகத்துறை நிபுணர்கள் நம்மிடையே உள்ள னர். அரசு அலுவலராக, சமஸ்தானங்களில் திவானாக மற்றும் மேலவையில் பணி புரிந்து மிகவும் அனுபவம் பெற்றவர் அவர். டாக்டர் அம்பேத்கர் அரசியல் சாசனப் பொறுப்பை கையில் எடுத்துக் கொண்ட பிறகு சட்டமன்ற விவாதங்களில், அவர் அதிகமாக பங்கு

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 18 நவம்பர் 1949, பக். 663-65.

கொள்ளவில்லை என்பதுடன், பிற்பகுதியில் அவர் விலகிவிட்டார். அவர் ஆற்றிய மாபெரும் பணியை நாம் நிச்சயமாக மறந்துவிட முடியாது. சட்டமன்றத்தின் ஒவ்வொரு பகுதியினரும், தமது சிறந்த பங்கை ஆற்றத் தவறவில்லை. திருத்தங்களைக் கொண்டு வருவதில் ஜாம்பவான்களாக இருந்த நம் நண்பர்களில் சிலர் திரு. காமத், திரு. ஷிபன்வால் சாக்சேனா, திரு. சித்வா பிற்பகுதியில் இப்பட்டியலில் சேர்ந்த டாக்டர் பஞ்சாப் ராவ் தேஷ்முக் ஆகியோர் குறிப்பிடப்பட வேண்டியவர்கள். அவர்கள் தம்மால் இயன்ற அளவு பணிபுரிந்தனர். பேராசிரியர் கே.டி. ஷாவின் படிப்பும், அறிவும், திறமையும் என்னை எப்போதுமே வியப்பூட்டுவதாக இருந்தன. அவர் கொண்டுவந்த பல திருத்தங்கள் ஏற்றுக் கொள்ளப்படாவிடினும், அவருடைய கருத்தைத் தெரிவிக்கவே, அவை நம்முன் வைக்கப்பட்டன என்று அவர் கூறியுள்ளார். தம் தோல்வியை ஒரு விளையாட்டு வீரனைப் போல் அவர் ஏற்றுக் கொண்டார். நாம் ஒவ்வொருவரும் மகிழ்ச்சியுடன் நிறைவேற்றிய பணிகளின் மூலம் இந்த அரசியல் சாசனம் உருவாகியுள்ளது என்பதை நான் உணர்கிறேன். சிலருக்கு இதில் தோல்வி ஏற்பட்டிருக்கலாம். இந்தத் தோல்விகள் பெரும்பான்மையினரின் கருத்தைச் சிறுபான்மையினர் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற அடிப்படையில் ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஏதோ ஓர் எதிர்காலத்தில் பெரும்பான்மைக் கருத்தை தங்கள் கருத்துக்குச் சாதகமாக மாற்ற முடியும் என்ற நம்பிக்கையில்தான்.... அமைதியான, பவித்திரமான மகாத்மா காந்தியின் குரல், நமது இதயத்தில் எதிரொலிக்கிறது. அவரை, நமக்கு வழிகாட்டும். நாயகனாகக் கொண்டு முன்னேறிச் செல்வோம். இவ்வுலகில் அமைதியும் செழிப்பும் ஆட்சிபுரியும் வகையில் அமைதிப் பாதையில் முன்னேறிச் செல்வோம்.

[1]**மாண்புமிகு திரு. பி.ஜி. கெர்** (பம்பாய் : பொது) : தலைவர் அவர்களே, மூன்று ஆண்டுகளுக்கு முன்பு ஆரவாரமின்றி ஆரம்பித்த, நிறைவேற்றுவதற்கு கடினமான பணி முடிவடைந்துள்ள இத்தருணத்தை என்னுடைய ஆழ்ந்த மனநிறைவைத் தெரிவித்துக் கொள்

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 18 நவம்பர் 1949, பக். 665.

ளாமல் நழுவ விட்டுவிட முடியாது. நமது முதல் கூட்டம் 1946 டிசம்பர் 9ல் நடைபெற்றது. இந்த மூன்று ஆண்டுகளில்தான் எத்தனை நிகழ்வுகள்! சாதாரணமாக இதை நிறைவேற்ற முப்பதாண்டுகள் பிடிக்கும். வெளியில் நடைபெற்ற பல நிகழ்வுகள் நமது அரசியல் சாச னத்திலும் பல மாற்றங்களைத் தோற்றுவித்தன. சுதந்திர இந்தியா வுக்கு ஓர் அரசியல் சாசனத்தை அளித்ததற்கும், ஒரு கடினமான, பிரம்மாண்டமான என்றென்றைக்கும் மறக்க முடியாத பணியை நிறைவு செய்த இந்த சபைக்கு வாழ்த்துத் தெரிவிப்பதே என் முதல் விருப்பம். இது ஓர் இமாலயப் பணி என்பதை எவரும் ஒத்துக் கொள்வர். இந்தியா ஒப்பற்ற முறையில் சுதந்திரம் அடைந்தது போலவே இந்த அரசியல் நிர்ணய சபை அமைந்த விதமும் தனித் தன்மையானதுதான். அரசியல் நிர்ணய சபை அரசியல் சாசனத்தை இயற்றும் சபையாகவும், அதே வேளையில் நாடாளுமன்றமாகவும், மூன்றாண்டுகளுக்கும் மேலாக உலகில் வேறு எங்கும் இயங்கிய தாகத் தெரியவில்லை. மூன்றாண்டுகளுக்குப் பிறகு எல்லா விதத் திலும் பெருமை கொள்ளும் வகையில் இந்த அரசியல் சாசனத்தை உருவாக்கியுள்ளோம்.

★ ★ ★

[1]**திரு. பிரபு தயாள் ஹிமத் சிங்கா** (மேற்கு பேகன்: பொது) : ஐயா, அரசியல் சாசனம் எப்படிச் செயல்படப் போகிறது, யார் அதை பயன்படுத்தப் போகிறார்கள் என்பதைப் பொறுத்துத்தான் எல்லாம் உள்ளது. ஒரு பணிக்கு ஒருவரைப் பொறுப்பாக்கினால் அவர் அதை வெற்றிகரமாக நிறைவேற்றுவார். வேறு ஒருவரை அதற்கு பணித் தால் அதே விதிகள் இருந்தாலும், அந்தப் பணியை அவர் குட்டிச் சுவராக்கிவிடக் கூடும். அது எப்படிச் செயல்படுகிறது. அதை யார் செயல்படுத்துகிறார், எவ்விதத்தில் அது செயல்படுகிறது என்பதைப் பொறுத்துத்தான் எல்லாம் இருக்கிறது. மக்கள் எப்பொழுதும் குற்றம் குறைகளைக் காண்பதில் ஆர்வம் காட்டுவர். ஆனால் மொத்தத்தில் இது ஒரு மன நிறைவுதரும் அரசியல் சாசனமாக உள்ளது. சரியான முறையில் செயல்படுத்தப்பட்டால், சரியான ஆதரவு அளிக்கப்

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 18 நவம்பர் 1949, பக். 670.

பட்டால், மொத்தத்தில் எல்லாம் சரியான முறையில் முன்னேறிச் செல்லும்.

★ ★ ★

[1]**திரு. எச்.வி. படாஸ்கர்:** பலவித குறைபாடுகள் இருப்பினும் ஒரு நல்ல ஏற்பாட்டை செய்துள்ளோம். தேவைப்படும்போது அதைத் திருத்த இதன் மூலம் வழிவகை செய்யப்பட்டுள்ளது. அரசியல் சாசனம் என்பது உயிருள்ள வளர்ச்சியாகும். நமக்குப் பின் வருபவர்கள், சமயம் வரும்போது இந்த வழிமுறையைப் பயன்படுத்தி சூழ்நிலைக்கேற்ப அவர்கள் விருப்பப்படி இந்த அரசியல் சாசனத்தில் மாற்றம் செய்வார்கள்.

[2]**திரு. பி.ஏ. மாண்ட்லோய்** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்: பொது) : முடிவாக வரைவுக் குழுவைப் பற்றி ஒரு வார்த்தை கூறாவிடில் நான் என் கடமையில் தவறியவனாவேன். அந்தக் குழு ஒரு முக்கியமான, கடினமான பணியில் ஈடுபட்டிருந்தது என்பதை யாவரும் அறிவர். இந்த சபையில் நடைபெற்ற காரசாரமான விவாதங்களின் போது, வரைவுக் குழுவின் தலைவர் தமது கருத்தை முன்வைத்து, அந்த விவாதங்களை வெற்றிகரமாக முடித்து வைத்தார். வரைவுக் குழுவின் பணிகளை இந்த சபை பாராட்டுவதுடன், விடுதலை பெற்ற சுதந்திர இந்தியாவின் அரசியல் சாசனத்தை வெற்றிகரமாக உருவாக்கி அளித்ததற்கு டாக்டர் அம்பேத்கரைப் பாராட்டுகிறேன். மூன்று ஆண்டுகளில் இந்த அரசியல் சாசனம் தயாரிக்கப்பட்டுள்ளது. கால அளவைப் பொறுத்தவரையில் இது ஒரு சாதனையே. இந்த மூன்றாண்டுகளிலிருந்து முன்னெப்போதும் கண்டிராத இடர்ப்பாடுகளைச் சந்தித்த நாட்களையும், பதற்றம் நிறைந்த நாட்களையும் நீக்கிவிட வேண்டும். அப்படிப் பார்த்தால் இது ஒரு சாதனைதான். ஐயா, ஒரு நல்ல அரசியல் சாசனம் காகிதத்தில் மட்டும் இருந்தால் போதாது. ஆனால் மக்களின் ஈடுபாடும், மக்களின் நேர்மையும், அதை நல்லமுறையில் செயல்படுத்த மக்களின் மனப்பூர்வமான

1. அ:நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 18 நவம்பர் 1949, பக். 674.
2. மேற்படி அதே நூல், பக். 676.

விருப்பமுமே முக்கியமானது. அதே ஆர்வத்துடன் அரசியல் சாசனம் செயல்படுத்தப்பட்டால், நமது நாட்டிற்கு ஒளிமயமான எதிர்காலம் உள்ளது என்று உறுதியாக நம்புகிறேன். உலகின் முன்னணி நாடுகளின் ஒன்றாக நமது நாடு விளங்கவேண்டும். நமது நாட்டிற்குப் பிரகாசமான எதிர் காலத்தையும் நாம் காண்கிறோம். நாம் இந்த அரசியல் சாசனத்தை எந்த எழுச்சியுடன் நிறைவேற்றுகிறோமோ அதே எழுச்சியுடன் நடைமுறைப்படுத்தினால் நமது நாட்டிற்கு பிரகாசமான எதிர்காலம் உள்ளது என்பது நிச்சயம். இந்தச் சொற்களுடன் இந்தத் தீர்மானத்திற்கு ஆதரவு தருகிறேன்.

★ ★ ★

[1]**பண்டிட் தாகூர் தாஸ் பார்கவா** (கிழக்கு பஞ்சாப் : பொது) : ஐயா, இந்த அரசியல் சாசனத்தைத் தயாரிப்பதில் எங்களுக்கு உதவிய மற்ற நண்பர்களுக்கும் எங்கள் நன்றியை இந்த நேரத்தில் கூற விரும்புகிறேன். நீங்கள் நோய்வாய்ப்பட்டிருந்தபோது, இந்த சபையின் நடவடிக்கைகளை மிகுந்த திறமையுடனும், சாதுர்யத்துடனும் தலைமை தாங்கி நடத்திய டாக்டர் எச்.ஜி. முகர்ஜி அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஐயா, வரைவுக் குழுவை வாழ்த்திக் கூற எந்தச் சொற்களைத் தேர்ந்தெடுப்பது என்பதே தெரியவில்லை. கூர்மையான சட்ட அறிவுடனும், அயராத உழைப்புடனும், அப்பழுக்கற்ற திறமையுடனும், உறுதிப்பாட்டுடனும், நிதானத்துடனும் இந்த அரசியல் அவையில் வழிநடத்திச் சென்ற, வரைவுக் குழுவின் தலைவருக்கு நன்றிகூற சொற்களே இல்லை. அரசியல் சாசனம் சம்பந்தமாக எழுந்த பிரச்சினைகளை, முடிச்சுகளைச் சிக்கலின்றி அவிழ்த்து, அவற்றுக்கு அவர் தீர்வுகண்டார். இன்று சபையில் அவர் இல்லாதது எனக்கு வருத்தம் அளிக்கிறது. இதுவரை ஷெட்யூல்டு வகுப்பினரின் தலைவராகவே தம்மைக் கருதிவந்த அவர், தாம் வெளிப்படுத்திய மிகுந்த பொதுநல அக்கறையின் காரணமாக, காங்கிரசில் சேர வேண்டுமென்றுக் கேட்டுக் கொள்கிறேன். இன்று நம் இதயங்களில் அவர் ஓர் உயர்ந்த இடத்தைப் பிடித்துவிட்டார். இப்பொழுது அவர் வகித்துவரும் சாதாரண பதவி நிலையிலிருந்து

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 18 நவம்பர் 1949, பக். 682.

மிக முக்கியமான குறிப்பிடத்தக் பதவிக்கு, அதாவது காங்கிரஸ் கட்சியின் உயர்மட்டக் குழுவில் அவர் இடம் பெறுவார் என்று நிச்சயமாக நம்புகிறேன்.

[1].... ஐயா, எனவே அரசியல் சாசனம் என்பது வெறும் துண்டுக் காகிதங்களே. நம்முடைய இலட்சியங்களை அடைய, தாமாக வந்து அவை நமக்கு உதவ முடியாது என்ற கருத்துடன் என் உரையை முடிக்க விரும்புகிறேன். ஒரு நாட்டிற்கு, அரசியல் சாசனத்தின் அடிப்படையாக விளங்கும் இலக்குகளை அடைய அது எந்தக் கோட்பாடு, களுடன் தயாரிக்கப்பட்டுள்ளதோ, செயல்படுத்தப்படுகிறதோ அவைதான் உதவ முடியும். எனவே இந்த நேரத்தில், நமது அரசியல் சாசனத்தை நிறைவேற்றும் இந்த வேளையில், 1950 ஜனவரி 26ல் இதில் கையெழுத்திடவுள்ள உறுப்பினர்களுக்கு இந்தக் கருத்தை எடுத்துரைக்க விரும்புகிறேன். அரசியல் சாசனத்தைத் தயாரித்ததுடன் அவர்களுடைய பணி முடிந்துவிடவில்லை. அவர்களுடைய உண்மையான பணி, இனி வருங்காலத்தில்தான் உள்ளது. உண்மையான சுதந்திரமும், மகிழ்ச்சியும், செல்வச் செழிப்பும் மக்கள் அடைய, அரசியல் சாசனத்தைச் செயல்படுத்த வேண்டிய கடமை அவர்களுக்குள்ளது.

உங்களுடைய அனுமதியுடன் மேலும் ஒரு விஷயத்தைக் குறித்து மட்டும் எடுத்துரைக்க விரும்புகிறேன். அது எனக்கு மிகவும் விருப்பமான விஷயம். ஷெட்யூல்டு வகுப்பினருக்கு நாம் நிறைய வாய்ப்புகளும், வசதிகளும் அளித்துள்ளோம். அவர்களுக்கு இட ஒதுக்கீடு செய்துள்ளோம். 335-ஆம் விதியை நமது அரசியல் சாசனத்தில் இணைத்துள்ளோம். இதன்படி பணியிடங்கள் சம்பந்தமான இடஒதுக்கீட்டுக்கு உத்தரவாதம் அளித்துள்ளோம். 16-ஆம் விதியின்படி, பணியிட ஒதுக்கீட்டிற்கு வழிவகை செய்துள்ளோம். அரசு, பணிகளுக்கு அவர்களுக்காக இடஒதுக்கீடு செய்யாத ஒரு நாளை நாம் காண்போம் என்று நம்புகிறேன். மகாத்மா காந்தி கனவு கண்ட வகுப்புகளற்ற ஒரு சமுதாயத்தை நாம் நிறுவ வேண்டுமென்றால்,

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 18 நவம்பர் 1949, பக். 688.

அரசியல் சாசனம் என்ற இந்த ஆவணத்தில் கையெழுத்திடும் ஒவ்வொருவரும், தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களை தங்களுக்கு இணையாக முன்னுக்குக் கொண்டுவருவோம் என்று உறுதிமொழி எடுத்துக் கொண்டு, உறுதிப்பாடுடன் அதைச் செயல்படுத்த வேண்டும். அரசியல் சாசனத்தில் கையொப்பமிட்டுவிட்டு அதன் கோட்பாடுகளின்படி நடக்கவில்லையென்றால் அது நம்மையே மோசடி செய்து கொள்வதற்கு ஒப்பாகும்.

★ ★ ★

[1]**திரு. அவைத் தலைவர் :** திரு. காமத் அவர்களே, இப்பொழுது வாதத்தை நாம் தொடரலாம்.

**திரு. எச்.வி. காமத்** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்: பொது): தலைவர் அவர்களே, டாக்டர் அம்பேத்கர் கொண்டு வந்துள்ள தீர்மானத்திற்கு எனது வரையறைக்குட்பட்ட, தகுதி அடிப்படையிலான ஆதரவைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஐயா, இந்திய மக்களாகிய நாம் ஒரு நீண்ட பயணத்தின் முடிவை அடைந்துள்ளோம். இது மேலும் கடினமான, ஆபத்து நிறைந்த பயணத்தின் தொடக்கமே.

★ ★ ★

[2]**சேத் தாமோதர் ஸ்வரூப்** (ஐக்கிய மாகாணங்கள்: பொது) : தலைவர் அவர்களே, அரசியல் சாசன வரைவின் இரண்டாவது வாசிப்பு முடிந்து மூன்றாவது வாசிப்பு தொடர்ந்து நடைபெற்று வருகிறது. அதுவும் இரண்டு மூன்று நாட்களில் முடிவு பெற்றுவிடும். அதற்குப் பிறகு வரலாற்றுச் சிறப்பு மிக்க நாளான ஜனவரி 26-ல் இந்த அரசியல் சாசனத்தின் துவக்கவிழா நடைபெறும். இதெல்லாம் மிகச் சிறப்பாகவே உள்ளன. இதற்காக டாக்டர் அம்பேத்கர் மற்றும் வரைவுக் குழுவில் அவருடன் பணிபுரிந்தவர்களை இந்த சபை

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 18 நவம்பர் 1949, பக். 688.
2. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 19 நவம்பர் 1949, பக். 693.

பாராட்டும். ஏனெனில் அதிகத் திறமையுடனும், கடின உழைப் புடனும் இந்த அரசியல் சாசனத்தை அவர்கள் உருவாக்கியுள்ளனர்.

[1]**திரு. டி. பிரகாசம்** (சென்னை : பொது): ... இந்த அரசியல் சாசனம் ஒரு மாபெரும் ஆவணம். இதை உருவாக்குவதில் பொறுப்பு வகித்த நண்பர்கள் மற்றும் டாக்டர் அம்பேத்கர் சிறந்த சட்ட வல்லுனர் என்பதுடன் மிகுந்த திறமைசாலியும் ஆவார். அவர் ஆற்றிய பணி யின் மூலம், பிரிட்டிஷ் அரசின் சட்ட ஆலோசகராக இருக்கப் பொருத்தமானவர். ஒருவேளை பிரிட்டனின் பிரிவி கவுன்சிலில் அமரப் பொருத்தமானவராகவும் இருக்கலாம். இந்நாட்டு மக்க ளாகிய நாம் விரும்பும் அரசியல் அமைப்புச் சட்டம் இதுவல்ல. காங்கிரசின் சார்பில் இந்நாட்டை நிர்வகிக்க மகாத்மா காந்தி முன்வந்தபோது, இந்நாட்டின் கோடிக்கணக்கான மக்களை எப்படி வாழவைப்பது, இந்நாட்டை எப்படிப் பாதுகாப்பது என்பதை அவர் கண்டுள்ளார். எனவேதான் இந்நாட்டை மொழிவழி அடிப் படையில் பிரிக்க வேண்டுமென்று அவர் எண்ணினார். அப்பொழுது தான் ஒவ்வொரு பிராந்திய மக்களும் தாங்களே முன்னேற தகுதி படைத்தவர்கள் ஆவர்.

★ ★ ★

[2]**பேராசிரியர் சிபன்லால் சாக்சேனா :** அரசியல் சாசனம் குறித்த எனது விமர்சனத்தை வைத்து, இந்த மூன்றாண்டுகளில் நாம் அடைந்த சாதனைகளை நான் காண மறுப்பதாக நினைக்கக்கூடாது. கடந்த மூன்றாண்டுகளில் நாம் சாதித்த மிகப் பெரும் தனிப்பட்ட சாதனை, இந்த அரசியல் சாசனத்தை உருவாக்கியதுதான் என்று எண்ணுகிறேன். சுதந்திர விடியலுக்கு பிரிட்டிஷ் அரசாங்கம் எழுப்பி யுள்ள தடைகளான, சிறுபான்மையினர் பிரச்சினை, இந்திய சமஸ்தான மன்னர்கள் பிரச்சினை, திடீரென்று உதயமான படைத்துறை சாராத அரசு அலுவலர்கள் பிரச்சினை போன்ற பிரச்சினைகள் இரண்டு வரு டத்திற்கும் குறைந்த காலக் கெடுவில் மந்திரம் போட்டது போல்

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 19 நவம்பர் 1949, பக். 699.
2. மேற்படி அதே நூல், பக். 707.

மறைந்து போய்விட்டன. அரசியல் சாசனத்தை உருவாக்குவதில் ஏற்பட்ட காலதாமதம், ஒன்றியத்தின் மற்ற பகுதிகளை நிருவாகம் செய்ய உருவாக்கிய வழிவகைகளைப் போல சமஸ்தானங்களை நிருவாகிக்கவும் வழிவகைகள் உருவாக்கப்பட்டு, அரசியல் சாசனத்தில் இணைக்கப்பட்டுள்ளன. இதன் மூலம் 566 இந்திய சமஸ்தானங்கள் ஒன்பது மாகாணங்களாக பிரிக்கப்பட்டு நிருவாகம் செய்யப்படும். எந்த ஒரு நாட்டிலும் நடைபெறாத மிகப்பெரும் தனிப்பட்ட சாதனையாக இது கருதப்படும்.

★ ★ ★

[1]**மாண்புமிகு ரெவரெண்ட் ஜே.ஜே.எம். நிக்கோலஸ் ராய்** (அசாம் : பொது) : தலைவர் அவர்களே, இந்தச் சட்டமன்றத்தால் இறுதிசெய்யப்பட்ட அரசியல் சாசனத்தை நிறைவேற்றும்படி டாக்டர் அம்பேத்கர் கொண்டுவந்துள்ள தீர்மானத்திற்கு, எனது உளமார்ந்த ஆதரவைத் தெரிவிப்பதில் மகிழ்ச்சி அடைகிறேன். உலகில், மற்றும் இந்தியாவின் இன்றையச் சூழ்நிலையில், உருவாக்க முடிந்த ஒரு சிறந்த அரசியல் சாசனமாக இதைக் கருதுகிறேன். சந்தேகத்துக்கிடமின்றி குறைபாடுகள் இருப்பினும், சில வழிவகைகளை வேறு வகையில் உருவாக்கிட நாம் விரும்பினாலும், தற்போதைய நிலையில் இதை விடச் சிறப்பாகத் தயாரித்துவிடமுடியாது. இந்த அரசியல் சாசனத்தை உருவாக்குவதில், சிறிதளவாவது என் பங்கும் உள்ளது என்பதில் மகிழ்ச்சி அடைகிறேன். விமர்சனங்கள் மற்றும் ஆலோசனைகள் அளிப்பதன் மூலம் இந்த அரசியல் சாசனத்தைத் தயாரிப்பதில் நாடு முழுவதும் பங்கு கொண்டது. இரண்டாண்டுகளுக்கு முன்பு இந்த அரசியல் சாசன வரைவு நாட்டின் முன் வைக்கப்பட்டது. அதைக் குறித்து விமர்சிக்கவோ அல்லது ஆலோசனைகள் அனுப்பவோ ஒவ்வொருவருக்கும் வாய்ப்பளிக்கப்பட்டது. மேலும் இந்த அரசியல் நிர்ணயசபையில் உள்ள ஒவ்வொருவரும் இந்த அரசியல் சாசனத்தைத் தயாரிப்பில் பங்கு கொண்டுள்ளனர். எனவே நாடு முழுவதற்குமான, நாடு முழுவதும் சேர்ந்து தயார் செய்த அரசியல் சாசனம் இது எனலாம்....

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 19 நவம்பர் 1949, பக். 708.

.... ஐயா, இப்பொழுது வேறு ஒரு விஷயத்தைப் பற்றி, அதாவது ஆறாவது அட்டவணைப் பற்றிப் பேச விரும்புகிறேன். வரைவாளர் திரு. எஸ்.என். முகர்ஜி, சர் பி.என். ராவ், டாக்டர் அம் பேத்கர் ஆகியவற்களுக்கு ஆறாவது அட்டவணையைத் தயாரிப் பதில் சிறப்பான கவனம் செலுத்தியதற்காகத் தனிப்பட்ட முறையில் நன்றிகூறக் கடமைப்பட்டுள்ளேன். வரைவுக் குழுவுக்கு முன் பேச அனுமதித்ததற்கு, அதன் உறுப்பினர்களுக்கு நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

[1]**டாக்டர் ரகு வீரர்** (மத்தியமாகாணங்கள் மற்றும் பேரார்: பொது) : .... இந்த அரசியல் சாசனத்தில் வெளிநாட்டுக் கோட் பாடுகள் மட்டுமே சேர்த்துக் கொள்ளப்பட்டுள்ளன. பாரத நாட்டின் மண்ணின் மணம் எதுவும் அதில் இல்லை. எனினும், இப்பொழுது நிறைவேற்றப்பட்டுள்ள இந்த வடிவத்திலேயே இன்னும் சில ஆண்டுகள் கழித்து இந்த அரசியல் சாசனம் இருக்கப் போவதில்லை. அப்பொழுது அது உண்மையான இந்தியத் தன்மையைப் பிரதி பலிக்கும். இந்நாட்டு மக்களின் அடிப்படையான, மூலாதாரமான தேவைகளை நிறைவேற்றும்.

[2]**மாண்புமிகு திரு. கே. சந்தானம்** (சென்னை : பொது) : .... பின்னோக்கிப் பார்க்கையில் இந்த மூன்றாண்டுகள் ஒரு நீண்ட காலமாகத் தெரியவில்லை. ஓராண்டுக்கு முன்பே அரசியல் சாச னத்தைத் தயாரித்து முடித்து இருந்தால் இந்த அளவு சிறப்பு மிக்க அரசியல் சாசனத்தைத் தயாரித்திருக்க முடியாமல் போயிருக்கலாம். இந்த அரசியல் சாசனம் குறித்து பல்வேறு விமர்சனங்கள் எழுந் துள்ளன. அதன் வரைவுமுறை பற்றி எனது மதிப்பிற்குரிய நண்பர் நஸிருத்தீன் அகமது குறை கூறினார். அரசியல் அமைப்புச் சட்டத்தை முழுவதுமாகப் படித்துத் தெளிவு மற்றும் நுணுக்கம் என்ற அளவு கோலால் பார்த்தால் உண்மையிலேயே நாம் சிறந்ததொரு அரசியல் சாசனத்தை உருவாக்கியுள்ளோம் என்று நினைக்கிறேன்.

★ ★ ★

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 19 நவம்பர் 1949, பக். 715.
2. மேற்படி அதே நூல், பக். 718

[1]**சர்தார் பூபேந்தர் சிங் மான்** (கிழக்குப் பஞ்சாப்: சீக்கியர்) : அரசியல் சாசனத்தின் உயிரற்ற கட்டுக்கோப்போ அல்லது எழுதப் பட்டுள்ள சொற்களோ இறுதியில் கணக்கிலெடுத்துக் கொள்ளப்பட மாட்டாது. காலம் செல்லச் செல்ல, யதார்த்தத்துக்கு மிகவும் நெருக்க மான, குணாம்சரீதியில் வலிவுமிக்க சில நடைமுறைகள் நிச்சயமாக உருவாகக்கூடும். ஐயா, இறுதியில், மக்களின் இயல்பான நல்லறிவு தான் கணக்கிலெடுத்துக்கொள்ளப்படும். அரசியல் சாசனத்தில் காணப் படும் சொற்கள் அல்ல. அது உள்ளடிக்கியுள்ள சக்தியே வலிமை பெற்று இருக்கும். நிர்வாகத்துறையிலும், சமூகத்தின் பொருளாதாரத் துறையிலும் அதன் கட்டமைப்பிலும் எல்லாத் துறைகளிலும் இந்திய மக்களுக்கு சமவாய்ப்பிலான நீதி கிடைக்கும்.

[2]**காஜி சையத் கரிமுத்தீன்** (மத்திய மாகாணம் மற்றும் பேரார் : முஸ்லீம்) தலைவர் அவர்களே, வரைவுக் குழுவின் பிரமிக்கத்தக்க பணியை பாராட்டுகிறேன். திரு. நஸிருத்தீன் அகமது மேற்கொண்ட கடினமான பணிக்காக அவரையும் பாராட்ட விரும்புகிறேன். இதற் காக வரைவுக்குழு அவருக்குப் பாராட்ட ஒன்றையும் தெரிவிக்க வில்லை. இந்த அரசியல் சாசனத்தைத் தயாரிப்பதில் டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக் கொண்ட பணிக்கு, சிறப்பான வாதத்திறமைக்கு முக்கியமாக அவருக்கு நன்றிகூறி, வாழ்த்துக்கூற விரும்புகிறேன். பல தடைகளை அவர் கடக்கவேண்டியிருந்ததை நான் அறிவேன். நான் கொண்டுவந்த திருத்தம் அதாவது சட்டத்துக்குப் புறம்பான சோதனை கள், வீடுகளில் சோதனைகள், மற்றும் தனிநபர்களிடம் சோதனைகள் பற்றிய திருத்தம், பெரும் தடைக்கல்லாக இருந்தது. அவர் அதை ஏற்றுக் கொண்டதுடன் சபையும் ஏற்றுக்கொண்டது. ஆனால் சபை ஒத்திவைக்கப்பட்ட ஒரு வாரத்தில் அது தோற்கடிக்கப்பட்டது.

[3]**திரு. சங்கர்ராவ் தேவ்** (பம்பாய்: பொது) : நமது அரசியல் சாசன வரைவாளர்களை நியமிக்கும்போது அரசியல் சட்ட பண்டிதர்

---

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 19 நவம்பர் 1949, பக். 723.
2. மேற்படி அதே நூல், 21 நவம்பர் 1949, பக். 723-24.
3. மேற்படி அதே நூல், பக். 730.

களின் அறிவையும், சட்ட வல்லுனர்களின் நுணுக்கமான திறமையை யும் பெற ஆர்வமாக இருந்தோம். வேண்டுமளவுக்கு அதைப் பெற் றுள்ளோம். டாக்டர் அம்பேத்கர் மற்றும் அவரது சகாக்கள் அல்லது வரைவுக் குழுவிலுள்ள அவரது தோழமைப் பணியாளர்களுக்கு நமது நன்றியைத் தெரிவித்துக்கொள்ளவேண்டும். இந்த உலகின் எந்த நாட்டினுடைய அரசியல் சாசனத்தையும் தயாரித்தவர்களுக்கு இவர்கள் எந்தவிதத்திலும் சளைத்தவர்கள் அல்லர் என்று நான் நினைக்கிறேன்.

★ ★ ★

[1]**சையத் முகமது சாதுல்வா** (அசாம்: முஸ்லீம்) : சில நேரங் களில் பேச்சு வெள்ளிக்கு ஈடானது, ஆனால் மௌனமோ தங்கத் துக்கு ஈடானது என்று கூறப்படுகிறது. இப்பொழுது அப்படிப்பட்ட மௌனமே இந்தப் புனிதமான சட்டமன்றத்துக்குப் பொருத்த மானது என்பதே என் தாழ்மையான அபிப்பிராயம்....

.... மரியாதைக்குரிய இந்த சபையின் உறுப்பினர் மற்றும் வரைவுக் குழுவின் உறுப்பினர் என்ற இரு பொறுப்புகளுடன் உங்கள் முன் நிற்கிறேன். கடந்த இரண்டாண்டுகளாக வரைவுக்குழுவின் உறுப்பினர்கள் மேற்கொண்ட கடினமான, மிகச்சிக்கலான பணியை நன்றியுடன் பாராட்டிய நண்பர்கள் யாவரையும் வரைவுக் குழு உறுப்பினர்கள் சார்பாகவும் என் சார்பாகவும் சிரம் தாழ்த்தி வணங்கு கிறேன். வரைவுக்குழு உறுப்பினர்களின் குறைபாடுகளை தங்க ளுடைய அதிபுத்திசாலித்தனத்தால் விமர்சிக்கத் தகுந்தது என்று கூறி விமர்சித்தவர்களுக்கும்கூட என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்வதில் நான் மனவருத்தமடையவில்லை. தவறான கண்ணோட் டத்துடன், குறைபாடுள்ள பார்வையடன், ஒழுங்கற்ற நோக்கில் அவர்கள் அணுகுமுறை இருந்தது என்பதை கூறாமல் இருக்க முடியாது.

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 21 நவம்பர் 1949, பக். 732-33.

ஐயா, வரைவுக் குழு ஒரு சுதந்திர அமைப்பல்ல. துவக்கத்திலிருந்தே பல சூழ்நிலைகளால் மற்றும் வழிமுறைகளால் அது கட்டுப்படுத்தப்பட்டிருந்தது. இந்த அரசியல் நிர்ணயசபை நிறைவேற்றிய குறிக்கோள்கள் பற்றிய தீர்மானம் என்ற குழந்தைக்கு ஆடை அணிவிக்க மட்டுமே எங்களுக்குப் பணிக்கப்பட்டது. அரசியல் சாசனம் இந்தக் குறிக்கோள்களுக்கு இசைந்திருக்க வேண்டுமென்று எங்களுக்குக் கூறப்பட்டது. அதன் எல்லைக்குள்தான் இருக்க வேண்டுமென்று கூறப்பட்டது. மேலும் எங்களது பணிகள் சபையினால் பரிசீலிக்கப்பட்டு ஏற்றுக் கொள்ள வேண்டியிருந்தது. வரைவுக் குழுவின் உறுப்பினர்கள் ஏழுபேரில் எவரேனும் தமது கருத்தை சபையின் 308 உறுப்பினர்கள் மீது திணிக்கும் ஆணவம் மிக்கவராக இருக்க முடியுமா?

ஐயா, சூழ்நிலையால் உருவாக்கப்பட்ட ஜந்துவே மனிதன் என்பது மனோதத்துவப்படி ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு கொள்கையாகும். இந்த சபையில் வரைவுக்குழுவால் முன்வைக்கப்பட்ட அரசியல் சாசன வரைவு இந்தப் பொதுவான கொள்கைக்கு விலக்காக இருக்க முடியாது. இந்நாட்டில் நிலவிவரும் நிலைமைகள் மற்றும் சூழ்நிலைகளை அவர்கள் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டியிருந்ததுடன் ஜனநாயகத்துக்கு முரண்பாடாக ஒலிக்கும் சில கோட்பாடுகளை வரைவுக்குழு உறுப்பினர்களுக்கு விருப்பமில்லாவிடினும் வரைவுக் குழுவைவிட மகாவல்லமை பொருந்திய சக்திகளால் இதில் சேர்க்க வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது.

ஐயா, அரசியல்சாசன வரைவின் பல பிரிவுகள் ஏழு தடவைகள் வரை மாறிமாறி திருத்தி எழுதி அமைக்க வேண்டி வந்தன என்பதை மறப்பதற்கில்லை. வரைவுக்குழு உறுப்பினர்கள் தங்களுக்கு சிறந்தது என்று கருதும் ஒரு பகுதியைத் தயாரிப்பார்கள். அது அரசின் குறிப்பிட்ட அமைச்சகத்தால் பரிசீலிக்கப்படும். அவர்களுடைய விமர்சனத்தின் அடிப்படையில் அவர்களுடைய தேவைக்கேற்ப அந்தப் பகுதி புதிதாகத் தயாரிக்கப்படும். இந்தச் சபையின் பெரும்பான்மை கட்சியால் இது பரிசீலிக்கப்படும். சபையில் அதற்கு இசைவு அளிக்கும் ஒரே கட்சியான காங்கிரஸ் கட்சியைத்தான் குறிப்பிடுகிறேன். சில சமயங்களில் அவர்கள் தங்கள் ஆலோசனைகளை

அளித்தனர். அதை முறையான அரசியல் சட்ட ரீதியான வடிவத்தில் வரைவுக்குழு உறுப்பினர்கள் தயாரித்து அளிக்க வேண்டியிருந்தது.

மனிதனால் தயாரிக்கப்பட்ட எந்த அரசியல் சாசனமும் அல்லது ஆவணமும் அப்பழுக்கற்றதாக இருக்க முடியாது. நம் லட்சியக் கனவை விட நாம் அடையும் இலக்கு குறைவாகவே இருக்கும் என்பது பழைய கருத்துதான். வரைவுக்குழுவின் உறுப் பினனாக நான் இருப்பினும் இந்த அரசியல் சாசனம் கொண்டுள்ள பல கோட்பாடுகளுடன் எனக்கு உடன்பாடு இல்லை. அரசியல் சாசன வரைவின் தனிப்பட்ட வகைமுறைகளைப்பற்றி நான் வாய் திறக்க முடியாது. வரைவுக் குழுவின் இதர உறுப்பினர்களைப் போல் அவை அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டதற்கு நானும் பொறுப்பேற் கிறேன்.

★ ★ ★

[1]**சையத் முகமது சாதுல்லா** (அசாம்: முஸ்லீம்) : ஐயா, இரண்டு நூற்றாண்டுகளாக அடிமைகளாக அவமானப்பட்டுக் கிடந்த பிறகு நமது அரசியல் சாசனத்தை நாம் தயாரித்துள்ளோம். அந்தச் சிந் தனையே என் மனதைக் குதூகலிக்க வைக்கிறது. அதைப்பற்றிய எண்ணம் நம் இதயத் துடிப்பை வேகப்படுத்துகிறது. இருப்பினும் இந்த அரசியல் சாசன வரைவு இந்த அளவுக்கு நம்மைக் களிப்படைய வைத்துள்ளது, உவகை கொள்ளச் செய்துள்ளது என்று நெஞ்சில் கைவைத்துக் கூறமுடியாது. இப்பொழுது நாம் நிறைவேற்றும் இந்த அரசியல் சாசனம் இரண்டு மாதங்களில் சட்டமாகவுள்ள இந்த அரசியல் சாசனம் ஒரு சமரச அரசியல் சாசனம் என்றே கூறலாம். இது சிறிது காலமே அமலில் இருக்கும் என்று பல உறுப்பினர்கள் தெரிவித்தனர். வருங்கால சட்டமன்ற உறுப்பினர்கள் இதை அப்பழுக் கற்ற, குறைபாடற்ற ஓர் அரசியல் சாசனமாக்க முயற்சிப்பார்கள் என நம்புகிறேன். உணவின் சிறப்பு, உண்ணும்போது தெரிந்துவிடும். அது போன்று, இந்த அரசியல் சாசனம் போற்றிப் புகழக் கூடியதென்றோ, குறை கூறக்கூடியதென்றோ யாரும் கூறிவிட முடியாது. அரசியல்

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 21 நவம்பர் 1949, பக். 735-36.

சாசனத்தின் செயல்பாடே அது ஒரு நடைமுறைக்கான சாசனமா, காலத்தின் தேவைக்கு ஏற்றதா, நமது மக்களின் தேவைகளுக்கு பொருத்தமானதா அல்லது நமது நாட்டின் அறிவுகூர்மைக்கு ஏற்றதா என்பதை நிரூபிக்கும். ஆனால் நாம் அரசியல் சாசன முகப்புரையின் லட்சியத்திற்கிணங்க செயல்பட்டால், ஒரு லட்சிய அரசியல் சாசன மாகத் திகழக்கூடிய அரசியல் சாசனத்தை தயாரித்தவர்களாவோம்.

[1]....நமது சிறந்த அறிவுத் திறனையெல்லாம் அர்ப்பணித்து உருவாக்கியுள்ள இந்த அரசியல் சாசனத்தை மிகவும் பணிவுடன் செயல்படுத்துவோம். முகப்புரையின் லட்சியத்திற்கிணங்க செயல்படு வதன் மூலம் அதாவது எல்லோருக்கும் நீதி, சமத்துவம், மற்றும் சகோதரத்துவம் என்ற கோட்பாடுகளின் அடிப்படையில் செயல் படுவதன் மூலம் இந்தக் கவர்ச்சியற்ற அரசியல் சாசனத்தைக் கூட ஒரு சுவர்கலோக பூங்காவா ஆக்க முடியும்.

[2]**திரு. எச்.ஜே. கண்டேகர்** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்: பொது) : தலைவர் அவர்களே, எனது நண்பர் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் கொண்டுவந்துள்ள தீர்மானத்தை ஆதரிக்க முன் வந்துள்ளேன்....

... இந்த அரசியல் சாசனத்தை உருவாக்க வரைவுக்குழு ஆற்றிய பணிகளுக்காக அதைப் பாராட்டுகிறேன். ஐயா, இந்த அரசியல் சாசனத்தைத் தயாரிப்பதில் அதிக அக்கறை காட்டிய என் நண்பரும், கவர்னர்-ஜெனரலின் சீடருமான பண்டிட் எச்.வி. காமத்துக்கும் என் பாராட்டுகள்....

... இன்று, இப்பொழுது, வரைவுக்குழுவின் தலைவர் டாக்டர் அம்பேத்கரின் மதிநுட்பத்தால் சுதந்திர இந்தியாவுக்கான ஒரு அரசியல் சாசனத்தை நிறைவேற்றுகிறோம். இந்த அரசியல் சாசனத்தை ஒரு மகர் அரசியல் சாசனம் என்று அழைக்கலாம். ஏனெனில் டாக்டர் அம்பேத்கர் ஒரு மகர் ஆவார். இந்த அரசியல் சாசனம் ஜனவரி

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 21 நவம்பர் 1949, பக். 736
2. மேற்படி அதே நூல், பக். 736-37.

26ல் அமலுக்கு வரும்போது மனுநீதிச் சட்டம் மாற்றப்பட்டு அதற்குப் பதில் மகர் சட்டம் அமலுக்கு வரும். மனு நீதிச் சட்டத்தின் கீழ், ஒரு பொழுதும் செழிப்பாக இல்லாத இந்த நாட்டை மகர் சட்டம் ஓர் உண்மையான சுவர்க்கமாக மாற்றும்.

★ ★ ★

[1]**திரு. மகபூப் அலிபேக் சாகிப்** *(சென்னை : முஸ்லீம்)* : தலைவர் அவர்களே, அரசியல் சாசன வரைவை மிகச்சிறந்த திறமையுடன் வழிநடத்திச் சென்றதற்கு டாக்டர் அம்பேத்கரைப் பாராட்டுகிறேன். அத்துடன் எந்தவிதப் புகாருமின்றி இந்த சபையின் நடவடிக்கைகளை நீங்கள் வழிநடத்திச்சென்ற முறைக்கும் ஆழ்ந்த நன்றி உணர்ச்சியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இது வழக்கமான பாராட்டுரையென்று கருதிவிடக்கூடாது. வரைவுக் குழுவின் கருத்துகளை உறுதிப்படுத்துவது பற்றியோ அல்லது மாற்றம் செய்வது பற்றியோ சபைக்கு வெளியிலேயே, முன்னதாகவே முக்கியமான கட்சி முடிவெடுத்தது. அது இறுதி முடிவை எடுக்கும் நடுவராகச் செயல்பட்டது. இந்த முக்கியக் கட்சியைச் சேராத எங்களைப் போன்றவர்களுக்கு நீங்கள் உதவ முன் வந்திருக்காவிடில், எங்களுடைய கருத்துகளைக் கூற அனுமதித்திராவிடில், ஆதரவற்ற நிலைக்கு நாங்கள் தள்ளப்பட்டிருப்போம். உங்களுடைய நேர்மைக்காக உங்களை மனமாறப் பாராட்டுகிறேன். தெளிவான சிந்தனையும், சொல் ஆற்றலும் பெற்ற ஈடு இணையற்ற டாக்டர் அம்பேத்கர், நிதிப் பிரச்சினை உட்பட அரசியல் சாசனப் பிரச்சினைகளில் ஈடுஇணையற்ற தேர்ச்சி பெற்றவர். அவரது அறிவு முழுமையானது, தனித்திறமை வாய்ந்தது, புகழத்தக்கது. ஆனால் அவர் உங்களைப் போன்ற நிலையில் இல்லை. அவர் ஒரு சுதந்திர நபரல்ல. அவர் இருந்த நிலையின் அந்தச் சூழலின் இயல்பான குறைகளும், கெடுதல்களும் நமக்கும் வந்தடைந்துள்ளன; அரசியல் சாசனத்திலும் காணப்படுகின்றன. எனவே இதற்குத் தனிப்பட்ட முறையில் அவரைப் பொறுப்பாக்க முடியாது.

---

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 21 நவம்பர் 1949, பக். 742

[1]**திரு. எஸ்.எம். கோஸ்** (மேற்கு வங்காளம்: பொது) : மனுவைப் பற்றி இந்த சபையில் கூறப்பட்டவை என் செவியில் விழுந்தது. மனு உண்மையில் எதைப் பிரதிபலித்தார், அல்லது மனு எதற்காக நின்றார் என்பதைச் சரியாக பரிந்து கொள்ளவில்லை என்று கருதுகிறேன். டாக்டர் அம்பேத்கரைக் குறிப்பிட்டுப் பேசுகையில் ஓர் உறுப்பினர் அவர் மனு அல்லவென்றும், நமக்குச் சட்டத்தை வழங்கும், மகர் என்றும் கூறவதிலே மகிழ்ச்சியடைவதாகக் கூறினார். மனு பிரமாண குலத்தைச் சேர்ந்தவரா அல்லது மகர் குலத்தைச் சேர்ந் தவரா என்பதற்கு எந்தவித ஆதாரமுமில்லை. மனு இந்தியமக்களின் ஒரு சிந்தனைப் போக்கை எதிரொலிக்கிறார் - அது மனித குலத் திற்குச் சட்டத்தை அளிக்கும் கோட்பாடாகும். இந்தக் கருத்தில் பார்த் தால் டாக்டர் அம்பேத்கரை இன்றைய காலகட்டத்தின் மனு என்று சரியாகவே அழைக்கப்பட்டிருக்கிறார். சட்டத்தை இயற்றும் பொறுப் பிலுள்ள எவரும் அதை உள்ளுணர்வின் நோக்கில் தொகுத்தளிப் பதைத் தவிர உண்மையில் வேறு எதுவும் செய்வதில்லை. இந்தக் கருத்தில் பார்த்தால் மகர் வகுப்பில் இருந்து வந்தாலும் சரி, பிராமண வகுப்பிலிருந்து வந்தாலும் சரி, அல்லது வேறு எந்த வகுப்பிலிருந்து வந்தாலும் சரி அவருக்கு அந்த உள்ளுணர்வு இருந்து, விஷயங் களை உணர்ந்துகொண்டு தமது வகுப்பினருக்கு மட்டுமின்றி மனித சமுதாயம் முழுவதுக்குமே கோட்பாடுகளைத் தொகுத்து அளித்திருப் பதால் அவரை மனு என்று அழைப்பது சரியே.

[2]**திரு. பி.ஜே. சாக்கோ** (திருவாங்கூர் கொச்சி ஐக்கிய சமஸ் தானம்) : ஓர் அரசியல் சட்டப் பரிசோதனை வெற்றிபெற, அந்த அரசியல் சாசனத்தில் அடங்கியுள்ள வழிமுறைகளை விட, அது அந்த மக்களின் குணாதிசயங்களையும் காலத்தின் நிலைமையை யும் பொருத்துள்ளது என்பதை அறிவேன். எனவே, இந்த குறைகளை கணக்கிலெடுத்துக்கொண்டு இதை நல்ல முறையில் செயல்படுத்த, நேர்மையான முயற்சியில் ஈடுபடுவது இப்போதைய நம் கடமை, இருள் விரைவில் நீங்கிவிடும் என்று நம்புவோம். விடியக்கூடிய காலையில் இந்த அரசியல் சாசனத்தைத் திருத்தம் செய்து எல்லா

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 21 நவம்பர் 1949, பக். 744.
2. மேற்படி அதே நூல், பக். 748.

சமஸ்தானங்களையும் சமமாகக் கருதும் நிலையைக் கொண்டு வருவதுடன் உறுப்பினராகவுள்ள மாநிலங்களுக்கு சில அதிகாரங்கள் அளிக்கவும் வகை செய்வோம். இந்த அரசியல் சாசனத்தின் குறைபாடுகளை உணர்ந்து அது வெற்றிகரமாக செயல்பட பணிபுரிவோம்.

[1]**சர்தார் ஹுக்கம்சிங்** (கிழக்குப் பஞ்சாப் : சீக்கியர்) : நம்முடைய மதிப்பிற்குரிய தலைவருக்கு என் மனப்பூர்வமான, உண்மையான புகழாரத்தை அளித்துவிட்டு ஆரம்பிக்கிறேன். அவருடைய பொறுமையும், கோபத்தை அடக்கி ஆளும் தன்மையும், நியாய உணர்வும் இந்த அவை நடவடிக்கைகள் எல்லாம் சிறப்பாக நடைபெற வழிகாட்டியுள்ளன. மேலும் பலவேறு கட்டங்களை தாண்டிவர அவை பெரிதும் உதவியுள்ளன.

கடந்த பல மாதங்களில், இந்தக் கடினமான பணியில் மகிழ்ச்சியுடன் ஈடுபட்டுள்ள வரைவுக் குழுவுக்கும், முக்கியமாக அதன் தலைவருக்கும் பாராட்டுதல்களைத் தெரிவிப்பதில் என் நண்பர்களுடன் நானும் இணைந்துகொள்கிறேன். இது ஒரு இமாலயப்பணி. இப்பொழுது அந்த பணிமுடிவடைந்த நிலையில் கொஞ்சம் நிம்மதிப் பெருமூச்சு விடுவார்கள்.

[2]**திரு. எஸ். நாகப்பா** (சென்னை: பொது) : தலைவர் அவர்களே, எனக்கு முன் உரையாற்றிய பல பேச்சாளர்கள் வரைவுக் குழுவையும் அதன் தலைவரையும் பாராட்டினர். நானும் இந்தப் பாராட்டுதல்களில் இணைந்து கொள்கிறேன்.

ஷெட்யூல்டு வகுப்பினரைப் பொறுத்தவரையில் வரைவுக் குழுவின் தலைவராக டாக்டர் அம்பேத்கர் தேர்ந்தெடுக்கப்பட்ட நாளிலிருந்து அவர்களுடைய நோக்கம் நிறைவேறிவிட்டது. ஷெட்யூல்டு வகுப்பினரின் நலன்களைக் காக்கும், கர்மவீரர்களில் ஒருவராக அவர் இருந்துள்ளார். அவர் தேர்ந்தெடுக்கப்பட்டதற்குப் பிறகு,

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 21 நவம்பர் 1949, பக். 749.
2. மேற்படி அதே நூல், பக். 754.

ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்த மற்ற உறுப்பினர்கள் ஒத்துழைப்பைத் தருவதில் மிகவும் தயக்கம் காட்டினர். ஒத்துழைக்க வேண்டாம் என்ற எண்ணத்தினால் அல்ல. ஏனெனில் அவர்களது நலன்களுக்காக பாடுபடும் டாக்டர் அம்பேத்கர் அங்கு இருப்பதால், ஷெட்யூல்டு வகுப்பினரின் நலன்களுக்கான வழிவகைகளை ஏற்படுத்துவார் என்ற நம்பிக்கையினால்தான் என்று கூறவேண்டும். அவர் ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்தவராக இருந்தாலும் வாய்ப்பளிக்கப்பட்டால் அவர் எவ்வளவு உயர்வான இடத்தையும் எட்ட முடியும் என்பதை அரசியல் சாசனம் நிரூபிக்கிறது. அவருடைய திறமையாலும், சிறந்த முறையில் அரசியல் சாசனத்தை வழிநடத்திச் சென்றதன் மூலமும் இதை நிரூபித்துள்ளார். ஷெட்யூல்டு வகுப்பினர் திறமையற்றவர்கள் என்ற முத்திரை கரைந்துவிடுவதுடன் இனி அவர்கள் மீது அது சுமத்தப் பட மாட்டாது. வாய்ப்புகள் அளிக்கப்பட்டால், மற்றவர்களைவிட அவர்கள் சிறப்பாகச் செயலாற்ற முடியும் என்பதை நிரூபிப்பார்கள். இந்தப்பெரும் பங்கை ஆற்றிய அவருக்கு ஷெட்யூல்டு வகுப்பினர்களின் சார்பாக என் பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஷெட்யூல்டு வகுப்பினரின் பலத்தின் அடிப்படையில் வரைவுக் குழுவின் தலைவராக அவர் நியமிக்கப்படவில்லை. பெரும்பான்மைக் கட்சியின் பரந்த மனப்பான்மையே அதற்குக் காரணம். அதற்காக அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

சாமான்ய மக்களின் வாழ்க்கை மேம்பாட்டுக்கான, நன்மைக்கான அரசியல் சாசனம் என்று இதைக் கூறலாம். இது ஒரு சாதாரண மனிதனின், அரசியல் சாசனம் ஆகும். முதலாளிகள், முதலீட்டாளர்கள் மற்றும் நிலப்பிரபுக்களின் உரிமைகளை விட சாதாரண மக்களின் உரிமைகளுக்கு இது உத்தரவாதம் அளிக்கிறது. இந்த நாட்டின் சாமானிய மக்களின் வாழ்க்கை மேம்பாட்டுக்கு இது பேருதவிபுரியும். ஏனெனில், சமூகத்தில் டாக்டர் அம்பேத்கர் உயர்ந்த நிலையிலிருந்தாலும், சாமானிய மக்களினிடையிலிருந்து வந்தவர் அவர். சாதாரண மக்களின் நலன்களை அவர் மறந்துவிடவில்லை. அவர்களது வாழ்க்கை மேம்பாட்டிற்காக முடிந்த அளவு பாடுபட முன்வந்துள்ளார். ஷெட்யூல்டு வகுப்பினர்களின் மேம்பாட்டிற்காக 14லிருந்து 17 வரை உள்ள விதிகள் உதவுகின்றன. ஒவ்வொருவரும்

சட்டத்தின் முன் சமம் என்பதை 14 ஆம் விதி உறுதி அளிக்கிறது. இது மிகவும் முக்கியமான ஒன்று.

**திரு. அவைத் தலைவர் :** ........

[1]**திரு. ஐஸ்பட் ராய் கபூர்** (ஐக்கிய மாகாணம்: பொது) : டாக்டர் அம்பேத்கர் மற்றும் அவருடன் பணியாற்றுபவர்களுக்கு எல்லாப் பேச்சாளர்களும் அளித்த புகழாரம் முற்றிலும் நியாயமானதே. ஆரம்பத்தில் டாக்டர் அம்பேத்கர் மீது தவறான எண்ணம் கொண்டிருந்தேன். ஷெட்யூல்டு வகுப்பினர்களுக்காக தனித் தொகுதி வழங்குவதை எதிர்த்து மகாத்மா காந்தி உண்ணாவிரதம் இருந்தபோது, இந்தப் பிரச்சினை குறித்து மகாத்மா காந்தியுடன் விவாதிக்க டாக்டர் அம்பேத்கர் அழைக்கப்பட்டார். ஆனால் அவர் தமக்குச் சில அலுவல்களைக் கவனிக்க வேண்டியிருப்பதால் ஒன்றிரண்டு நாட்கள் தமக்கு நேரம் இல்லை என்று கூறிவிட்டதாக பத்திரிகையில் படித்துள்ளேன். பல ஆண்டுகளுக்கு முன்பு நடந்த இந்த நிகழ்ச்சி எனக்கு மன வருத்தத்தை அளித்தது. என்னை வேதனைப்படுத்தியது. இது எவ்வளவு தூரம் உண்மை என்பது எனக்குத் தெரியாது. எது எப்படி இருப்பினும், இந்த மூன்று ஆண்டுகளில் அவர் ஆற்றியுள்ள பெரும் பணி, அந்த குறிப்பிட்ட பாவத்தை அல்லது வேறு ஏதாவது பாவம் புரிந்திருந்தாலும் அவற்றை நீக்கிவிட்டது. அவர் ஆற்றியுள்ள பயனுள்ள பணியால் தேசப்பற்று மிக்க நடவடிக்கைகளால் அவர் மீது எனக்கு அன்பும் மதிப்பும் வளர்ந்துள்ளன. அவர் மீது நான் கொண்டிருந்த எல்லா ஐயப்பாடுகளும் பயமும் இந்த சபையில் அவர் ஆற்றிய முதல் உரை போக்கிவிட்டது. இந்நாட்டின் மிகப் பெரும் தேசபக்தர்களில் அவரும் ஒருவர் என்று கருதுகிறேன். நாம் எடுத்துக்கொண்ட விஷயங்களில் அவர் ஓர் ஆக்கபூர்வமான அணுகுமுறையைக் கையாண்டதைக் கண்டேன். பல்வேறு சந்தர்ப்பங்களில், விவாதங்களில் முட்டுக்கட்டைகள் தோன்றியபோது அவர் முன்வைத்த யோசனைகளினால் அவை நீங்கின. ஒரே ஒரு சந்தர்ப்பத்தைத் தவிர எப்பொழுதும் நிலைமைக்கேற்ப அவர் சாதுர்யமாக நடந்துகொண்டார்.

---

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 21 நவம்பர் 1949, பக். 758.

ஆனால் துரதிர்ஷ்டவசமாக ஒரு சந்தர்ப்பத்தில், ஷெட்யூல்டு வகுப்பினர்களுக்கான இட ஒதுக்கீட்டை விட்டுக் கொடுக்க அவர் மறுத்து விட்டார். எல்லாச் சிறுபான்மையினர்களும் இட ஒதுக்கீட்டு உரிமையை விட்டுக் கொடுக்க, டாக்டர் அம்பேத்கர் மட்டும் அதை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டார். அவர் அதை ஏற்றுக்கொண்டிருக்கலாம். அப்படி நடந்திருந்தால் அவர் எல்லா நேரங்களிலும் சாதுர்யமாக நடந்துகொண்டார் என்று கூறக்கூடிய நிலையில் இன்று நான் இருந்திருப்பேன். ஆனால் துரதிர்ஷ்டவசமாக இன்று என்னால் அப்படிக் கூற முடியவில்லை. அது எப்படியிருந்தாலும், அவர் ஆற்றிய மாபெரும் பணியை நன்றி உணர்வுடன் அங்கீகரிக்க வேண்டும்.

[1]**பேகம் அய்ஸாஸ் ரசூல்** *(ஐக்கிய மாகாணங்கள்: முஸ்லீம்) :* தலைவர் அவர்களே, இந்திய மக்களின் நம்பிக்கைகளையும், ஆசைகளையும் உண்மையாக்கியுள்ள இந்த அரசியல் சாசனத்தை சுதந்திர இந்தியாவுக்கான இந்த அரசியல் சாசனத்தை, அரசியல் நிர்ணய சபை தயாரித்து மகத்தான சாதனையை முடித்துள்ள இத்தருணம், மிகவும் புனிதமான, மங்களகரமான தருணமாகும். சொல்லாக்கத்தின் அடிப்படையில் அல்லது அதிலுள்ள விதிகளின் அடிப்படையில் அரசியல் சாசனம் ஒன்றை பரிசீலித்தால், உலகிலுள்ள மற்ற அரசியல் சாசனங்களுக்கிடையே நமது அரசியல் சாசனத்துக்கு நிச்சயமாக ஒரு மகத்தான இடம் உள்ளது. அதைப் பற்றி பெருமை கொள்வது முற்றிலும் நியாயமானதே என்று நான் எண்ணுகிறேன். டாக்டர் அம்பேத்கர் அவர்களையும் அவரது வரைவுக்குழு உறுப்பினர்களையும் இந்த மகத்தான பணிக்கு பாராட்ட ஆசைப்படுகிறேன். சிறந்த முறையிலும் இந்த சபையின் நடவடிக்கைகள் நடைபெற நீங்கள் ஆற்றிய பணிக்கு, தலைவர் அவர்களே, என் நன்றி உரித்தாகுக. அரசியல் நிர்ணய சபையின் செயல்துறை பணியாளர்களும், தங்களுடைய கடினமான பணியினாலும் இடைவிடாத உழைப்பினாலும் நம் நன்றிக்கு உரியவர்கள் ஆகிறார்கள். ஐயா, இந்தியா, முற்றிலும் ஒரு மதச்சார்பற்ற நாடு என்ற உண்மையே இந்த அரசியல் சாசனத்தின் மிக முக்கியமான அம்சம் ஆகும். மதச் சார்பற்ற தன்மைக்கான உத்தரவாதத்தில்

---

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 21 நவம்பர் 1949, பக். 774.

தான் இந்த அரசியல் சாசனத்தின் புனிதத்தன்மை அடங்கியுள்ளது. இதுகுறித்து நாம் பெருமைப்படுகிறோம்.

இந்த மதச்சார்பற்ற தன்மை கறைபடாது, என்றென்றைக்கும் பாதுகாக்கப்படும் என்பதில் எனக்கு முழு நம்பிக்கை இருக்கிறது. ஏனென்றால் இதன் அடிப்படையில்தான் இந்திய மக்களின் முழு ஒற்றுமையும் அடங்கியிருக்கிறது. அந்த ஒற்றுமையை இழந்தால் மக்களின் முன்னேற்றத்திற்கான நம்பிக்கை தவிடுபொடியாகிவிடும்.

★ ★ ★

[1]**பண்டித ஹிருதய்நாத் குன்ஸ்ரூ :** இது சம்பந்தமாக வரைவுக் குழுவுக்கு, தன் பணியைத் திறமையாகவும் சிறப்பாகவும் நிறைவேற்றியதற்கு நியாயமான முறையில் நாம் பாராட்டுதலைத் தெரிவிக்க வேண்டும். தனிப்பட்ட முறையிலும், இணைந்தும் அதன் உறுப்பினர்கள் பணிபுரிய வேண்டியிருந்தது. அவர்கள் அளித்துள்ள எல்லா சிபாரிசுகளும், அவையின் எல்லாப் பகுதியினரும் ஆதரிக்கும் தன்மையுடன் இருக்காவிடினும், சுதந்திரத்தின் எல்லையை விரிவாக்கும் லட்சியத்தில், அவர்களுக்கு அளிக்கப்பட்டுள்ள எல்லைக்குள் தங்கள் கடமையை ஆற்றியமைக்கும், அவர்கள் கையாண்ட அணுகுமுறைக்கும் நாம் பாராட்டுதலைத் தெரிவிக்க வேண்டும்.

★ ★ ★

[2]**திரு. சியாமனந்தன் சகாயா** (பீகார்: பொது) : நான் முன்பு கூறியபடி இது ஓர் ஒப்பற்ற தருணம். பல்வேறு வகைகளில் இது ஈடுஇணையற்றது. நமது கடந்த காலத்தை சித்தரிக்கும் வரலாற்றுக் குறிப்பில் இது ஒப்பற்றது. நம் வரலாற்றை நாம் திரும்பிப் பார்த்தால் திறமைசாலிகளான மன்னர்களின் கீழ் நாட்டில் பாலும் தேனும் ஓடினாலும், இன்றைக்கு நிறுவ நினைக்கும் ராமராஜ்யம் அன்று ஆட்சி செலுத்தினாலும் அவையெல்லாம் தரும சிந்தையுள்ள ஒரு

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 21 நவம்பர் 1949, பக். 782.
2. மேற்படி அதே நூல், பக். 787.

மன்னரின் ஆட்சியாகவே இருந்தது. மக்கள் பிரதிநிதிகள் அளித்த சட்ட உரிமையினால் இது நடைபெறவில்லை. எனவேதான், நீங்கள் நமது பண்டைய காலத்தை தற்காலத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தால், இது ஒரு மகத்தான தருணம் என்றுதான் கூறவேண்டும். எதிர்காலத் தில்கூட இதற்கு இணையாக எதுவும் இருக்க முடியாது. இந்த அரசியல் சாசனம் திருத்தங்களுக்கு உள்ளாகலாம். எதிர்காலத்தில் இதைவிடச் சிறப்பான அம்சங்கள் சேர்க்கப்படலாம். ஆனால் இந்த அரசியல் சாசனம் உரிமை கொண்டாடும் தனித்தன்மை வேறு எதற்கும் கிடைக்காது.

... இறுதியாக, வேறு ஒரு வகையிலும் இந்த அரசியல் சாசனம் ஒப்பற்றது. எதிரிகளிடம் நல்லெண்ணம் காட்டுவதன் மூலம் மிகப்பெரும் விமர்சகர்களைக்கூட வெற்றிகொண்டு தம்பக்கம் சேர்க்க முடியும் என்ற மகாத்மா காந்தியின் வழி மீண்டும் நிரூபிக்கப்பட்டு விட்டது. இந்த உயர்ந்த லட்சியம் செயல் வடிவம் பெற்றுள்ளதை நடைமுறை எடுத்துக்காட்டின் மூலம் காண்கிறோம். சுதந்திரம் அடைந்ததற்கான புகழ் மகாத்மா காந்திக்குச் சேரும். ஆனால் அந்த சுதந்திரத்தை ஒழுங்குபடுத்தி தொகுத்தளித்த பெருமை மகாத்மா காந்தியின் மிகப் பெரும் விமர்சகரான நமது அரசியல் சாசனத் தின் சிற்பியான டாக்டர் அம்பேத்கருக்கே உரித்தாகும். இந்தச் சட்ட மன்றம் மட்டுமின்றி, இந்த நாடே டாக்டர் அம்பேத்கருக்கு நன்றிக் கடன் பட்டுள்ளது. இந்நாட்டின் தேவைக்குப் பொருத்தமான வற்றைப் பெற உலகின் மூலை முடுக்குகளிலிருந்தெல்லாம் மிகச் சிறந்தனவற்றைப் பெற அவரும், அவரது குழுவில் பணியாற்றிய அவருடைய நண்பர்களும், மிகக் கடுமையாக உழைத்தனர். இந்த அரசியல் சாசன வரைவை கைதேர்ந்த முறையில், அவர் தயாரித்த விதமும் அதை அவர் நாடாளுமன்றத்தில் கையாண்ட விதமும் நம்மால் மட்டுமின்றி எதிர்கால சந்ததிகளாலும் நன்றிக்கடனுடன் நினைவு கூரப்படும். இந்த அரசியல் சாசனத்தில் பல்வேறு குறைகள் சுட்டிக்காட்டப்பட்டன. இந்த அரசியல் சாசனத்தை உருவாக்கிய வர்கள் குறைபாடு ஏதுமற்ற அரசியல் சாசனத்தை அளித்துள்ளதாக உரிமை கொண்டாடவில்லை என்று நினைக்கிறேன். ஆனால் தற் போதையச் சூழ்நிலையில் அவ்வளவு தூரம், குறைபாடற்ற அரசியல்

சாசனத்தை அளிப்பதற்கு, உண்மையான உளப்பூர்வமான முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளதை மறுக்க முடியாது.

★ ★ ★

[1]**திருமதி ஹன்சா மேத்தா** (பம்பாய் : பொது): ஓர் அரசியல் சாசனத்தின் சிறந்த தன்மை அல்லது மோசமான தன்மை அது செயல்படும் விதத்தைப் பொருத்துள்ளது. அது மக்களின் நலனுக்காக செயல்படுமானால் ஒரு சிறந்த அரசியல் சாசனம் ஆகும். வேறுவித மாகச் செயல்படின், அது ஒரு மோசமான அரசியல் சாசனம் ஆகும். எதிர்கால வாக்காளர்கள் சரியான உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்தால் மக்களின் நலனுக்கா அரசியல் சாசனம் செயல் படுத்தப்படும். எனவே பொறுப்பு மக்களிடமே உள்ளது. எனினும் ஒரு விஷயத்தை நாம் கூறியாக வேண்டும். இப்பொழுது நாம் இருக்கும் நிலையில் இதை விடச் சிறந்ததாக எதையும் தயாரித்துவிட முடியாது. இந்தச் சட்ட மன்றத்தில் இருக்கும் பல்வேறு கருத்து வேறுபாடுகளுக்கிடையே, இந்த அளவுக்கு நம்மிடையே காணப்பட்ட ஒற்றுமை ஓர் அற்புதந் தான். பசுக்களுக்காக போராடும் சேத் கோவிந்த தாஸ் ஒரு கோடி யிலும், ஏழைகளுக்காக குரல் எழுப்பும் திரு. கே.டி. ஷா மற்றொரு கோடியிலும் இவர்களுக்கிடையில் பல்வேறு மாறுபட்ட கருத்தோட் டங்கள் கொண்டவர்களையும் காண்கிறோம். கடைசிப் பேச்சாளர் (திரு. ரோகிணி குமார் சௌத்திரி) இதற்கு நல்ல எடுத்துக்காட்டை அளிப்பார்.

[2]**திரு. லோகநாத் மிஸ்ரா:** இன்றைய உலகில் நம்முடைய அரசியல் சாசனம் மிகவும் பண்பட்டதொரு ஆவணம் என்பதே என் கருத்து. ஏதாவது வகையில் நம்மை நாமே புகழ்ந்துகொள்வதையோ, வரைவுக் குழுவையோ, மதிப்பிற்குரிய உறுப்பினர்களையோ அல்லது மாண்புமிகு தலைவரையோ அல்லது வேறு யாரையுமோ பாராட்ட நான் விரும்பவில்லை. காரணம் என்னவென்றால் நாம்

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 22 நவம்பர் 1949, பக். 795-96.
2. மேற்படி அதே நூல், பக். 797

நம் கடமையைத்தான் செய்திருக்கிறோம். நம்முடைய உழைப்பைப் பற்றி தீர்ப்பளிக்க வேண்டியது மக்கள்தான்.

[1]**திரு. ஜதுபான்ஸ் சகாய்** (பீகார் : பொது): இந்த அரசியல் சாசனத்தின் பல்வேறு அம்சங்களைப் பற்றி ஏராளமாகப் பேசப்பட்டு விட்டது.

... உண்மையென்னவென்றால் புதிதாக உதயமான நாடு நமது நாடு. நாம் கற்றுக் கொள்ளவேண்டியது ஜனநாயகக் கலையாகும். நூல்களின் மூலம் கற்றுக்கொள்ளப்படுவதல்ல ஜனநாயகப் பண்பு. அது வளர்க்கப்பட வேண்டும். ஒரு நாட்டின் ஒழுக்கம், ஒருமைப்பாடு, நேர்மை, ஜனநாயகக் கோட்பாடுகளில் உள்ள ஆர்வம், அவற்றை நடைமுறைப்படுத்திப் பின்பற்ற நமக்குள்ள தாகம் ஆகியவைகளைப் பொறுத்தது அது. அதுவே நமது அரசியல் சாசனத்தை செயல்படுத் தக்கூடும் அல்லது பாழ்படுத்தக்கூடும். சாசனத்தில் காணப்படும் அழகான, பளிச்சிடும், குளுமையான எழுத்துக்களைச் சார்ந்ததல்ல ஒரு நாட்டு அரசியல் சாசனத்தின் சிறப்பு. அதன் வளர்ச்சியும் முன் னேற்றமும் அந்த நாட்டின் ஒழுக்கத்தைப்பொறுத்தது எனலாம். தேசத்தின் ஒழுக்கம் என்ற நிலத்திலேதான் அரசியல் சாசன விதை கள் முளைவிட்டு வளர முடியும். அந்த நிலம் பாறைமிக்கதாக இருந்தால், வளமற்று இருந்தால் அரசியல் சாசனம் எவ்வளவு சிறப்பாக இருப்பினும், அது எவ்வளவு அழகாக சொல்லாக்கம் செய்யப்பட்டிருப்பினும் அந்த அரசியல் சாசனத்தின் மூலம் நம் முடைய லட்சியத்தை அடைய முடியாது. நம் நாட்டின் உள்ளார்ந்த அறிவு நுட்பத்தில் எனக்கு நம்பிக்கை உள்ளது. எதிர்கால சந்ததிகள் மீதும் எனக்கு நம்பிக்கை உள்ளது. நாம் செய்து முடித்தவைகளுக் காக நம்பிக்கை இழக்க வேண்டியதில்லை. அரசியல் சாசனத்தில் அளிக்கப்படும் உத்திரவாதங்கள் மூலம் அல்லது விடுபட்டவை களை நிரப்புவதன் மூலம் நம்முடைய லட்சியத்தை அடைந்துவிட முடியாது.

அரசியல் சாசனத்தை நடைமுறைப்படுத்துபவர்களைப் பொறுத்தது அது. சகிப்புத் தன்மையை நாம் வளர்த்துக் கொள்வதைப்

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 22 நவம்பர் 1949, பக். 800.

பொறுத்திருக்கிறதே தவிர அரசியல் அமைப்புச் சட்டத்தின் வாசகங்களைப் பொருத்ததல்ல அது. கீழ்த்தட்டிலுள்ள மக்கள் மீதும் சிறுபான்மையினரிடமும் நாம் வெளிப்படுத்தும் அன்பைப் பொறுத்தும் அது இருக்கிறது. ஒவ்வொரு இதயத்திலிருந்தும், இல்லத்திலிருந்தும் தீண்டாமைப் பேய் விரட்டப்பட்டுள்ளது என்று அரசியல் சாசனத்தில் பிரகடனப்படுத்தப்படலாம். அது நம்மை எங்கும் இட்டுச் செல்வதில்லை. இல்லாதவர்கள் என்றழைக்கப்படுபவர்களிடம் உங்களுக்கு அன்பும் அனுதாபமும் இருக்க வேண்டும். நம்முடைய ஒழுக்கத்தையும், நாடு என்ற நிலையில் நமக்குள்ள ஆர்வத்தையும் பொறுத்தது அது.

[1]**திரு. கோபால் நாராயண்** (ஐக்கிய மாகாணங்கள் : பொது) : தலைவர் அவர்களே, கடந்த மூன்று ஆண்டுகளில் அரசியல் சாசனம் தயாரிக்கப்பட்டு வந்தபோது மௌன பார்வையாளராக அமைதியாக இருந்தேன். இரு தடவை மட்டும் இந்த நிலையை மாற்றினேன். இந்த இறுதியான மூன்றாவது வாசிப்பின் போது என்னுடைய கருத்துகளை, திறந்த மனத்துடன் தெளிவாக, தைரியமாக பதிவு செய்ய விரும்புகிறேன்.

எதுவுமே விடுபட்டுப் போகாத இந்தப் பெரிய அளவிலான அரசியல் சாசனத்தைத் தயாரித்ததற்காக வரைவுக் குழுத் தலைவருக்கும் அதன் உறுப்பினர்களுக்கும் என் பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறேன். விலைவாசிக் கட்டுப்பாடு கூட அதில் சேர்க்கப்பட்டுள்ளது. அவர்களுக்கு நேரம் இருந்திருந்தால் வாழ்க்கைநெறி ஒன்றை இந்த அரசியல் அமைப்புச் சட்டத்தில் பிரகடனப்படுத்தியிருப்பார்கள். டாக்டர் அம்பேத்கரைப்பற்றி மேலும் ஓரிரு வார்த்தைகள். அவரை தெளிவான நிர்மலமான தன்மைகளின் உருவம் எனக் கூறலாம். அவர் தமக்கு நற்பெயரைச் சம்பாதித்துக் கொண்டு விட்டார்.

★ ★ ★

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 22 நவம்பர் 1949, பக். 803-04.

[1]**திரு. அஜித் பிரசாத் ஜெயின்** (ஐக்கிய மாகாணங்கள்: பொது) : தலைவர் அவர்களே, வாழ்க்கையில் ஒரே ஒரு தடவை தனக்கு ஒரு அரசியல் சாசனத்தை அளிக்க நாடு தீர்மானிக்கிறது. இந்த அரசியல் சாசனத்தை உருவாக்குவதில் பங்கு கொண்டு நாம் பெருமை கொள்ள நியாயம் உள்ளது. இந்திய வரலாற்றைப் பார்த்தால் சிறப்பான , ஒளி மிகுந்த காலங்களைக் காணலாம். பெரும் பேரரசர்களின் ஆட்சியை, கருணை உள்ளங்கொண்ட மன்னர்கள், நல்ல மனம் படைத்த மக்க ளுக்காக,மக்களால் உருவாக்கப்பட்ட அரசியல் சாசனத்தைக் காண முடியாது. மேலே செல்லுமுன், நாள் தோறும் இடைவிடாது உழைத்தக் கடினமாகப் பணிபுரிந்த வரைவுக் குழுவுக்கும், டாக்டர் அம்பேத்கருக்கும் நம் நன்றியைத் தெரிவித்துக் கொள்ள வேண்டும்.

[2]**திரு. எஸ்.வி. கிருஷ்ணமூர்த்தி ராவ்** (மைசூர் சமஸ்தானம்) உங்கள் திறமை மிக்க வழிகாட்டுதலுடன் இந்த அரசியல் சாசனத்தை உருவாக்குவதில் இணைந்து பணியாற்றும் நல் வாய்ப்பினை பெற்றதை பெரும் சலுகையாகக் கருதுகிறேன். தங்களிடம் அளித்த பணியை அவர்கள் செம்மையாகச் செய்து முடித்தமைக்காக வரைவுக்குழு வின் உறுப்பினர்களுக்கும், தலைவருக்கும் எங்களுடைய பணிவான பாராட்டுதல்களை சேர்ப்பதற்காக உங்கள் முன் நிற்கிறேன்.

இந்தப் பணியை அவர்கள் நிறைவேற்ற வேண்டிய சூழ்நிலை கள் மற்றும் கடுமையான நேர நெருக்கடியின் கீழ் வேறு எந்தக் குழுவோ அமைப்போ இதைவிடச் சிறப்பாக ஓர் அரசியல் சாசனத்தை அளித்திருக்க முடியாது.

★ ★ ★

[3]**திரு. திருமால் ராவ்:** நமது இன்றைய நிலைக்கேற்ப, ஓர் அரசியல் சாசனத்தைப் பெற்றுள்ளோம். அதைச் செயல்படுத்துபவர் களால், அதாவது சட்டமன்ற உறுப்பினர்கள், மற்றும் இந்தச் சட்ட மன்ற உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கும் அமைச்சர்கள் ஆகியோர்

---

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 22 நவம்பர் 1949, பக். 805.
2. மேற்படி அதே நூல், பக். 809.
3. மேற்படி அதே நூல், பக். 820.

களால் இது மேலும் சிறப்பாக அமையும். வரக்கூடிய ஆண்டு களில் பதவிக்கு வரும் பிரதம மந்திரிகளைப் பொறுத்துதான் இந்த அரசியல் சாசனத்தின் மூலம் பெரும் பயன்களைப் பெறமுடியும். அசோகர் காலத்து வரலாற்று நினைவுச் சின்னமான சக்கரத்தை நமது அரசின் சின்னமாக சரியான முறையில்தான் தேர்ந்தெடுத்துள் ளோம். அசோக சக்கரத்தின் தத்துவத்தைக் குறித்து கீழை இயல் வல்லுநரான ரிஸ்டேவிட் விளக்கம் அளித்துள்ளார். உண்மை மற்றும் நேர்மை எனும் பிரபஞ்சத்தின் சக்கரங்களையே அசோகச் சக்கரங்கள் குறிக்கின்றன. எந்த ஒரு நாடும் தான் சார்ந்துள்ளதாகப் பிரகடனப் படுத்தும் முக்கியமான தார்மீக கோட்பாட்டை விட்டு விலகிச் செல்லுமானால் அதற்கு எதிர்காலம் இருக்காது. ஆனால் இந்த நாடு பண்டைய மரபுக்கும் லட்சியத்திற்கும் இணங்க அசோகரின் தர்மச் சக்கரம் என்று அழைக்கப்படும் சக்கரத்தை நியாயமாகவே தேர்ந்தெடுத்துள்ளது. மகாத்மா காந்தியும் அசோகச் சக்கரத்தை வாழ்த்தியுள்ளார். இந்த தேசத்தை அவரது ஆன்மா சுற்றிக் கொண் டிருக்கையில், இந்த அசோக சக்கரச் சின்னம் நமது கொடியில் இருக்கையில், காங்கிரசின் கொள்கைகளையும், இந்த தேசத்தின் கதிப்போக்கை ஏற்றிப்போற்றி நிலைநாட்டுவது சபை உறுப்பினர் களின் மற்றும் எதிர்காலத் தலைவர்களின் கடமையாகும்.

★ ★ ★

[1]**திரு. அரிபகதூர் குருங்** (மேற்கு வங்காளம் பொது): தலைவர் அவர்களே, இந்தப் பிரம்மாண்டமான பணியை வெற்றிகரமாக நிறைவேற்றிய வரைவுக் குழுவின் தலைவருக்கு பாராட்டுத் தெரி விப்பதில் என் நண்பர்களுடன் சேர்ந்து கொள்கிறேன்...

[2]**கியானி குருமுக் சிங் முசாபிர்** (கிழக்குப் பஞ்சாப்: சீக்கியர்): இரண்டொரு வார்த்தைகள் கூறி என் உரையை முடித்துக்கொள் கிறேன். இந்த அரசியல் சாசன வரைவைத் தயாரிப்பதில் டாக்டர் அம்பேத்கர் மற்றும் வரைவுக் குழு உறுப்பினர்கள் கடுமையாக

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 23 நவம்பர் 1949, பக். 821.
2. மேற்படி அதே நூல், பக். 825.

உழைத்துள்ளனர். சாதகமற்றற சூழ்நிலைகளில், இந்தக் குறுகிய காலத்தில் சட்ட முன்வடிவைத் தயார்த்துள்ள அவர்கள் நமது பாராட்டுக்குரியவர்கள்.

[1]**திரு. ஆர்.வி. துலேகர் (ஐக்கிய மாகாணங்கள்:பொது):** தலைவர் அவர்களே, டாக்டர் அம்பேத்கர் சபை முன் வைத்துள்ள தீர்மானத்திற்கு ஆதரவளிக்க வந்துள்ளேன். இந்த மூன்றாண்டுகளில் இந்த அரசியல் சாசனம் குறித்து நீண்ட விவாதங்கள் நடைபெற்றன. இந்த அரசியல் சாசனத்தின் குறைகளை இப்பொழுது சுட்டிக்காட்டுவது அல்லது அதன் சிறந்த அம்சங்களை இப்பொழுது எடுத்துக் கூறுவது தாமதமான செயலாகும். மொத்தத்தில் இந்த அரசியல் சாசனம் மிகச் சிறப்பாக உள்ளது என்பதில் மனநிறைவு அடைந்துள்ளேன். பாலில் 75 விழுக்காட்டிற்கு மேல் தண்ணீர் உள்ளதை யாவரும் அறிவர். தண்ணீரைத் தவிர்த்து மீதம் உள்ளது நன்றாக இருந்தால் அது நமது உடலைக் காப்பாற்றி பாதுகாக்க உதவும். அது நீண்ட ஆயுளைக்கொடுக்கிறது...

இறுதியாக தலைவர் அவர்களே, உங்களுக்கும் டாக்டர் அம்பேத்கர் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். நமக்கு முன் இருந்த பணி மகத்தானது. டாக்டர் அம்பேத்கர் மாபெரும் சாதனையைப் புரிந்துள்ளார். இமாலய சாதனை என்று கூறமுடியாது. அப்படிக் கூறினால் அது சிறிய அளவையே குறிக்கும். பாண்டவர்களில் ஒருவரான பீமன் செய்த பணியைப் போன்ற பிரம்மாண்டமான பணியை அவர் சாதித்துள்ளார். அவர் தம் பெயருக்கேற்ப தம் பெருமையை நிரூபித்து விட்டார். பார்வையில், சிந்தனையில், மொழியில் தெளிவுடன் இந்தப் பணியை அவர் நிறைவேற்றியுள்ளார். இந்தக் காலகட்டத்தில் முழுவதுமே தெளிவான சிந்தனையுடனே அவர் இருந்தார். எதிர் தரப்பினர்களின் கருத்துகளைப் புரிந்து கொள்ள அவர் முயற்சி செய்தார். எப்பொழுதும் மாற்றுக் கருத்துடையவர்களுக்கு இடம் அளிக்க அவர் முன்வந்தார். தன்னுடைய கருத்துகளை தெளிவான மொழி

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 23 நவம்பர் 1949, பக். 826.

யில் விளக்கிட அவர் முயற்சி செய்தார். அவருக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

★ ★ ★

[1]**திரு. பி.பி.ஜான் ஜான் வாலா** (பீகார் பொது) தலைவர் அவர்களே, இந்த அரசியல் சாசனத்தைப் பற்றி பல்வேறு விமர் சனங்கள் எழுந்துள்ளன. 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தை பின்பற்றப்பட்டுள்ளது என்பதைத் தவிர வேறு ஒன்றும் செய்யப்படவில்லை என்பது வரைவுக்குழுவுக்கு எதிராக எழுப்பப் பட்ட குற்றச்சாட்டுகள் ஒன்றாகும். இந்தக் குற்றச்சாட்டு இரக்கமற்ற அரக்கத்தனமான குற்றச்சாட்டு என்றுதான் கூறவேண்டும். எந்த ஒரு விதியை எடுத்துக் கொள்ளும் முன்பு உலகிலுள்ள எல்லா அரசியல் சாசனங்களையும் ஒப்பிட்டுப் பார்ப்பதில் அதிகக் கவனம் எடுத்துக் கொண்டுள்ளனர் வரைவுக் குழுவினர். எல்லாத் திருத்தங் களையும் கோட்பாட்டு ரீதியிலும், நடைமுறைக்குச் சாத்தியப்படுமா என்ற அடிப்படையிலும் அதிகக் கவனத்துடன் பரிசீலித்தனர். அவர்கள் ஏதாவது கொள்கைகளை ஏற்றுக் கொள்ளவில்லை என்றால், 1935 ஆம் ஆண்டு இந்தியச் சட்டத்தில் அவை இல்லை என்பதால் அல்ல. அந்தக் கோட்பாடுகள் நியாயமானவையாகவும், அமுல்படுத்து வதற்கு உகந்தவையாக இருந்தாலும் தற்போதைய சூழ்நிலையில் அவைகளை நடைமுறைப்படுத்த முடியாது என்பதுதான் இதற்குக் காரணம்.

[2]**திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர்** (சென்னை:பொது): ஐயா, அரசியல் சாசீனத்தை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்ற மாண்பு மிகு டாக்டர் அம்பேத்கரின் தீர்மானத்தை ஆதரித்து உரை நிகழ்த்த எனக்குச் சிறிது நேரம் ஒதுக்க வேண்டுமென்று இந்த சபையைக் கேட்டுக் கொள்கிறேன். இந்த சபை நியமித்துள்ள பல்வேறு குழுக் களின் பரிந்துரைகளுக்கேற்பவும், வரைவுக் குழுவால் தயாரித்தளிக் கப்பட்ட மூல ஆவணம் மற்றும் பிறதிருத்தப்பட்ட ஆவணங்களின்

---

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 23 நவம்பர் 1949, பக். 828-29.
2. மேற்படி அதே நூல், பக். 834.

அடிப்படையிலும், அரசியல் சாசனம் அரசியல் நிர்ணய சபையால் முடிவு செய்யப்பட்டுள்ளது.இந்த அரசியல் நிர்ணய சாசனம் தன் பணியைத் துவக்கிய நோக்கங்கள் பற்றிய தீர்மானங்களையும், தீர்மானங்களின் அடிப்படையில் உருவான அரசியல் சாசனத்தின் முகப்புரையையும், இறுதியாக உருவெடுத்துள்ள இந்த அரசியல் சாசனம் பிரதிபலிக்கிறது எனலாம்.

உரையை முடிப்பதற்கு முன்பு, இந்த அரசியல் சாசனத்தை எனது நண்பர் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் வழிநடத்திச் சென்ற திறமையையும் மற்றும் சாதுர்யத்தையும் உளமாறப் பாராட்டா விட்டால் என் கடமையில் தவறியவனாவேன் வரைவுக்குழுவின் தலைவராக இருந்த அவர் ஆற்றளிய அயராத சளையாத உழைப் பையும் பாராட்டியாக வேண்டும். பிற்பகுதியில் என் நண்பர் திரு. டி.டி.கிருஷ்ணமாச்சாரி சிறந்த முறையில் உதவி செய்தார் என்பதை அறிந்தேன். அயர்வு சோர்வின்றி உழைத்து, பொறுமையாக, திறமை யாக சேவை செய்த திரு. பி.என். ராவ் அவர்களுக்கும், கூட்டுச் செயலர் திரு. முகர்ஜி மற்றும் அவரது உதவியாளர்களின் சுறுசுறுப் பான பணிக்கும், எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள் கிறேன்.

ஐயா, கடைசியாக இந்தச் சட்டமன்றத்தில் உங்கள் பணியைக் குறித்த சிறிது புகழ்ந்து பேசுவதற்கு நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும். உங்கள் வாழ்க்கை முழுவதையும் இந்த நாட்டின் சேவைக்கு அர்ப்பணித்துள்ளீர்கள். இதற்கெல்லாம் மகுடம் வைத்தது போன்றதுதான் தற்போதைய பணி. உங்களை விடச் சிறப்பாக எ வரும் இங்கு மதிக்கப்படுவதில்லை. நேசிக்கப்படுவதில்லை, இந்த அரசியல் நிர்ணய சபைக்குத் தலைவராக இருப்பதற்கு தாங்கள் தகுதி யானவர் என்பதை நிரூபித்துவிட்டீர்கள். என்னுடைய உடல்நிலை காரணமாக இருக்கையிலிருந்தே என்னைப் பேச அனுமதித்ததற்கு முக்கியமாக உங்களுக்கு என்றும் நன்றியுடையவனாயிருப்பேன், இந்தச் சபையில் ஆற்றிய பணியும்,பல்வேறு குழுக்களில் நான் ஆற்றிய சிறிதளவு பணியும் எனக்கு மிகுந்த மனநிறைவு அளிக்கிறது. (கைதட்டல்)

[1]**திரு. ஹைதர் ஹுசைன்:** இந்த அரசியல் சாசனத்தின் பல்வேறு விதிகளைக் குறைகூறுவதற்கான தருணமோ, நேரமோ இதுவல்ல. இந்த மண்டபத்துக்கு உள்ளேயும் வெளியேயும் அவை நடந்து முடிந்துவிட்டன. இந்த நாட்டின் தலைசிறந்த அறிவாளி களால் தயாரிக்கக்கூடிய மிகச் சிறந்த அரசியல் அமைப்பு சட்டம் இதுவே என்பது என் பதிலாகும். இதைவிட நாம் அதிகமாக எதிர் பார்த்தால் வெகுவிரைவில் இன்றைக்குள்ளதைவிட அதிக புத்தி கூர்மையுள்ள அறிவாளிகளை உருவாக்க வேண்டும். எந்த நாடும் பெருமைப்படத்தக்க ஓர் அரசியல் சாசனத்தை நாம் தயாரித்துள் ளோம் என்பதைச் சொல்லித்தான் ஆகவேண்டும். எந்தவித மனத் தயக்கமுமின்றி, வரையறையற்ற ஆதரவை அளிக்க நாம் உறுதி யெடுத்துக் கொள்வோம். நாம் அரசியல் விடுதலை பெற்றுவிட் டோம். இந்த நாட்டிற்கு இன்றையத் தேவை பொருளாராதார வளர்ச்சி தான். சுதந்ததிரத்திற்கான போராட்டம் அப்பொழுதுதான் அர்த்த முள்ளதாக இருக்கும். சுதந்திரத்திற்காக பாடுபட்டதைவிட இதற்கு அதிகமான, கடினமான உழைப்பும், அயராதப் பணியும், அள விடற்கரிய தியாகமும் தேவைப்படுகின்றன.

ஒரு பொருளை உருவாக்குவதைவிட அதை நாசம் செய்வது அவ்வளவு கடினமான பணியல்ல. வெளிநாட்டு ஆதிக்கம் முடிவுற் றதால், ஆக்கப்பூர்வமான நடவடிக்கைகளுக்கு அதிக வாய்ப்புகளை நாம் பெற்றுள்ளோம். நமது கடந்தகாலத் தகுதிக்கு ஏற்பவும், எதிர்காலத்தைக் குறித்துப் பெருமை கொள்ளும் விதத்திலும், இந்தியாவை உருவாக்க முயற்சி செய்வோம்.

[2]**திரு. பி.எம்.குப்தே:** அரசியல் சாசனத்தின் நிறைகுறைகளைத் தீர்மானிப்பது அதன் வாசகங்களோ அல்லது அந்தக் காகிதங்களில் காணப்படும் சொற்களோ அல்ல. அரசியல் சாசனமோ அல்லது அதை உருவாக்கியவர்களோ முக்கியமல்ல, அதை செயல்படுத்து பவர்களும், எந்த லட்சசியத்துடன் நடைமுறைப் படுத்துகிறார்களோ அதுவே முக்கியமாகும். எந்த அரசியல் சாசனமும் அதன் வடி

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 23 நவம்பர் 1949, பக். 842.
2. மேற்படி அதே நூல், பக். 845.

வமைப்பில் சிறப்பாகத்தான் இருக்கும். ஆனால் அது செயல்படுத்தும் விதத்தைப் பொறுத்துத்தான் அதன் வெற்றி அமையும். ஆரம்பத்தில் சில இடர்பாடுகள் மற்றும் சில சிறு குறைபாடுகள் ஏற்படினும் பொதுவாக இறுதியில் சாதாரண மனிதனின் பொது அறிவே வெற்றி பெறும் என நான் நம்புகிறேன். நாம் அந்தக்கருவியைச் செம்மைப் படுத்தினால் மட்டும் போதும், மற்றவர்கள் அதைச் செயல்படுத்து வார்கள். என்னைப் பொறுத்தவரையில் நம் திறமைக்கேற்ப, நமது பார்வைக்கு தகுந்த முறையில், நாம் அதைச் சிறப்பாக உருவாக்கி விட்டோம் என்று நிச்சயமாகக் கூறமுடியும். அது நன்கு செயல் படக்கூடிய, வளைந்து கொடுக்கக் கூடியதால், அது பாதுகாப்பிற்கும், உறுதிப்பாட்டிற்கும், ஸ்திரத்தன்மைக்கும் உத்தரவாதம் அளிக்கிறது. ஆழ்ந்து நோக்கினால், புதிதாக உதயமான நாட்டின் பாதுகாப்பிற்கு வரைவுக்குழு மிகுந்த முக்கியத்துவம் கொடுத்திருப்பதைக காண லாம். முன்னேற்றத்திற்கான பாதைக்கு தடையேதுமின்றி, பாதுகாப் பிற்கும் ஸ்திரத்தன்மைக்கும் அது உத்தரவாதம் அளிக்கிறது. தனிப் பட்ட மனிதர்களின் வளர்ச்சியை நசுக்கிவிடாமல், அது ஒரு பொதுநல வழியை வளர்க்கிறது. பல தலைமுறைகளாக சாதாரண மக்கள் அனுபவித்துவந்த இன்னல்களிலிருந்து விடுதலை கிடைக்க இந்த அரசியல் சாசனம் உதவுமா என்பதே அதன் உண்மையான சோதனை என்பது என் கருத்து. இந்த அரசியல் சாசனம் அவர்களுக்குக் கொஞ்சம் ஆறுதலைக் கொடுக்குமானால், இதை உருவாக்குவதில் நான் பங்கு கொண்டதற்கு நிச்சயமாகப் பெருமையடைவேன்.

[1]**திரு.பல்வந்த் சின்ஹா மேத்தா:** நாம் தயாரித்துள்ள அரசியல் சாசனம் விரிவானது மட்டுமின்றி மிகச் சிறந்தது என்பதே உண்மை. நமக்கு நாம் எவ்வளவு சிறப்பான அரசியல் சாசனத்தைத் தயாரித்துக் கொடுத்துள்ளோம் என்பதை வெளிநாட்டுக்காரர்கள் கண்டால் ஆச்சரியத்தில் மூழ்கிவிடுவார்கள் என்று நிச்சயமாக நம்புகிறேன். இந்த மகத்தான மன்றத்தின் உறுப்பினர்கள் யாவரும், வரைவுக் குழுவின் உறுப்பினர்கள் எல்லோரும், முக்கியமாக டாக்டர் அம்பேத்கர், திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி,திரு. அல்லாடி கிருஷ்ண

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 23 நவம்பர் 1949, பக். 851.

சாமி அய்யர் மற்றும் பிறரும் இந்த அரசியல் சாசனத்துக்குச் சரியான உருவம் கொடுக்க மிகக் கடுமையாக உழைத்துள்ளனர். இந்த கண்ணியம் மிக்க மனிதர்களுக்கு எவ்வளவு புகழாரம் சூட்டினாலும் தகும். பண்டிட் ஜவகர்லால் நேரு, சர்தார் பட்டேல் மற்றும் பிற காங்கிரஸ் தலைவர்கள், மறைந்த தியாகிகள் ஆகியவர்களுக்கு நமது மரியாதையைத் தெரிவித்துக் கொள்ள வேண்டும்.....

★ ★ ★

[1]**சர்தார் சோச்சத் சிங்:** ...நமது டாக்டர் ராஜேந்திர பிரசாத்தின் உயர் மரபையும், ஜவகர்லால் நேருவின் உலகப் பார்வையையும், சர்தார் வல்லபாய் பட்டேலின் வலிமையையும் சரியான முடிவு செய்யும் திறமையையும், டாக்டர் பட்டாபி சீதாராமையாவின் ஆழ்ந்த பண்பையும், புத்தி கூர்மையையும், டாக்டர் அம்பேத்கரின் கல்வி அறிவையும், அயர்வு, சோர்வற்ற உழைப்பையும், எல்லா வற்றையும்விட நமது தேசத் தந்தை நம் மரியாதைக்குரிய மகாத்மா காந்தியின் அருளாசியையும் தெய்வீக அருளையும் நமது அரசியல் சாசனம் கொண்டுள்ளது. நம் நாட்டின் கோடிக்கணக்கான மக்களின் மகத்தான தியாகம் உலகம் முழுவதுக்குமே அமைதி, செழிப்பு மற்றும் மகிழ்ச்சியைக் கொண்டுவரும் என்பது என் நம்பிக்கையும் பிரார்த்தனையுமாகும்.

[2]**திரு. டி.ஜெ.எம். வில்சன்** (சென்னை: பொது): தலைவர் அவர்களே, இந்த அரசியல் சாசனத்தைத் தயாரித்ததற்காக ராஷ்டிர பதியையும், மற்றும் வரைவுக் குழுவின் உறுப்பினர்கள் மற்றும் தலைவருக்கும் அளிக்கப்படும் பாராட்டுரையில் நானும் பங்கு கொள்கிறேன்.

[3]...அரசியல் அமைப்புச் சட்டத்திற்கு எதிரான குற்றச்சாட்டுகளுக்கு இப்பொழுது வருகிறேன். சமூக மற்றும் பொருளாதார

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 23 நவம்பர் 1949, பக். 855-56.
2. மேற்படி அதே நூல், பக். 856
3. அதே நூல், பக். 858.

நீதிக்கு அதில் வழிவகை செய்யப்படவில்லை என்றும், சாதாரண மக்களுக்கு அதில் ஒன்றுமில்லை என்று குறை கூறப்படுகிறது. அரசியல் சாசனத்தின் நோக்கம் பற்றிய தவறான கருத்தின் அடிப் படையில் எடுக்கப்பட்ட தவறான முடிவு இது எனக் கூறுகிறேன். அரசியல் சாசனத்தின் வீச்சு ஓர் எல்லைக்குள்ளேயே உள்ளது. ஓர் அரசு இயந்திரத்திற்கு வகை செய்வதே அதன் முக்கியச் செயல் பாடாகும். ஒரு அரசு இயந்திரத்தை, அதன் தன்மை எப்படிப்பட்ட தாகிலும் இது நமக்கு அளித்துள்ளது. சில அத்தியாயங்களில் குறிப் பிடப்பட்டுள்ள சலுகைகள் மற்றும் உரிமைகள், நாம் ஏற்கனவே அடைந்துள்ளவைகள்தான். ஏற்கனவே நாம் பெற்றுள்ள உரிமை களை மட்டும் அரசியல் சாசனம் கொண்டிருப்பதுடன் நமக்கு அதை அனுபவிக்க அனுமதியுமளித்திருக்கிறது. இந்த அடிப்படையான கருத்தையே நான் கோடிட்டுக் காட்ட விரும்புகிறேன். இல்லை யெனில் நாம் இதுவரை அடைத்திராத சில உரிமைகள் அரசியல் சாசனத்தில் இருக்குமானால் நம் நாட்டைப் பற்றி மொத்தத்தில் அது ஒரு திரித்துக் கூறப்பட்ட நேர்மையற்ற போலித்தனமான சித்திர மாக இருப்பதுடன்,அந்த அரசியல் சாசனம் செயல்படுத்த முடியாத ஒன்றாக இருக்கும். எனவே அரசியல் சாசனம் ஒரு வரையறைக்குட் பட்ட நோக்கத்தைக் கொண்டுள்ளது, சொத்துரிமைக்குப் பாதுகாப்பு போன்ற சில மோசமான கூறுகளை அரசியல் சாசனம் உள்ளடக்கி யிருந்தாலும், திரு. சந்தானம் குறிப்பிட்டுள்ளது போல், சோஷலிச சமூதாயத்தை அடைவதை அது தடுத்துவிட முடியாது.

★ ★ ★

[1]**திரு. தாரநிதார் பாசு மாதாரி (அசாம் : பொது):** தலைவர் அவர்களே, இந்த அரசியல் சாசனத்தை உருவாக்குவதில் டாக்டர் அம்பேத்கர் மற்றும் வரைவுக்குழு உறுப்பினர்களுக்கு அவர்களது மிகப்பெறும் வெற்றிக்கு அளிக்கப்பட்ட பாராட்டுகளில் என் பங்கை யும் சேர்க்காவிடின், இந்த அரசியல் நிர்ணய சபையினிலிருந்து என் மாகாணமான அசாமுக்கு நான் திரும்பிச் செல்ல முடியாது. ஒவ் வொருவரும் ஏதாவது குறை அல்லது விமர்சனத்தைத் தெரிவித்துள்

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 23 நவம்பர் 1949, பக். 867.

ளனர் என்று நான் சொன்னால் அது சரி என்றே நினைக்கிறேன். எல்லாவிதக் கண்ணோட்டத்திலும், எல்லாப் பகுதியினரையும் இந்த அரசியல் சாசனம் மனநிறைவு செய்யமுடியாது. அகில இந்தியக் கண்ணோட்டத்தில், எல்லா விஷயங்களையும் இணைத்துப் பார்க்கும் போது அரசியல் சாசனம் ஏமாற்றமளிப்பதாகக் கூறமுடியாது. உண்மையில் பிரிவினைக்குப் பிறகு நிலவும் கஷ்டமான சூழ்நிலையில் இதை விடச் சிறப்பான அரசியல் சாசனத்தைத் தயாரித்திருக்க முடியாது. அரசியல் சாசனத்தில் அச்சிடப்பட்டுள்ள அழகிய வாசகங்கள், விதிகள், அட்டவணையில் அதன் முக்கியத்துவம் இருக்கவில்லை. அரசியல் சாசனம் எவ்வளவு ஆர்வத்துடன் நிறைவேற்றப் படுகிறதோ அதைப் பொறுத்துள்ளது அதன் சிறப்பு. எல்லாப் பகுதியினரும், தேர்மையுடனும் சுயநலமின்றியும் ஒத்துழைத்தால் இந்திய நாடு சரியான பாதையில் முன்னேறும் என்று நிச்சயமாகக் கூறலாம்.

[1]**திரு. அரிபகதூர் குருங் :** தலைவர் அவர்களே, இந்த மகத்தான சாதனையை வெற்றிகரமாக முடித்துள்ள, வரைவுக் குழுவின் தலைவருக்கும், உறுப்பினர்களுக்கும் நன்றி கூறுவதில் என் நண்பர்களுடன் நானும் இணைந்து கொள்கிறேன். சில கருத்துகளை மட்டும் நானும் கூற நினைக்கிறேன். முதலாவதாக, சோஷலிசத்தை நிர்மாணிப்பதற்கு வழி வகை செய்யவில்லை என்ற குற்றச்சாட்டும் அதே போன்று இது ஏதேச்சாதிகாரத்துக்கு வழிவகுக்கும் என்ற விமர்சனமும் அர்த்தமற்றவை. எவ்வகையிலான அரசு வேண்டுமென்பதை முடிவு செய்யும் உரிமையை மக்களுக்கு அளிப்பதே ஜனநாயகத்தின் உண்மையான சோதனையாகும். ஏதேச்சாதிகாரம், அல்லது சர்வாதிகாரக் கம்யூனிசம் உருவாகிவிடும் என்ற பிரச்சினை, அரசியல் சாசனத்தை மக்கள் செயல்படுத்தும் விதத்தைப் பொறுத்து இருக்கிறது. மக்களின் விருப்பத்தைப் பொறுத்து அரசியல் சாசனம் தொடர்ச்சியான மாற்றங்களுக்கு உட்படும். ஏற்கெனவே அரசியல் சாசனத்தில் இதற்கான வழிவகைகள் செய்யப்பட்டுள்ளன. எதிர்காலத் தலைமுறையினருக்கு ஊக்கமளிக்கும் புனிதத் தன்மை கொண்ட

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 23 நவம்பர் 1949, பக். 868

ஒன்று அது என்று தனிப்பட்ட முறையில் நான் கருதுகிறேன். உயி ரோட்டமுள்ள நம்பிக்கையாலும் தத்துவத்தாலும் அது உருவாக்கப் பட்டுள்ளது. எனவே இந்தப் புனித நூலை மறந்துவிடக்கூடாது.

★ ★ ★

[1]**திரு. மாணிக்ய லால் வர்மா** (ஐக்கிய மாகாணம்): தலைவர் அவர்களே, மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் மற்றும் இந்த சபை யில் உள்ள உறுப்பினர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்...

[2]**திருமதி பூர்ணிமா பானர்ஜி** (ஐக்கிய மாகாணங்கள்: பொது) : `அரசியல் சாசனத்தை உருவாக்கும் பல்வேறு கட்டங்களில் மிக முக்கியமாக பணியாற்றிய உங்களுக்கும் மற்ற எல்லோருக்கும், வரைவுக் குழுவின் உறுப்பினர்களுக்கும் எனது நண்பர்கள் அளிக்கும் பாராட்டுரையில், ஏற்கெனவே கூறப்பட்டதை திரும்பச் சொல்லும் குறைபாடு இருந்தாலும், நானும் கலந்துகொள்கிறேன். உங்களைச் சிறப்பாக வேறுபடுத்திப் பார்க்கிறேன் என்ற குற்றச்சாட்டுக்கு ஆளாகாமல், இந்த அவையின் பின் பெஞ்சுக்காரர்களின் சார்பாக உங்களுக்கு என் விசேட நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஏனெனில், இந்த அரசியல் அமைப்புச் சட்டம் உருவான பல்வேறு கட்டங்களில் அரசியல் அமைப்புச் சட்டத்தின் சில துணைவிதி களைப் பற்றி சரியாகவோ, தவறாகவோ சில ஐயப்பாடுகளை எழுப்பியபோது, எங்கள் சார்பாக வரைவுக்குழுவின் மீது உங்கள் செல்வாக்கைப் பயன்படுத்தி எங்கள் ஐயப்பாடுகளைக் களைய உதவினீர்கள்.

ஐயா, ஒரு நாட்டின் அரசியல் அமைப்புச் சட்டம் மிக முக்கியமான விலைமதிக்கமுடியாத ஆவணமாகும். ஏனெனில் ஒரு நாட்டின் மக்கள் தங்களுடைய பல்வேறு அமைப்புகளை எவ்வாறு உருவாக்கப் போகிறார்கள் என்பதைக் குறித்து அது ஒரு சித்திரத்தை

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 23 நவம்பர் 1949, பக். 873.
3. அதே நூல், பக். 878.

அளிக்கிறது, எப்படி வாழ விரும்புகிறார்கள் எந்த அரசியல் ஏற்பாட்டின் கீழ் தங்களுடைய முடிவுகளை எடுக்கப்போகிறார்கள். எதிர்காலத்துக்கான அவர்களது நம்பிக்கைகள் மற்றும் ஆசைகளை அது பிரதிபலிக்கிறது.

★ ★ ★

[1]திரு. கே.எம். ஜேதே (பம்பாய் : பொது) : தலைவர் அவர்களே, இந்தியாவின் புதிய அரசியல் சாசனத்தைத் தயாரிப்பதில் மிக அதிகமாக உழைத்துள்ள டாக்டர் அம்பேத்கருக்கும் மற்றும் அவரது சக பணியாளர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். தயாரிப்புக்கு மூன்றாண்டுகள் வரை நாம் எடுத்துக் கொண்டோம். அந்தப் பெரும் பணியை இப்பொழுது முடிக்கிறோம். டாக்டர் அம்பேத்கருக்கு பாராட்டுகள் தெரிவித்த சில உறுப்பினர்கள் அவரைத் தற்கால மனு என்று அழைத்தனர். இந்தப் பட்டத்தை அவர் விரும்ப மாட்டார் என்று நான் நிச்சயமாகக் கூறுவேன். நான்கு சாதிகளாகச் சமூகத்தைப் பிரித்த மனுவை அவர் வெறுக்கிறார் என்பது எனக்குத் தெரியும். அதில் மிகவும் தாழ்ந்தது தீண்டப்படாத வகுப்பினர். 1929ல் மகதில் நடைபெற்ற தீண்டப்படாதவர்களின் பெரும் கூட்டத்தில் மனு ஸ்மிருதியை அவர் வெளிப்படையாகவே நெருப்பிட்டுக் கொளுத்தியது எனக்கு ஞாபகம் இருக்கிறது. ஹரிஜன மக்களின் பெரும் தலைவர் அவர். தங்களுடைய நலனுக்காக பாடுபடும் தலைவர் என்று அவர்களால் பெரிதும் போற்றி வணங்கப்படுகிறார். கடவுள் போன்று அவர் மதிக்கப்படுகிறார். அவர்கள் அவரைக் குறித்து மிகவும் பெருமை கொள்கிறார்கள். அவர்கள் அவரை பீம் என்று அழைப்பதுடன் பீம் ஸ்மிருதியை உருவாக்கியுள்ளார் என்றே பொதுமக்களுக்குக் கூறுகிறார்கள். நான் ஸ்பரஸ்யா வகுப்பைச் சேர்ந்தவன் ஆயினும், பீம் ஸ்மிருதி என்றே அதை அழைக்கிறேன். டாக்டர் அம்பேத்கர் பெரும் வழக்கறிஞர் என்பதுடன் மிகுந்த திறமையும் புத்திகூர்மையும் உடையவர். யாருக்கும் இதில் எந்த ஐயப்பாடும் இருக்க முடியாது. சட்டப்படி தீண்டாமை ஒழிக்கப்பட்டுவிட்டது. அரசியல் சாசனத்தை

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 24 நவம்பர் 1949, பக். 890.

உருவாக்கும்போது ஹரிஜன மக்களின் நலன்களைப் பாதுகாப்பதில் ஆர்வத்துடனும், விழிப்புடனும் செயல்பட்டார். எல்லா ஹரிஜன மக்களும் அவருக்கு நன்றியுடையவர்களாக இருக்க வேண்டும். அதே நேரத்தில், நமக்குச் சுதந்திரம் பெற்றுத் தந்த தேசத் தந்தை மகாத்மா காந்திக்கு நன்றியுடையவர்களாக இருக்க வேண்டும். தீண்டாமையை ஒழிப்பதற்கு தம் வாழ்நாளில் பெரும்பாடுபட்ட மகாபுருஷர் அவர். ஹரிஜன மக்களைத் தீண்டத்தக்கவர்களின் நிலைக்குக் கொண்டுவர வேண்டுமென்பதே அவரது பெரும் ஆசை. அவருடைய விருப்பம் நிறைவேற்றப்பட்டுள்ளதைக் கண்டு நம்மை ஆசிர்வதிக்க அவர் நம்மிடையே இல்லை, ஏனெனில் கொடூரமான சதித் திட்டத்துக்கு அவர் பலியாக வேண்டிவந்தது....

★ ★ ★

[1]**திரு. ஜெய்பால் சிங்** (*பீகார் : பொது*) : கூறியதையே திரும்பக் கூறுவதை தவிர்க்கும்படித் தாங்கள் அளித்த ஆலோசனையை புறக் கணித்துவிட்டு, புதிய அரசியல் சாசனத்தை உருவாக்குவதற்கு டாக்டர் அம்பேத்கரும் மற்றும் அவரது அயராது உழைக்கும் குழுவும் ஆற்றிய மகத்தான பணிக்கு எனது பாராட்டுதலை, பூரணமான பாராட்டு தலைத் தெரிவித்துக் கொள்கிறேன். எங்கள் விவாதங்களை அளவிடற் கரிய பொறுமையுடன் வழிநடத்திய உங்களுக்கும் தாழ்மையுடன் என் பாராட்டுதலை தெரிவித்துக் கொள்கிறேன்.

[2]**திரு. ஏ. தாணுபிள்ளை:** ஐயா, முடிவாக, இந்த மன்றத்தின் நடவடிக்கைகளைக் கவனிக்கையில், நீங்கள் காட்டும் பொறுமை யைக் கண்டு நான் வியப்படைந்ததைச் சொல்லித்தான் ஆக வேண்டும். சந்திர மண்டலத்துக்கான செய்தித் தொடர்பு பற்றிய கேள்வியாக இருந்தாலும், அது விதியின்படி அனுமதிக்கப்பட்டிருந் தால் நீங்கள் வாக்களிப்புக்குவிடத் தயாராக இருந்தீர்கள். இவ்வளவு தூரம் நீங்கள் பொறுமையுடன் இருந்ததை நாங்கள் கண்டோம். டாக்டர் அம்பேத்கர் மற்றும் அல்லாடி கிருஷ்ணசுவாமி அய்யரின்

---

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 24 நவம்பர் 1949, பக். 893.
2. மேற்படி அதே நூல், பக். 898.

திறமைக்கும், திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி, திரு. சந்தானம் மற்றும் பலர் இந்த அரசியல் சாசனத்தை உருவாக்குவதில் காட்டிய மிகுதியான ஆர்வத்திற்கும் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்ள அனுமதிக்குமாறு கேட்டுக் கொள்கிறேன். நான் சில பெயர்களைக் குறிப்பிட்டுச் சொல்லும்போது, குறிப்பிடுவதற்கு வேறு பெயர்கள் இல்லை என்று நினைத்துவிடக்கூடாது. சம்பந்தப்பட்ட அனைவரும் சிறப்பாகச் செயல்பட்டனர்....

[1]**திரு. ஓ.வி. அளகேசன்** (சென்னை : பொது) : தலைவர் அவர்களே, வரைவுக்குழு மற்றும் அதன் பணி சம்பந்தப்பட்ட எல்லோரும் நியாயமான முறையில் பாராட்டப்பட்டுள்ளனர். அரசியல் சாசன விதிகளை தெள்ளத் தெளிவாக விளக்கிக் கூறும் டாக்டர் அம்பேத்கரின் கணீர் குரலை நாம் இனி கேட்க முடியாது அதேபோன்று இந்த அரசியல் சாசனத்தை உருவாக்குவதில் ஆற்றிய பணிக்காக எல்லோராலும் போற்றப்படும் எனது நண்பர் திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரியின் கிரீச் குரலையும் நாம் நிச்சயம் கேட்க முடியாது.

[2]... ஐயா, இந்த அரசியல் சாசனம் பல கட்டுப்பாடுகளையும், பாதுகாப்பு வழிமுறைகளையும் கொண்டுள்ளது என்றும், தனி மனிதனின் சுதந்திரத்தை கட்டுப்படுத்துகிறது, மேலும் மாநில சுய ஆட்சி உரிமையைத் தடைசெய்கிறது என்றும் குற்றம் சாட்டப்படுகிறது. நான் அதை அந்த நோக்கில் பார்க்கவில்லை. இந்தியாவின் சுதந்திரத்தையும், மற்றும் இளம் குடியரசையும் வெளியிலிருந்து வரும் தாக்குதலிலிருந்து பாதுகாக்கும் வேலியாகவே இந்த பாதுகாப்பு ஏற்பாடுகள் உள்ளன. உதாரணமாக, ஆட்டுக்குட்டிகளை கொன்று எடுத்துச் செல்லும் சுதந்திரம் தனக்குள்ளதாக ஒரு புலி கூற முடியாது. மனித உரிமைக்கு ஆபத்து என்று கூக்குரல் எழுந்தபோது, இந்த விதிகள் எல்லாம் நம்முன் தூக்கி எறியப்பட்டபோது, இதுதான் என் பதிலாக இருந்தது....

ஐயா, இந்த அரசியல் சாசனத்தின்படி மதச்சார்பற்ற குடியரசுக்கான அடிப்படை நல்ல முறையில் உண்மையிலேயே போடப்பட்

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 24 நவம்பர் 1949, பக். 898-99.
2. மேற்படி அதே நூல், பக். 901.

டுள்ளது. மேலும் நமது தலைவர் மகாத்மா காந்திக்கும், நமது பாரம் பரியத்துக்கும், நமக்கும் நாம் உண்மையாக நடப்போமானால், இந்தப் பழம் பெரும் நாடு முன்னேற்றப் பாதையில் செல்ல, இந்த அரசியல் சாசனத்தை நாம் நிச்சயமாக நம்பலாம்.

★ ★ ★

[1]**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி:** ஐயா, கடந்த மூன்றாண்டு குறுகிய காலகட்டத்தில் நடைபெற்றது போன்ற மறக்க முடியாத நிகழ்ச்சிகள் இந்திய வரலாற்றில் எந்தக் கட்டத்திலும் நடைபெற வில்லை. இந்த அரசியல் சாசனத்தைத் தயாரிக்கும் மகத்தான பணியை தொடங்கியதிலிருந்து மூன்றாண்டுகாலத்தைப் பார்த்தால் நமது நாட்டின் வரலாற்றில் நிகழ்ந்த மாறுபட்ட மாற்றங்களால் ஆச்சரியம் அடையாமல் இருக்க முடியாது.

பலநிகழ்ச்சிகள் நடந்தேறிய இந்த காலகட்டத்தில் பெரு மளவில் முக்கியத்துவம் பெற்ற ஐந்து நிகழ்ச்சிகளைக் குறிப்பிட வேண்டும். வரிசைப்படிக் கூறினால் அவை : 1. நாடு பிரிக்கப்பட்டது 2. சுதந்திரம் பெற்றது 3. தேசத்தந்தை மகாத்மா காந்தியின் மறைவு 4. இந்திய சமஸ்தானங்கள் இணைக்கப்பட்டது, கடைசியாக ஆனால் முக்கியமாக 5. இந்தியாவுக்கான அரசியல் சாசனம் உருவாக்கப் பட்டது....

★ ★ ★

[2]**திரு. சாரங்கதார் தாஸ்:** பெரும்பான்மையான எனது நண்பர் களின் கருத்தை ஏற்றுக் கொள்ள மறுக்கிறேன். முக்கியமாக இந்துக் களின் ஆட்சியில் குடியரசுகள் இருந்ததாகக் கூறிய எனது இந்து நண்பர்களுடன் நான் மாறுபட்ட கருத்துகளைக் கொண்டுள்ளேன். ஹரிஜனங்கள் என அழைக்கப்படும் நம்முடைய தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள், நமது சமூகத்தின் தாழ்ந்த சாதியினர், இதுகாறும் தாழ்த்தப்பட்ட நிலையிலேயே வைக்கப்பட்டுள்ளனர். ஏனெனில், ஜனநாயகம் இருக்கவில்லை. ஜனநாயகப் பண்பு இருந்திருந்தால்,

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 24 நவம்பர் 1949, பக். 903.
2. மேற்படி அதே நூல், பக். 913.

குடியரசு முறை இருந்திருந்தால் அது மேல் சாதியினர் என்று அழைக்கும் மேல்வகுப்பினரிடையே மட்டும் நிலவிவந்தது. அந்த நோக்கில் அரசியல் சாசனத்தைப் பார்த்தால் தீண்டாமை ஒழிக்கப் பட்டுவிட்டதும், வயது வந்தோருக்கு வாக்குரிமை ஆகியவை இந்த அரசியல் சாசனத்தில் அறிமுகப்படுத்தப்பட்டுள்ள இரண்டு மிகச் சிறந்த அம்சங்களாகும். ஐயா, அமெரிக்க அரசியல் சாசனப்படி ஒரு காலத்தில் வெள்ளை நிறச் சுதந்திரக் குடிமக்களுக்கு மட்டுமே வாக் குரிமை கொடுக்கப்பட்டிருந்தது என்பதை நான் உங்களுக்கு ஞாபகப் படுத்த விரும்புகிறேன். ஏனெனில் அந்தக் காலத்தில் மேற்கு இந்தியத் தீவுகளிலும், கரீபியன் தீவுகளிலும் வெள்ளை நிறத்தவர்களும் அடிமை களாக பணிபுரிந்துவந்தனர். அவர்களுக்கு வாக்குரிமை மறுக்கப் பட்டது. கருப்பர்கள் அதாவது நீக்ரோ இனத்தவரைக் கண்டுகொள் ளவேயில்லை. அவர்களுக்கு வாக்குரிமை மறுக்கப்பட்டது. ஆப்ரகாம் லிங்கன் காலத்தில் அவர்களுக்கு வாக்குரிமை கொடுக்கப்பட்டது. எனவே, வயது வந்தோருக்கான வாக்குரிமை, பெண்களுக்கு சமத் துவம், தீண்டாமை ஒழிப்பு ஆகிய இந்த மூன்று விஷயங்கள்தான் நமது அரசியல் சாசனத்தின் மிகச் சிறப்பான அம்சம் எனக் கூறு கிறேன்.

[1]**திருமதி அம்மு சுவாமிநாதன்:** ... பல வாரங்களாக, மாதங் களாக அவர்கள் ஆற்றிய மாபெரும் பணிக்காக அரசியல் நிர்ணய சபையின் செயலகம் மற்றும் வரைவுக்குழுவின் உறுப்பினர்கள் டாக்டர் அம்பேத்கர் ஆகியோருக்கு நமது பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்ளவேண்டும். அவர்களின் பணி எளிமையானதன்று என்பது எனக்குத் தெரியும். இந்த இடர்ப்பாடுகளை அவர்கள் கடந்து, இன்று நமது நாட்டின் சிறந்த அரசியல் சாசனத்தை நிறைவேற்றும் தருவாயில் இன்றுள்ளோம்....

[2]**திரு. எல்.எஸ். பாட்கர்** (மத்திய மற்றும் பேரார்: பொது) : தலைவர் அவர்களே, நமது நாடு சுதந்திரம் பெற்ற பிறகு கடும் உழைப்புடனும் பெருமுயற்சியுடனும் அரசியல் சாசன வரைவைத் தயாரித்து அளித்துள்ள வரைவுக்குழு உறுப்பினர்களுக்கும் டாக்டர் அம்பேத்கர் அவர்களுக்கும் எனது பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.... 17-ஆம் விதி தீண்டாமையை ஒழிக்க வழி

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 24 நவம்பர் 1949, பக். 914.
2. மேற்படி அதே நூல், பக். 915.

செய்கிறது, அதற்காக நான் வரைவுக் குழுவுக்கு நன்றி கூறுகிறேன். [1]338-ஆம் விதி ஷெட்யூல்டு வகுப்பினர்களுக்கு நீதி அளிக்க வழி செய்கிறது. தலைவர் அவர்களே, ஷெட்யூல்டு வகுப்பினர்கள் இதுகாறும் அரசு பதவிகளில் இருக்கும் நிலையை உங்களுக்கு எடுத்துக்கூற விரும்புகிறேன்.

**மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்**

| | மக்கள் தொகை (1931 கணக்கெடுப்பு) | அரசிதழ் பதிவு பெற்ற பதவிகள் |
|---|---|---|
| (1) | (2) | (3) |
| பிராமணர்கள் | 5,42,556 | 448 |
| மராட்டியர்கள் மற்றும் மற்றவர்கள் | 18,82,654 | 17 |
| ஷெட்யூல்டு வகுப்பினர்கள் | 30,51,413 | 3 |
| முஸ்லீம்கள் | 7,83,697 | 99 |
| சீக்கியர்கள் | 14,996 | 13 |
| | | 580 |

பம்பாய் சட்டமன்றத்தில் திரு. ஆர்.எம். நல்வாடே கேட்ட கேள்விக்கு மாண்புமிகு திரு. பி.ஜி. கெர் பின்வரும் புள்ளிவிவரத்தை அளித்துள்ளார்.

| வகுப்பினர் | மக்கள் தொகை 1931 ஆண்டு | அரசிதழ் பதிவுபெற்ற அதிகாரிகள் | அரசிதழ் பதிவுபெறாத அதிகாரிகள் |
|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) |
| தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் | 18,55,148 | 14 | 8,201 |
| மராத்தியர்கள் மற்றும் மற்றவர்கள் | 42,07,159 | 606 | 43,360 |
| பிராமணர்கள் | 9,18,120 | 1,370 | 21,448 |
| முஸ்லீம்கள் | 19,20,368 | 201 | 13,797 |
| மற்றவர்கள் | | 886 | 18,658 |

1. அ.பே.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 24 நவம்பர் 1949, பக். 916.

இந்த அநீதி மேலும் நீடிக்கக்கூடாது என்பதற்குச் சில வழி வகைகளை உருவாக்கவும் இதை முடிவுக்குக் கொண்டுவர அவசர நடவடிக்கைகள் எடுக்கவேண்டிய அவசியத்தையும், இது தெளிவாக அறிவுறுத்துகிறது. எங்களுடைய வாழ்க்கை மேம்பாட்டிற்கும் மக்கள் தொகைக்கேற்ப அரசுப் பணிகளில் ஹரிஜனங்களைத் தேர்வு செய்ய இந்த 238-ஆம் விதியை அமல்படுத்தும்படி இந்திய அரசையும், மாகாண அரசுகளையும் கேட்டுக்கொள்கிறேன்.

★ ★ ★

[1]**திரு. ராம் சந்திர குப்தா** (ஐக்கிய மாகாணங்கள்: பொது) : இந்த தீர்மானத்தைக் குறித்து சில நிமிடங்கள் உரையாற்ற எனக்கு வாய்ப் பளித்த உங்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள் கிறேன். இடைவிடாத நீண்ட போராட்டத்திற்கும் அதிக துன்பங் களுக்கும் பிறகு நமது மக்கள் பெற்றுள்ள இந்த அரசியல் சாசனம் சுதந்திர அமைப்புச் சாசனம் என்று நமது வரலாற்றில் போற்றப் படும். அதைக்குறித்து நாம் எல்லா விதத்திலும் பெருமை அடைய லாம். 1950 ஜனவரி 26-ஆம் நாளை இந்நாட்டிற்கு உண்மையான சுதந்திரம் அடைந்த புனித நாளாக எதிர்கால சந்ததியினர் போற்றுவர் என்பதில் எனக்கு சந்தேகமில்லை.

3 ஆண்டுக் கால கடுமையான உழைப்பு, கவலையுடனான சிந்தனை மற்றும் அதிகமான சமரசத்தின் விளைவுதான் 400 விதி களைக் கொண்டுள்ள இந்த அரசியல் சாசனம். இந்த அரசியல் சாச னத்தை உருவாக்குவதில் பங்கு கொண்டுள்ள எல்லோருக்கும் இந் நாடு ஐயத்துக்கிடமின்றி நன்றியுடையதாக இருக்கும். வரைவுக்குழு உறுப்பினர்கள் யாவருக்கும் எங்கள் நன்றி, முக்கியமாக டாக்டர் அம்பேத்கருக்கும் உங்களுக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஐயா, மற்றவர்களுடன் எவ்வளவு தூரம் ஒத்துழைக்க முடியும் என்பதைத் தெளிவாகக் காட்டிவிட் டீர்கள்.

1. அ.பே.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 24 நவம்பர் 1949, பக். 919-20.

இந்த சபையின் மரியாதைக்குரிய உறுப்பினர்கள் கொண்டு வந்த ஆயிரக்கணக்கான திருத்தங்களின் மீது நடைபெற்ற சூடான வாதங்கள் மற்றும் நீண்ட விவாதங்களின் விளைவாய் உருவானது தான் இப்பொழுதுள்ள இந்த அரசியல் சாசனம். ஏதாவது ஒரு உறுப்பினரின் கவனத்தைக் கவராத ஒரு சொல்கூட அரசியல் சாசனத்தில் இல்லை என்பதுதான் உண்மை. விழிப்புடன் இருக்கும் நமது நண்பர் திரு. நசிருத்தீன் அகமது முற்றுப்புள்ளி, கால் புள்ளி, அரைப் புள்ளி ஆகியவைகளின் மீது கூட தகுந்த கவனம் செலுத்தியுள்ளார் என்பதை கூறாமல் விட்டுவிட முடியாது. எல்லா விஷயங்களிலும் ஒருமித்த கருத்தை எட்ட முடியாவிட்டாலும், சபையில் நிறைவேற்றப் பட்ட எல்லா விதிகளும் மிகப் பெரும்பான்மையினரின் ஆதரவுடன் நிறைவேற்றப்பட்டன என்பது உண்மை. முக்கியமான விவாதத்திற்குரிய பிரச்சினைகளெல்லாம் ஆழ்ந்த பரிசீலனைக்காகவும் முடிந்தால் ஒருமித்த கருத்தை எட்டவும் பலமுறை ஒத்திப்போடப் பட்டன.

இந்த சபையின் உறுப்பினர்கள் தாராளமாகக் காட்டிய விட்டுக் கொடுக்கும் மனப்பான்மையின் அடிப்படையில் ஏற்பட்ட பல மகிழ்ச்சிகரமான சமரசங்களின் விளைவுதான் தற்போதைய அரசியல் சாசனம் என்று ஒரு வார்த்தையில் கூறிவிடலாம். இப்படிப்பட்ட சூழ்நிலையில் அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டுள்ள எல்லா விஷயங்கள் சம்பந்தமாக உறுப்பினர்கள் எல்லோரும் ஒரே அளவிலான மனநிறைவைப் பெற்றிருப்பார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. பல்வேறு உறுப்பினர்கள் பேசும்போது அரசியல் சாசனம் குறித்து மாறுபட்ட விதத்தில் வரவேற்பு அளித்ததற்கு இதுவே காரணமாகும்.

அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டுள்ள எல்லா விஷயங்களிலும் எனக்கு உடன்பாடு இல்லாவிடினும், இந்த சபையின் கணிசமான பகுதியினிடமிருந்து கணிசமான அளவிற்கு ஆதரவு உள்ளது என்பதை யாரும் சிறிதளவும் மறுக்க முடியாதென்று உறுதியாகக் கூறலாம்.

முதலில் தயாரிக்கப்பட்ட மூல அரசியல் சாசனம் பெரும்

மாறுதலுக்குள்ளாயிருப்பதை மறுக்க முடியாது. நாட்டின் மாறுபட்ட சூழ்நிலையில் இது தவிர்க்க முடியாததே...

## [1]இந்திய அரசாங்கச் சட்ட திருத்த மசோதா

**திரு. தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் முன்னறிவிப்புக் கொடுத்துள்ள மசோர்தாவை எடுத்துக் கொள்வதே இன்றைய முதல் பணி.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்: பொது) : 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தை மேலும் திருத்துவதற்கான மசோதாவைக் கொண்டுவர அனுமதியளிக்கக் கோருகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** விஷயம் என்னவென்றால் -

> ''1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தை மேலும் திருத்துவதற்கு மசோதா கொண்டுவர அனுமதி கோரப்படுகிறது.''

தீர்மானம் நிறைவேற்றப்பட்டது

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, அந்த மசோதாவை முன்மொழிகிறேன்:

**திரு. அவைத் தலைவர்:** மசோதா முன்மொழியப்பட்டுள்ளது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, மசோதாவை நான் முன்மொழிகிறேன்:

> ''1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தை மேலும் திருத்த கொண்டுவரப்பட்டுள்ள மசோதாவை சபை உடனடியாகப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டுகிறேன்.''

**திரு. அவைத் தலைவர்:** தீர்மானம் முன்மொழியப்பட்டுள்ளது.

★ ★ ★

தீர்மானம் நிறைவேற்றப்பட்டது

★ ★ ★

1. அ.பே.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 25 நவம்பர் 1949, பக். 920.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** ஐயா, எனது நண்பர் திரு. நசிருத்தீன் அகமது மனதில் குழப்பம் இருப்பதாக நிச்சயமாகக் கூறலாம். அரசியல் நிர்ணயசபை நிறைவேற்றிய பல்வேறு திருத்தங்களை பார்க்கையில் மசோதாவிற்கான சரியான வாசகம் நான்காவது திருத்தச் சட்டம் என்பதாகும். அரசியல் நிர்ணய சபையால் முதன் முதல் நிறைவேற்றப்பட்ட சட்டம் 1949-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் (திருத்தம்) என்றழைக்கப்படு கிறது. இரண்டாவது 1949-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் (இரண்டாவது திருத்தம்) ஆகும். அது கைதிகளை ஒரு பிரிவிலிருந்து மற்றொருபிரிவுக்கு மாற்றுவதைப் பற்றியதாகும். மூன்றாவது 1949-ஆம் ஆண்டு திருத்தப்பட்ட சட்டம், குடிபெயர்ந்தவர்களின் சொத்துக் கள் மற்றும் வங்காளத் தேர்தல்கள் சம்பந்தமானது.

[2]**திரு. நசிருத்தீன் அகமது:** அது ஒரு திருத்தச் சட்டம் என்றே அழைக்கப்படவில்லை. அதற்கு வேறு பெயர் இருந்தது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உபவிதி 1ஐ நோக்கி னால் நீங்கள் '1949ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் (இரண் டாவது திருத்தம்) என்பதை அதில் காணலாம். அடுத்ததாக உள்ள 1949 ஆம் ஆண்டு மூன்றாம் திருத்தச் சட்டம் வங்காள தேர்தல்கள், குடிபெயர்ந்தவர்களின் சொத்துக்களை பராமரித்தல், பாதுகாத்தல் விற்பனை செய்தல் ஆகியவை சம்பந்தமானது.

அரசியல் நிர்ணய சபையில் மேலும் இரண்டு சட்டங்களை நாம் நிறைவேற்றியிருப்பதன் காரணமாகவே இந்தக் குழப்பம் ஏற்பட் டுள்ளது என நினைக்கிறேன். பிரிவி கவுன்சில் அதிகார வரம்பு ஒழிப்பு சம்பந்தமாக ஒன்றும் 1946-ஆம் ஆண்டு மத்திய அரசாங்கத் தின் சட்டமன்ற சட்ட திருத்தம் என்ற மற்றொன்றும் நிறைவேற்றப் பட்டுள்ளன. இவை இந்திய அரசாங்கச் சட்டத்திற்கான திருத்தங்கள் அல்ல. இந்திய அரசாங்கச் சட்டத்தின் மீது மறைமுகமான பாதிப்பை

1. அ.பே.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 10, 25 நவம்பர் 1949, பக். 923.
2. மேற்படி அதே நூல், பக். 927-29.

ஏற்படுத்தினாலும்கூட அவை இந்திய அரசாங்கச் சட்டத்திற்கான திருத்தங்கள் அல்ல. எனவே இதை நான்காவது திருத்தம் என்றே நாம் கொள்ள வேண்டும். 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத் திற்கான நேரடியான திருத்தங்கள் மூன்று சட்டங்களைப் பற்றி மட்டுமே அன்றி வேறு எதுவும் நிறைவேற்றப்படவில்லை.

**திரு. நசிருத்தீன் அகமது:** ஆனால் மூன்றாவது திருத்தச் சட்டம் ஏதும் இருக்கவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** நிச்சயமாக உள்ளது. குடிபெயர்ந்தவர்களின் சொத்துக்களை பராமரிப்பது, பாதுகாப்பது, விற்பனை செய்வது சம்பந்தமான மூன்றாவது சட்டம் என் முன் உள்ளது.

**திரு. அவைத் தலைவர்:** இந்த விஷயத்தைப் பற்றி சிறிது குழப்பமிருப்பதாகத் தெரிகிறது. சட்டத்தின் எண் நான்கல்ல. இங்கே விளக்கப்படுவது சட்டத்தின் நான்காவது திருத்தத்தைப் பற்றியது. அது சட்டத்தின் எண் அல்ல. சட்டத்தின் எண் தனிப்பட்டது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தற்போதைய சட்டத்தின் விளக்கம்தான் அது. அது குறுந்தலைப்பாகும்.

**திரு. அவைத் தலைவர்:** அது ஒரு விவரக்குறிப்புதான். 1949-ஆம் ஆண்டு சட்ட எண் 6 என்பதாகும் அதன் எண்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அதுதான் சரி. அது ஒரு குறுந்தலைப்பு.

**திரு. அவைத் தலைவர்:** அரசியல் நிர்ணயசபை இதுவரை ஐந்து சட்டங்களை நிறைவேற்றியுள்ளது. 1949ல் இது ஆறாவது ஆகும். ஆனால் திருத்தங்களைப் பொறுத்தவரையில் இந்திய அர சாங்கச் சட்டத்தின் நான்காவது திருத்தமாகும் இது. எனவேதான் இதை நான்காவது திருத்தம் என அழைக்கப்படுகிறது.

***பண்டிட் ஹிருதய்நாத் குன்ஸ்ரூ*** *(ஐக்கிய மாகாணங்கள்: பொது): நாம் நிறைவேற்றிய ஐந்து சட்டங்களில் இது ஒன்று....*

***திரு. அவைத் தலைவர்:*** *இது ஆறாவது.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :*** *இந்த மன்றத்தில் நாம் ஐந்து சட்டங்களை நிறைவேற்றியுள்ளோம். அவற்றில் இரண்டு சட்டங்கள் 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம் சம்பந்த மானதல்ல.*

***பண்டிட் ஹிருதய்நாத் குன்ஸ்ரூ :*** *அவை அரசியல் சாசனம் சம்பந்தப்பட்டதாக இல்லாதபோது ஏன் அரசியல் சபை முன்வைக்கப் படுகின்றன?*

***டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *சட்டத்தின் நோக்கத்திலிருந்து குறுந்தலைப்பு மிகவும் மாறுபட்டது.*

***பண்டிட் ஹிருதய்நாத் குன்ஸ்ரூ:*** *பிரிவி கவுன்சிலுக்கு மேல் முறையீடு செய்யும் உரிமையை 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தைத் திருத்தம் செய்யாமல் ஒரு வழக்காடுபவரிடமிருந்து எடுத்துவிடமுடியுமா என்பதே கேள்வி.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :*** *1949ஆம் வருட மத்திய அரசு மற்றும் சட்டமன்றத் திருத்தச் சட்டம் என்பதுதான் அடுத்த சட்டத்தின் குறுந்தலைப்பு. நாடாளுமன்றச் சட்டமான 1946-ஆம் ஆண்டு இந்தியச் சட்டம் (மத்திய அரசும் சட்டமன்றமும்) என்பதற்கான திருத்தம் அந்தச் சட்டம். 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்திற்கல்ல. 1949-ஆம் ஆண்டு பிரிவி கவுன்சில் சட்ட வரம்பு ஒழிப்புச் சட்டம் என்பது மற்றொரு சட்டம்.*

***பண்டிட் ஹிருதய்நாத் குன்ஸ்ரூ :*** *எனது நண்பர் முன்பு குறிப் பிட்ட மத்திய சட்டமன்ற திருத்தம் இந்திய அரசாங்கச் சட்டத்திற்கான திருத்தமே.*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இல்லை, இல்லை, அப்படி இல்லை. 1946-ஆம் ஆண்டு இந்தியச் சட்டம் (மத்திய அரசாங்கமும் சட்டமன்றமும்) என்ற நாடாளுமன்றத்தால் நிறைவேற்றப் பட்ட தனியான சட்டம் ஒன்று இருந்தது. அந்தச் சட்டத்திற்கான திருத்தமே இந்தத் திருத்தம். 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்திற்கு உட்பட்டதல்ல அந்தச் சட்டம்.

**திரு. ஆர்.கே. சித்வா :** பருத்திக் கொட்டையிலிருந்து பருத்திக் கான மாற்றம் பற்றிய திருத்தச் சட்டம் இந்திய அரசாங்கச் சட்டத் திற்கான திருத்தம் என்பதை டாக்டர் அம்பேத்கர் மறந்துவிட்டதாகத் தெரிகிறது. அவர் அதைப் பற்றிக் குறிப்பிடவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இது ஆறாவது சட்டம் என்று பொருள்படும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் குறுகிய தலைப்பு சட்டங்களின் வரிசை எண்களிலிருந்து முற்றி லும் வித்தியாசமானது. நாம் குறுந்தலைப்புகளைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறோம்.

**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி** (சென்னை : பொது) : இது பெயர் கள் சம்பந்தமான விஷயம். நாடாளுமன்றம் திருத்தம் செய்த பழைய சட்டங்களில் இந்திய அரசாங்கச் சட்டத்துக்கான திருத்தங்களுக்கு 1942-ஆம் ஆண்டுக்கான இந்தியா-பர்மா அவசரகால அதிகாரச் சட்டங்கள், 1942 என்பன என்பது போன்ற மாறுபட்ட தலைப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. இந்தப் பெயர்கள் சம்பந்தமான விஷயங் களில் கசப்பான முடிவுக்கு நாம் செல்ல வேண்டாம். மசோதாவை சபை பரிசீலிக்கலாம் என்பதே என் ஆலோசனை.

**திரு. நசிருத்தீன் அகமது :** எண் IV சட்டம் ஏதாவது உள்ளதா?

**திரு. அவைத் தலைவர்:** இருப்பதாகத் தெரிகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இருக்கிறது.

**திரு. நசிருத்தீன் அகமது :** எனக்குக் கிடைக்கவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** உங்களுக்கு அதன் நகல் கிடைக்காவிடில் நாங்கள் என்ன செய்ய முடியும்?

**திரு. அவைத் தலைவர்:** தலைப்பினால் குடி ஒன்றும் மூழ்கிப் போய்விடாது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அவர் விரும்பினால் எண்ணைக் கூட நான் கொடுக்க முடியும்.

1949-ஆம் ஆண்டு சட்ட எண் I ன் குறுந்தலைப்பு 1949 ஆண்டு இந்திய அரசாங்க (திருத்த) சட்டம் என்பதாகும்.

1949-ஆம் ஆண்டுச் சட்ட எண், II 1949 ஆண்டு இந்திய அரசாங்க (இரண்டாவது திருத்தம்) சட்டம் என்று அழைக்கப் படுகிறது.

1949-ஆம் ஆண்டுச் சட்ட எண் III ''1949-ஆம் ஆண்டு இந்திய அரசாங்க (மத்திய அரசு மற்றும் சட்டமன்றம்) திருத்தச் சட்டம் என்று அழைக்கப்படுகிறது.

1949-ஆம் ஆண்டுச் சட்ட எண் IV 1949-ஆம் ஆண்டு இந்திய அரசாங்க (மூன்றாவது திருத்த) சட்டம் என்று அழைக்கப்படு கிறது.

1949-ஆம் ஆண்டு சட்ட எண் V ''1949-ஆம் ஆண்டு பிரிவி கவுன்சில் அதிகார வரம்பு ஒழிப்புச் சட்டம்'' என்று அழைக்கப்படு கிறது.

சட்ட எண்கள் III மற்றும் V 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்திற்கு எந்தவிதத் தொடர்பும் கிடையாது. எனவேதான் இது இந்திய அரசாங்கச் சட்டத்தின் நான்காவது திருத்தம் என்று அழைக்கப்படுகிறது.

**திரு. அவைத் தலைவர்:** திருத்தம் வருமாறு :

*"துணைவிதி 1ன் உபவிதி (1)ல் உள்ள 'நான்காவது திருத்தம்' என்ற சொற்களுக்குப் பதிலாக 'மூன்றாவது திருத்தம்' என்ற சொற்களைச் சேர்க்க வேண்டும்."*

திருத்தம் தோற்கடிக்கப்பட்டது.

**திரு. அவைத் தலைவர் :** அடுத்த திருத்தம் வருமாறு:

*"சட்ட முன்வடிவின் பகுதியாக துணைவிதி I உள்ளது"*

தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

துணைவிதி I சட்ட முன்வடிவுடன் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

### துணைவிதி 2

[1]**திரு. நசிருத்தீன் அகமது:** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன் :

*"துணைவிதி 2 ரத்து செய்யப்பட வேண்டும்."*

ஐயா, நான் முன்மொழிய விரும்புகிறேன்:

*"துணைவிதி 2ல் பின்வரும் சட்டக் குறிப்பைச் சேர்த்துக் கொள்வது: '52 மற்றும் 53 விக்ட் சி 63'"*

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** இந்திய அரசாங்கச் சட்டத்தில் திருத்தம் செய்ய நிறைவேற்றப்பட்ட சட்டங்களில் எல்லாம் இந்தச் சட்டமன்றம் இதேபோன்ற ஒரே மாதிரியான துணைவிதி களையே நிறைவேற்றியுள்ளது. ஒரே சீரான தன்மையைக் காப்பாற்றவும், இந்தக் குறிப்பிட்ட விதிக்கு விளக்கம் அளிக்கவும் துணைவிதி 2 மசோதாவின் பகுதியாக இருக்க வேண்டியது அவசியமாகும்.

---

1. அ.பே.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 11, 25 நவம்பர் 1949, பக். 929.
2. மேற்படி அதே நூல், பக். 929.

என்னுடைய நண்பரின் ஆலோசனையைப் பொறுத்தவரை 1889-ஆம் ஆண்டு விளக்கச் சட்டத்தின் அத்தியாய எண் ஓரக் குறிப்பில் இருக்க வேண்டுமென்பதுதான். இது வரைவாளரின் பரிசீலனைக்குரிய விஷயம். அப்படி ஒரு ஓரக் குறிப்பு அவசியம் என்று அவர் நினைத்தால் அதை அவர் நிச்சயமாகக் கணக்கில் எடுத்துக் கொள்வார். 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தைத் திருத்துவதற்காக நிறைவேற்றப்பட்ட மற்றச் சட்டங்களின் துணை விதிகளுக்கு எதிராக இந்த ஓரக் குறிப்பு சேர்க்கப்படவில்லை.

**திரு. நசிருத்தீன் அகமது :** முந்தைய சட்டங்களிலெல்லாம் இந்த துணைவிதி உள்ளது என்று டாக்டர் அம்பேத்கர் கூறினாலும் எண் V சட்டத்தில் இந்த மாதிரியான துணைவிதி இல்லை என்பதை நான் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது ஒரு சுய விளக்கச்சட்டம். விளக்கச்சட்டத்தைப் பற்றிய குறிப்பு அதற்குத் தேவை இல்லை.

***(நசிருத்தீன் அமகதின் திருத்தங்கள் நிராகரிக்கப்பட்டன. துணைவிதி 2 மசோதாவில் சேர்க்கப்பட்டது.)***

★ ★ ★

### துணைவிதி 3

''**திரு. எச்.வி. படாஸ்கர் :** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

> ''3-ஆம் துணைவிதியில் 'ஏதாவது மாநிலத்தின் பெயருக்குப் பின்னால்' என்ற சொற்களுக்குப் பிறகு 'எந்த மாநிலத்தின் பெயர் மாற்றப்படவேண்டுமோ அந்த மாநில சட்டமன்ற உறுப்பினர்களின் கருத்தைத் தெரிந்து கொண்ட பிறகு' என்ற சொற்கள் சேர்க்கப்பட வேண்டும்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** திரு. படாஸ்கரின் திருத்தத்தைப் பொறுத்தவரையில் பிரிவு 290ன் வரையறைக்குள் இது

1. அ.பே.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 11, 25 நவம்பர் 1949, பக். 935-37.

பொருந்தாது என்பதைச் சுட்டிக்காட்ட வேண்டும் என்று நினைக் கிறேன். பிரிவு 290 துணைவிதி (1)ன் பல உபவிதிகளுக்கு ஒரே விதி விலக்கு உள்ளதை எனது நண்பர் கவனத்தில் எடுத்துக் கொண்ட தாகத் தெரியவில்லை. இந்த விதிவிலக்கு (அ) (ஆ) (இ) (ஈ) ஆகிய உபவிதிகளுக்குப் பொருந்தும். அந்த விதிவிலக்கை அவர் எடுத்துக் கொண்டால் புதிய துணைவிதியின் செயல்பாட்டிற்கு அவருடைய திருத்தம் இரு நிபந்தனைகளை அறிமுகப்படுத்துவதை அவர் காண முடியும். அதாவது உபவிதி (உ) அவர் கொண்டவரத் தீர்மானித் துள்ள திருத்தத்தின் நிபந்தனைக்குட்பட்டு இருக்கும். அதாவது எந்த மாநிலத்தின் பெயர் மாற்றப்பட வேண்டுமோ அந்த மாநிலச் சட்ட மன்றத்தின் உறுப்பினர்களின் கருத்துகளைத் தெரிந்துகொண்ட பிறகு என்ற நிபந்தனைக்குட்பட்டிருக்கும். இதுவும் தவிர உபவிதி (உ) எந்த மாநிலத்தின் பெயர் மாற்றப்பட வேண்டுமோ அந்த மாநிலத் தின் கவர்னர்-ஜெனரல் அந்த மாநில அரசின் கருத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற நிபந்தனைக்கு உட்பட்டு இருக்கும். இதன் காரணமாக மிகவும் சிக்கலான ஒரு நிலைமை உருவாகும். அவருடைய திருத்தத்தின்படி சட்டமன்றத்தின் கருத்துக்களை கவர்னர் - ஜெனரல் தெரிந்துகொள்வது அவசியமாகும். 290 ஆவது பிரிவின்படி அவர் அந்த மாகாண அரசின் கருத்தைத் தெரிந்துகொள்வது முக்கியம். இரண்டு வெவ்வேறு அமைப்புகளை அவர் கலந்தாலோசிக்க வேண்டி யுள்ளதால் இருவித சிக்கல்களுக்கு அவர் உள்ளாகிறார். இது ஒரு எளிய விஷயமல்ல. இரண்டாவதாக உபவிதிகள் (அ) மற்றும் (ஈ) இரண்டும் ஒரே விதிவிலக்குக்கு உட்பட்டுள்ளன. ஆனால் புதிய உபவிதி இரண்டு விதிவிலக்குகளால் கட்டுப்படுத்தப்படுகிறது.

**திரு. எச்.வி. படாஸ்கர் :** அது அப்படியல்ல.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** நான் சொல்வது இதுதான். உங்களுக்கு எப்படித் தெரியும்? இந்த மாதிரி பரிந்துரை செய்வதன் மூலம் அவர் தன்னையும் கவர்னர்-ஜெனரலையும் ஒரு இக்கட்டான நிலைக்குத் தள்ளுகிறார் என்று எனக்குத் தோன்றுகிறது. அவருடைய ஆலோசனை எவ்வளவு சிறப்பாக இருப்பினும் இந்தக் கட்டத்தில் அதை ஏற்றுக் கொள்வது நியாயமாக இருக்கும் என்று எண்ணாதீர்கள்.

திரு. சித்வாவின் திருத்தத்தைப் பொறுத்தவரை இந்த விதியின் நோக்கத்தையும் புதிய அரசியல் அமைப்புச் சட்டத்தில் உள்ள வகை முறைகளையும் பற்றி அவர் முற்றிலும் குழம்பியிருப்பதாகத் தெரிகிறது. நாடாளுமன்றத்தைக் குறித்துப் பேசும் அவர், கவர்னர்-ஜெனரல் இயற்றும் ஆணை மூன்று நாட்களில் நாடாளுமன்றத்தின் முன் வைக்கப்படவேண்டும் என்று கூறுகிறார். அவர் நாடாளுமன்றம் என்று குறிப்பிடுவது, 1950 ஜனவரி 26ல் நடைமுறைக்கு வரும் சட்ட மன்றத்தைக் குறிப்பிடுகிறார் என்பதை அவர் மறந்துவிட்டதாகத் தெரிகிறது. அன்று கவர்னர்-ஜெனரல் என்ற ஒருவர் இல்லாத நிலை - உருவாகிறது. 290ஆம் பிரிவு மற்றும் இந்த நடவடிக்கை மூலம் நான் கொண்டவர முயற்சிக்கும் உபவிதி (உ) மறைந்துவிடுகிறது. ஜனவரி 26-ஆம் நாளன்று புதிய அரசியல் சாசனத்தின் 3-ஆம் விதி மட்டும் சட்டப் புத்தகத்திலும் நடைமுறையிலும் இருக்கும். நான் விளக்க நினைக்கும் கருத்தின்பால் அவர் போதிய கவனம் செலுத்தியதாகத் தெரியவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. ஆர்.கே. சித்வா:** கவர்னர்-ஜெனரலின் செயல்பாடுகள் குடியரசுத் தலைவரைக் கட்டுப்படுத்தும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த இரண்டு ஆலோசனைகளும் நடைமுறைக்கு ஒவ்வாதது என்று எனக்குத் தோன்றுகிறது. நாடாளுமன்றத்தை இந்தப் பிரச்சினையில் இழுக்க வேண்டுமா, வேண்டாமா என்ற யோசனையைப் பொறுத்த வரையில் இரண்டு விஷயங்களை நாம் கவனிக்க வேண்டியிருக்கிறது. 1935-ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி, தங்கள் மாகாணத்தின் பெயர்கள் பொருத்தமாக இல்லை என்பதால் அவை மாற்றப்பட வேண்டும் என்ற பொதுவான விருப்பம் என்பது ஒன்று. அரசியல் சாசனம் நடைமுறைக்கு வரும் தேதியிலிருந்து தாங்கள் சிறந்தது என்று தீர்மானிக்கும் பெயரில் தங்கள் மாநிலங்கள் அழைக்கப்பட வேண்டுமென்று அவர்கள் விரும்பக்கூடும். கடந்த தடவை இந்த விஷயம் விவாதிக்கப்பட்டபோது தங்கள் மாகாணத்தின் பெயர்கள் சிறப்பாக இல்லை என்று கருதிய மாகாணங்களின் விருப்பம் நியாயமானதே என்று அரசியல் நிர்ணயசபை கருதியது. அந்த மாகா

ணங்களின் விருப்பத்தை நிறைவேற்ற தம் விருப்பப்படி தேவையான நடவடிக்கைகளை, அரசியல் சாசனம் அமலுக்கு வருமுன் கவர்னர் - ஜெனரல் எடுக்க வழிவகை செய்ய வேண்டுமென்று கருதப் பட்டது.

மற்ற மாகாணங்கள் ஏற்றுக் கொள்ளமுடியாத சில பெயர் களை, சில மாகாணங்கள் கவர்னர்-ஜெனரலுக்குப் பரிந்துரைக்கலாம் என்ற அச்சம் தெரிவிக்கப்பட்டுள்ளது. இதன் விளைவாக இந்த அவை ஏற்க மறுத்த, நிராகரித்த பெயர்களை இந்த அரசியல் நிர்ணயசபை யின் கவனத்திற்கு வராமல் அல்லது சம்பந்தப்பட்ட மாகாணச் சட்ட மன்றங்களின் அனுமதியின்றி சில மாகாணங்கள் கொடுக்கக்கூடும். இந்த மாதிரியான சிந்தனை இந்த சட்ட முன்வடிவால் திருத்தம் செய்யப்பட்டுள்ள பிரிவு 390 குறித்த தவறான கருத்தால் தோன்றியது என்று எனக்குத் தோன்றுகிறது. ஏனெனில் 290 ஆம் பிரிவின்படி கவர்னர்-ஜெனரலுக்கு இந்த விஷயத்தில் முற்றிலும் சுயமாகச் செயல் படும் அதிகாரம் உள்ளது. மாகாண அரசாங்கத்தின் பரிந்துரையையோ, அல்லது திரு. படாஸ்கரின் திருத்ததை நான் ஏற்றுக் கொண்டால், சட்டமன்றத்தின் கருத்தையோ அவர் ஏற்றுக்கொள்ள வேண்டிய கட்டாயமில்லை. அவர் சுதந்திரமாகச் செயல்படமுடியும். மத்தி யிலுள்ள அமைச்சரவை மட்டுமே அவருக்கு ஆலோசனை அளிக்கத் தகுதி பெற்ற அதிகார அமைப்பு. 290-ஆம் பிரிவின்படி தேவைப்படுவ தெல்லாம் அந்த மாகாண அரசின் கருத்தைத் தெரிந்துகொள்வது மட்டுந்தான். எனவே அவருக்குப் பரிந்துரைக்கப்படும் எந்தப் பெயரையும் அவர் ஏற்றுக் கொள்ளவேண்டிய கட்டாயமில்லை. இந்த அவையில் நடைபெற்ற விவாதங்கள், ஐக்கிய மாகாணங்களின் பெயர் சம்பந்தமாக பேராசிரியர் சாக்சேனாவின் ஆலோசனைகள் குறித்து இந்த அவை வெளிப்படுத்திய கருத்துகள். மத்திய நிருவாக அமைப்பு மற்றும் கவர்னர்-ஜெனரலால் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படும். 290 ஆம் விதிக்கு கொண்டுவரப்பட உள்ள திருத் தத்தின் அடிப்படையில் ஏதாவது நடவடிக்கை எடுப்பதற்கு முன்பு இது இருக்கும்.

**திரு. அவைத் தலைவர்:** தீர்மானங்களை வாக்களிப்புக்கு விடுகிறேன். திரு. நசிருத்தீன் அகமது அவர்களே, உங்கள் திருத்தத்தை

வாக்களிப்புக்கு விடவேண்டுமா? அது வெறும் நிறுத்தக்குறிகள் சம்பந்தப்பட்டதே?

**திரு. நசிருத்தீன் அகமது:** வரைவுக்குழுவின் பரிசீலனைக்கு விட்டுவிடலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது ஒரு தவறான திருத்தம்.

*(துணைவிதி 3, முகப்புரை மற்றும் தலைப்பு ஏற்றுக் கொள்ளப்பட்டு மசோதாவில் சேர்த்துக் கொள்ளப்பட்டன.)*

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன் மொழிகிறேன்:

> ''சட்டமன்றம் இறுதி முடிவு செய்தபடி 1935-ஆம் ஆண்டு அரசாங்கச் சட்டத்தை மேலும் திருத்த இந்த மசோதா வகைசெய்கிறது''.

★ ★ ★

தீர்மானம் நிறைவேற்றப்பட்டது

★ ★ ★

## இந்திய அரசமைப்பின் முன்வரைவு (தொடர்ச்சி)

[2]**திரு. பிராங்க் அந்தோணி** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்: பொது) : தலைவர் அவர்களே, பண்பு வழுவாத முறையிலும், விநயத்துடனும், மிக்க மரியாதையுடனும் இந்த அவையின் நடவடிக்கைகளை தலைமை தாங்கி நடத்திய உங்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். மிகவும் கடினமான, பொறுப்பான கடமைகளை நிறைவேற்றிய வரைவுக்குழுவுக்கு நியாயமான அளவு பாராட்டுரைகள் வழங்கப்பட்டுள்ளன. எனது வலதுபுறத்தில் அமர்ந்திருக்கும் எனது நண்பர் டாக்டர் அம்பேத்கருக்கு ஒரு குறிப்பிட்ட பாராட்டைச் சுருக்கமாகத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இந்தக் கடினமான ஓர் ஆவணத்தைத் தயாரிப்பதில் தேவைப்பட்ட

---

1. அ.பே.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 11, 25 நவம்பர் 1949, பக். 937.
2. மேற்படி அதே நூல், பக். 938-39.

பணியின் அளவையும், ஒருமுனைப்படுத்தப்பட்ட அறிவின் ஆழத்தையும் உண்மையில் நம்மில் எவராலும் அளந்திட முடியாது. சில சமயங்களில் அவருடன் நான் கருத்து வேறுபாடு கொண்டிருந்தாலும், அவர் விஷயங்களை எடுத்துரைத்ததில் காட்டிய தெளிவும், அடிப்படை விஷயங்கள் மட்டுமின்றி அதில் சம்பந்தப்பட்ட எல்லா அம்சங்களிலும் அவர் கொண்டிருந்த ஆழமான அறிவும் எப்பொழுதுமே எனக்கு மிக்க மகிழ்ச்சியை அளித்தது. ஒரு கலப்படமான வரவேற்பையே இந்த அரசியல் சாசனம் பெற்றுள்ளது என்று சொல்லப்பட்டது. அப்படிப்பட்ட ஒரு கலப்பு வரவேற்புதான் இருக்க முடியும் என்பது தவிர்க்க முடியாதது. ஏனெனில் இந்த அரசியல் சாசனம் பலதரப்பட்ட தன்மைகளைக் கொண்டுள்ளது. அது பல்வேறு அம்சங்களின் கூட்டுத் தன்மையைக் கொண்டுள்ளது. கற்பனாவாதம் ஒரு பக்கமும், யதார்த்தவாதம் ஒரு பக்கமும் ஆகிய இரண்டு போக்குகளின் ஒரு சரியான கலவையே இது என்று நான் நம்புகிறேன். கற்பனாவாதத்தில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்ட எனது நண்பர்கள் சிலர் அதை குறைகூறியுள்ளனர். இது போன்ற பல அம்சங்களைக் கொண்ட கலவை இல்லாத, பத்துக் கட்டளைகள் போன்ற ஒன்றை அவர்கள் விரும்பியிருக்கலாம். அரசியல் நெருக்கடிகள் நிர்வாகத்தின் யதார்த்த நிலைகளின் தாக்கத்தில் வாடி உதிர்ந்துபோகும் முற்றிலும் லட்சியக் கனவில் உருவான ஒன்றை அவர்கள் விரும்பியிருக்கலாம்.

நான் ஏற்கெனவே கூறியபடி, அரசியல் சாசனத்தை ஓரளவு ஆதர்ச சாசனமாகவும், எல்லோரும் விரும்பக்கூடிய ஆவணமாகவும் உருவாக்க, தேவைப்படும் அளவிற்கு கற்பனாவாதச் சிந்தனையை எடுத்துக்கொண்டுள்ளோம் என்று நம்புகிறேன். அதே நேரத்தில் பொருளாயத மற்றும் அன்றாட நடைமுறை சம்பந்தமான விஷயங்களின் அடிப்படையில் அதை உருவாக்கவிடவில்லை. ஏனெனில் அதன் மூலம் அதிலுள்ள ஆதர்ச அம்சங்களை குறைக்கவோ எடுத்துவிடவோ விரும்பவில்லை. அது எல்லாவிதத்திலும் குறைகளற்ற ஓர் ஆவணம் அல்ல என்பதை நான் உணர்கிறேன். அதைத் தயாரித்து முடிப்பதில் ஒரு ஜனநாயக தொழில்கூடத்தில் நடைபெறும் பல்வேறு செயல்பாடுகளை எல்லாம் கடந்து சென்றிருக்கிறோம். ஒரு குடியரசிற்குத் தேவையான எல்லா அம்சங்களையும் ஆய்ந்து, சாரத்தை

எடுத்துள்ளோம். ஒவ்வொன்றையும் நுணுக்கமாக பரிசீலனை செய்துள்ளோம், வாதப் பிரதிவாதங்கள் நடந்துள்ளன. கடுமையான தர்க்கங்கள் நடைபெற்றுள்ளன. சில சமயங்களில் விவாதங்கள் மிகவும் சூடுபிடித்து ரோமானியர்கள் கூறுவதுபோல் இந்த சர்ச்சையின் முடிவு நேரடியான மோதலில்தான் தீர்க்கப்படுமோ என்றுகூட நான் எண்ணியதுண்டு. ஆனால் இறுதியாகப் பார்க்கும்போது ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுப்பதையும், உண்மையான பொறுமை நிலவியதையும் காணமுடிந்தது....

[1]... மொத்தத்தில் ஒரு சிறந்த அரசியல் சாசனத்தைப் படைத்துள்ளோம் என்று நம்புகிறேன் என்ற குறிப்புடன் முடிக்கலாம் என்று நினைக்கிறேன். அது நிச்சயம் குறைகள் உள்ளதாக, தவறுகளுக்கு வாய்ப்பளிக்கக் கூடியதாகத்தான் இருக்கும், ஏனெனில் அது குறைகள் உள்ள மனிதர்களால் உருவாக்கப்பட்டுள்ளது. நாம் ஒரு சிறந்த பணியை நிறைவேற்றியுள்ளோம் என்று நம்புகிறேன். இந்த அரசியல் சாசனத்துக்கு வாழ்த்துக்களை தெரிவித்தால் மட்டும் போதாது. ஆசிர்வதிக்கவும் வேண்டும். இந்த ஆசிர்வாதங்களுடன் அதை அதனுடைய லட்சியப் பாதையில் செலுத்தும் நாம், ஒரு முக்கிய ஆவணமாக இந்த அரசியல் சாசனத்தை உருவாக்கிவிட்டோம், இதுவே நமது மகத்தான சாதனை என்று இருந்துவிடக்கூடாது. அல்லது சிறுபான்மையினருக்குப் பாதுகாப்பு அளித்துள்ளோம், மிகக்கவனமாக அதைத் தயாரித்துள்ளோம் என்பது அல்ல முக்கியமான விஷயம், இந்த அரசியல் சாசனத்தின் விதிகள் எவ்வாறு செயல்படுகின்றன என்பதைப் பொறுத்துத்தான் அது நிமிர்ந்து நிற்கவோ அல்லது விழுந்து நொறுங்கவோ செய்யும். இறுதியில் இதன் மூலமே அரசியல் சாசனத்தின் சிறப்புத்தன்மை தீர்மானிக்கப்படும்.

[2]**டாக்டர் பட்டாபி சீதாராமையா :** இறுதியாக ஒரு கேள்வி : அரசியல் சாசனம் என்பதுதான் என்ன? நீங்கள் ஏற்றுக் கொண்டால், அது அரசியலுக்கான இலக்கணம். அரசியல் மாலுமிக்கு, அது ஒரு திசை காட்டும் கருவி. அது எவ்வளவு சிறப்பம்சங்கள் பொருந்தி

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 11, 25 நவம்பர் 1949, பக். 942-43.
2. மேற்படி அதே நூல், பக். 945.

யிருந்தாலும் அது தானாகச் செயல்பட முடியாது. அது உணர்ச்சி யற்ற ஒரு ஆவணமே. நாம் அதை உபயோகிக்கும் அளவுக்கு அது நமக்குப் பயனுள்ளதாக இருக்கும். அதில் வலுவான சக்தி சேமித்து வைக்கப்பட்டுள்ளது. அதை அணுகும் முறையில்தான் எல்லாம் அடங்கியிருக்கிறது. அதனுடைய நோக்கத்தை மறந்து வாசகங் களுக்கு முக்கியத்துவம் கொடுக்கப் போகிறோமா, அல்லது இரண் டையுமே சமநோக்கில் அணுகப் போகிறோமா என்பதைப் பொறுத்துத் தான் எல்லாம் இருக்கிறது. அகராதியில் சொற்கள் ஒரே மாதிரியாக இருந்தாலும் அதைக் கையாளும் பல்வேறு எழுத்தாளர்களைப் பொறுத்து பல்வேறு நடைகளிலான படைப்புகளைப் பெறுகிறோம். ராகங்களும், சுருதியும் எல்லோருக்கும் ஒன்றுதான். ஆனால் பாடகர் களைப் பொறுத்து மாறுபட்ட இசைப்படைப்புகளை அனுபவிக் கிறோம். வண்ணங்களும் தூரிகைகளும் எல்லாருக்கும் ஒன்றுதான். ஆனால் ஓவியர்களின் படைப்புகளில்தான் எவ்வளவு மாறுபட்ட சித்திரங்கள்! அது போலவே இந்த அரசியல் சாசனத்திலும் நாம் இதை எவ்வாறு பயன்படுத்துகிறோம் என்பதைப் பொறுத்துத்தான் எல்லாம் உள்ளது....

[1].... இந்த அரசியல் சாசனத்திற்கு உருவமும் உயிரோட்டமும் அளித்த விரல்விட்டு எண்ணக்கூடிய சிலருக்கு நாம் எவ்வளவு கடன்பட்டுள்ளோம் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். நமது நண்பர் டாக்டர் அம்பேத்கர் சபையிலிருந்து வெளியே சென்றுள்ளார். இல்லை யென்றால், இந்த மகத்தான, பிரம்மாண்டமான பணியில் எந்த எதிர்ப் பையும் முறியடிக்கும் மகத்தான தமது நுண்ணிய அறிவின் தாக்கத்தை அவர் அளித்துள்ளனர் என்பதை அவரிடம் கூறிக்கொள்ள விரும்புகிறேன். தனது பாதையின் குறுக்கே நின்ற பெருமரங்களையும் சிறு புதர்களையும் சாய்த்து சமன்படுத்தி விளைவுகளை கண்டு கலங்காது அவர் தமக்கு நியாயம் என்று தோன்றியதை இறுகப் பற்றியிருந்தார்.

பிறகு, மாகடலளவு படிப்பறிவு பெற்று, உலக அரசியல் அமைப்புச் சட்டங்களைப் பற்றி ஆழ்ந்த அறிவுடன் கூடிய திரு.

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 11, 25 நவம்பர் 1949, பக். 946-67.

அல்லாடி கிருஷ்ணசாமி அய்யரைக் குறிப்பிட வேண்டும். இந்த அரசியல் சாசனத்தை உருவாக்குவதில் அவர் ஆற்றிய பங்கு மகத்தானது. அதற்கு ஒரு விளக்க உரை எழுதி இந்தப் பணியை அவர் முழுமை பெறச் செய்ய வேண்டும். இதுதான் அவருக்கு திரு. சந்தானம் விடுக்கும் வேண்டுகோள். அதை நிறைவேற்றுவார் என நம்பு கிறேன்.

பிறகு திரு. கோபாலசுவாமி அய்யங்கார் உள்ளார். ஒரு பெண் ணின் நாணமும், அடக்கமும் மிக்கவர். நேரம் வரும்போது தேவைக்கு ஏற்ப மிக உயர்ந்த நிலைக்கு மாறுபவர். யாதார்த்தமும் லட்சியக் கனவும் இணைந்து செயல்படுபவர், எந்தச் சிக்கலான பிரச்சினைக் கும் அமைதியான, ஆறுதலான முடிவை அளிப்பவர்.

அடுத்தபடியாக திரு. முன்ஷியை எடுத்துக் கொள்வோம். எதையும் காது கொடுத்துக் கேட்கும் அவரது தன்மையும், பரந்த மனப்பான்மையும் ஈடு இணையற்றது. பன்முகத்தன்மை கொண்ட அவரது கூர்மையான ஆழமான அறிவும், எத்தகைய இக்கட்டான நிலைமைகளையும் உடனடியாக சமாளிக்கும் அவருடைய திறனும் மிகப்பெரும் உதவியாக நமக்கு இருந்தன.

திரு. மாதவ ராவ் இப்பொழுது இங்கு இல்லை. அவர் மைசூர் திவானாக இருந்தவர். நமது குழுவில் அவர் சிறப்பாக பணி ஆற்றி னார். நான் மருத்துவக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது மைசூரில் உதவி ஆணையராக பணிபுரிந்தார். அதிலிருந்து பிறகு திவான் பதவியில் பணியாற்றியது வரை நிரம்ப அனுபவம் பெற்றவர். இந்தப் பணியில் அவரும் தம் பங்கை ஆற்றியுள்ளார்.

எனது நண்பர்கள் எவரும் குறிப்பிடாத எவராலும் கவனிக்கப் படாத ஒரு பெயரை நான் குறிப்பிட்டாக வேண்டும். இனிமை யும், அமைதியும் தவழும் திரு. சாதுல்லாவைத்தான் குறிப்பிடுகிறேன். இந்த சபையின் விவாதங்களுக்கு அவருடைய செழுமையான அனுபவம் மிகவும் உதவியுள்ளது.

இறுதியாக எனக்கு எதிரே அமர்ந்திருக்கும் உயரமான, ஒல்லியான மனிதரைக் குறிப்பிட வேண்டும். சாதுர்யமான பதில் அளித்து, ஈட்டியெனப் பாய்ந்து பதிலடி கொடுக்கும் அவரது கூர்மையான அறிவு எதிரியின் வாதங்களை சுக்கு நூறாக நொறுக்கிவிடும். தமக்கு ஏற்பட்ட காயங்களை சரிசெய்து கொண்டு மீண்டும் இழந்த சக்தியைப் பெற அவரால் எப்பொழுதும் முடிந்தது. அவர்தான் திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரியார்.

இந்த மனிதர்கள் எல்லோருடைய உதவியும் நமக்கு எப்பொழுதும் இருந்தது. ஆனால் உறுப்பினர் ஒருவர் தம்முடைய உரையை முடிக்க நீங்கள் அவர் பக்கம் இன்முகத்துடன் திரும்பி, அவர் கண்களை எப்பொழுது உங்கள் கண்கள் சந்திக்கும் என்று நீங்கள் காத்திருந்து, அவர் தம் உரையை முடித்துக் கொள்ளலாம் என்று பண்பான முறையில் சைகை காட்டி, மனமகிழ்வுடன் நீங்கள் சபையை நடத்திச் சென்றிருக்காவிட்டால் இந்த நண்பர்களின் பணிகள் ஒன்றும் பயனளித்திருக்க முடியாது. எங்களில் சிலர் திமிராக நடந்து கொண்டபோது, ஒழுங்கற்று குழப்பம் விளைவித்த போது, உங்கள் புன்னகையால் அந்தப் போக்குக்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்தீர்கள்.

நாம் அடைந்த சாதனை மகத்தானதுதான். நாம் பெற்ற சாதனையைக் குறைத்து மதிப்பிடக்கூடாது. திரை மறைவுக்குப் பின் பல செயல்கள் நடைபெற்றுள்ளன. பெரும்பான்மைக் கட்சியின் கட்டுப்பாடும் கடும் உழைப்பும் இந்த அவையில் இல்லையென்றால் இந்த விவாதங்கள் ஓர் இனிமையான முடிவுக்கு வந்திருக்காது.

இந்தப் பெரும் பணிக்காகவும் சிறந்த சாதனைகளுக்காகவும் உங்கள் அனைவரையும் பாராட்டுகிறேன். முதல் அரசியல் சட்டம் என்ற முறையில், இது போதுமான அளவிற்கு ஒரு நல்ல அரசியல் சாசனம் என்பதை மட்டுமே நான் சொல்ல வேண்டியுள்ளது. அதைச் செயல்படுத்துங்கள், சிறிது சிறிதாக அதில் மாற்றம் கொண்டு வாருங்கள், அதைக் கவனத்துடன் செயல்படுத்துங்கள், உங்களால் முடிந்த அளவு அதை செழுமைப்படுத்துங்கள். 19-ஆம் நூற்றாண்டின்

எழுபதாம் ஆண்டுகளில் வாக்குரிமை பெற்றவுடன் பிரிட்டிஷ் பாராளு மன்றத்தில் கூறியது போல் ''நாம் நமது எஜமானர்களுக்கு அறிவூட்டுவோம்'' என்று கூறிக் கொள்ளுங்கள்.

[1]**திரு. ஜகத் நாராயண் லால்:** இறுதியாக, தலைமை தாங்குபவருக்கும் அல்லது தலைவருக்கும் வரைவுக்குழு உறுப்பினருக்கும் முக்கியமாக டாக்டர் அம்பேத்கர், திரு. முன்ஷி மற்றும் திரு. கிருஷ்ண மாச்சாரி ஆகியோர்களுக்கும் என்னுடைய உயர்வான பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

[2]**திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி:** தலைவர் அவர்களே, முதலில் வரைவுக்குழுவுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். அரசியல் சாசனத்தின் சில விதிகளைக் குறித்து அவர்கள் கொண்டிருந்த கருத்து எப்படிப்பட்டதாக இருந்தாலும் ஒவ்வொருவரும் வரைவுக்குழுவின் பணிகளுக்கு பாராட்டுத் தெரிவித்த இந்த மதிப்பிற்குரிய சபையின் உறுப்பினர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அவர்களை விட எந்தவிதத்திலும் குறைவில்லாமல், எனது வயது முதிர்ந்த தலைவர், வரைவுக் குழுவின் ஒவ்வொரு உறுப்பினரையும் குறிப்பிட்டுப் பாராட்டுத் தெரிவித்தது நமது வாழ்வின் இறுதிநாள் வரை மறக்க முடியாதது....

....[3]அரசியல் சாசனத்தின் கட்டுக் கோப்பு கையாளப்பட்ட விதத்தின் முக்கிய அம்சத்தை குறிப்பிட விரும்புகிறேன். என் முன் வைக்கப்பட்டுள்ள இந்த அரசியல் சாசனம் மற்ற உறுப்பினர்கள் குறிப்பிட்டுள்ளதைப் போல, சமரசத்தின் விளைவு என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் உணரவேண்டும். இங்கு கூடியுள்ள 296 பேர்களும் பொருளாதார விஷயங்களில் மாறுபட்ட கருத்துகளைக் கொண்டுள்ளோம். ஒரு குறிப்பிட்ட விஷயத்தை நான் அனுமதிக்க மாட்டேன் என்று கூறி, மற்றவர்களும் அதையே பின்பற்றவேண்டும் என்று கூறியிருந்தால் நமக்குள் உடன்பாடு ஏற்பட்டிருக்காது. அரசியல்

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 11, 25 நவம்பர் 1949, பக். 948.
2. மேற்படி அதே நூல், 949.
3. அதே நூல், பக். 960.

சாசனத்தையும் நாம் உருவாக்கி இருக்க முடியாது. உண்மையில் இந்த அரசியல் சாசனம் முழுவதும் பல்வேறு தரப்பினர்களுக்கு மிடையேயான உடன்பாட்டின் விளைவே, இந்த அரசியல் சாசனத்தின் மிக முக்கியமான பகுதிகள். எனவே பெரும்பகுதி தீர்மானங்களுக்கு இசைவு தெரிவித்துவிட்டு, ஏதாவது ஒரு விதிக்கு இப்பொழுது ஆட்சேபனை தெரிவிப்பது என்பது அவர்கள் சரியாகச் செயல்படவில்லையோ என நான் அஞ்சுகிறேன். நம்மில் பெரும்பான்மையினரிடையே ஏற்பட்ட, உடன்பாட்டின் விளைவினால்தான் இந்த அரசியல் சாசனம் உருவாகியுள்ளது.

[1]**திரு. மகாவீர் தியாகி:** எனக்கு இந்த வாய்ப்பளித்ததற்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நீங்கள் எனக்கு ஒதுக்கியுள்ள இந்த நான்கைந்து நிமிடங்களை எனது தற்கால, கடந்தகால, எதிர்கால வாழ்வின் விலை மதிப்பற்ற தருணங்களாகக் கருதுகிறேன். அவை மிகவும் மெய் சிலிர்க்கச் செய்யும் நிமிடங்கள். எனது பழைய கனவுகளின் சித்திரத்தை நேருக்குநேராகக் காண்பதுடன் என்னுடைய முப்பதாண்டுக் கால பணியின் பலன்களையும் காண்கிறேன். நம் முன்னே ஒரு யதார்த்தமான சித்திரத்தைக் காண்கிறோம். முக்கிய ஓவியரான டாக்டர் அம்பேத்கர் தன் தூரிகையைக் கீழே வைத்துவிட்டு சித்திரத்தைப் பார்த்து அதைக் குறித்து விமர்சிக்க மக்களுக்கு அதைத் திறந்து வைத்துள்ளார். அது குறித்து இந்த சபை தாராளமாக விமர்சித்துள்ளது. நாம் எல்லோரும் இணைந்துதான் இந்தச் சித்திரத்தை தயாரித்துள்ளோம். எனவே மேலும் இதைக் குறித்து விமர்சிக்க நான் விரும்பவில்லை. இந்தச் சித்திரத்தை பாராட்டிப் பேசப்படும் எதையும் நான் முற்றிலும் ஆதரிக்கிறேன். நம்மிடமுள்ள சிறந்தவைகளை உண்மையாகவும், பணிவுடனும் நமது எதிர்கால சந்ததியர்களுக்கு நாம் அளிக்க வேண்டும். நாம் கடினமாக உழைத்து, நமது சிறந்த சிந்தனைகளைக் கொண்ட நீண்ட விவாதங்களுக்கும் விளக்கங்களுக்கும் பிறகு இந்தச் சித்திரத்தைப் பெற்றுள்ளோம். ஏதாவது இதில் குறைகள் இருந்தால்

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 11, 25 நவம்பர் 1949, பக். 963.

எதிர்கால தலைமுறையினர் நம்மை மன்னிப்பதுடன் தங்கள் அறிவாலும், விவேகத்தாலும் அந்தக் குறைகளை நிவர்த்தி செய்து கொள்வார்கள் என்ற நம்பிக்கையுடன் அவர்களுக்கு இதை உள மகிழ்ச்சியுடன் அளிக்க வேண்டும். இந்தச் சித்திரத்துக்கு ஆபத்துகள் இருப்பதை, என் ஓரக்கண்ணால் அதை நோக்கும்போது தெரிகிறது. உள்ளமும் அதைக் காண்கிறது.

[1]*திரு. சுரேஷ் சந்திர மஜூம்தார் :* இறுதியாக, மிகப் பெரிய, கடினமான, வரலாற்றுச் சிறப்பு மிக்க பணியை வெற்றிகரமாக நிறைவேற்றியுள்ள இந்த சபையிலுள்ள எனது தோழர்களுக்கும் பெரியவர்களுக்கும் டாக்டர் அம்பேத்கருக்கும் எனது மதிப்பிற்குரிய பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்ளலாமா? இந்த சபையின் நடவடிக்கைகளை முற்றிலும் சிறப்பான முறையில் அமைதியாகவும் பொறுமையாகவும் பண்புடனும் வழிகாட்டி நடத்திச் சென்ற உங்களுக்கு நன்றி கூறுகையில், இந்த சபையிலுள்ள ஒவ்வொருவரின் உணர்வுகளையே எதிரொலிக்கிறேன் என்று நிச்சயமாக நம்புகிறேன். ஜெய்ஹிந்த்! வந்தே மாதரம்!

★ ★ ★

[2]*திரு. ராஜ் பகதூர் (ராஜஸ்தான்) :* அரசியல் நிர்ணயசபை பணியாளர்கள், வரைவுக் குழுவினர் மற்றும் உங்கள் மீது பொழியப்பட்டுள்ள பாராட்டுகளில் என்னையும் இணைத்துக் கொள்ள வாய்ப்பு அளித்தமைக்கு உங்களுக்கு நன்றிகூறக் கடமைப்பட்டுள்ளேன். மிகவும் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த தருணம் இது. இதை மிக மிக முக்கியத்துவம் வாய்ந்த தருணம் என்று நான் கூறுவது எதனால் என்றால் நமது தேசத்தின் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள பிரதிநிதிகள் ஒன்றாகக் கூடி நமது நாட்டிற்கு ஓர் அரசியல் சாசனத்தை அளித்துள்ளது வரலாற்றில் இதுவே முதல் தடவையாகும். அது இரண்டு வகையிலும் முக்கியத்துவம் பெற்றுள்ளது. ஏனெனில் நமது நாட்டிற்குச் சுதந்திரம் பெற்றுத் தந்த பெரும் மதிப்பிற்குரிய தலைவர்களே நமது அரசியல் சாசனத்தின் சிற்பிகளாகவும் உள்ளனர்....

---

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 11, 25 நவம்பர் 1949, பக். 966.
2. மேற்படி அதே நூல், பக். 969.

....[1]இந்த அரசியல் சாசனத்தின் நன்மை தீமைகள் எவ்வாறு இருப்பினும் அதைச் செயல்படுத்தும் முறையில்தான் எல்லாம் உள்ளது என்று இறுதியாகக் கூற விரும்புகிறேன். திரு. பிரைஸ் கூறியது போல் ஓர் அரசியல் சாசனத்தை ஓரிடத்திலிருந்து எடுத்து வேறு ஓரிடத்தில் ஒட்டவைப்பது எளிது. ஆனால் அது செயல்படத் தேவைப் படும் குணாம்சங்களை ஒட்ட வைப்பது முடியாத காரியம்.

★ ★ ★

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அரசியல் நிர்ணய சபையின் பணிகளை ஒரு முறை திரும்பிப் பார்க்கும்போது 1946 ஆம் ஆண்டு டிசம்பர் 9ல், முதலில் கூடியதிலிருந்து இரண்டு ஆண்டுகள் பதினோரு மாதங்கள் பதினேழு நாட்கள் கழிந்துள்ளன. இந்தக் கால அளவில் அரசியல் நிர்ணய சபை மொத்தத்தில் பதினோரு முறை கூடியுள்ளது. இந்த பதினோரு அமர்வுகளில், நோக்கங்களைப் பற்றிய தீர்மானங்களை நிறைவேற்றவும், அடிப்படை உரிமைகள் பற்றிய குழுவின் அறிக்கை, ஒன்றியத்தின் அரசியல் சட்டம் பற்றிய அறிக்கை ஒன்றியத்தின் அதிகாரம் பற்றிய அறிக்கை, மாகாண அரசியல் அமைப்புச் சட்டம் பற்றிய அறிக்கை, சிறுபான்மையினர் பற்றிய அறிக்கை, ஷெட்யூல்டு வகுப்பினர் பற்றிய அறிக்கை ஷெட்யூல்டு பழங்குடியினர் பற்றிய அறிக்கை ஆகியவைகளைப் பரிசீலிப்பதில் கழிந்தன. ஏழு, எட்டு, ஒன்பது, பத்து மற்றும் பதி னோராவது அமர்வுகள் அரசியல் சாசன வரைவுச் சட்டத்தை பரிசீலிப் பதில் கழிந்தன. அரசியல் நிர்ணயசபையின் இந்த பதினோரு அமர் வுகளுக்கும் 165 நாட்கள் பிடித்தன.

வரைவுக் குழுவைப் பொறுத்தவரையில், அது அரசியல் நிர்ணயசபையால் 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு 29ல் தேர்ந்தெடுக்கப் பட்டது. ஆகஸ்டு மாதம் 30ஆம் நாளில் அது தன் முதல் கூட்டத்தை நடத்தியது. ஆகஸ்டு 30-ஆம் நாளிலிருந்து 141 நாள்கள் அது அமர்வில் இருந்தது. இந்த சமயத்தில் அது அரசியல் சாசன வரைவைத்

1. அ.நி.வி., அதிகாரபூர்வ வெளியீடு, தொகுதி 11, 25 நவம்பர் 1949, பக். 970.
2. மேற்படி அதே நூல், பக். 972-81.

தயாரித்தது. வரைவுக் குழுவின் பணிக்கு அடிப்படையாக, அரசியல் சாசனத் தயாரிப்பு ஆலோசகர் தயாரித்து, வரைவுக் குழுவின் பணிக்கு அடிப்படையாகக் கொடுக்கப்பட்ட, அரசியல் சாசனம் 243 விதிகளும் 13 அட்டவணைகளும் கொண்டிருந்தது. வரைவுக் குழு அரசியல் நிர்ணயசபைக்கு அளித்த முதலாவது அரசியல் சாசன வரைவில் 315 விதிகளும் 8 அட்டவணைகளும் இருந்தன. பரிசீலனைக் கட்டத்திற்குப் பிறகு அரசியல் சாசன வரைவில் அடங்கியிருந்த விதிகளின் எண்ணிக்கை 386 ஆக அதிகரித்தது. அதன் இறுதி வடிவத்தில் அரசியல் சாசன வரைவு 395 விதிகளையும் 8 அட்டவணைகளையும் கொண்டுள்ளது. சுமார் 7635 திருத்தங்கள் அரசியல் சாசன வரைவுக்கு முன் வைக்கப்பட்டது. இவற்றில் யதார்த்தத்தில் சபையில் முன்மொழியப்பட்ட திருத்தங்கள் 2475 ஆகும்.

இந்தத் தகவல்களையெல்லாம் நான் ஏன் கூறுகிறேன் என்றால் ஒரு கட்டத்தில், இந்தப் பணியை முடிப்பதற்கு அரசியல் நிர்ணய சபை அதிக நேரம் எடுத்துக் கொள்கிறது என்று கூறப்பட்டது. அது பொதுமக்கள் பணத்தை விரையம் செய்து ஆமை வேகத்தில் பணியாற்றுவதாகக் குறைகூறப்பட்டது. ரோமாபுரி எரியும்போது நீரோ மன்னன் ஃபிடில் இசைத்ததைப் போன்றுள்ளது என்று பழி சுமத்தப்பட்டது. இந்தக் குற்றச் சாட்டுகளுக்கு ஏதாவது நியாயம் உள்ளதா? அரசியல் சாசனங்களை உருவாக்க மற்ற நாடுகளிலுள்ள அரசியல் நிர்ணயசபைகள் எடுத்துக் கொண்ட நேரத்தை நாம் பார்க்கலாம். சில எடுத்துக்காட்டுகள்: 1787 மே மாதம் 25ஆம் தேதியில் கூடிய அமெரிக்க கன்வென்ஷன் தன் பணியை 1787 செப்டமர்பர் 17ல் அதாவது நான்கு மாதத்தில் முடிந்தது. கனடா நாட்டு அரசியல் சாசன அமைப்புக் கன்வென்ஷன் 1864 அக்டோபர் 10ல் கூடியது. 1867 மார்ச்சில் அரசியல் சாசனம் ஏற்கப்பட்டது. இரண்டு வருடங்களும் ஐந்து மாதங்களும் எடுத்துக் கொண்டது. ஆஸ்திரேலியாவின் அரசியல் சாசனத் தயாரிப்பு அவை 1891 மார்ச்சில் கூடியது. 1900 ஜூலை 9ல் அரசியல் சாசனத்தை உருவாக்கியது. 9 ஆண்டுகள் எடுத்துக் கொண்டது. தென் ஆப்பிரிக்க கன்வென்ஷன் 1908 அக்டோபரில் கூடியது. 1909 செப்டம்பர் 20ல் அரசியல் சாசனம் நிறைவேற்றியது. இதற்கு ஓராண்டுக்கால உழைப்பு தேவைப்பட்டது.

அமெரிக்கா மற்றும் தென் ஆப்பிரிக்க அரசியல் சாசனத் தயாரிப்பு அமைப்புகளை விட நாம் அதிக காலம் எடுத்துக்கொண்டது உண்மைதான். ஆனால் கானடா கன்வென்ஷனை விட அதிக காலம் எடுத்துக் கொள்ளவில்லை; ஆஸ்திரேலியா கன்வென்ஷனை விடக் குறைவாகவே நாம் எடுத்துக் கொண்டிருக்கிறோம். நாம் கால அளவை ஒப்பிடும்போது இரண்டு விஷயங்களைக் கவனத்தில் எடுத்துக் கொள்ளவேண்டும். அமெரிக்கா, கானடா, தென் ஆப் பிரிக்கா, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகளின் அரசியல் சாசனங்கள் இந்திய அரசியல் சாசனத்தைவிட மிகச் சிறியவை. நான் ஏற்கெனவே கூறியபடி நமது அரசியல் சாசனத்தில் 395 விதிகள் உள்ளன. அமெரிக்க அரசியல் சாசனத்தில் 7 விதிகள் மட்டுமே உள்ளன. முதல் நான்கு விதிகள் 21 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. கானடா நாட்டு அரசியல் சாசனத்தில் 147ம், ஆஸ்திரேலிய அரசியல் சாச னத்தில் 128ம், தென் ஆப்பிரிக்கா அரசியல் சாசனத்தில் 153 பிரிவு களும் உள்ளன. இரண்டாவது விஷயம் என்னவென்றால் அமெரிக்கா, கானடா, ஆஸ்திரேலியா மற்றும் தென்னாப்பிரிக்கா ஆகிய நாடு களின் அரசியல் அமைப்புச் சாசனங்களை உருவாக்கியவர்கள், திருத்தங்கள் சம்பந்தமான பிரச்சினையைச் சந்திக்க வேண்டியிருக்க வில்லை. முன்மொழியப்பட்ட வடிவத்திலேயே அவை ஏற்றுக் கொள்ளப்பட்டன. ஆனால் அதே நேரத்தில் நமது அரசியல் நிர்ணய சபை 2473 திருத்தங்கள் வரை சந்திக்க வேண்டியிருந்தது. இந்த உண்மைகளெயெல்லாம் கணக்கிலெடுத்துக் கொண்டு பார்த்தால், நாம் தாமதமாகச் செயல்பட்டோம் என்ற குற்றச் சாட்டு முற்றிலும் ஆதாரமற்றது என்று எனக்குத் தோன்றுகிறது. இவ்வளவு கடின மான பணியை இவ்வளவு விரைவில் நிறைவேற்றியதற்காக அரசியல் நிர்ணயசபை நிச்சயமாக தன்னைப் பாராட்டிக் கொள்ளலாம்.

வரைவுக்குழு நிறைவேற்றிய பணியின் தரத்தைப் பற்றி திரு. நசிருத்தீன் அகமது ஒரே அடியாக குறை கூறுவது, அவர் அதை தமது கடமை என்று கருதுவதாகத் தெரிகிறது. அவருடையக் கருத்துப் படி வரைவுக் குழுவின் பணி பாராட்டுக்குரியதல்ல என்பதோடு, அது நிச்சயமாக சாதாரணத் தரத்திற்கும் கீழானது என்பதுதான். வரைவுக்குழு நிறைவேற்றிய பணிகள் பற்றி தங்கள் சொந்தக் கருத்து

களை வைத்துக் கொள்ள எல்லோருக்கும் உரிமை உண்டு. திரு. நசிருத்தீனும் தம் கருத்தை வைத்துக் கொள்வதை வரவேற்கிறோம். திரு. நசிருத்தீன் அகமது வரைவுக் குழுவிலுள்ள எந்த உறுப்பினரைக் காட்டிலும் அதிகத் திறமையுள்ள மனிதராக தம்மை நினைத்துக் கொள்கிறார். அவருக்குச் சவால்விட வரைவுக்குழு நினைக்கவில்லை. மாறாக அரசியல் நிர்ணய சபை அவரைத் தகுதியானவர் என்று கருதி வரைவுக்குழுவுக்கு அவரை நியமித்திருந்தால் நாங்கள் வரவேற்றிருப்போம். அரசியல் சாசனத்தை உருவாக்குவதில் அவருக்கு பங்கு ஏதும் இல்லையென்றால் அதற்கு வரைவுக் குழு பொறுப்பாகாது.

வரைவுக் குழுவின் மீதான தம் வெறுப்பைக்காட்ட திரு. நசிருத்தீன் அகமது அதற்கு ஒரு புதிய பெயர் கொடுத்துள்ளார். அதை எத்தகைய நோக்கமுமற்ற, காற்றடிக்கும் திசையில் செல்லும் குழு என்று அழைக்கிறார். இந்த தாக்குதல் மூலம் அவர் நிச்சயமாக மகிழ்ச்சி அடைகிறார். நிபுணத்வம் அற்ற இந்த போக்கக்கும், நிபுணத்துவத்துடன் கூடிய போக்குக்கும் உள்ள வேறுபாட்டை அவர் புரிந்து கொள்ளவில்லை என்பது தெரிகிறது. நிலைமையைச் சமாளிக்க முடியாமல் இந்தக் குழு காற்றடித்த திசையில் செல்லவில்லை. தற்செயலாகக் கிடைக்கும் மீனுக்காக வீசப்பட்ட வலையல்ல அது. நன்கு பழக்கமான தண்ணீரிலேதான் வழக்கமாகப் பிடிக்கும் மீனுக்காகத்தான் வலைவீசப்பட்டுள்ளது. வரைவுக் குழுவுக்கு அது ஒரு பாராட்டல்ல என்ற முறையில் திரு. நசிருத்தீன் அகமது கருதினாலும், நான் அதை வரைவுக்குழுவுக்கு பாராட்டாகவே கருதுகிறேன். தவறு என்று கருதும் திருத்தங்களை திரும்பப் பெறும் தைரியத்தையும் நேர்மையையும் வரைவுக்குழு காட்டாவிட்டால் அது ஒரு போலி கௌரவத்தைக் கொண்டுள்ளது என்றாகிவிடும்; தனது கடமையில் தவறிவிட்டது என்ற குற்றச்சாட்டிற்கும் இது இலக்காகும். தவறான திருத்தங்களைத் திரும்பப் பெற்றுக் கொண்டு மாறாக சரியான திருத்தங்களை ஏற்றுக் கொள்ளும் தைரியமும் நேர்மையும் வரைவுக்குழுவுக்கு இருந்தது. இது ஒரு குறையென்றால் வரைவுக்குழு இந்தக் குறையைச் செய்ய வெட்கப்படாததுடன், அந்தத் தவறுகளை நீக்கவும் முன்வந்தது.

ஒரே ஒரு தனிப்பட்ட உறுப்பினரைத் தவிர, வரைவுக்குழுவின் பணிகளைக் குறித்து, அரசியல் நிர்ணயசபை உறுப்பினர்களின் பாராட்டுதல்களில் பொதுவான உடன்பாடு காணப்படுகிறது. தனது பணிகளை அங்கீகரித்து தன்னிச்சையாக தாராளமாக வழங்கப்பட்ட பாராட்டுதல்களினால், மகிழ்ச்சி அடைந்திருக்கும் என்பதில் ஐய மில்லை. இந்த வரைவுக் குழு சபையின் உறுப்பினர்களும் வரைவுக் குழுவில் என்னுடன் பணியாற்றிய நண்பர்களும் என்மீது பொழிந்த புகழாரங்களுக்கு, நன்றி தெரிவித்துக் கொள்ள சொற்கள் கிடைக் காமல் திக்குமுக்காடுகிறேன். ஷெட்யூல்டு சாதியினர்களின் நலன் களைப் பாதுகாக்க வேண்டுமென்பதைத் தவிர வேறு எந்தவித நோக் கங்களுமின்றிதான் நான் அரசியல் நிர்ணய சபையில் சேர்ந்தேன். அதிகப் பொறுப்பான பணிகளை ஏற்க நான் அழைக்கப்படுவேன் என்று நான் சிறிதளவுகூட சிந்திக்கவில்லை. என்னை வரைவுக்குழு வுக்கு சட்டமன்றம் தேர்ந்தெடுத்தபோது நான் பெரிதும் ஆச்சரியம் அடைந்தேன். வரைவுக்குழு என்னை அதன் தலைவராகத் தேர்ந் தெடுத்தபோது நான் அதைவிட ஆச்சரியம் அடைந்தேன். எனது நண்பர் அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் போன்ற என்னைவிட மிகவும் தகுதிபெற்ற சிறந்த பெரிய மனிதர்கள் வரைவுக் குழுவில் இருந்தனர். என்மீது இவ்வளவு நம்பிக்கை கொண்டு பொறுப்பை என்னிடம் ஒப்படைத்து, அவர்களுடைய கருவியாக என்னைப் பயன் படுத்தி நாட்டிற்கு சேவை செய்ய எனக்கு அளித்துள்ள வாய்ப்புக்கு அரசியல் நிர்ணய சபைக்கும், வரைவுக் குழுவிற்கும் நன்றியுடைய வனாயிருப்பேன். (கைதட்டல்)

இந்தப் பாராட்டுதல்கள் உண்மையிலேயே எனக்கு உரித்த தல்ல. வரைவுக்குழுவின் பரிசீலனைக்காக அரசியல் நிர்ணய சபை யின் அரசியல் அமைப்புச் சட்ட ஆலோசகர் திரு. பி.என். ராவ் தயாரித்தளித்த திருத்தம் செய்யப்படாத மூல ஆவணத்தைத் தயாரித் தளித்ததற்கு அவருக்குப் பகுதி பாராட்டுதல்கள் உரித்தாகும். பகுதி பாராட்டுதல்கள் வரைவுக்குழு உறுப்பினர்களுக்குச் சேரும். நான் கூறியபடி அவர்கள் 141 நாட்கள் அமர்வில் இருந்தனர். பல்வேறு கருத்தோட்டங்களைப் புரிந்துகொண்டு, அவற்றில் சரியானவற்றை ஏற்றுக்கொள்ளும் வரைவுக் குழுவின் தன்மையும் மற்றும் புதிய

வழிமுறைகளை உருவாக்கும் அதன் திறமையுமே அரசியல் சாசனத்தை இவ்வளவு வெற்றிகரமாக உருவாக்க உதவியது. அரசியல் சாசனத்தின் தலைமை வரைவாளரான திரு. எஸ்.என். முகர்ஜிக்கு அதிகமாகப் பாராட்டுதல்கள் அளிக்கப்பட வேண்டும். மிகவும் நுணுக்கமான ஆலோசனைகளை எளிய, தெளிவான சட்ட வடிவில் கொடுப்பதில் அவருக்கு இணை யாருமில்லை, அவருடைய கடுமையான உழைப்பிற்கும் ஆற்றலுக்கும் யாரையும் ஒப்பிடமுடியாது. இந்தச் சட்டமன்றத்துக்கு அவர் ஒரு சிறந்த சொத்து எனலாம். அவருடைய உதவி கிடைக்கவில்லையென்றால் இந்த அரசியல் சாசனத்தை தயாரித்து முடிவு செய்ய இந்த சபைக்கு மேலும் பல ஆண்டுகள் தேவைப்பட்டிருக்கும். திரு. முகர்ஜியின் கீழ் பணிசெய்யும் ஊழியர்களைக் குறிப்பிட நாம் மறந்துவிடக்கூடாது. நடுநிசிக்கு அப்பாலும் கூட சிலசமயங்களில், மிக அதிக நேரம் அவர்கள் பணிபுரிந்தனர். அதிலும் அவர்கள் எவ்வளவு கடுமையாகப் பணிபுரிந்தனர் என்பதை நான் அறிவேன். அவர்கள் உழைப்புக்கும், ஒத்துழைப்புக்கும் அவர்கள் அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

இந்த அரசியல் நிர்ணயசபை ஒரு கதம்பக் கும்பலாக இருந்திருந்தால், அது சிமென்ட் போடப்படாத நடைபாதையாக இங்கே ஒரு கருங்கல்லும் அங்கே ஒரு வெள்ளைக் கல்லுமாக உள்ள பாதையாக இருந்திருக்கும். ஒவ்வொரு உறுப்பினரும் அல்லது ஒவ்வொரு குழுவும் தாங்களே சட்டத்தின் மொத்த உருவமாக கருதிக் கொண்டிருந்தால் வரைவுக்குழுவின் பணி மிகக் கடினமானதாக இருந்திருக்கும். குழப்பத்தைத் தவிர வேறு எதுவும் மிஞ்சியிருக்காது. சபையில் காங்கிரஸ் கட்சி இருந்ததால் குழப்பத்தின் சாத்தியப்பாடுகள் அறவே இல்லாமலாகிவிட்டது. அது அவை நடவடிக்கைகளில் ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் அளித்தது. காங்கிரஸ் கட்சி கட்டுப்பாடாக நடந்துகொண்டதால் வரைவுக்குழு அரசியல் சாசன உருவாக்கத்தை முறையாக வழிநடத்திச் செல்லமுடிந்தது. ஒவ்வொரு விதி மற்றும் திருத்தத்தின் முடிவைப் பற்றிய தீர்மானமான முடிவுடன் செயல்படமுடிந்தது. சபையில் சாசன வரைவு சிக்கல்களில்லாமல் பரிசீலிக்கப்பட்டதிற்கான பாராட்டுகள் காங்கிரஸ் கட்சியையே சாரும்.

எல்லா உறுப்பினர்களும் கட்சிக் கட்டுப்பாட்டிற்கு அடங்கி நடந்திருந்தால் அரசியல் நிர்ணயசபையின் நடவடிக்கைகள் சுவை யற்றதாக இருந்திருக்கும். கட்சி கட்டுப்பாடு அதன் கண்டிப்பான தன்மையால் சட்டமன்றத்தை 'ஆமாம்' சாமிகளின் கூட்டமாக மாற்றியிருக்கும். நல்லகாலமாக சில ''புரட்சியாளர்கள்'' இருந்தனர். திரு. காமத், டாக்டர் பி.எஸ். தேஷ்முக், திரு சித்வா, பேராசிரியர் சாக்சேனா, பண்டிட் தாகூர்தாஸ் பார்கவா ஆகியவர்களைக் குறிப்பிட வேண்டும். அவர்கள் எழுப்பிய பிரச்சினைகளெல்லாம் பெரும் பாலும் சித்தாந்தம் பற்றியவையே. அவர்களுடைய ஆலோசனை களை நான் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லாதிருந்தது அவர் களுடைய ஆலோசனைகளின் மதிப்பைக் குறைத்துவிடவில்லை. சட்டமன்ற நடவடிக்கைகளுக்கு உயிரோட்டம் அளிக்க அவர்கள் செய்த சேவையை குறைத்து மதிப்பிட முடியாது. நான் அவர்களுக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளேன். அவர்கள் இல்லையென்றால், அரசியல் சாசனத்தின் அடிப்படையான கோட்பாடுகளை விளக்கும் வாய்ப்பு எனக்குக் கிடைத்திருக்காமல் போயிருக்கும். அரசியல் சாசனத்தை இயந்திர கதியில் நிறைவேற்றுவதை விட இது முக்கிய மானது.

இறுதியாக, இந்தச் சபை நடவடிக்கைகளை நடத்திய முறைக்கு தலைவர் அவர்களே, உங்களுக்கு நான் என் நன்றியைக் கூறக் கடமைப்பட்டுள்ளேன். இந்த சபையின் நடவடிக்கைகளில் பங்கு கொண்டவர்களுக்கு தாங்கள் காட்டிய பரிவும், மரியாதையும் அவர் களால் மறந்துவிட முடியாது. வரைவுக் குழுவின் திருத்தங்கள் சில சமயங்களில் தொழில் ரீதியான சில காரணங்களினால் ரத்து செய்யப்பட வேண்டிவந்தது. அவை எனக்கு மிகவும் நெருக்கடியான தருணங்களாக இருந்தன. அரசியல் சாசனத் தயாரிப்புப் பணி; சட்டப் பிடிப்பில் சிக்கிக்கொள்ள அனுமதிக்காததற்கு நான் முக்கியமாக நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது நண்பர்கள் திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யரும், திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரியும் அரசியல் சாசனத்திற்கு எவ்வளவு ஆதரவு அளிக்க முடியுமோ அவ்வளவு ஆதரவு அளித்துள்ளனர். எனவே நமது அரசியல் சாசனத்தின் சிறப்புத் தகுதிகளைப் பற்றி

இப்பொழுது நான் பேசப் போவதில்லை. ஏனெனில் ஓர் அரசியல் சாசனம் எவ்வளவு சிறப்பாக இருந்தாலும் அதைச் செயல்படுத்து பவர்களின் தன்மையைப் பொறுத்து, அது மோசமானதாக மாறலாம். ஓர் அரசியல் சாசனம் எவ்வளவு மோசமாக இருப்பினும், அதைச் செயல்படுத்துபவர்கள் நல்லவர்களாக இருப்பின் அது ஒரு சிறந்த அரசியல் சாசனமாக செயல்படும். ஓர் அரசியல் சாசனத்தின் செயல்பாடு அதன் தன்மையை மட்டும் முற்றிலும் சார்ந்ததன்று. அரசின் உறுப்புகளான சட்டமன்றம் ஆட்சித்துறை நீதித்துறை ஆகியவைகளை உருவாவக்க மட்டும் அரசியல் சாசனம் வழிவகை செய்யும். ஆனால் அரசின் இந்த அமைப்புகளின் செயல்பாடு களுக்கு ஆதாரமான காரணிகள் மக்களும், அவர்கள் தங்கள் நோக் கங்களையும் அரசியல் அபிலாஷைகளையும் நிறைவேற்ற கருவி களாக உபயோகிக்கும் அரசியல் கட்சிகளுமேயாகும். இவற்றின் செயல்பாடுகளைப் பொறுத்தே அதன் வெற்றியுள்ளது. இந்திய மக்களும் அவர்களுடைய அரசியல் கட்சிகளும் எம்முறையில் நடந்துகொள்வார்கள் என்பதை யார் கூறமுடியும்? தங்கள் நோக் கங்களை அடைய அவர்கள் அரசியல் சாசன ரீதியிலான நடவடிக் கைகளை எடுப்பார்களா அல்லது புரட்சிகர முறைகளைப் பின்பற்றப் போகிறார்களா? அவர்கள் புரட்சிகர முறைகைள பின்பற்றப் போகி றார்கள் என்றால், அரசியல் சாசனம் எவ்வளவு சிறப்புள்ளதாக இருந்தாலும் அது தோற்றுவிடும் என்று கூற எந்த தீர்க்கதரிசியும் தேவையில்லை. எனவே மக்களும் அவர்களது கட்சிகளும் என்ன பாத்திரம் வகிக்கப் போகிறார்கள் என்பதைக் கணக்கிலெடுத்துக் கொள்ளாமல், அரசியல் சாசனத்தைக் குறித்துத் தீர்ப்பளிப்பது பய னற்றது.

கம்யூனிஸ்டு கட்சி மற்றும் சோஷலிஸ்டு கட்சி ஆகிய இரண்டு தரப்பினரிடமிருந்து பெருமளவில் அரசியல் சாசனத்துக்கு எதிரான கண்டனக் குரலைக் கேட்க முடிகிறது. அரசியல் சாசனத்துக்கு எதிராக அவர்கள் ஏன் கண்டனக் குரல் எழுப்புகிறார்கள்? ஏனெனில் அது உண்மையிலேயே ஒரு மோசமான அரசியல் சாசனமா? இல்லை, என்று நிச்சயமாகக் கூறுகிறேன். தொழிலாளர்களின் சர்வாதிகாரம் என்ற கோட்பாட்டின் அடிப்படையில் அரசியல் சாசனம் இருக்க

வேண்டுமென்று கம்யூனிஸ்டுக் கட்சி விரும்புகிறது. நாடாளுமன்ற ஜனநாயகக் கோட்பாட்டின் அடிப்படையில் இந்த அரசியல் சாசனம் அமைந்து இருப்பதால் அவர்கள் கண்டனம் செய்கிறார்கள். சோஷலிஸ்டுகள் இரண்டு விஷயங்களை விரும்புகிறார்கள். அவர்கள் விரும்பும் முதல் விஷயம் இதுதான்: நஷ்டஈடு எதுவும் அளிக்காமல் எல்லாத் தனியார் சொத்துக்களையும் தேசிய மயமாக்க அரசியல் சாசனம் அவர்களுக்குச் சுதந்திரம் அளிக்க வேண்டுமென்று விரும்புகிறார்கள். இரண்டாவதாக, சோஷலிஸ்டுகள் விரும்புவது, அரசியல் சாசனம் குறிப்பிட்டுள்ள அடிப்படை உரிமைகள் பூரணமானதாக, வரம்பற்றதாக இருக்கவேண்டுமென்கிறார்கள். அப்பொழுதுதான் அவர்கள் கட்சி ஆட்சிக்கு வரமுடியாவிட்டால், விமர்சிப்பதற்கு அவர்களுக்கு கட்டுபாடற்ற சுதந்திரம் இருப்பதுடன் அரசைக் கவிழ்ப்பதற்கும்கூட உரிமை இருக்கும்.

இந்த முக்கியமான அடிப்படைகளில்தான் அரசியல் சாசனம் குற்றம் சாட்டப்படுகிறது. நாடாளுமன்ற ஜனநாயகக் கோட்பாடு மட்டுமே அரசியல் ஜனநாயக முறையில் சிறந்தது என்று நான் கூறவில்லை. நஷ்டஈடு அளிக்காமல் தனியார் சொத்துக்களை எடுத்துக் கொள்ளக்கூடாது என்ற கோட்பாடு புனிதமானதென்றோ, அதிலிருந்து விலகிச் செல்வதுகூடாது என்றோ நான் கூறவில்லை. அடிப்படை உரிமைகள் பூரணமாக இருக்கக் கூடாதென்றோ அல்லது அதற்களிக்கப்பட்டுள்ள வரம்புகள் நீக்கமுடியாதென்றோ நான் கூறவில்லை. நான் கூறுவதெல்லாம் இந்த அரசியல் சாசனத்தின் கோட்பாடுகள் தற்கால தலைமுறையினரின் கருத்துகளே. ஒருவேளை நான் மிகைப்படக்கூறுவதாகக் கருதினால், அரசியல் நிர்ணயசபை உறுப்பினர்களின் கருத்துகள் அவை என்று கூறுகிறேன். அரசியல் சாசனத்தில் அவைகள் சேர்க்கப்பட்டதற்கு வரைவுக் குழுவின் மீது ஏன் குறைகூறுகிறீர்கள்? அரசியல் நிர்ணய உறுப்பினர்கள்கூட ஏன் குறைகூறப்பட வேண்டும் என்று கேட்கிறேன்? அமெரிக்க அரசியல் சாசனத்தை உருவாக்குவதில் பெரும் பங்குவகித்த அமெரிக்காவின் புகழ்பெற்ற அரசியல் நிபுணரான ஜெபர்சன் சில அழுத்தமான கருத்துகளை வெளிப்படுத்தியுள்ளார். அரசியல் சாசனத்தை உருவாக்குபவர்கள் எவரும் இதைத் தவிர்க்க முடியாது. ஓர் இடத்தில் அவர் பின்வருமாறு கூறியுள்ளார்:

''ஒவ்வொரு தலைமுறையும் பெரும்பான்மையின் விருப்பப்படி தங்களை ஒருங்கிணைத்துக்கொண்டு வாழும் உரிமையுடைய ஒரு தனிப் பட்ட தேசிய இனமாகக் கருதவேண்டும். மற்ற நாட்டுக் குடிமக்களுடன் தங்களைப் பிணைத்துக்கொள்ளும் உரிமையில்லாதது போலவே அடுத்த தலைமுறையையும் பிணைத்துக்கொள்ள முடியாது.''

மற்றொரு இடத்தில் அவர் இவ்வாறு கூறியுள்ளார்:

''ஒரு தேசத்தின் பயன்பாட்டிற்காக உருவாக்கப்பட்டுள்ள அமைப்புகள், தங்களுடைய நலனுக்காகக்கூடத் தொடக்கூடியதல்ல, மாற்றக்கூடியதல்ல என்ற கருத்து பொதுமக்களுக்காக அவைகளை நிர்வகிக்க நியமிக்கப்பட்டவர்களுக்கு, தாராளமாக வழங்கப்பட் டுள்ள உரிமைகளை மன்னர் தவறாகப் பயன்படுத்தாமல் இருக்க ஒரு சட்டவழிமுறையாக இருக்கலாம். ஆனால் அந்தத் தேசத்துக்கு எதிரான முட்டாள்தனமான கருத்தாகும் இது. நமது சட்டவல்லுனர் களும் மதகுருமார்களும் பொதுவாக இந்தக் கோட்பாடுகளைப் புகுத்துகிறார்கள். ஒருவேளை முந்தைய சந்ததியினர்கள் இந்த உலகை அதிக சுதந்திரத்துடன் கையாண்டிருக்கலாம். நம்மால் மாற்ற முடியாத சட்டங்களை நம்மீது திணிக்க உரிமையுள்ளவர்களாக எண்ணியிருக் கலாம். அதே போன்று நாமும் சட்டங்களை உருவாக்க, எதிர்காலத் தலைமுறையினர்களின் மீது திணிக்கலாம். அவர்களுக்கு அதை மாற்றுவதற்கு எந்த உரிமையும் இருக்காது. மொத்தத்தில் உலகம் உயிருடன் வாழும் மனிதர்களுக்கல்ல, மடிந்தவர்களுக்கே சொந்தம்.''

ஜெபர்சன் கூறியது முழுக்க முழுக்க உண்மை என்பதை ஏற்றுக் கொள்கிறேன். ஜெபர்சன் எடுத்துரைத்துள்ள இந்தக் கோட் பாட்டிலிருந்து அரசியல் நிர்ணயசபை விலகிச் சென்றிருந்தால் அதைக் குறைகூறுவது, ஏன் கண்டனம் செய்வதுகூட நியாயமானது தான். ஆனால் அது அப்படி நடந்துகொண்டுள்ளதா என்று கேட் கிறேன்? அவ்வாறு நடந்துகொள்ளாமல் முற்றிலும் மாறாக அது செயல்பட்டுள்ளது. அரசியல் சாசனத்தைத் திருத்துவது சம்பந்தமான வழிமுறைகளை ஆழ்ந்து நோக்க வேண்டும். இந்த அரசியல் சாசனம் தவறற்றது என்றோ, இறுதியானது என்றோ இந்த சபை முத்திரை குத்தவில்லை. கானடா நாட்டிலுள்ளது போல மக்களுக்கு அரசியல்

சாசனத்தைத் திருத்தும் உரிமை வழங்கப்படாமலிருக்கவில்லை. ஆஸ்திரேலியா அல்லது அமெரிக்காவிலுள்ளது போல அரசியல் சாசனத்தைத் திருத்த விசேட நிபந்தனைகள் விதிக்கப்படவில்லை. மாறாக, அரசியல் சாசனத்தைத் திருத்துவதற்கு மிகவும் எளிதான நடைமுறைகள் அளிக்கப்பட்டுள்ளன. நாடு இன்றுள்ள நிலையில் அரசியல் சாசனத்தைத் திருத்த நாம் உருவாக்கியுள்ள எளிதனா நடைமுறையை, இந்த உலகிலுள்ள வேறு எந்த அரசியல் நிர்ணய சபையாவது கொண்டுவந்துள்ளது என்று நிரூபிக்க முடியுமா? அரசியல் சாசனத்தை விமர்சிக்கும் எந்த நபருக்கும் நான் சவால் விடுகிறேன். அரசியல் சாசனத்தின் மீது அதிருப்தி கொண்டுள்ளவர்களுக்குத் தேவைப்படுவதெல்லாம் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மைதான். அவர்களுக்கு ஆதரவாக வயதுவந்தோர் ஓட்டுரிமை மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட நாடாளுமன்றத்தில், மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மை பெறமுடியவில்லை என்றால் அரசியல் சாசனத்தைப் பற்றிய அவர்களது அதிருப்தி பொதுமக்களால் பகிர்ந்துக் கொள்ளப்படவில்லை என்றுதான் கூறவேண்டும்.

அரசியல் சட்ட முக்கியத்துவம் பெற்ற ஒரே ஒரு விஷயத்தைப் பற்றி மட்டும் தான் குறிப்பிடுகிறேன். மத்திய அரசில் அதிகாரம் குவிக்கப்பட்டு மாநிலங்கள் நகரசபைகள் அளவுக்கு அதிகாரம் இழந்துள்ளன என்ற கடுமையான குற்றச்சாட்டுள்ளது. இது ஒரு மிகைப்படுத்தப்பட்ட குற்றச்சாட்டு என்பது தெளிவாகத் தெரிவதுடன், அரசியல் சாசனம் எதை நடைமுறைப்படுத்த உள்ளது என்பதைப் பற்றிய தவறான அடிப்படையிலிருந்து இது எழுந்துள்ளது எனலாம். மத்திய அரசுக்கும் மாநில அரசுகளுக்கும் இடையிலான உறவுகளைப் பொறுத்தவரையில் அது அமைந்துள்ள அடிப்படைக் கோட்பாடுகளைக் கணக்கில் எடுத்துக்கொள்வது அவசியம். மத்திய அரசு மற்றும் மாநில அரசுகளின் சட்டமன்ற மற்றும் நிர்வாகப் பிரிவினை மத்திய அரசு இயற்றும் சட்டத்தினால் அல்லாமல் அரசியல் சாசனத்தின் மூலமே நிர்ணயிக்கப்படுகிறது என்பதுதான் கூட்டாட்சி முறையின் அடிப்படையான கோட்பாடு. அதைத்தான் அரசியல் சாசனம் செயல்படுத்துகிறது. நமது அரசியல் சாசனத்தின்படி மாநிலங்கள் தங்கள் சட்டமன்ற மற்றும் நிர்வாக அதிகாரத்திற்கு

மத்திய அரசைச் சார்ந்து இருக்கவில்லை. இந்த விஷயத்தில் மத்திய அரசும், மாநில அரசுகளும் சம நிலையில் உள்ளன. இப்படிப்பட்ட ஓர் அரசியல் சாசனத்தை மத்திய அரசுக்கு சாதகமானது என்று கூறப் படுவதைப் புரிந்து கொள்வது கடினமாக உள்ளது. வேறு எந்தக் கூட் டாட்சி அரசியல் சாசனத்தில் உள்ளதைக்காட்டிலும் அதிக அளவி லான களத்தை அதனுடைய சட்டமன்ற மற்றும் நிர்வாக அதிகாரத்தை நடைமுறைப்படுத்த மத்திய அரசுக்கு இந்த அரசியல் சாசனம் ஒதுக்கி யிருக்கலாம். எஞ்சிய அதிகாரங்கள் மத்திய அரசுக்கு அளிக்கப்பட் டிருக்கலாம். இந்த அம்சங்கள் கூட்டாட்சியின் சாரமாக அமைவ தில்லை. மத்திய அரசுக்கும் அதன் மாநிலங்களுக்கும் இடையே சட்டமன்ற மற்றும் நிருவாக அதிகாரத்தை அரசியல் சாசனம் பகுத் தளிப்பதுதான் கூட்டாட்சி முறையின் முக்கிய அம்சம் எனலாம். இந்தக் கோட்பாட்டைத்தான் நமது அரசியல் சாசனம் கொண் டுள்ளது. அதைப் பற்றி எந்தவித ஐயப்பாடும் இருக்க முடியாது. எனவே மாநிலங்கள் மத்திய அரசின் கீழ் வைக்கப்பட்டுள்ளன என்று கூறுவது தவறாகும். இந்த அதிகாரப் பிரிவின் எல்லையை மத்திய அரசு தன் விருப்பப்படி மாற்ற முடியாது. நீதித் துறைகூட ஒன்றும் செய்ய முடியாது. இது மிகவும் தெளிவாகக் கூறப்பட் டுள்ளது.

> "நீதிமன்றங்கள் திருத்தம் செய்யலாம், ஆனால் எதை ஒன்றையும் அதற்குப் பதிலாகப் புகுத்த முடியாது. முன்பு கூறிய விளக்கங்களுக்கு புதிய வாதங்களை, புதிய கருத்துக்களை அளிக்கலாம், ஒரு சில விசேஷ சந்தர்ப்பங்களில் இந்த எல்லைக் கோட்டைத் தாண்டலாம். ஆனால் சில வரையறைகளை அவை தாண்ட முடியாது, குறிப்பிட்டு ஒதுக்கப் பட்டுள்ள சில அதிகாரங்களை அவை மாற்றி ஒதுக்கமுடியாது. ஏற் கெனவே உள்ள அதிகாரத்தின் கட்டுக் கோப்பை அவை விரிவுபடுத்த முடியும். வெளிப்படையாக ஒரு அமைப்புக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரத்தை வேறு ஓர் அதிகார அமைப்புக்குக் கொடுக்க முடியாது."

ஆகவே, கூட்டாட்சி முறைக்கு மாறாக மத்திய அரசில் அதிகாரக் குவிப்பு என்ற முதல் குற்றச்சாட்டு தோற்றுவிடுகிறது.

மாநில அரசுகளைப் புறக்கணித்து செயல்பட மத்திய அரசுக்கு அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது என்பது இரண்டாவது குற்றச் சாட்டு. இந்தக் குற்றச்சாட்டை ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான்.

இந்த மாதிரி அதிகப்படியான அதிகாரங்களை அரசியல் சாசனம் அளிப்பதற்கு அதைக் கண்டனம் செய்வதற்கு முன் சில நோக்கங்களை கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும். இந்த அதிகப்படியான அதிகாரம் என்பது அரசியல் சாசனத்தின் பொதுவான அம்சமாக இல்லை. அது உபயோகப்படுவதும், செயல்படுத்தப்படுவதும், நெருக்கடி கால நிலைகளில் மட்டுமே. இரண்டாவதாக சிந்திக்க வேண்டிய விஷயம் என்னவென்றால் ஒரு நெருக்கடி நிலை தோன்றும்போது மத்திய அரசுக்கு அதிகப்படியான அதிகாரம் கொடுப்பதைத் தவிர்க்க முடியுமா? ஒரு நெருக்கடியான காலகட்டத்தில் மத்திய அரசுக்கு இப்படிப்பட்ட அதிகப்படியான அதிகாரம் கொடுப்பதின் நியாயத்தை மறுப்பவர்கள், பிரச்சினையின் அடிப்படையில் உள்ள விஷயத்தைத் தெளிவாகக் காணவில்லை என்று தெரிகிறது. ''வட்ட மேஜை'' என்ற இதழின் 1935ஆம் ஆண்டு டிசம்பர் மாத வெளியீட்டில் இந்தப் பிரச்சினை மிகத் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. அதிலிருந்து பின்வரும் பகுதியைக் கொடுப்பதில் மகிழ்ச்சியடைகிறேன். ஆசிரியர் கூறுகிறார்:

> ''அரசியல் அமைப்பு முறைகள் என்பவை உரிமைகளும், கடமைகளும் அடங்கிய தொகுதியாக உள்ளன. இறுதியில் யாருக்கு அல்லது எந்த அதிகார அமைப்புக்கு ஒரு குடிமகன் தன் விசுவாசத்தைச் செலுத்துகிறான் என்பதில் இது அடங்கியிருக்கிறது. சாதாரண நடைமுறைகளில் இந்த கேள்வி எழுவதில்லை. ஏனெனில் சட்டம் அதைக் கவனித்துக் கொள்கிறது. இந்த மாதிரி பல்வேறு நடவடிக்கைகளில் ஒரு குறிப்பிட்ட செயல்பாடுகளில் ஓர் அதிகார அமைப்பிற்கும், மற்ற நடவடிக்கைகளில் வேறு ஒரு அதிகார அமைப்பிற்கும் பணிந்து, குடிமகன் தன் அலுவல்களை கவனித்து வருகிறான். ஆனால் ஒரு நெருக்கடி உருவாகும்போது விசுவாசத்தை கோரும் உரிமை யாருக்கு என்பதில் முரண்பாடுகள் தோன்றுகின்றன. இறுதியான விசுவாசத்தைப் பிரிப்பது சாத்தியமில்லை என்பது அப்போது தெளிவாகிறது. இறுதியாக சட்ட விளக்கத்தின் மூலம் விசுவாசப் பிரச்சினையை தீர்மானிக்க முடியாது. எல்லா யதார்த்த நிலைமைகளுக்கும் ஒத்து சட்டம் இருக்க வேண்டும். எல்லா சம்பிரதாய முறைகளையும் களைந்துவிட்டுப் பார்த்தால் கேள்வி இதுதான், குடிமகனின் எஞ்சிய விசுவாசம் எந்த அதிகார அமைப்பிற்கு உள்ளது? அது மத்திய அரசுக்கா அல்லது உறுப்பினராக உள்ள மாநிலத்திற்கா?''

பிரச்சினையின் காரணமான இந்தக் கேள்வியின் பதிலைப் பொறுத்துத்தான் இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு உள்ளது. பெரும்

பான்மையான மக்களின் கருத்துப்படி நெருக்கடி காலத்தில் குடிமகனின் எஞ்சிய விசுவாசம் மத்திய அரசின் மீதுதான், உறுப் பினராகவுள்ள மாநிலங்களின் மீதல்ல என்பதில் ஐயப்பாடு இல்லை. நாடு முழுவதற்குமான பொதுநலனுக்காக, பொதுவான முடிவுக்கு மத்திய அரசே செயலாற்ற முடியும். ஒரு நெருக்கடி காலத்தில் மத்திய அரசுக்கு அதிகப்படியான அதிகாரங்கள் வழங்கப்பட்டதற்கான நியாயம் இதில்தான் இருக்கிறது. இந்த நெருக்கடிகால அதிகாரங் களினால் உறுப்பு மாநிலங்களுக்கு என்ன கடமைகள்தான் சுமத்தப் பட்டுள்ளன? இதைத் தவிர வேறு ஒன்றுமில்லை. ஒரு நெருக்கடி நிலையின் போது தங்களுடை பிராந்திய நலன்களுடன் மொத்தமாக தேசத்தின் நலன்களையும் கருத்துகளையும் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும். இந்தப் பிரச்சினையைப் புரிந்து கொள்ளாதவர்கள் மட்டுமே அதை எதிர்த்துக் குறைகூற முடியும்.

இத்துடன் நான் என் உரையை முடித்திருப்பேன். நமது நாட்டின் எதிர்காலம் என் உள்ளம் முழுவதையும் ஆட்கொண்டுள் ளது. அது குறித்து என்னுடைய கருத்துகள் சிலவற்றை வெளிப்படுத்த இந்த வாய்ப்பை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று நினைக் கிறேன். 1959 ஜனவரி 26ல் இந்தியா ஒரு சுதந்திரநாடாக மலர்ந்து விடும். (கரவொலி) பிறகு அதனுடைய சுதந்திரம் என்னவாகும்? தன் சுதந்திரத்தை அது காப்பாற்றிக் கொள்ளுமா அல்லது மீண்டும் அதை இழந்துவிடுமா? இந்தச் சிந்தனையே முதலில் என் மனதில் தோன்றுகிறது. இந்தியா ஒரு பொழுதும் சுதந்திர நாடாக இருக்க வில்லை என்று கூறமுடியாது? ஒரு காலத்தில் தான் பெற்றிருந்த சுதந்திரத்தை அது இழந்தது. இரண்டாவது தடவையாக இந்தியா தன் சுதந்திரத்தை இழந்துவிடுமா? இந்தச் சிந்தனைதான் எதிர் காலத்தைப் பற்றி எனக்கு மிகுந்த அச்சத்தை அளிக்கிறது. இதற்கு முன்பு இந்தியா தன் சுதந்திரத்தை இழந்துவிட்டது என்ற உண்மை மட்டுமல்ல என் மனதில் சஞ்சலத்தை தோற்றுவிக்கிறது. நமது மக்கள் சிலரின் துரோகமும், வஞ்சகத் தன்மையுமே அதற்குக் காரணம் என்பதை எண்ணும்போதுதான் மனம் கவலை அடைகிறது. சிந்து மாகாணத்தின் மீது முகமது-பின்-காசிம் படையெடுத்தபோது தாகர் மன்னனின் ராணுவப் படைத்தலைவர்களே தமது மன்னரின் பக்கம்

